| | | |
|---|---|---|
| 35. | ரஞ்சிட்சிங் .... .... | காசிநகரத்துக் காவலர். |
| 36. | ரம்பால்சிங் .... .... | |
| 37. | எதிரியின் நியாயவாதி .... | சந்திரமதியின் பட்சத்தில் வாதிக்க ராஜாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட நியாயவாதி. |
| 38. | ராஜாங்க நியாயவாதி .... | ராஜாங்கத்தின் பட்சத்தில் வாதித்த நியாயவாதி. |
| 39. | நியாயாதிபதி .... .... | சந்திரமதியின்மீது சாட்டப்பட்ட குற்றத்தைப் பரிசீலனை செய்த காசிநகர நியாயாதிபதி. |
| 40. | நாட்டாண்மைத் தலைவர் .... | மேற்கண்ட நியாயாதிபதியுடன் நியாயஸ்தலத்தில் அமர்ந்திருந்த உத்தியோகஸ்தர்கள். |
| 41. | ஊர்க்காவலர் தலைவன் .... | |
| 42. | ராஜாங்க லிகிதர் .... | காசி நகர நியாயஸ்தல லிகிதர். |
| 43. | நீலகண்ட சாஸ்திரியார் .... | சந்திரமதியைக் கொலைக் குற்றவாளி எனத் தீர்மானித்த நியாயஸ்தல மத்தியஸ்தர்கள். |
| 44. | கிருஷ்ணநாத தத்தர் .... | |
| 45. | லக்ஷ்மீநாத பிரசாத் .... | |
| 46. | குமார சர்மா .... .... | |
| 47. | மகாதேவ் மேதா .... | |
| 48. | கோபிநாத டாகர் .... | |
| 49. | முனிலால் சிங் .... .... | |
| 50. | மோஹன லால்.... .... | |
| 51. | பண்டரிநாத் சடர்ஜி .... | |
| 52. | லால்மோஹன் பிரசாத் .... | காசி மன்னன் அரண்மனையின் நிர்வாகி. |
| 53. | சிறைக்கோட்டத் தலைவன். | காசிநகரத்துச் சிறைச்சாலையின் தலைவன். |
| 54. | காசி மன்னன் .... .... | காசியம்பதியின் அரசன். |
| 55. | சந்திரமதி .... .... | அரிச்சந்திரன் மனைவி, நாடகத் தலைவி. |
| 56. | சித்திரரேகை .... .... | அரிச்சந்திரன் தாயார். |
| 57. | கல்யாணி .... .... | சந்திரமதியின் தோழிகள். |
| 58. | சுகந்தி .... .... | |
| 59. | யவ்வனி .... .... | |
| 60. | நாகரிகை .... .... | |
| 61. | காஞ்சனை .... .... | |
| 62. | வாசந்திகை .... .... | |

| | | |
|---|---|---|
| 63. காந்தாரிகை .... .... <br> 64. விசாகினி .... .... | | அரிச்சந்திரனிடம் விசுவாமித்திரரால் நாட்டியப் பெண்களாக நடிக்க அனுப்பப்பட்ட தவப்பெண்கள். |
| 65. சந்திரவதனை .... .... | | காலகண்டன் மனைவியாகவிசுவாமித்திரரால் அனுப்பப்பட்ட தவப்பெண். |
| 66. கஞ்சுகி .... .... | | வீரவாகுவின் மனைவியாக விசுவாமித்திரரால் அனுப்பப்பட்ட தவப்பெண். |
| 67. இலக்குமி .... .... | | காலகண்டன் வீட்டுக்கு அருகிலுள்ள ஒரு பார்ப்பினி. |

பாங்கன், சிற்றரசர், அமைச்சர், சேனாபதிகள், பிரபுக்கள், குடிகள், நியாயஸ்தலக் காவலன், சம்ஸ்தான வித்வான்கள், மாகதர் முதலாயினோர்.

# நாடகம் நிகழ்விடம்



அயோத்தி, அயோத்தியை யடுத்த அரணியம், காசிக்குச் செல்லும் வழி, காசி, காசியம்பதியின் மயானம் முதலியன.



# அரிச்சந்திரன்

## கடவுள் வாழ்த்து

### விநாயகர்

வெண்பா

பூமேவு மெய்ச்சீர் பொலியுமரிச் சந்திரன்றன்
நாமேவு நற்சரித நாடகமாத் — தூமேவுஞ்
செந்தமிழாற் கூறச் சிறியேற் கருளவரும்
தந்திமுகத் தெந்தைமலர்த் தாள்.

### சுப்பிரமணியர்

அறுசீர் விருத்தம்

தெருளுறு மறைக ளெல்லாந் தேர்ந்துதேர்ந் துரைக்கு முண்மைப்
பொருளுறக் கொண்ட வேந்தன் புகழினைப் புகல வன்று
மருளுறு மலரோற் குற்ற மயலறப் புரிந்த சீர்சால்
அருளுறுஞ் செவ்வேள் செய்ய அடிமலர் முடிமேல் வைப்பாம்.

### நாமகள்

கலி விருத்தம்

மின்னு மெய்ப்புகழ் மேவரிச் சந்திரன்
முன்னு மாக்கதை நாடக மாச்சொலப்
பன்னு வெண்கம லத்துறை பானிற
அன்ன நற்சர ணைதரிப் பாமரோ.

### நடராஜர்

கலித்துறை

வீடக மேவ விழைவார்க் குறுநெறி மெய்ம்மையென்றே
நாடகங் கொண்ட அரிச்சந்திரன் கதை நன்கியம்ப
ஆடக மன்றினி லெல்லா வுயிரு மகமகிழ
நாடகஞ் செய்யும் பிரான்மலர்ச் சேவடி நாடுதுமே.

## அவை யடக்கம்

*அறுசீர் விருத்தம்*

தனித்தமிழ் வல்ல நீரார் சாருமங் கலவ முக்கால்
துனித்தவிப் பொய்மை மெய்யாச் சொல்லுவ ரதுவுட் கொண்டே
பனிப்பிலா வுண்மைக் காதை பகர்ந்தனெ னிதனிற் குற்றம்
தொனிப்பது மில்லை யுண்டேல் சொல்வது மில்லை தூயோர்.

## கட்டுரை

*அறுசீர் விருத்தம்*

சத்திய மதற்கு மேலாந் தருக்கமு மில்லை நீங்காச்
சத்திய மதற்கு மேலாஞ் சாத்திரங் கணித மில்லை
சத்திய மதற்கு மேலாஞ் சமயமு மில்லை யொன்றுஞ்
சத்திய மொன்றே வீடு தந்திடுந் தகைமைத் தாமால்.





கடவுள் துணை

# அரிச்சந்திரன்

## அங்கம்—I

### முதற் களம்

**இடம்:** அயோத்தியை அடுத்ததோர் அரணியம்.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** விசுவாமித்திரர் சீடர்கள் — வைகானசன், வைரதரன், வசிதரன், சேதசன், சாரங்கன் முதலியோர்.

வசிட்டர் சீடர்கள் — வித்யாபாரகன், யோகபாரகன், சொரூபானந்தன், பரமைகாந்திகன் முதலியோர்.

**வித்யாபாரகன்** — 'தவத்தினும் மகத்தாம் தரு நல் லொழுக்கம்' என்றபடி, எத்தகைய ஞானியாயினும், பூர்வ ஜந்ம வாசனையினால் வரும் குற்றங்களை, நல் லொழுக்கம் ஒன்றினாலேயே ஒழித்து உய்யக்கடவன்.

**வைகானசன்** — ஐயா, யோகபாரகரே! கேட்டீரோ வித்யாபாரகர் விபரீத ஞானத்தை. மகத்தான தவங்களைச் செய்து முடித்துப், பற்றற்று விளங்கும் ஞானிகளுக்கும் குற்றங்கள் தோன்றும் என்கின்றனரே! அவை என்ன குற்றங்கள்? உம்முடைய யோகசாஸ்திர ஆராய்ச்சியிலும் இதுதான் சித்தாந்தமோ?

**யோகபாரகன்** — எத்தகைய ஞானியானாலும், ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மலக் குற்றங்களால், நான் எனது என்னும் அகங்கார மமகாரங்கள் தோன்றும். மெய்ஞ்ஞானி

யானவன் அவற்றிற்கு இடங்கொடாம லடக்குதல் வேண்டும். இல்லாவிட்டால் ஞானம் கெடும்.

**வைகானசன்** — இதென்ன ஆச்சரியமா யிருக்கிறது! நான் இந்த விஷயம் எங்கும் கண்டது மில்லை, கேட்டது மில்லையே.

**யோகபாரகன்** — கண்டது மில்லை, கேட்டது மில்லையா! திருஷ்டாந்தம் வேண்டுமானால் வெகுதூரமும் போகவேண்டுவதில்லை. சமீபத்திலேயே யிருக்கிறது. சொன்னால் உமக்குக் கோபமும் வருத்தமும் உண்டாகும். அதற்காகவே யான் அஞ்சுகின்றேன்.

**வைகானசன்** — அஞ்சுவானேன்? திருஷ்டாந்தம் சொன்னால், எனக்கேன் கோபம் உண்டாகிறது? சொல்லும் பார்க்கலாம்.

**யோகபாரகன்** — சற்று யோசித்தால், உங்களுக்குள்ளாகவே ஒருவர் உண்டென்பது ஏற்படுமே.

**வைகானசன்** — ஏது எங்களுக்கே சூடு கொடுக்க வந்துவிட்டீர்? இருக்கட்டும், நீர் மனத்தில் கொண்டதைச் சொல்லும் பார்ப்போம், எம்மில் யார்தான் அப்படியிருப்பவர் தெரிந்துகொள்வோம்.

**யோகபாரகன்** — உமக்குத் தெரியவில்லையா? சொன்னால் கோபிக்க வேண்டா. உம்முடைய ஆசிரியர்தாம் அதற்கு ஏற்ற திருஷ்டாந்தமா யிருப்பவர்.

**வைகானசன்** — ஓ, ஓ, நாங்கள் முதலில் எண்ணியது போலவே, எங்கள் முதல்வருக்கே குற்றஞ்சொல்ல ஏற்பட்டுவிட்டீரே. சரி, சரி, இருக்கட்டும். எமது ஆசிரியரே உபமானமாவதைத் தெளிவாகச் சொல்லும்.

**யோகபாரகன்** — யான் நிந்தையாக ஒன்றும் கூறவில்லை. உமது ஆசிரியர் மகத்தான ராஜர்ஷி என்பதில் சந்தேக மில்லை. அப்படிப்பட்ட பரமஞானியும் பொறுமை யொன்றே காரணமாக, எமது ஆசிரியரோடு மாறுபட்டு, குற்றமற்று விளங்கும் அரிச்சந்திர மன்னனைப் பலவாறு இழித்து உரைத்தது மன்றி, அவனுக்கு இன்னல் பல இழைக்கவும் கருத்துக் கொண்டிருக்கின்றனர். இதை யோசித்துப் பாரும்; உவமை கூறலாம் என்பதும், கூடாது என்பதும் உமக்கே நன்கு விளங்கும்.

**வைகானசன்** — இதேது புதிதாக இருக்கின்றது. உமது ஆசிரியருக்கும் எமது ஆசிரியருக்கும் ஒருமைப்பாடில்லை என்பது

தெரிந்தவிஷயம். அதனால்தான் அரசரா யிருந்தவர் அருந்தவ ராயினர். இப்போது அரிச்சந்திரன் விஷயமாக ஏதோ கூறுகின்றீரே அதென்ன? சற்று விவரமாய்ச் சொல்லும், கேட்போம்.

**யோகபாரகன்** — ஐய! அமைந்து கேளும். கோபம் வேண்டா. இந்திரனது அவைக் களத்தில் முனிவர் பலரும் ஒன்றுகூடினர். அக் காலத்தே அம் மகவான் முனிவர்களை நோக்கி, "ஐயன்மீர்! பூவுலகின்கண் நன்னெறியினின்று சற்றும் தவறாத மன்னன் ஒருவன் உளனோ?" என்றனன். அது கேட்ட முனிவர் பலரும் மவுனமா யிருக்க, எமது குருநாதர் இந்திரனை நோக்கி, "ஐய!

பாருக் கொருவன் பரதார சகோத ரன்வெம்
போருக் கொருவன் புகழுக்கும் மறைப்பொ ருட்கும்
நேருக்கும் வீடா மனுநூல் நெறிக்கும் பொறைக்கும்
ஆருக்கு மிக்கான் அரிச்சந்திர னாகும்" என்றார்.

அதனைக் கேட்டவுடனே, உமது ஆசிரியர் எமது ஆசிரியர் கூறியதை அறவும் மறுத்து, "அவ் வரிச்சந்திரன்—

வெய்யன் பதகன் பரதார விருப்பன் வீணன்
பொய்யன் நிறையும் பொறையும் சிறிதுமில் புல்லன்
கையன் கபடன் கயவன்றனை நல்ல னென்றிவ்
வையன் திருமுன் னுரைத்தாய் இதென்னாக" என்றார்.

இதுவே நடந்த விஷயம்.

**வைகானசன்** — சரி, சரி, உங்கள் எல்லோருக்கும் ஒரே பாடம் போலிருக்கிறது. முக்கியமாய்த் தெரியவேண்டிய விடங்களில் பாட்டைச் சொல்லிக் குழப்பிவிடுவதோ? நன்றாயிருக்கிறது. அந்தச் சங்கதியை விவரமாய்ச் சொல்லும்.

**யோகபாரகன்** — விவரமா வேண்டும் — இந்திரன் கேட்டபோது எமது குருநாதர், "அயோத்திமா நகரின்கண் செங்கோல் செலுத்திவரும் அரிச்சந்திர மன்னனே நற்குணத்தில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். பரதாரங்களுக்குச் சகோதரனா யிருப்பவன். சமர் செய்வதிலும், கீர்த்தியிலும், சாத்திர வுணர்ச்சியிலும் ஒப்பற்றவன். மற்றும் உத்தம நீதி நூல்களில் சொல்லப்பட்ட விதிகளுக்கு இலக்கியமாயிருப்ப-

வன்" என்றார். உடனே, உமது ஆசிரியர் எமது முனிவரிடம் கொண்ட நீண்ட விரோதமும் பொறாமையும் காரணமாக, அவர் கூறியவற்றை மறுத்து, அந்த அரிச்சந்திரன், "வெய்யவன், பாதகன், பாதார இச்சையே யுள்ளவன், பொய்யே பூஷணமாக வுடையவன், மனவொடுக்கமும் பொறுமையும் சிறிது மில்லாதவன், அற்பன், வஞ்சகன், கபடன் ஆவன். இத்தகைய ஈனனை உத்தமனென்று இச்சபையில் எவ்வாறு கூறுகின்றீர்?" என்று மறுத்தனர். அதுகேட்ட இந்திரன் இவ்விருவரையும் கையமைத்து, "அதனைப் பரீட்சித் தறிவோம்" என்று கூறினன். உடனே, உமது ஆசிரியர் தாம் கூறியவற்றை மெய்ப்பிக்குமாறு ஈண்டு வந்திருக்கின்றனர். அது காரணம்பற்றியே அரிச்சந்திரனுக்கு இன்னல் பல இழைக்க எண்ணியிருக்கின்றனர். இது எதனால் உண்டாயிருக்கலாம் என்பதைச் சற்று உய்த்துணரும். நாம் முன் பேசியபோது, "போதம் மேலாகப் பண்டே புல்லிய மலநோய் தீர்ந்தும் வாதனை தாக்கும்" என்றபடி, மெய்ஞ்ஞானம் மேம்பட்ட காலத்தில், அநாதியாய்த் தொடர்ந்து வந்த மல நோய் நீங்கினும், ஜந்ம வாஸனை மாத்திரம் அவ்வப்போது வந்து தாக்கும் என்பதற்கு உவமை கூறலாம் என்பதும், கூடாது என்பதும் விளங்கும்.

**வைகானசன்** — ஓ, ஓ, அவசரப்பட்டு அளந்து கொட்டிவிடாதீர். இந்திரன் அவைக்களத்து நடந்த விஷயத்தை யாம் முன்னமே உணர்வோம். ஆயினும், நடந்த விஷயங்களை சரிவரக் கூறுகின்றீரா என்பதைப் பரீட்சிக்கவே இதுகாறும் பொறுமையோடுஞ் செவிசாய்த்துக் கேட்டு நின்றேம். எமது ஆசிரியர் ஒருபோதும் இல்லாதது கூறார். யாமும் அம் மன்னனது நீக்குணங்களை மிகுதியும் கேட்டுள்ளோம்; அன்றி அறிந்துமுள்ளோம். நீவிர் வேண்டுமென்றே தினந்தோறும் இங்கு வந்து, எமது செவியில் நுழையுமாறு, எமது ஆசிரியரை இகழ்ந்தீர் என்பது இதனால் நன்கு விளங்குகின்றது. இனி உம்முடன் சம்பாஷிப்பதும் தீமையே யாகும். யாங்களே எமது முனிவர் கூறியவற்றை மெய்ப்படுத்துகின்றேம். இதனைச் சில நாளிற் காண்பீர். போம், போம்.

(பிரிந்து செல்கின்றனர்.)

# இரண்டாங் களம்



இடம்: அயோத்தியில் அரிச்சந்திரன் அவைக்களம்.

காலம்: முற்பகல்.

பாத்திரங்கள்: அரிச்சந்திரன், விசுவாமித்திரர், அமைச்சர் முதலாயினோர்.

[அரிச்சந்திரன் அமைச்சர் முதலாயினோர் புடைசூழச் சிங்காதனத்தின்கண் அமர்ந்திருக்கின்றான். விசுவாமித்திரர் வருகின்றார்.]

**அரிச்சந்திரன்** — (முனிவர் வரவைக் கண்டு இருக்கைவிட்டெழுந்து கைகூப்பி நின்று) முனிவர் பெரும!

விருத்தம்

கந்தா மிருந்து காட்டுக் காய்கனி யருந்தி வேத
மந்திர மோதி யீசன் மலரடி மனத்து ளூன்னும்
சுந்தர ராஜ யோகத் தூயகோ சிகப்பேர் எந்தாய்
எந்தமா தவஞ்செய் தேமோ இணையடி தொழுதற் கின்றே.

சுவாமீ! அமர்ந்தருள வேண்டும்.

**விசுவாமித்திரர்** — மன்ன! நீ இறைவன் இன்னருளால் என்றென்றும் நல் வாழ்வு அடையக்கடவை.

கலித்துறை

வையந் துரகம் மதகரி மாமகு டஞ்சிவிகை
பெய்யுங் கனகம் பெருவிலை யாரம் பிறைமுடித்த
ஐயன் திருமனை யாளடித் தாமரைக் கன்புமுன்பு
செய்யுந் தவமுடை யார்க்குள வாகிய சின்னங்களே

ஆகையால் இந்த நிலையில் உன்னைக் காண மிகவும் மகிழ்ச்சியடைகின்றோம்.

(கையமர்த்தி வாழ்த்துகின்றான்.)

**அரிச்சந்திரன்** — முனிபுங்கவ! அடியேன் புரிந்த புண்ணியமே புண்ணியம். இயற்றிய தவமே தவம். அடியேனது முயற்சி சிறிதும் இன்றி, தேவரீர் இங்கு வரப்பெற்றேன். இது இவ்வயோத்திமா நகரம் இயற்றிய தவமோ? அன்றி யானும் என் முன்னோரும் செய்த தவப்பயனோ? யாதோ அறியேன். இன்றே இம் மனை நன் மனை யாயிற்று. நாடும் நன்னாடாயிற்று. தேவரீர் இங்கு எழுந்தருளிய காரணம் யாதோ—அடியேன் அறியுமாறு அருளவேண்டும்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! மன்னர்க்கும் மன்பதைக்கும் ஆக்கங் கூறி, யாம் ஓர் அரிய மகம் புரிய மனங்கொண்டோம். அதற்குச் சிறிது பொருள் வேண்டும். அதனை மிக எளிதில் செய்துகொள்ள எமக்கு வன்மை யுண்டென்பதை நீயே யன்றி உலகமும் அறியும். ஆயினும், அவ் வேள்வி வேந்தர் பொருட்டுப் புரிவதாதலால், அதில் நின் பொருளைச் செலவிட்டு நினக்கு நன்மை யுண்டாக்க நாடுகின்றோம்.

**அரிச்சந்திரன்** — முனிவர் நாயக! தேவரீர், பொருளல்லாத பொருளை முன்னிட்டு, அடியேனையும் ஒரு பொருளாக எண்ணியது எனது நல்வினைப் பயனுவ தன்றி மற்று யாது! பிறர் மகிழக் கண்டு, தாம் மகிழ்வதே பெரியார் செய்கை யாதலின், தேவரீர் எம்போல்வார் உய்யும்வண்ணம் அருள்கொண்டனிர். அவ் வரிய மகத்திற்காகும் பொருளைத் தேவரீர் அருள்புரியின், அதனை இப்பொழுதே அளித்தற்குச் சித்தமாக விருக்கின்றேன். இதனினும் யான் பெறத்தக்க பேறு வேறு யாது!

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! அதற்கொன்றும் பெருந்தொகை வேண்டுவதில்லை. ஒரு நூறு லட்சம் பொன் தரின் சாலும்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ, நூறு லட்ச மென்ன, வேண்டியமட்டும் தேவரீர் எடுத்துக்கொள்வதில் தடை யாது. யாவும் தேவரீரது பொருளே; அடியேனும் தேவரீரது அடிமையேயன்றோ.

**விசுவாமித்திரர்** — அதிருக்கட்டும். அரிச்சந்திர! அதிகம் பெறுதல் எதற்கு. பொன்னை வெறுக்க வேண்டு மென்றே அதற்கு வெறுக்கை எனப் பெயரிட்டனர். நூறு லட்சத்திற்கு மேலும் வேண்டி யுளதேல், அப்போது பார்ப்போம். நீ இப்போது கொடுத்தற் கிசைந்த பொருளை நின்னிடத்திலேயே வைத்துப் போகின்றோம். அதனை வேண்டியபோது பெற்றுக் கொள்வோம். ஆசீர்வாதம். நீயும் நின் நாடும் நீடூழி வாழ்க.

(எழுகின்றார்.)

**அரிச்சந்திரன்** — (எழுந்து கைகூப்பி நின்று) முக் குறும்பெறிந்த முனிவ! வேண்டுங் காலத்தைத் தெரிவித்தால், அடியேன் கொண்டுவந்து சேர்க்கின்றேன்.

(அரசன் பல முறை வணங்குகின்றான். மந்திரி முதலாயினோரும் வணங்குகின்றனர். விசுவாமித்திரர் மிடுக்குடன் திரும்பிச் செல்கின்றார்.)

# மூன்றாங் களம்



**இடம்:** அந்தப்புரம்.

**காலம்:** முன்மாலை.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், கல்யாணி முதலிய பாங்கியர்.

[தேவதாசனும் சந்திரமதியும் பாங்கியருடன் வீற்றிருக்கின்றனர்.]

**சந்திரமதி** — அடீ, கல்யாணி! மாலை யாயிற்று. மகா ராசா கொலு-விலிருந்து வருங்காலம் இதுவேயன்றோ? சற்று எட்டிப் பார்.

**கல்யாணி** — ஆம் அம்மா, ஆம் அம்மா, அதோ வருகின்றார். முகக் குறிப்பினால், இன்று பெருமகிழ்வுடன் வருவதாய்க் காண்-கின்றது. நாங்கள் சற்று விலகி நிற்கின்றோம், நீங்கள் மகா ராசாவை என்ன சங்கதி யென்று கேளுங்கள்.

(சந்திரமதி நாயகன் வரவை எதிர்பார்த்து நிற்கின்றாள்.
அரிச்சந்திரன் வருகிறான்.)

**சந்திரமதி** — என் இன்னுயிர்த் தலைவ! நமது அருந்தவப் புதல்வன் தமது வருகையைப் பெரிதும் நாடி நிற்கின்றான்.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அப்படியா—

(தேவதாசனைக் கட்டிப்பிணைத்து முத்தமிடுகின்றான்.)

பெண்மணீ! நமது மைந்தன் அருந்தவப் புதல்வன் என்ப-தில் சற்றும் ஐய மில்லை. இம் மைந்தனால் நாள்தோறும் நாம் பெரு மகிழ்வை யடைகின்றோம். மற்றும், இவன் காலத்தில் நமது மரபு தழைத்துச் சிறந்து விளங்கு மென்ப-தற்கு முற்குறி யொன்று இன்று நேர்ந்திருக்கின்றது.

**சந்திரமதி** — (மிக்க மகிழ்வுடன்) காதல, அது யாது? அடியாள் அறியத் தக்கதோ?

**அரிச்சந்திரன்** — காதலீ! நீ அறியத் தகாத தொன்றும் உண்டோ? உயிர் ஒன்றானபோது, உணர்வு இரண்டாவ தெங்ஙனம்? அதனை நினக்கு உணர்த்துவதற்கே யன்றோ முன்னுரை கூறினேன்.

**சந்திரமதி** — என் ஆருயிர்த் தலைவ! தமது கருத்து அங்ஙன மாயின், யான் பெறற்குரிய பேறு வேறு யாது? தயவுகூர்ந்து அதனை வெளியிடவேண்டும்.

**அரிச்சந்திரன்** — காதலீ! இன்று யான் சிங்காதனத்தின்கண் அமர்ந்து மந்திராலோசனை செய்துகொண்டிருந்தேன். அக் காலத்து விசுவாமித்திர முனிவர் அங்கு எழுந்தருளினார்.

**சந்திரமதி** — ஓ, ஓ, அதனால்தான் தாங்கள் பெருமகிழ்வுகொண்டு வந்தீர்களோ?

**அரிச்சந்திரன்** — ஆம், மற்றுங் கேள் கண்மணீ! அவர் வரவை நல் வரவாகக் கொண்டு வணங்கி வழிபட்டேன். அம் முனிவர் பெருமானும் ஆசி கூறி, ஆதனத்தின்கண் அமர்ந்தனர். பின்னர், "மன்னவர்க்கும் மன்பதைக்கும் ஆக்கங் கூறி, அரிய மகம் ஒன்றை யியற்ற எண்ணி, அதற்கு வேண்டிய பொருளைப் பெறுமாறு இங்கு அடைந்தேன்" என்றனர்.

**சந்திரமதி** — ஆ, ஆ, நாயக! நம் நல்வினைப் பயனே பயன். அம் முனிவர் பெருமான் வரவே யரிது. அவர் அரசர்க்கு ஆக்கங் கூறி, அரிய மகம் இழைக்கக் கருதியது அதனினும் அரிது. அம் மகத்திற்கு வேண்டும் பொருளை நம்மிடம் பெற விரும்பியது அனைத்தினும் அரிது. இதுவே யன்றோ நல்வினை யாவது. அவர் ராஜர்ஷி யன்றோ. முன்பு அரசுரிமை கொண்டவ ராதலின், அப்பற்று முனிவராயின போதும் நீங்க வில்லை போலும். காதல! தமது உரைக்கு இடையிடையே அடியாள் நடுத்துரைப்பது அடாது எனினும், உள்ளத்தில் எழும் பெரு மகிழ்ச்சியினால் கூறினேன். ஆதலின், பொறுத் தருள்க. பின்பு,

**அரிச்சந்திரன்** — முனிவர் கூறிய அவ்வுரை கேட்டு, களிப்பென்னுங் கடலுள் ஆழ்ந்து, அவர் வேண்டிய பொன் முற்றும் அளித்தற்கு இசைந்து, கொடுக்கவும் விரைந்தேன். அப் பெரியார் அதனை நம்மிடத்தே வைத்து, வேண்டுங் காலத்துப் பெறுவதாகச் சொல்லி, வாழ்த்துக் கூறி, மகிழ்வுடன் சென்றனர். இவ்வாறு நாம் நற்பயனை யடையுமாறு முடித்து வைத்த இறைவற்கு வாழ்த்துக் கூறுதல் நமது கடமை யன்றோ?

திருச்சிற்றம்பலம் (பாடுகின்றனர்.)

நின்னாவார் பிறரன்றி நீயே யானாய்
நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்து மானாய்
மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்
மறைநான்கு மானாயா றங்க மானாய்
பொன்னானாய் மணியானாய் போக மானாய்
பூமிமேல் புகழ்தக்க பொருளே நின்னை
என்னானாய் என்னானாய் என்னி னல்லால்
ஏழையேன் என்சொல்லி யேத்து கேனே.

திருச்சிற்றம்பலம்

(அனைவரும் போகிறார்கள்.)

## நான்காங் களம்



**இடம்:** *விசுவாமித்திரர் பன்னசாலையை யடுத்த ஒரு மரத்தின் நிழல்.*

**காலம்:** *காலை.*

**பாத்திரங்கள்:** *விசுவாமித்திரர், சுசீலன், மச்சரன், காந்தாரிகை, விசாகினி.*

[*விசுவாமித்திரரிடம் சுசீலன் விரைந்து வருகின்றான்.*]

**சுசீலன்** — முனிவர் பெரும! நமஸ்காரம்.

**விசுவாமித்திரர்** — சிஷ்யா! விரைந்து வந்தனை, யாது விசேடம்?

**சுசீலன்** — குருநாதா! இன்று வேட்டையாட அரிச்சந்திர மன்னன் ஈண்டு அடைந்திருக்கின்றான். வேடுவர் யாவரும் தத்தம் கருவிகளைக் கையிற்கொண்டு, பல்வேறு திசைகளிற் பரந்து சென்று, தம் எதிரிற்பட்ட விலங்கினங்களை வதைக்கின்றனர்.

**விசுவாமித்திரர்** — ஓ, ஓ! நன்று, நன்று. அரிச்சந்திரன் ஈண்டு அடைந்திருப்பதை நீ நேரிற் கண்டனையா?

**சுசீலன்** — ஆம் சுவாமீ, கண்டேன்.

**விசுவாமித்திரர்** — நாம் எண்ணிய கருமங் கைகூடுங்கால மிதுவேயாம். ஆதலின், இப்போது யாம் ஒரு சூழ்ச்சி புரிதல் வேண்டும். அவ் வசிட்டக் கிழவன் வாய்மதத்தை யடக்க இன்றே சமயம் நேர்ந்தது. இதற்கு நல்லதோர் சூழ்ச்சியைக் கூறுவாய்.

**சுசீலன்** — அருந்தவ முனிவ! அரிச்சந்திரன் சத்தியவான் என்பதொன்றே வசிட்டர் கூறியது. ஈண்டுப் போந்துள்ள மன்னனை காரணம் ஒரு சிறிது மின்றி எவ்வாறு அசத்தியனுக்குவது? என் மனத்தின்கண் ஒன்றுந் தோன்றவில்லை.

**விசுவாமித்திரர்** — சிஷ்ய! இம்மட்டோ நீ அறிந்தது. அரிச்சந்திரன் சத்தியவான் என்பதொன்றல்ல வசிட்டன் கூறியது. அக் கிழவன் வாய்மதங்கொண்டு பிதற்றியன பலவுள.

**சுசீலன்** — முனிவர் நாயக! அவை இவையெனத் திருவுளங்கொண்டு வெளியிடில், இந்தச் சமயத்திற்குத் தக்கதோர் சூழ்ச்சியை எளிதில் நாடலாம்.

**விசுவாமித்திரர்** — ஆம், ஆம், அன்று அரிச்சந்திரனைச் சுட்டி அவ் வசிட்டன் தேவேந்திர சபையில் பலபடப் புனைந்துரைத்த பொய் புரைகளைக் கேள், அரிச்சந்திரனே—(1) மன்னர்

யாரினும் மாண்புடையவன். (2) பொய்யுரை புகலாப் புனித குண முடையவன். (3) நெறிமுறைகளிற் சிறிதும் பிழையாத நேர்மையுள்ளவன். (4) உலகநூலும் அறிவுநூலும் ஐயமற ஆராய்ந்தவன். (5) தன் மனைவியையன்றி மற்றைய மாதரைத் தாயாகக் கருதுந் தன்மையுடையவன் முதலியவாம்.

**சுசீலன்** — ஆ! அவ் வசிட்டர் அம்மன்னனைக் குறித்து இவ்வளவுங் கூறினரோ? யான் அறியேன். இவை யனைத்தும் அம்மன்னற்கு எவ்வாறு ஏற்கும்? மூப்பினால் கூறுவது இன்னதென் றறியாது கூறினர்போலும் அவ் வசிட்டர். 'அந்தோ! அவரது போலி யுரையால் இவ் வரசன் அல்லலுக் காளாயினன். யாது கூறினும் கூறலாம். பரமாதரைத் தாயாகப் பாவிக்கும் பண்புடையன் என்பது ஒன்றே அவர் கூற்றைப் பொய்ப்படுக்குமே. ஆ! அரிவையர் மயக்கிற் படாத ஆண்மையாளர் யாவர்?

**விசுவாமித்திரர்** — ஆமாம், ஆமாம், அதற்கு மோர் ஐயப்பாடுண்டோ? இதனைப்பற்றியே இப்போது ஆராய்தல் வேண்டும். (*சற்று மேல்நோக்கி யோசிக்கின்றான்*) சரி, சரி, முடிந்தது! முடிந்தது! தெற்றெனச் சென்று, இதற்கென்று யாம் சேகரித்துள்ள ஆடை யணிகளால் அலங்கரித்து, நந்தம் சிறுமியர் இருவரையும் ஈண்டழைத்து வருவாய்.

**சுசீலன்** — இதோ வந்துவிட்டேன். (*மச்சரனை யழைத்துக்கொண்டு ஓடுகின்றான். வழியில் மச்சரன் சுசீலனை நோக்கி*)

**மச்சரன்** — சுசீல! நமது முனிவர் இவ்வளவு விரைவில் இப்பெண்களை அழைத்துவரச் சொன்னது எதற்காக இருக்கலாம்?

**சுசீலன்** — இவர்களை அரசன்பா லனுப்பி, அவனை அவர்களுக்கு இணங்குமாறு புரிவதற்காக இருக்கலாம்.

**மச்சரன்** — அவ் வரசன் இவர்களுக்கு வசப்பட்டு விடுவானோ?

**சுசீலன்** — பெண்கள் கண்வலையிற் படாதார் யாவர். "பைந்தொடியார் ஆசைநோய் தெம்பீர மனிதரையும், சுந்தரஞானியர் தீரர் சூரரையெல்லாம் இமைப்பிற் றுரும்பு செய்யும்" அன்றே. அருந்தவ முனிவராய நமது ஆசிரியரோ, கந்த மூல பலாதிகளை யுண்டு, அருவி நீரருந்தி, மழையிலும் பனியிலும் வெய்யிலிலும் தேகத்தை வாட்டி, முத்தீ வளர்த்தி, நடுவில் நின்று உடலை யுணக்கும் அருந்தவப் புனிதர். இத்தகைய பெரியாரே, மேனகை யென்னும் ஒரு மாதைக் கண்டு மயங்கி, அவள் வலையிற் பட்டாரென்றால், நாடோறும் நல்லுண வருந்தி இன்புறும் இறையவன், இம் மங்கையர் மயலைக் கடத்தல் அரிது, அரிது. நம் ஆசிரியர் நல்லதோர் சூழ்ச்சியை

நாடினர். இவ்வன்மை யின்றேல் வசிட்டரோடு வாதிடுவரோ! (பின்பு அம் மங்கையரைக் குறுகி) சோதரிகாள், நந்தம் அருந் தவ முனிவர், முன்பே சேகரித்துள்ள ஆடை யணிகளால் அலங்கரித்து, உங்களை அழைத்துவரச் சொல்லினர்; கடிது வாருங்கள்.

**பெண்கள்** — சோதர! இதோ வருகின்றோம்.

**சுசீலன்** — (விசுவாமித்திரனை யணுகி) சுவாமீ! இதோ அப் பெண்மணிகள் வந்திருக்கின்றனர்.

**விசாகினி** — அருந்தவ முனிவர் பெரும! வந்தனம் புரிகின்றோம்.

**விசுவாமித்திரர்** — பெண்மணிகாள்! உங்கட்கு நன்மைகள் யாவும் நலக்க உண்டாவனவாக. மனத்துள் ஒரு விஷயத்தை நாடி உங்களை அழைத்தோம். நீங்கள் விரைவிற் சென்று அதனை முடித்தல் வேண்டும்.

**காந்தாரிகை** — தேவரீரது அடிகட்கே ஆட்பட்டிருக்கும் அடியேங்கள் தங்கள் சித்தத்தின்படி நடக்கக் காத்திருக்கின்றோம். இதனினும் யாங்கள் பெறும் பேறு யாதுளது?

**விசுவாமித்திரர்** — பெண்மணிகாள்! நல்லது, அயோத்தியை அரசு புரியும் அரிச்சந்திரன் இவ்வடவியை அடைந்திருக்கின்றான். அவன் தங்கியிருக்கும் இடத்தில் நீங்கள் சென்று, அவன் உங்களை மணந்துகொள்ளும்படி ஏதேனும் ஒரு சூழ்ச்சி புரிதல் வேண்டும்.

**விசாகினி** — முனிவர் நாயக! இதற்கு யாங்கள் யாது செய்ய வல்லோம். "பெண்ணறி வென்பது பெரும் பேதைமைத்து" என்னும் முதுமொழிக்கு இலக்காக இருக்கின்றோம். தேவரீர் எவ்வாறு கட்டளையிடினும் அவ்வாறு நடக்கின்றோம்.

**விசுவாமித்திரர்** — பெண்மணிகாள்! அவ் வரசன் உங்களைக் கண்ட மாத்திரத்தானே மயங்கி, உங்களது கண்வலையிற் படுவான். அவ்வாறு மயங்கானேல், உங்கட்குக் கைவந்துள்ள இசைக் கருவிகளைக் கொண்டு, இனிமையுறப் பாடி, அவனை வசப்படுத்தல் வேண்டும். விரைந்து செல்லுங்கள். இது ஒன்றே நேரிய வழி.

**காந்தாரிகை** — முனிவர் நாயக! அடியேங்கள் விண்ணப்பம் ஒன்று. மனம் புரிந்து அதனைக் கேட்டருள வேண்டும். அரிச்சந்திரன் மிக்க நேர்மையும் நிறைகுணங்களு முடைய மன்னவன். கலைகள் முற்றுங் கற்றுணர்ந்தவன். மற்றும் அம் மன்னவன் செங்கோன்மை தேவரீ ரறியாத தன்று. அத்தகைய சதுரனிடத்தில் யாங்கள் பாடி எவ்வாறு வெற்றிகொள்வது. இது ஒன்றே எங்கள் மனத்தில் கவற்சியை உண்டாக்குகின்றது.

**விசுவாமித்திரர்** — பெண்காள்! நீங்கள் அறியாது கூறுகின்றீர்கள்.

விருத்தம்

ஒத்தேறு முருவமில்லாப் பிரமமொன்று
மேயொழிய உருவ முள்ளார்
எத்தேவ ராயினுமோர் பூங்கணையால்
தம்போத மெல்லாம் நீங்கி
மத்தேறி யுடைதயிர்போல் மனஞ்சுழன்று
செயன்மறந்து மடவா ராசைப்
பித்தேறி யிதமுரைத்தப் பேதையர்க்கும்
பேதையராய்ப் பின்செல் வாரால்

என்னும் இவ் வுண்மையினைப் பொய்யாக்குதல் யார்க்கும் முடியாது.

**காந்தாரிகை** — குருநாத! தாங்கள் கூறுவது உண்மையே. ஆயினும், அரசன், அழகே யுருவாகவந்த மாதர் பலரோடும் பயின்றிருப்பவ னாதலால், காட்டில் உடலை யொடுக்கித் தவஞ்செய்யும் எம்மைக் கண்டு காமுறுவது எவ்வாறு என்று ஐயுறுகின்றோம்.

**விசுவாமித்திரர்** — பெண்மணிகாள்! உங்களுக்கு அம் மன்னன் மனத்தைக் கவரும் மெய் வனப்பு இல்லா தொழியவில்லை. அதனோடு சங்கீதம் என்னும் சாரீர வனப்பும் மிகுந்திருக்கிறது.

கலித்துறை

பாலுண் குழந்தை யொடுநற் பசுவும் பணியுமின்னும்
ஞாலத் தமர்பண் டிதயோ கிகளுடன் ஞானிகளும்
கோலத் தமரரும் நான்முகன் முக்கணன் கோவலனும்
சாலச் சுகமுற வோங்கிய நற்கலை சங்கீதமே

என்பதே போல், இசை யொன்றே எவரையும் மனமுருகச் செய்யும். இன்னிசையின் நயப்பால் பால் மணமறாத வாயினையுடைய குழந்தையும் பசியை மறக்கின்றது. அரவமும் அரவமின்றி அசையாது நிற்கிறது. பசு முதலிய விலங்குகளும் களிப்படைந்து தம்மை மறந்து நிற்கின்றன. மற்றும் எல்லாம் வல்ல இறைவனும் தம்மடியார் பாடும் இன்னிசைக்கு மனமுருகி யருளுகின்றார். இதனாலன்றோ அக்கடவுளை, 'சாம வேதப் பிரியன்' என்னும் திருநாமத்தால் எம்மையொத்த முனிசிரேட்டரும் அழைக்கின்றனர். அத்தகைய இசையை மனிதனே விரும்பா தொழிவன்! அதனினும் அரசர்க்கு அது சால விருப்புடையதாம். இசையை விரும்பாதவர் இவ்வுலகினும் அவ்வுலகினும் எவ்வுலகினும் இல்லையாம். அவ்வாறு ஒருவன் இருப்பின் அவனைக் கல்லோடு கணக்கிடல் வேண்டும். ஆகையால், நீங்கள் ஐயுறவின்றி களிப்புடன் செல்லுங்கள்.

**விசாகினி** — குருநாதா! தேவரீர் கட்டளை யிட்டருளியபடியே செல்கின்றோம். ஆயினும், கொற்றவனை மயக்கவல்ல வன்மை எங்களிடம் உண்டோ இன்றோ வென்று இன்னும் மயங்குகின்றோம்.

**விசுவாமித்திரர்** — பெண்மணிகாள்! அத்தகைய மயக்கம் உங்களுக்கு வேண்டா. மலை யுயரம் மலை யுணராது. கற்றறிந்தோர் தம் கல்வியறிவு இவ்வளவினதென்று தாமே அறியார். நீவிர் நம்பால் சகல கலைகளும் நன்கு பயின்றிருக்கின்றீர்கள். உங்களை வெல்லுவோர் எவ்வுலகினு மில்லை. எழுபத்திரண்டாகிய இசைப் பெருக்கங்களில் பெரும்பாலானவை பெண்பெயரா லமைந்துள்ளன. அவை—கனகாங்கி, ரத்னாங்கி, மானவதி, தானரூபி, சேனாவதி, ரூபாவதி, ஹாடகாம்பரி, கீர்வாணி, கௌரீமனோஹரி, சாருகேசி, சரசாங்கி, நாகாநந்தி, ராகவர்த்தனி, காங்கேயபூஷணி, வாகதீஸ்வரி, சூலினி, பாவனி, சுவர்ணாங்கி, திவ்வியமணி, தவளாம்பரி, நாமநாராயணி, காமவர்த்தனி, ஷ்யாமளாங்கி, ஹேமவதி, நீதிமதி, காந்தாமணி, லதாங்கி, சித்ராம்பரி, ஜ்யோதிஸ்வரூபிணி, நாசிகாபூஷணி, ரசிகப்பிரியா—முதலாயின வாம். அதனால் ஏந்திழையார்க்கே இசை யமைவுடையது என்னலாம். உமது பெயரைக்கொண்ட இசைகளே எல்லாவுயிரையும் தம் வசப்படுத்துகின்றன வாதலால், நீங்களே அந்த இசையொடு நேரிற் சென்றால் மயங்காதார் யாவர்! ஆதலின், நீங்கள் விரைவிற் சென்று அந்த மன்னவன் முன் அபிநயக் குறிகளை நயம்படக் காட்டி, விழியாகிய வேலினால் அவனது மார்பகத்தைப் பிளந்து, இளநகையால் அவன் மனத்தினை யுருக்கி, மான்போல் துள்ளி, மீன்போல் துவண்டு, மேகலை நெகிழ அன்னமென நடந்து, கிள்ளை போல் பேசி, குயில்போல் யினிமையாய்ப் பாடி, கலாபம் விரித்தாடும் மயில்போல் ஆடையை விரித்தாடி, கறங்கு போல் சுழன்று, தரையிற் படிந்து வணங்குவதுபோல் தலைக்கோலங் காட்டி, தாமரை மலரையொத்த தாள்களை எடுத்தும் விடுத்தும் மடித்தும் நடித்து, நடன விகற்பங்கள் காட்டி, அவனை மயங்கச்செய்து, அவனது மனத்தைத் திறை கொள்ளவேண்டும்.

**காந்தாரிகை** — குருநாதா! தேவரீர் அருளியபடியே செய்கின்றோம். ஓர் அரசன் எமது ஆடலைக் கண்டு மயங்கிவிடுவானோ என்று மற்றும் ஐயப்படுகின்றோம்.

**விசுவாமித்திரர்** — பெண்மணிகாள்! அரசன் ஆடலில் மயங்காவிட்டாலும், பாடலில் மயங்கிவிடுவான். பாடும்போது—

புருவநெறி யாமல்மணி யெயிறுதோன் றாமல்விழி
 புரளாமல் அங்க சேஷ்டை
புரியாமல் மிருதலையை யசையாமல் மிடறுதான்
 பொருமிவிம் மாம லியல்பாய்
சுருதிலயை சுரஞான நியதியொடு வீணையின்
 தொனியின் நாதப் பிரமமாய்
துய்யதந் திரியோசை மிடற்றோசை யெனவேறு
 தோன்றாம லின்ப நயமாய்
தருமதுர வமுதரச மொழுகுசா ளிகள்புழகு
 சங்கீத வித்தை யென்றால்
சகலர்க்கும் ஆனந்த மாகுமது பாடுமெவள்
 சரசகுண வஞ்சி யெனிலோ
மருவுமவர் கண்வலைப் பட்டிடா மாந்தரிவ்
 வையகத் துண்டு கொல்லோ

என்றிருப்பதனால் உங்களுடைய நடனத்தைக் கண்டு இசை-யைக் கேட்ட உடனே மணந்து கொள்வான் என்பதில் சற்றும் சந்தேக மில்லை. போய் வாருங்கள் ஆசீர்வாதம்.

**பெண்கள்** — முனிவர் பெரும! தேவரீரது ஆசீர்வாதத்தை மேற்-கொண்டு இதோ செல்கின்றோம்.

(வணங்கிச் செல்கின்றனர்.)

## ஐந்தாங் களம்



**இடம்:** அயோத்தியை யடுத்த காடு.

**காலம்:** பகல்.

**பாத்திரங்கள்:** வேடுவர், அரிச்சந்திரன், பாங்கன், காந்தாரிகை, விசாகினி.

**வீரன்** — டே தண்டா, கறுப்பா, அமாசெ, அல்லாo ஓடியாங்கடா. ஐயேo அஜா அட்ந காட்டுக்கு வந்தா வேட்டை ஆட்ராங்க. நம்ப காடு கலிக்கணும். ஓடியாங்கடா.

**தண்டன்** — தோ ஓடி யாரண்டா. ஆய்தங்கள்ளாo எம்மாத்தந் திரும்பு புடிச்சினு கீது. தெரியாதெ கத்தரியே. தோ வந்-தண்டா. செல்லேo வேலெயெ.

(அனைவரும் வருகின்றனர்.)

**அமாவாசை**—வேறெ வேலெ என்னடா கீது. அவனெ போயி கேக்கிறிங்களெ. அய்யெo வரங்காட்டியo காட்டெ கலெங்-கிளேண்டா. சந்துங்க பொந்துங்க பொதுருங்கள்ளெ பதுங்-கினு கீதுங்களெ, அதுங்களெ பாத்து வெச்சா, ஐயெo வந்ததெ அடிச்சி எய்ப்பலாo.

**சினுக்கன்** — அக் ஆண்டா. இர்று, இர்று. பேசாரே.

(பாடுகிறான்.)

இராகம் — பிலகரி. தாளம் — ரூபகம்.

பல்லவி

பேசாரமைடையே — பொறு பொறு
பேசாரமைடையே. (பேசா)

அநுபல்லவி

பாசமிகு மிஞ்ச தேசுறுங் காட்டிலே
பச்சக் கிளியுங் கூவுறு
பச்சிப் பலவும் மேயுறு
கிச்சிலி பறவையுஞ் சாயுறு (பேசா)

சரணங்கள்

1. கள்ள மடையானு நோக்குறு — கூளக்
கடா அரோ எட்டிப் பாக்குறு
கொள்ளு மோட்டுக்கரெ வரியிம் பக்கத்தே
கொக்குகளுடம் பாயுறு
ரெக்கெகளுங் காயுறு
சிக்கெநுளக் தாயுறு (பேசா)

2. வானம்பாடி கானம் பாடுறு — வெள்ளெ
மாடப் பொறுநட மாடுறு
கானங் கோளியனு மானமில்லா மரே
கண்ணிக் குள்ளே சிக்குறு
முன்னும் மேலே பாக்குறு
பின்னுங் காலெ தாக்குறு (பேசா)

3. பண்ணி கும்பு கும்பா ஓடுறு — புலி
பாஞ்சிப் பாஞ்சிப் பின்னே கூடுறு
தண்ணி குடிக்கவே சிங்கமும் நாடுறு
சாணுக் கொண்ணு போவுறு
ஆனெக் குட்டியுங் கூவுறு
மானுக் குட்டியுந் தாவுறு (பேசா)

கறுப்பன் — டே யப்பா, ஆமாண்டா, நெல்ல காலண்டா. அல்லாம் கும்பு கும்பா கீது. பாத்து வெச்சா, ஐயெம் வந்தாக்கா அப்படியே காட்டிடணும். கூச்செ நீச்செ போடபோறிங்கடா, பத்ரம்.

(அனைவரும் மிருகங்களைத் தேடிக்கொண் டிருக்கின்றனர். அரிச்சந்திரன் படையுடன் வந்து, வேடுவரைக் கலந்து கொண்டு வேட்டையாடுகின்றான். பாங்கன் ஒரு மரத்தின் நிழலில் நின்று தனக்குத்தானே கூறுகின்றான்.)

**பாங்கன்** — ஆ, ஆ! என்ன வெய்யில்! என்ன கொடுமை! சற்றும் சகிக்க முடியவில்லை. காலை முதல் இது வரையில் இவ் வன முழுதுஞ் சுற்றிச் சுற்றி வேட்டையாடியும், இன்னும் பற்பல மிருகங்கள் விடுபட் டிருக்கின்றாற்போல் காண்கின்றது. நமது மன்னரும் மனஞ் சலிப் பின்றி, மலைகளிலுஞ் சென்று வன்மையோடு வேட்டையாடினர். நம் வேடுவர் தேடித் தேடித், துட்ட மிருகங்கள் அனைத்தையும் தொலைத்தனர். ஆயினும், மற்றுஞ் சில மிருகங்கள் மறைந்து நிற்கின்றன. என்செய்வோம். இக் கல்லிலும் முள்ளிலும் அலைந்தோடிக் கால்களுங் கடுக்கின்றன. இனி, எழுந்திருக்கவும் வன்மை யில்லை. யாவர் வரினும் இவ் வழியாற் றானே வரவேண்டும். நாம் இம் மா நிழலில் சற்றுத் தங்கி யிருந்து இளைப் பாறு-வோம். நமது நதியே இவ்வா றாயின், நமது மன்னவர் தன்மை என்னாகும். ஆ, ஆ! இப்படிப்பட்ட வேட்டை நமது காலத்-தில் என்றுங் கண்டறியோம். (தங்குகின்றான்.)

**அரிச்சந்திரன்** — (*தனக்குத்தானே*) இப் பன்றியை எய்வது ஒன்றே நமக்குப் பெருந் துன்பத்தை விளைத்தது. அதனைப் பின் பற்றி யோடுகையில் நமது கழுத்திலிருந்த இவ் வாதன மாலை-யும் அறுந்துவிட்டது. இவ்வகைய அரிய வேட்டம் நாம் என்றும் செய்திலோம். ஆயினும், ஒருவாறு விலங்குகள் அனைத்தும் ஒழிந்தன. ஒரு வரிப் புலியைத் தொடர்ந்து சென்ற மந்திரி இன்னும் வரக் காணேம். புலி முதலிய-வற்றை நாடிச் சென்ற வேடுவரும் இன்னும் வந்தாரில்லை. அந்தோ! நமது படைகள் முற்றும் இன்று நெடுநேரம் வேட்-டையாடிக் களைப்படைகின்றன. இன்னும் வேட்டை-யாடச் சொல்வது கூடாமை. எஞ்சிய மிருகங்க ளிருப்பின் அவற்றை நாமே வதைக்கலாம். அங்கோர் பச்சென்ற மரம் காணப்படுகின்றது. ஆண்டு நீர்நிலை இருத்தலும் கூடும். தண்ணீர் வேட்கையால் துட்ட மிருகங்கள் அவ் விடத்தை யடையும். ஆதலின், அதன் கரைக்கண் இருக்-கும் புதலின் புறத்தே ஒளிவிருந்து, அவற்றை எய்து வதைப்-போம். (சென்று புதலின்கண் அமர்கின்றான்.)

(*காந்தாரிகையும், விசாகினியும் வந்து நமஸ்கரிக்கின்றனர்.*)

பெண்காள்! நீவிர் யாவர்?

**காந்தாரிகை** — வேந்தர் பெரும! யாங்கள் இவ் வனத்தின்கண் வதி-யும் கன்னியர். முனிவர்தம் பன்னசாலையிற் றங்கியிருந்து, அப் பெரியார் ஏவிய குற்றேவல்களைப் புரிந்துகொண்டு, அவ-ரருள் பெற்றுக், கலைபயிலும் வாழ்க்கை யுடையோம்.

**அரிச்சந்திரன்** — நன்று, நீவிர் யாது கருதி ஈண்டு அடைந்தனிர்?

**விசாகினி** — மன்னர் மன்ன! யாங்கள் இசை நுணுக்கம் நன்கு அறிவோம். பல சாஸ்திரங்களினும் பயிற்சியுண்டு. அதனால் வேட்டை காரணமாகத் தாம் இவ் விடத்தில் வந்திருப்பது கேள்வியுற்று, யாங்கள் அரிதின் அறிந்துள்ள இசை முதலிய-வற்றைப் பாடி, இன்ப மூட்டிப் பரிசுபெறத் தமது சமுகத்தை நாடி வந்தோம். உத்தரவானால் சிறிது பாடுகின்றோம்.

(பாங்கன் இவர்களது சம்பாஷணையால் கண் விழித்து மறைந்து பார்த்துக்-கொண் டிருக்கின்றான்.)

**பாங்கன்** — (தனக்குள்) யாரோ இருவர் மாதரும் நம் மன்னரும் தனித்து உரையாடுகின்றனர். யாம் இங்கிருப்பது அவர்கள் அறியார்கள். இனி யாது நடக்கின்றதோ கவனிப்போம்.

(ஒடுங்கி தூங்கிப் படுக்கின்றான்.)

**அரிச்சந்திரன்** — பெண்காள்! நீவிர் விரும்பியவாறு சிறிது பாடலாம்.

(பெண்கள் பாடுகின்றனர்)

**காந்தாரிகை** —

கலித்துறை

கல்லாத புல்லரை யில்லா வயோத்தியின் காவலனும்
சொல்லாருஞ் சீர்த்தி யுடையவன் தன்முனம் சோர்ந்துவரும்
நல்லார் மனந்தனில் நாடிய யாவையும் நன்களிப்பான்
மல்லாருந் திண்புய மாலரிச் சந்திர மன்னவனே.

**விசாகினி** —

ஈயாத புல்லரை யில்லா வயோத்திக் கிறையவனும்
வாயார வாழ்த்துநர் எண்ணிய யாவும் மகிழ்ந் தருள்வான்
தாயாருந் தந்தையும் சேயுமொப் பான்மன் பதைதனக்கே
மாயாத கீர்த்தி மருவரிச் சந்திர மன்னவனே.

**பெண்கள்** — (இருவரும் சேர்ந்து)

இராகம் — அம்சத்தொனி. தாளம் — ரூபகம்.

பல்லவி

துரையே நின்னைத் துணையாய் நாடினோம்
சொல்லும் பொருளைத் தெரிந்த
தொடர்ந்த எங்கட்குப் பரிந்த (துரையே)

அநுபல்லவி

விரைசேர் மலர்க்கர மார்ந்திடும்
விரும்பி வந்தோர் துயர் தீர்ந்திடும்
விவேககுண சம்பன்ன யோக
மெய்யன்பொடு தருந் தியாக (துரையே)

சரணம்

சந்ததம் வள ரறங்கள் நீடும்
தண்ணரு ளார்ந் தவரைத் தேடும்
வந்தனந் தேடிநின் வளத்தைப் பாடும்
வனிதையர் மன மகிழ நாடும்

கஞ்ச வஞ்சி நெஞ்ச மிஞ்ச, கிஞ்ச லெஞ்ச துஞ்ச லஞ்ச
கருணாகரனே தீரனே - காந்தையர் மனமகிழ் மாரனே. (துரையே)

கொச்சகக்கலிப்பா

தாயொக்கும் அன்பில் தவமொக்கு நலம் பயப்பில்
சேயொக்கு முன்னின் றொருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயொக்கு மென்னின் மருந்தொக்கும் நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கு மென்ன வந்தோய்.

அரிச்சந்திரன் — பெண்காள்! நீவிர் இசைநூலில் நன்கு பயின்றிருப்பது கண்டு மகிழ்கின்றோம். முனிவர் கற்பித்த முறையாதலின் முற்றும் குறை வின்றி யமைந்திருக்கின்றது. நீவிர் கூறிய பாடலின் பொருளமைதி ஒருவாறிருப்பினும், இசையருமை மேம்படுகின்றது. உங்கட்குப் பரிசாகப் புரிய, இது அரணியமா யிருத்தலின், தக்கது ஒன்றுங் கண்டிலேம். எனினும், இதோர் அரதன மாலையை அளிக்கின்றோம். இதை நீவிர் களிப்புடன் பெற்றுக்கொண்டு, மற்றொருகால் நாட்டிற்கு வரின், தக்கவாறு பரிசளிக்கின்றோம்.

(மாலையை நீட்டுகின்றான்.)

காந்தாரிகை — மன்னர் மன்ன! தங்கள் ஆசீர்வாதப் பயனால் யாங்கள் இத்தகைய பொருள்களை மிகுதியும் பெற்றுள்ளோம். மதன் தொடுத்த மலர் மாலையால், தமது மார்பிலணிந்த மலர்மாலையைப் பெற விரும்பி வந்தோம். அதற்கு இம் மணி மாலை என்ன செய்யும்?

அரிச்சந்திரன் — பெண்மணிகாள்! மணமாலையை மற்றொரு பெண்பாலுக்கு உரிமையாக்கிடாத ஒருவனிடத்து அம் மாலையைப் பெற விரும்புதல் ஏற்றதாகும். அதனைக் கருதாது, அம் மலர் மாலையை எம்மிடம் பெற விரும்புவது எவ்வாறு பொருந்தும்?

விசாகினி — மன்னர் மன்ன! மங்கையர் விருப்பை மறுத்துரைத்தல் மன்னவர்க் கழகன்று. காவலர் கைகண்டது காந்தருவ மணம். இம் முறை தாமறியாத தன்றே. 'மன முண்டேல் வழியுண்டு' என்பதை இங்கு நினைப்பூட்டுகின்றோம், அரசே!

**அரிச்சந்திரன்** — பெண்காள்! நீங்கள் கூறுவ துண்மையே. 'மனமுண்டேல் வழியுண்டு' என்பது நல்லதோர் முதுமொழியே. ஆயினும் எனக்கென ஈண்டு மனமென்பது ஒன்றில்லை. யான் எனது காதலியை மணம்புரிந்த அக்கணமே, எனது உடல் பொருள் ஆவி யனைத்தும் அம் மங்கைக்கே உரிமை யாக்கிவிட்டேன். ஆதலின், இனி உமக்குக் கொடுத்தற்கு மற்றோர் மனம் இன்மையால் மறுத்துக் கூறுகின்றேன். ஆதலின் நீவிர் என்பால் வெறுப்புறாது இம் மணி மாலையைப் பெற்றுச் செல்லுங்கள்.

**காந்தாரிகை** — வெற்றிவேல் வேந்தே! கல்வி யறிவாலும், நயமொழிகளாலும் எம்மைத் தேற்றிப் புறக்கணிப்பது புரவலர்க்குப் பொருந்தாது. மங்கையர் பலரை மணத்தல் மன்னவர்க்கு மரபே யன்றோ?

**அரிச்சந்திரன்** — பெண்காள்! வஞ்சியாகிய உங்களை வஞ்சிக்கின்றேனில்லை. மக்கள் யாக்கையைப் பெற்ற மாண்பினை யுடையார், கைக்கொண் டொழுகற்பால நல்லொழுக்கங்கள் பல. அவற்றுளெல்லாந் தலைமையானது ஏகபத்தினி விரதமுடையனாதல். ஆதலால், யான் உங்களை வெறுப்பதாகக் கருதாமல், இம் மணி மாலையைப் பெற்றுச் செல்லுங்கள்.

**விசாகினி** — வேந்தே! விரும்பிவந்த எம்மை வீணே வெறுக்கின்றீர். யாமோ அபலைகள். பலமில்லார் பலமுள்ளாரிடத்துச் செய்வது யாது? தாம் மனங்கொண்டு எம்மை மணம்புரியாது அகற்றுவீராயின், யாங்கள் காலமுழுதுங் கன்னியராக விருந்து, உணவுகளை வெறுத்து, வாழுநாளனைத்தும் வீணாக்கி, அவலமாய் நின்று, வறிதே மரண மடைவோம். அரசே! "பெரிது பெரிது பெண்பழி" என்ப.

**அரிச்சந்திரன்** — பெண்காள்! பெண்பழி பெரிதென்ப துண்மையே. பிறன்மனை நோக்காமையே பேராண்மை. ஒரு பெண்ணுக்கு முதலி லாக்கிவிட்ட மனத்தினை, மற்றொரு பெண்ணுக்கு ஆக்குவதே பழியும் பாவமும் ஆகும். பழியும் பாவமுமாகிய இரண்டினைப் பெறுவதினும், இப் பெண்பழி யொன்றினைப் பெறுதல் சால நன்றாம். எனது மந்திரி முதலாயினார் ஆண்டு என் வருகை எதிர்பார்த்து நிற்பர். ஆதலான், யான் ஈண்டு காலந் தாழ்த்து நிற்பது தகுதி யன்று. நீங்கள் செல்லுங்கள். (திரும்பிச் செல்கின்றான்.)

**விசாகினி** — தங்காய்! இம் மன்னனது நேர்மையும், நிறை குணங்களையும் கண்டனையோ! ஆ, ஆ! இத் தகைய புருடோத்தமனை வஞ்சிக்க எவரா லாகும்?

**காந்தாரிகை** — ஆம், ஆம், அம் மன்னனது இங்கிதமும், இன்மொழியும் எவர்க்கும் உண்டாதல் அரிது. அரிய தவ முனிவராய நம் முனிவர்க்கும் இதிற் காற்கூறில்லையே. நாம் தடுத்துரைத்தும் நம்மை வீணே அனுப்பினர். நாம் என் செய்வோம், வந்தவழிச் செல்வதே நேரிது.

**பாங்கன்** — (எதிரில் வந்து) ஆ, ஆ, என்ன உத்தமிகள்! மன்னவன் இசைந்தால் மணாளனாகக் கொள்வீர். பாவும், என்ன கூறியும் எண்ணம் முடியவில்லை!

**விசாகினி** — ஆ, இவன் ஆர்! இவன் இதுவரையில் எங்கிருந்தான்! யாரடா நீ?

**பாங்கன்** — அடா என்றால் அறைவேன். நான் யாரா? நான்றான் தெரியாதா—மன்னவர் உயிர்ப் பாங்கன்.

**காந்தாரிகை** — என்னடா மட்டுமரியாதை யின்றிப் பேசுகிறாய்? எங்களை அறைவையா நீ?

**பாங்கன்** — அறையாம லென்ன! உங்களுடைய குணத்திற்கும் நடக்கைக்கும் அறைந்தால்தான் புத்திவரும். மற்றொருவ ரிடத்து இந்தப் புத்தி செல்லாது. போடுகிறேன் பார். (அறைகிறான்.)

**பெண்கள்** — ஐயையோ! ஐயையோ! அடா பாவி! படுபாவி! உனக்கு என்ன கேடு வருகிறது பார். இதோ ஒரு நிமிஷத்தில் வருகிறது கேடு! (அலறிக்கொண்டு முனிவரிடம் ஓடுகின்றனர்.)

**பாங்கன்** — ஆ, ஆ, வருவது வரட்டும். இதற்கெல்லாம் யாரும் பயந்திலலை. அரசனைப் பழிக்காளாக்க வந்த அசடிகள், மற்றென்னதான் செய்யத் துணியமாட்டார்கள்.

(போகிறான்.)

## ஆறாங் களம்



**இடம்:** காட்டின் வழி.

**காலம்:** பிற்பகல்.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சத்தியகீர்த்தி, பாங்கன், விசுவாமித்திரர், வைகானசன்.

[மந்திரி அரசனை நாடி வருகின்றான்.]

**அரிச்சந்திரன்** — மந்திரி! இவ்வளவு நேரம் எங்குச் சென்றிருந்தீர்?

**மந்திரி** — அரசே! வரிப்புலி ஒன்றினைத் தொடர்ந்து சென்றேனன்றே, அது விரைந் தோடி ஒரு மலைக் குகையின்கண் ஒளித்துக்கொண்டது. அதனை எய்து கொன்றுவர இவ்வளவு காலம் நீடித்தது.

**அரிச்சந்திரன்** — ஓ, ஓ, சரி, சந்தோஷம், கொன்றுவிட்டீ ரன்றோ?

**மந்திரி** — ஆம், அரசே! இதோ நமது பாங்கனும் வருகின்றான். இவன் எங்கே சென்றிருந்தான்?

**அரிச்சந்திரன்** — வரட்டும், வரட்டும்.

(பாங்கன் அரசனை நாடி வருகின்றான்.)

**பாங்கன்** — அரசே! அடியேன் நமஸ்காரம்.

**அரிச்சந்திரன்** — ஆ, பாங்க! இதுவரையிலும் எங்குச் சென்றனை?

**பாங்கன்** — வேந்தே! அடியேனைப் பிரிந்து தாங்கள் வேட்டைமேற் சென்ற பின்பு, தங்களைத் தேடித் தேடிக் களைப்படைந்து, ஒரு மரத்தின் நிழலிற் றங்கியிருந்தேன். தெய்வமே தங்களை அவ்விடத்துக் கூட்டி வைத்தது. அதனால் அடியேன் தங்களோடேதான் இருந்தேன்.

**அரிச்சந்திரன்** — பாங்க! என்ன விந்தை! நீ என்னோடு இருந்தனையா? அவ்வாறாயின் என் கண்ணிற் படாது எங்கு அகன்றனை?

**பாங்கன்** — அரசே! அடியேன் தம்மைவிட்டு அகலவே இல்லை. தங்களை வஞ்சிக்க வந்த மங்கையரது வாயை யடக்கச் சென்றேன்.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, என்ன செய்தனை! அம் மங்கையரை நீ எங்கே கண்டனை? அவர்களை நீ யாது செய்தனை?

**பாங்கன்** — அரசே! நான் எல்லாம் அறிவேன். தாங்கள் அம் மரத்தடியின் நிழலில் தங்கியிருந்ததும், உடனே அம் மாதர் அங்கு வந்து பாடியதும் அடியேன் அறிவேன்.

**அரிச்சந்திரன்** — அப்போது நீ எங்கிருந்தனை?

**பாங்கன்** — நான் அங்கேதான் இருந்தேன்.

**அரிச்சந்திரன்** — பாங்க! நீ என் கண்ணிற் பட்டாயில்லையே, மறைந்திருந்தனையோ?

**பாங்கன்** — அரசே! யான் மறைந்திருக்கவில்லை. அம் மரத்தடியின் ஒரு புறத்து அயர்ந்து நித்திரை செய்துகொண்டிருந்தேன். அக் காலத்து யாரோ இன்னிசையாய்ப் பாடுவது காதில் பட்டது, விழித்துப் பார்த்தேன். இரண்டு மங்கையர் பாடுவதும், தாங்கள் களிப்புடன் கேட்பதும் கண்டேன்.

**அரிச்சந்திரன்** — பாங்க, இவை யனைத்தும் கண்ட நீ, என்னிடம் வாராமைக்குக் காரணம் யாது? உனக்குப் பாங்கன் என்னும் பெயர் எவ்வாறு ஏற்கும்?

**பாங்கன்** — அரசே! தங்களிடம் வரக்கூடாதென்னும் எண்ணமல்ல. மற்றும் அங்கு யாது நடக்கின்றதோ அறியலாம் என இருந்தேன். பின்பு நடந்தவை தமக்குத் தெரிந்தனவே யன்றே? யானும் அவற்றை ஏன் பன்னவேண்டும்.

**அரிச்சந்திரன்** — ஓ, ஓ! அப்படியோ, அதிருக்கட்டும். 'அவர்கள் வாயடக்கச் சென்றேன்' என்றனையே அதென்ன?

**பாங்கன்**—ஆம், அரசே! பெண்களது கண்வலையிற் சிக்காத ஆண்மகன் அருமை. அதனினும் எழிலும், இசையும் வாய்ந்த அரிவையர் மயலில் அகப்படாத ஆண்டகை அரிதினும் அருமை. அப் பெண்கள், அச்சம் மடம் நாணம் பயிர்ப்பு என்னும் நாற்குணங்களையும் ஒழித்துத், தம்மை மணக்கும்படி வாயாரக் கேட்டும், அதனை மறுத்துநின்ற தமது மன வன்மையே வன்மை! எத்தனையோ முறை தேவரீர் தடுத்தும், அப் பேய்ப் பெண்கள் விட்டொழிய வில்லையே. அப்போதே அவர்களது உயிரை யான் இவ் வாளுக்கு இரையாக்கி இருக்கவேண்டும். ஐயோ! பெண்பழி சுற்றுமென்று பின்னிடைந்தேன். அவர்களைக் கொல்வதும் பழியாகாது. இப் பாதகிகள் உயிர்வாழ்ந் திருந்தால் எத்தனை ஆண்மக்களது உயிர்களுக்கு உலைவைப்பார்களோ! ஆயினும் அரசரோடு பேசும்போது நாம் ஒன்றும் செய்யலாகாது என்று அடங்கி இருந்தேன்.

**அரிச்சந்திரன்** — ஆனால், அரசனைவிட்டு அகன்றபின்பு செய்யலாமென் றிருந்தனையோ — என்னதான் செய்தனை?

**பாங்கன்** — அண்ணலே! அதெல்லாம் ஒன்றுஞ் செய்யவில்லை, தாங்கள் அவர்களது விருப்பத்திற்கு இணங்காமல் வெறுப்புற்றுத் திரும்பி வந்தபின்பு, அப்பெண்கள் தம் எண்ணம் பலியாமை கண்டு பலவாறு பேசினர். அதனால், யான் அவர்களுக்கு நியாயங்கூறிக் கடிந்தேன். அதன்மேல் அவர்கள் என்னை இழித்துக் கூறினார்கள். உடனே எனக்குக் கோபம் மூண்டு, அவர்களைக் கன்னத்தில் அறைந்தேன். அந்த அறையோடு, 'குருநாதா! குருநாதா!' என்று கூக்குரலிட்டுக் கொண்டே ஓடினர். நானும் தாங்கள் வந்தவழியே திரும்பி வந்துவிட்டேன். இதுதான் நடந்த விஷயம்.

**அரிச்சந்திரன்**—ஆ, ஆ! என்னகாரியஞ் செய்துவிட்டனை. பெண்கள் தம் அறியாமை காரணமாக ஏதோ தகாதவற்றைக் கூறினும், அறிவுள்ள ஆண்மகன் அதனைப் பொறுத்தல் வேண்டுமன்றே. நமது உள்ள நிலையை அவர்கள் எவ்வாறு அறிவர். அதனால் நாம் அவர்களை வெறுத்தலும், ஒறுத்தலும் அடுக்குமா?

பெண்பால்கள் கனிந்த உள்ளமுடையவர்கள், சிறிது நன்மை யுண்டானால் பெரிதும் மகிழ்வர். அதுபோலவே சிறிது துன்பம் நேரினும் மிகுதியும் வாடி வருந்துவர். அதனால் அவர்கள் சிறிது குற்றம் இழைப்பினும் ஆண்மகன் அவர்க-ளிடத்து இரக்கங்காட்டி இதம்பட நியாயங்கூறுதல் வேண்-டும். இதனைவிட்டு அவர்களை அடித்தலும், நொடித்தலும் செய்வது அறிவிலார் செய்கை யாகும். இயற்கையிலேயே மெல்லிய தன்மையுடையவ ராதலால் அவர்களுக்கு மெல்-லியர் என்னும் பெயர் ஆன்றோர் அமைத்தனர். பாங்க! நீ எமது பாங்கிலிருந்து பல்கால் பழகியும் பயனில்லா தொழிந்தது. முன்பின் யோசியாது காரியம் புரிந்து விட்-டனை. என்ன செய்வது, இதனால் யாது நேருமோ!

(என்று யோசிப்பது போல் நெடுந்தூரம் உற்று நோக்குகின்றான்.)

மந்திரி! அதோ சிறிது தூரத்தில் வருவது யார் பாரும். விரைந்து மிடுக்காய் வருவதுபோற் காண்கின்றது.

**மந்திரி** — அரசே! சடைமுடியும் காவி யுடையுந் தோன்றுகின்றன. யாரோ முனிவர்போற் காண்கின்றது.

**அரிச்சந்திரன்** — யாவரா யிருக்கலாம்! நாமிருக்குந் திக்கு நோக்கி யன்றோ வருகின்றார்?

**பாங்கன்** — ஆமாம், ஆமாம், இப்படித்தான் வருகின்றார். மிடுக்-காய் வந்தால் விசுவாமித்திர ராகத்தான் இருக்க வேண்டும். மிடுக்கு முனிவர் என்று பெயர் போனவர் அவரன்றோ இதற் கென்ன சந்தேகம், மற்ற முனிவரென்றால் அமைதி யிராதா?

**அரிச்சந்திரன்** — பாங்க! என்ன, நீ எப்போதும் விகடமே பேசு-கின்றனை. அவ்வாறு கூறுவது அடாது. அவர் வரும்போது அடங்கி யிருப்பாய்.

**பாங்கன்** — (வாய் புதைத்து) அரசே! அப்படியே.

**அரிச்சந்திரன்** — மந்திரி! ஆம், ஆம், நமது முனிவர்தாம். விசுவா-மித்திர முனிவர்தாம். என்ன! இவ்வளவு முனிவுடன் வருகின்றார்!

**பாங்கன்** — முனிவ ரல்லவா! முனிவுடன் வருகின்றார். இதற் கென்ன ஐயம்.

**அரிச்சந்திரன்** — வந்ததெல்லாம் பேசாதை, அமைந்திரு.

(விசுவாமித்திரர் அருகில் வருகின்றார். அவர் கோபக்குறியைக் கண்டு பயந்தவன்போல் பாங்கன் மறைந்திருக்கின்றான்.)

(முனிவரைக் கண்டு சிரஞ்சாய்த்துக் கரங்கூப்பி) முனிவர் நாயக! அடி-யேன் நமஸ்காரம்.

**மந்திரி** — சுவாமீ! அடியேன் நமஸ்கரிக்கின்றேன்.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, ஆ, ஆ, அரிச்சந்திரா!

கலிப்பா

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையான் அடிக்கமலம்
உள்ளிய மெய்யன்பு உடையார் அருவருந்துத
தள்ளிய செல்வத் தருக்கினாய் என்செய்தாய்.

பார்த்தபோது நமஸ்காரமா செய்கின்றனை. எட்டினாற் குடுமி, எட்டாவிட்டாற் காலா. நன்று, நன்று. நீ அரசனாயிருந்தால் என்ன? கேட்பாரில்லை யென்று இப்படிச் செய்தனை? உன்னைத் தண்டிக்கத் தெய்வமும் இல்லாமற் போகுமா? குடிகள் விட்ட கண்ணீ ரன்றோ கொற்றவனைக் கொல்லும் வாளாவது? எண்ணாமற் புரிந்தனையோ எண்ணிப் புரிந்தனையோ? ஆ, ஆ, ஆ, ஆ! இப்படி அநியாயம் புரிந்தால், உன் அரசு எவ்வளவு காலம் நிலைக்கும். நிலையில்லாப் பொருளை நிலையென் றெண்ணி நிலை யழியாதே. ஆ, அரிச்-சந்திரா! நல்லது பார்ப்போம்.

(தாடியை உருவுகிறார்.)

**அரிச்சந்திரன்** — (முனிவரை நோக்கித் தாழ்ந்து கரங்கள் கூப்பி) முனி-வர் பெருமானே! தேவரீருக்கு இவ்வளவு சீற்ற முண்டாக அடியேன் புரிந்த குற்றம் யாதோ அறியேன். கிருபை கூர்ந்து பொறுத்தருள வேண்டும், சுவாமீ!

(மந்திரி ஒடுங்கி அமைந்து நிற்கின்றான்.)

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, ஆ, வெகு நன்று. ஒன்றும் அறியாயா! பிறர் மயங்கும்வண்ணம் பேசி வெல்பவன் நீயே. வேறொரு-வரும் உனக்கு இணையாகார். நல்லது நீ புரிந்த குற்றம் உனக்குத் தோன்ற வில்லையா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ, அடியேனுக்கு ஒன்றுந் தோன்றவில்லை.

**விசுவாமித்திரர்** — தோன்றாது, தோன்றாது. கெடுமதி கண்ணுக்-குத் தோன்றாது. இது ஒரு ஆண்மையா பெண்களை அடிப்-பது! இது அரசுத் தன்மையா! நீ செய்த குற்றம் இப்போதா-வது தோன்றுகின்றதா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் ஒரு சிறு குற்றமும் புரிந்தே-னில்லை. அடியேன் ஒருபோதும் பெண்களை அடித்த தில்லை.

**விசுவாமித்திரர்** — அடித்த தில்லையா? அடித்த தில்லையா உன்னிடம் வந்த தவப்பெண்களை? இன்னமும் தோன்றவில்லையா? அநியாயத்தோடு பொய்யுஞ் சேர்ந்தாற்போ லிருக்கின்றது. வெகு நன்று.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேனது விண்ணப்பத்தைச் சற்று கேட்டருள வேண்டும். யான் அத் தவப்பெண்களைக் கடிந்தும் பேசியதில்லை.

**விசுவாமித்திரர்** — நீ பேசியதில்லை, அடிக்கவும் இல்லை, அடிக்கும்படி யேவினை. இது வெகு நன்று. நீ யடித்தால் தகாதென்று நின் ஆளை விட்டு அடிப்பித்தனையோ? அதனால் நீ குற்றவாளி யன்று என்பதை வெளியிடுகின்றனையோ? சரி, சரி, அதெப்படி நீ குற்றவாளி யாகாதொழிவை. "எய்பவன் எய்தால் அம்பென்ன செய்யும்" என்னும் முது மொழியை நீ கேட்டது மில்லையோ?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் ஒரு பாவமும் அறியேன். அடியேன் நிராபராதியாக விருக்க, தேவரீர் முனிவுகொண்டால் என்ன செய்வது?

**விசுவாமித்திரர்** — என்ன செய்வதென்று சொல்கின்றனை? பரிசனர் செய்யும் நன்மை தீமைகள் பார்த்திபனை யன்றி மற்று யாரைச் சேரும். இதெல்லாம் உன் செல்வச் செருக்கன்றோ செய்வித்தது. செல்வம் என்னும் சொற்பொருளைச் சிந்தித்துப் பார். என்னையொத்த மஹர்ஷிகள் துச்சம் என்று வெறுத்து உதைத்துத் தள்ளிவிட்ட இச்செல்வத்தைக் கொண்டா இவ்வளவு இறுமாப் படைகின்றனை. நின்னையொத்த சிற்றறிவுடையோர் தாம் இந்தச் செல்வத்தைப் பொருளாக மதிப்பர். அச் செல்வத்தினால் விளைந்த பயனைப் பார். எவ்வளவு அகங்காரத்தில் உன்னை அழுத்தி விட்டது. நல்லது இப் பெருங் குற்றத்திற்கு என்ன சொல்கின்றாய்?

**அரிச்சந்திரன்** — முனிவர் நாயக! இவ் வரசை அடியேன் நிலையென்றெண்ணி இறுமாந்தவ னல்லன். தேவரீரை யொத்த தவசிரேட்டர்களது நன்னோக்க அருளினால் இவை யாவும் கானலிற் காணும் நீரே என் றறிந்துள்ளேன். இதனால் அடியேன் யாதொரு தீங்கும் எண்ணினவனும் அல்லன், இழைத்தவனு மல்லேன். ஒன்றுக்கும் பற்றாத அடியேனை ஒரு பொருளாகக் கருதி, தேவரீர் முனிவுகொண்டால் அடியேன் என்ன செய்வேன்.

**விசுவாமித்திரர்** — (கோபத்துடன் சிரித்து) நன்று, நன்று, உன் சித்தாந்தமும், உன் நடையும் வெகு நன்று. பொய்யானாலும்

பொருந்தப் புளுக வேண்டும். செல்வ மெல்லாம் கானல் நீர் என்றனே, அது வுண்மையே. கானல் நீர் என்று கண்டபின் அதனை ஏன் காரியமாகக் கருதி யிருக்கின்றனே. கண்டனேயோ எமது நிலையை. உலகம் அநித்யம் என்பதை உணர்ந்தோம். உணர்ந்த அந்த க்ஷணமே அதனைத் துறந்தோம். அம் மணி முடியினும் இச் சடை முடியே மாண்புடையது. அவ் வில்லினும் இப் புல்லே வலியுடையது என்ப துணர்ந்தோம. அசத்து என் றுணர்ந்தால் உடனே அதனை அகல வேண்டும். அதுவே அறிவுடைமை. நாய் வெற்றெலும்பைக் கடித்துக் கடித்து இன்புறுவதுபோல, பயனற்ற வுலக இன்பத்தை இன்பமாகக் கொள்வதோ அறிவு. அன்று, அன்று. வாய் ஞானம் பேசுவோர் உலகில் மிகப் பலர். அவரில் நீயும் ஒருவன் போலும்.

**அரிச்சந்திரன்** — முனிவர் நாயக! அடியேற்குக் கல்விச் செல்வம் இல்லா தொழியினும், தேவரீரை யொத்த பெரியோரது அருளாற் செவிச் செல்வம் மிகுதியு முண்டு. அதனால் இவ்வுலக வாழ்வு கனவின் பயனே என்ப துணர்ந்துள்ளேன். ஆயினும், தாமரை யிலையில் தண்ணீர்போல் பற்றியும் பற்றுமலும் நிலைத்து இந்த ராஜ்யபாரத்தைத் தாங்கி யிருக்கின்றேன். "மணிமுடிச் சிரத்தில் வாழ்ந்திடுந் துன்பம்" எனப் பெரியார் கூறுவதேபோல் மன்னர்க்குற்ற இன்பத்தினும் துன்பமே மிக்கதாகும். ஆதலின், அரசன் உலகத்திற்கு இன்ப மூட்டுதற்பொருட்டே அரசு புரிகின்றுன். மற்றும், குடிகளுக்கு நேரவல்ல இன்ப துன்பங்களைத் தன்னவாகக் கொள்பவனே செங்கோலரசனுகும். இஃதென்றே தேவரீரை யொத்த மெய்ஞ்ஞானிகளுடைய கொள்கையுமாம். இது தேவரீ ரறியாத தன்று. இவ் வரசை பேற்று முறைவழுவாது புரியும் செம்மனச் செல்வர் எவரேனும் கிடைக்கப் பெற்றால், இப் பொறையை அவர்கள் மீது சுமத்தி, வானப்பிரஸ்த நிலையை அடைய மகிழ்வுடன் காத்திருக்கின்றேன். ஆதலான், அடியேற்கு இப் பதவியால் அணுவளவுஞ் செருக்கில்லை. முனிவர் நாயக! இவ் வெண்ணத்தினுலேயே அடியேன், பொய்யாமை முதலாய அறநெறிகளைக் கடைப்பிடித்து நடக்கின்றேன். ஆகலின், தேவரீர் அடியேனை மன்னித்து நல்லருள் பாலிக்க வேண்டுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — இதெல்லா மிருக்கட்டும். இவ் வரசு பெரும் பொறை என்றனையே. இதனைத் தாங்க வல்லவர் ஒருவரும் நினக்குக் கிடைக்கவில்லையோ?

**அரிச்சந்திரன்** — சுவாமீ, ஒருவரும் கிடைக்கவில்லை.

**விசுவாமித்திரர்** — இது உண்மையான எண்ணமானல் பலர் கிடைப்பர். போலி எண்ணமாதலால் ஒருவரும் கிடைக்கவில்லை.

**அரிச்சந்திரன்** — முனிவர் பெரும! அடியேன் ஒருபோதும் போலி எண்ணம் உடையவ னல்லன். மனத்தில் உள்ளதே வாயில் வரும். அடியேன் வஞ்ச நெஞ்ச முடையவன் எனத் தேவரீர் கருத்திற் கொள்ளவேண்டா.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! நீ கூறுவதெல்லாம் உண்மைதானே?

**அரிச்சந்திரன்** — ஆம், சுவாமீ.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! யாம் ஒன்று கூறுகின்றோம். யாமோ பெருந் தவசி. நமது பூருவ நிலைமை நீ யறிவை. இப்போதோ யாம் ஐம்பொறிகளையும் அடக்கி, பிராணுயாம முதலிய அட்டாங்க யோகங்களிற் பயின்று, மற்றையோர் ஆயிர நாட்களில் செய்யக்கூடிய அரிய தவங்களை யெல்லாம் அரை நொடியிற் செய்து முடித்துள்ளோம். நம்மையும் நமது தபோ பலத்தையும் அறியாத சிவன் இவ்வுலகில் இல்லை என்பதை நீ யறிவை யன்றோ. இனி, எமக்குக் குடிகளிடத்து மாறுத அருளிருக்கு மென்று நீ நினைக்கின்றனையோ? இல்லையோ?

**அரிச்சந்திரன்** — முனிவர் நாயக! தேவரீருக்கு அருளிராதென்று சொல்வது அடுக்குமோ! தேவரீர் மனங்கொண்டு இப் பொறையை ஏற்க இசைந்தருளினல், அடியேன் இப்போதே இதனைத் தத்தஞ் செய்ய சித்தமாயிருக்கின்றேன். தேவரீர் இக் குறிப்பை முன்பே அடியேனுக்கு உணர்த்தியிருந்தால், இதனை நெடுநாட்களுக்கு முன்பே செய்திருப்பேன். தேவரீர் இவ் வரசைக் கொள்வது அக்குடிகளது தவப்பயனே யாவதன்றி, அடியேனது நல்வினையின் பயனு மாகுமென்று களிகூர்கின்றேன். முனிநாத! மனங்கொண்டு ஏற்றருளவேண்டும்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! அவ்வாறே ஏற்றுக்கொள்வதில் யாதொரு தடையு மின்று. உலகத்தில் வைராக்கியங்கள் மூன்று. அவை—புராண வைராக்கியம், மயான வைராக்கியம், பிரசவ வைராக்கியம் என்பனவாம். இவை அவ் வப்போது தோன்றி உடனே மறையும் இயல்புடையன. ஆதலால், எம்மிடம் ஞானமார்க்கம் பேசினதினல் உண்டான வைராக்கியத்தைக் கொண்டு இதனை எமக்குத் தத்தஞ் செய்து, பின்பு வருந்துவதானல் அதனினும் பிழை வேறென்றில்லை. ஆதலால் நன்ருய் யோசித்துச் சொல்வாய்.

**அரிச்சந்திரன்** — முனிவர் பெரும! அவ்வாறு ஒருபோதும் புகலேன். இனி, எனது அரசை தேவரீருக்கு என் மனமொழி மெய்கள்

ஒப்பத் தத்தஞ் செய்யச் சித்தமாயிருக்கின்றேன். குரு நாத! மனங்கொண்டு ஏற்று அருள் புரியவேண்டும்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! நீ இவ்வளவு உறுதியுடன் கூறுவதனால் அப் பொறையை ஏற்றுக்கொள்ள யாம் உடன்படுகின்றோம். இவ்வளவிற்கும் உன்னை இப் பந்தத்தினின்றும் நீக்க வேண்டுமென்னும் கருணையே காரணம். உலகப் பற்றினால் இவ்வாறு செய்தோமென் றெண்ணுதை.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் அவ்வாறும் எண்ணுவேனோ. இவ்வகைய அரசை வெறுத்து வந்த தேசுரீர் மறுபடியும் விரும்புவது எவ்வாறு. உயிர்களிடத்து வைத்த பெருங் கருணையே இதற்குக் காரணமாவதன்றி வேறு யாதாகும்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! தத்தம் எங்கே செய்யப் போகின்றனை?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இவ்விடத்தில்தானே தத்தஞ் செய்து விடுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, இது ஒன்றிலே நின் கருத்து நன்கு விளங்கிவிட்டது. தத்தஞ் செய்ய நினக்கு உள்ளவாறே கருத்துண்டானால், அதற்கு வேண்டும் அங்கங்களோடு செய்யமாட்டாயோ? இப்போது யாருமற்ற இக் காட்டில் தத்தஞ் செய்துவிட்டு, பிறகு யார் செய்தார், யார் கண்டார் என்பதற்கா? நன்று, நன்று, எனக்கு வேண்டா.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேனை வீணிற் பழிக்குப் பாத்திரனாக்க வேண்டா. கொடுக்க இசைந்ததை இல்லையொன்று கூறுதல் எனது கொள்கையன்று. யாவர் இருந்தா லென்ன? யாவர் அறிந்தா லென்ன? திருவுள மறிந்தாற் போதும். முனிபுங்கவ! இதனை எவ்வாறு தத்தஞ் செய்வித்துக்கொள்ள விரும்பினும் அவ்வாறே தடையின்றிச் செய்கின்றேன்.

**விசுவாமித்திரர்** — அதுதான் சரி, அரிச்சந்திர! நீ தத்தஞ் செய்வது உண்மையாயின்,

**அரிச்சந்திரன்** — திரும்பவும் அவ்வாறே கூறுகின்றீர்கள். சுவாமீ! மற்றும் அடியேனை அவ்வாறு எண்ணுதிருக்கும்படி வந்திக்கின்றேன்.

**விசுவாமித்திரர்** — நல்லது அரிச்சந்திரா! நீ நாட்டிற்கு வந்து, நகரமாந்த ரறியத் தத்தஞ் செய்து, அருகிலிருந்து நம்மைச் சிங்காதனத்திலேற்றி, முடி சூட்டச் சித்தமானால் ஏற்றுக்கொள்வோம், தடையில்லை.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அவ்வாறே புரிகின்றேன், குரு நாத! இப்பொழுதே வருக, போவோம்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர சந்தோஷம், நீங்கள் நகரத்திற்குச் செல்லுங்கள். யாம் பன்னசாலைக்குச் சென்று, சற்று யோகத்திலிருந்து பின்னர் வருகின்றோம். யாவுஞ் சித்தமாக விருக்கட்டும்.

(விசுவாமித்திரர் செல்கின்றார்.)

**மந்திரி** — அரசே! இதென்ன, இவ்வாறு செய்துவிட்டனிர்! சற்று யோசிக்கலாகாதா?

**அரிச்சந்திரன்** — மந்திரீ! என்ன செய்தோம். உலகம் அநித்யம். செல்வம் நிலையன்று, யாக்கை நிலையன்று. இந்த யாக்கை நன்னிலையிலுள்ள போழ்தே தவத்திற் கேகவேண்டும். அன்றி, நாம் நமது குடிகளுக்கு நன்மையே நாடினம். அருந்தவ முனிவர் அணுவேனும் நீதி வழாது நடத்துவர். குடிகள் நன்மையடைய நாடுவதே கொற்றவன் கடமை. ஆகலின், நாம் நன்றே புரிந்துள்ளோம், வருந்த வேண்டா மந்திரி.

**மந்திரி** — அரசே! அதன்று. இம் முனிவரோ முன்பு மன்னராக இருந்து, அதனை வெறுத்துத் தவமார்க்கத்தை யடைந்தவர். தவத்திலும் சாமானியரல்லர். அத்தகைய தபோதனர் தாம் வெறுத்துத் தள்ளிய நிலைமை திரும்ப அடைய எண்ணுவதில் ஏதோ உள்ளுறை இருத்தல் வேண்டும். அதனால் தேவரீர் கருதும்வண்ணம் குடிகட்கு நன்மை நேருமோ, என ஐயுறுகின்றேன். மற்றும் வானப்பிரஸ்த நிலையை அடைவ தென்றால், இது ஏற்ற கால மன்று. தேவரீரது செல்வச் சிறுவன் இளவரசான பின்பு, இப் பொறையை அவன் தோளில் சுமத்திச் செல்லுவதே நமது முன்னோர் மரபு. அதுவே நல்வழியு மாகும்.

**பாங்கன்** — ஆமாம் அப்படித்தான் வழக்கம். மஹா ராஜாவிற்கு ஏதோ குணம் இவ்வாறாய் மாறிவிட்டது. என்ன செய்வது!

**அரிச்சந்திரன்** — மந்திரீ! 'மேலுலகம், இல்லெனினும் ஈதலே நன்று' நாம் வீணே பற்பலவாறு எண்ணுவதில் பயனின்று. நாம் நன்மையை நாடி வாக்களித்தோம். ஆதலால், அதனை நிறைவேற்றிவிடுவோம். முனிவருக்கு ஏதும் உள்ளுறையான எண்ணம் இருப்பதற்கு இடமில்லை.

(அரிச்சந்திரன் பாங்கன் மந்திரி முதலாயினோர் போகிறார்கள்.)

**மந்திரி** — அரசே! நல்லொழுக்கம் காரணமாக நாம் எதனைச் செய்தாலும், உலகியலை அறியாமற் செய்தல் உத்தம மாகாது. ஆயினும், தேவரீரது கருத்து அதுவாயின் அடியேன் என்ன செய்வது?

**விசுவாமித்திரர்** — (பன்னசாலைக்குச் செல்லும் வழியில் தனியே) என்ன, நாம் வீணே துன்பத்தை வருவித்துக்கொண்டோம். அரிச்சந்திரனது சிறப்புக்களில் முதலாவது ஏகபத்தினி விரதமுடையனாவது. அதனைப் பரீட்சிக்க மாதரை யனுப்பினேம். அது பயனில்லதாய் முடிந்தது. இரண்டாவது ஈகை. அதைப் பரீட்சிக்கப் புகுந்தோம். 'குறிப்பறிந் தீதலே கொடை' என்றபடி நமது குறிப்பை யுணர்ந்தமாத்திரத்தாலே கொடுத்துவிட்டான். அதனினும், தனது அரசு முழுதுமே கொடுக்க உடன்பட்டான். மற்றும், நாம் எவ்வளவு நிந்தித்தும் அவன் வருத்தமென்பது சிறிதும் அடையவில்லை. அவனது இன்சொல்லும், பொறையும் எவருக்கு வரும்! பற்றற்று விளங்கும் பரம யோகிக்கும் வருதல் அரிது. என்ன செய்வது. இப்போது நாம் போனவுடன் அரசை யளித்துவிடப் போகிறான். பிறகு, எவ்வாறு அவனை வருத்துவது. ஆ, ஆ, என்ன செய்வோம். வசிட்டன் கூறிய போது வாயை மூடிக்கொண்டு சும்மா இருந்தால், இதெல்லாம் ஒன்றுமில்லா தொழிந்திருக்குமே. இனி, விட்ட அரசைத் தொட்டுக்கொண்டு துன்புறுவது யார்! ராஜ்யபாரமோ பெரும் பாரம். மானிடர் சமுசாரத்தினையே சாகர மென்பர் என்றால், அரசாட்சியை என்னென் றுரைப்பது. என்ன செய்யலாம் (மேல் நோக்கி யோசிக்கின்றார்.) ஊம், பார்க்கலாம், இவற்றிற்கெல்லாம் இளைத்துவிட்டால் எப்படி. நாம் சென்று அரசைப் பெற்றுக்கொண்டபின், அவன் சிறிது காலம் நாட்டிலிருந்து, பின்பு காட்டிற்குப் போக எண்ணுவான். அப்போது, அவனிடத்தும், அவனது இல்லாளிடத்தும், பிள்ளையினிடத்து முள்ள பொருள்களை நயத்துடன் பெற்றுக்கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் இழந்த பின்னர், முன்பு நாம் அவனிடம் வைத்து வந்த பொருளைக் கொடுக்கும்படி வருத்தவேண்டும். அப்போது, அவன் கொடுத்தற்கின்றி வருந்தி, இல்லை என்று மறுப்பான். 'இல்லாதவனே பொல்லாதவனே.' இல்லாமை எல்லாத் துர்க்குணத்தையும் உண்டாக்கு மன்றே. இதுவே நல்ல சூழ்ச்சி. இவ் விதத்தில் பொய் புகலச்செய்து, மூன்றாவது சிறப்பாகிய சத்தியவான் என்பதற்கு முன் அகரம் சேர்த்து விடுவோம். இக் காரியங்களுக் கெல்லாம் நமது முதற் சீடன் உடனிருத்தல் வேண்டும். அரிச்சந்திரனிடம் பொருளைப் பெறுமாறு அவனையே அனுப்பவேண்டும். அவன் சற்றும் இரக்கமின்றி மன்னனை வருத்திப் பொய் புகலச் செய்துவிடுவான். சரி, சரி, காரியம் முடிந்துவிட்டது. ஆ, ஆ, வெற்றி யடைந்து

விட்டோம். இனி வசிட்டன் முன் வீரக்கொடி பிடிப்பதே சரி. இனிப் போவோம்.

(பன்னசாலைக்கு வருகிறார்.)

**நட்சத்திரேசன்** — சுவாமீ! நமஸ்காரம்.

**விசுவாமித்திரர்** — சிஷ்! அரிச்சந்திரனிடத்திற் போய், ஒரே சொல்லில், அவன் தன் அரசைத் தானே நமக்குக் கொடுத்துவிடுவதாகச் சொல்லுமாறு செய்துவிட்டோம். அவ் வரசைக் கைப்பற்ற இதோ செல்கின்றோம்.

**நட்சத்திரேசன்** — சுவாமீ! தேவரீர் வெறுத்துத் தள்ளிய அரசாட்சியில் ஏது மறுபடியும் பற்றுண்டாய் விட்டது?

**விசுவாமித்திரர்** — சிஷ்! அவ்வா றன்று. வசிட்டக் கிழவனை வெல்லுவதற்கே இந்தச் சூழ்ச்சி புரிந்தோம். இதற் கென்ன, யாம் எதையும் செய்யலாம். உண்மையினை யறிந்துள்ள சீவன் முத்தர்கள், "மாதவஞ் செயினுஞ் செய்வர், வாணிபஞ் செயினுஞ் செய்வர், பூதலம் புரப்பர், ஐயம் புகுவர்" ஆதலால், நாம் காரியத்தின் பொருட்டு அதனைக் கைகொள்வதில் பிழை யாதொன்று மில்லை. சிஷ்! யாம் அரசைக் கைப்பற்றுங் காலத்தே பற்பல காரியங்களை கவனிக்கவேண்டி யிருக்கும். ஆதலின், நீயும் நம்மைத் தொடர்ந்து வருவாயாக. யாம் இப்போது அரிச்சந்திரனிடம் அரசைப் பெற்றுக்கொண்டவுடன், யாம் முன்பு அவனிடம் வைத்துவிட்டு வந்த பொருளைக் கொடுக்கும்படி கேட்டு, அவனை நமக்குக் கடன்காரனாக்கி விடுகின்றோம். அப் பொருளைப் பெற்று வரும்படி உன்னையே அவனுடன் அனுப்புவோம். நீ அவனோடும் சென்று, பல வகையினும் அவனை வருத்தி, ஏதேனும் ஒரு பொய் புகலும்படி செய்துவிட வேண்டும். மற்றச் சீடர்களையும் அவ் வப்போது அந்தந்த விடங்களில் அனுப்புவோம். அவர்கள் செய்யவேண்டுவன வெல்லாம் சிறு சிறு காரியங்களாகும். நீ மாத்திரம் அரிச்சந்திரனைத் தொடர்ந்து சென்று, இரவும் பகலும் அவனுடன் இருந்து, எவ் வகையிலாயினும் ஒருபொய்யை அவனிடம் வருவிக்க வேண்டும். இக் காரியம் செய்ய உன்னிலும் சிறந்தவர் ஒருவரும் இல்லை. மற்றும் உனக்கு யாம் அதிகம் சொல்லவேண்டுவ தில்லை. சமயத்திற் கேற்றவாறு சூழ்ச்சிகள் செய்து, காரிய சித்தி யடையவேண்டும். அவ்வவ் விடங்களில் உன்னைச் சந்திக்கும் சீடர் மூலமாய் நமக்கு உண்டாகும் காரியானுகூலத்தைச் சொல்லி யனுப்பவேண்டும். உன் முயற்சியினாலேயே

வெற்றி யுண்டாகவேண்டும். இதில் தவறினால் நமது தவ மனைத்தையும் இழந்து, வசிட்டன் முன் தலை யிறக்கங் கொள்ள நேரிடும். எம்மை யடுத்துள்ள உங்களுக்கும் இத-னால் அவமானமே யன்றோ. இவை யனைத்தும் பிரதம சிஷ-னாகிய நீ நன்கு அறிந்து நடத்தல் வேண்டும்.

**நட்சத்திரேசன்** — குருநாதா! தேவரீரது கட்டளைப்படியே நடக்கக் காத்துக்கொண் டிருக்கின்றேன். இதனினும் அடியேன் செய்-யத்தக்கது வேறு யாது. யாங்களும் அந்த வசிட்ட முனிவர் சீடர்களோடு வாதிட்டு வந்திருக்கின்றோம். ஆதலால், அடி-யேங்கள் சற்றும் சோர்வின்றி முயன்று, காரியசித்தி யடைந்து வரச் சற்றும் பின்வாங்கமாட்டோம்.





# அங்கம் — II



## முதற் களம்

**இடம்:** *அரண்மனையின் அந்தப்புரம்.*

**காலம்:** *பிற்பகல்.*

**பாத்திரங்கள்:** *அரிச்சந்திரன், சந்திரமதி, சுகந்தி.*

[*அரசன் அரண்மனையை யடைகிறான்.*]

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! நமது செல்வச் சிறுவன் எங்கே?

**சந்திரமதி** — இதோ இருக்கின்றான். (*அரசன் புத்திரனை எடுத்து அணைத்து முத்தமிடுகின்றான்.*) நாயக! வேட்டைக்குச் சென்ற விடத்தில் ஏதேனும் விசேஷமுண்டோ?

**அரிச்சந்திரன்** — ஆம் கண்மணி, யாங்கள் வேட்டைமேற் சென்றோம். குடிகள் இவ்விடம் வந்து கூறியவாறே, எண்ணிறந்த வனமிருகங்கள் கூட்டமாய்க் கூடியிருந்தன. அவற்றை வதைக்கும் பொருட்டுத் தனித்தனி பிரிந்து சென்றோம். யான் ஒரு காட்டுப் பன்றியைத் தொடர்ந்து, அதனை எய்த பின்பு, ஒரு மரத்தின் நிழலில் தங்கினேன். அங்கு இரண்டு கன்னியர் வந்தனர்.

**சந்திரமதி** — ஆ, ஆ! வன தேவதை, மலையர மகளிர் என்று சொல்கிறார்களே அவர்களோ?

**அரிச்சந்திரன்** — அன்று, அன்று. அவர்கள் தவப் பெண்களாம்.

**சந்திரமதி** — தவப் பெண்களா தம்மைத் தேடி யடைந்தனர்!

**அரிச்சந்திரன்** — ஆமாம், நடந்தவற்றைக் கேள், கண்மணி!

**சந்திரமதி** — அப்படியே, பிறகு —

**அரிச்சந்திரன்** — வந்து இன்னிசையாய்ப் பாடினர். அந்த இசை கல்லும் உருகுமாறு கனிவா யிருந்தது. அது கேட்டுக் களிப்படைந்து, என்னிடம் அறுந்திருந்த அரதனமாலை யொன்றைப் பரிசாக அளிக்க முயன்றேன். அதனை அவர்கள் வேண்டாவென்று மறுத்தனர்.

**சந்திரமதி** — ஆ, ஆ, தங்கள் கையால் அளித்த பொருளையா வேண்டாவென்று மறுத்தனர்! ஆமாம், தவப் பெண்களுக்கு ஆபரணம் எதற்கு? மற்று ஏன் அவர்கள் தங்களை நாடி வரவேண்டும்?

**அரிச்சந்திரன்** — அதை யூகிப்பதற்கு எனக்கும் கூடாமையாகவே யிருந்தது. பின்பு அவர்கள், "தம்மை மணக்கவேண்டும்" எனக் குறிப்பால் உணர்த்தினர்.

**சந்திரமதி** — ஆ, ஆ! தம்மையா மணக்க வேண்டினர்! என்ன அதி-சயம்! இதுதானோ அவர்கள் தவப்பெண்கள் என்பது! பிறகு சொல்லுங்கள்! நன்று யிருக்கிறது வேடிக்கை.

**அரிச்சந்திரன்** — யான் ஏற்ற நீதிகள் கூறி, அதனை மறுத்தேன். திரும்பவும் அவர்கள் என்னைப் பலவாறு வருந்திக் கேட்-டனர். நான் நல்ல நீதிகள் எடுத்தோதி, யான் முன்னரே ஒரு மாதை முறையாக மணந்து, எனது உடல் பொருள் ஆவிகளை அவள்பால் உரிமையாக்கி யுள்ளேன். ஆதலால், உங்களுக்கு உரிமையாக்க வேறு உயிர் உடல் எனக்கில்லை எனக் கூறி, திரும்பி வந்துவிட்டேன்.

**சந்திரமதி** — ஆமாம், தாங்கள் அவ்வாறுதான் புகன்றிருப்பீர்கள் என்று எண்ணினேன்.

**அரிச்சந்திரன்** — அதற்கென்ன ஐயம். இருவர் மனமும் ஒன்றே யன்றோ. பின்பு, அப்பெண்கள் ஏதோ குறை கூறிக்கொண்-டார்களாம். அதனை நமது பாங்கன் கேட்டு, அவர்களை நன்-றாய்க் கன்னத்திற் புடைத்தானும்.

**சந்திரமதி** — (பெருநகைப்பு கொண்டு) ஐயோ பாவம், அடியும் பட்-டார்களா! பிறகு சொல்லுங்கள். இடையிடையே தடுத்து உரைப்பதற்கு மன்னித்துக் கொள்ளுங்கள்.

**அரிச்சந்திரன்** — பிறகு, பாங்கன் என்னிடம் வந்து, நடந்தவற்றை நவின்றான். யான், அவ்வாறு செய்தமை நன்றன்று என அவனுக்கு நற்புத்தி புகட்டிக்கொண்டிருந்தேன். அப்போது விசுவாமித்திர முனிவர் கடுங்கோபத்தோடு வந்தார்.

**சந்திரமதி** — நமது விசுவாமித்திர முனிவர்தாமே. ஏன் அவருக்கு நம்மீது கோபம்!

**அரிச்சந்திரன்** — அத் தவப்பெண்கள் விசுவாமித்திரரிடம் இருப்பவர்களாம். அவர்களை யானே அடித்தனுப்பினேன் என்றுன்னி, முனிவர் கோபத்தோடு வந்தனர்.

**சந்திரமதி** — (முகம் வேறுபட்டு) ஐயோ, என்ன காலம்!

**அரிச்சந்திரன்** — வந்தவர் என்னைக் கடிந்து பேசி, 'இப்படியுஞ் செய்யலாகுமோ? என்று கடுங் கோபத்துடன் கேட்டனர். யான் குற்றவாளி அன் றென்பதை அறிவித்தேன். பாங்கன் எனது ஏவலால் அவர்களை அடித்தான் என்று முனிவர் உட்கொண்டு, அரசனென்னும் அதிகாரச் செருக்கால், யான் அவ் வநியாயம் புரிந்ததாகக் கூறினர். யான் அப்போது, அரசுரிமை ஒரு நிலையான பொருளென்று கருதினே னில்லை; அதனால் அடியேனுக்கு செருக்குண்டாகக் காரண மில்லை. குடிகள்பொருட்டு இப் பாரத்தைத் தாங்கி யிருக்கின்றேனே யன்றி, அதிகாரஞ் செலுத்தவேண்டு மென்னுஞ் செருக்கினாலன்று, என்று பணிவுடன் பகர்ந்தேன்.

**சந்திரமதி** — ஆமாம், அது உண்மைதானே.

**அரிச்சந்திரன்** — அக்கருத்து உண்மையோ என்றார் முனிவர். ஆம் உண்மையே, தக்கார் ஒருவர் இந்தப் பாரத்தைத் தாங்க முற்படுவாரானால், இவ் வரசை இக்கணமே அவர்களுக்குக் கொடுத்து, யான் வாநப்பிரஸ்த நிலையை அடைவேன் என்றேன். அப்படியானால் இவ் வரசை எமக் காக்கிவிடு பார்ப்போம் எனக் குறிப்பித்தார். அது கண்டு உடனே இவ் வரசை அப் பெரியார்பால் அமைத்துவிட வாக்குக் கொடுத்துவிட்டேன். பெண்மணீ! இனி நாம் தாமதமின்றி இவ் வரசை, அம் முனிவருக்கே யாக்கி, நாம் வாநப்பிரஸ்தம் அடைதல் வேண்டும். அதுவே மறுமைப் பயனை மாறாது கொடுக்க வல்லது. இதனால் சிறிதும் கலக்கம் வேண்டா.

கலித்துறை

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லால்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே.

நமக்கு இவ் வரசு பெரும்பாரமே யன்றி வேறன்று. நமக்கு முன்னிருந்த நமது மூதாதையராகிய மணிமுடி வேந்தர்களெல்லாம் இப்போது எங்கே? அந்தோ! அவரனைவரும்

மண்ணே யாகினர். மன்னர்க்குமட்டும் மரணம் அஞ்சுமோ? அஞ்சாது, அஞ்சாது. ஆதலால், மறுமைப் பயனைத் தேட நாடுவதே நலம்.

**சந்திரமதி** — ஆமாம், அதற்கென்ன சந்தேகம். நாயக! இதனால், அடியாளுக்குச் சிறிதும் கவற்சி யில்லை. அவ்வாறே செய்யுங்கள்.

**சுகந்தி** — ஐயோ, அம்மா! அரசு நமது பிள்ளைக்கு இல்லாமலா?

**சந்திரமதி** — தோழி! எந்த அரசு எந்தப் பிள்ளைக்கு உரியது. பிறக்கும்பொழுது கொண்டுவந்த தில்லை; இறக்கும்பொழுது கொண்டு போவதில்லை; இடையில் வருவது செல்வம். அதுவும் நிலையற்றது. நல்லொழுக்கத்தை ஆள்வதே நமக்கு அரசாட்சி. மற்றென்ன வேண்டும் நமக்கு. (அரிச்சந்திரனை நோக்கி) பிராணநாத! வானப்பிரஸ்த நிலை என்றீர்களே, அது யாதோ, சற்று விவரிக்கவேண்டும்.

**அரிச்சந்திரன்**—கண்மணி! மானிடர் அடையத்தக்க நிலைகள் நான்கு. அவை — பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்பனவாம். அவற்றுள் பிரமசரியம் என்பது — ஆசிரியனை யடுத்து, வேதமோதி, விரதங்காத்து, விவாகமின்றி யிருப்பதாம். கிருகஸ்தம் என்பது இல்லாளோடு கூடி இல்லறவியல் வழாமல் நடத்தி வாழ்வதாம். வானப்பிரஸ்தம் என்பது இல்லறத்தை விட்டு மனையாளோடாயினும் தனித்தாயினும் வனத்திற் சென்று தவஞ் செய்வதாம். சந்நியாசம் என்பது எல்லாவற்றையும் வெறுத்து முற்றத் துறத்தலாம். இவற்றில் மூன்றாவதான வானப்பிரஸ்த நிலையை யான் அடையவேண்டி யிருத்தலால், நீ நமது செல்வச் சிறுவனைப் பாதுகாத்து, முதுமை வாய்ந்த எனது தாய்க்குத் துணையா யிருந்து, காலங்கழித்து வருவாய். அன்றி விசுவாமித்திர முனிவரது ஆளுகையில் அமைந்திருப்பதில் யாதொரு குறையும் உங்களுக்கு நேரிடாது.

**சந்திரமதி** — நாயக!

விருத்தம்

ஞானமா னதுபொதுவே நூலதனில்
  துறவு அதற்கு நவில்வது இல்லாள்
ஆனமாதினை யலவோ விடுகவென
  அறையும் பதியான உம்மை
ஈனமா விடுகவென அறையு மதோ
  துறவறமிங்கு எனக்கென் சொல்லும்
ஆனதால் உமையொழிந்து கதியிலையே
  என எணியான் அடுத்தேன் அன்றே.

சாத்திரங்கள் நாயகனைப் பிரிந்திருக்க எனப் பெண்களுக்கு எங்கும் கூறிய தில்லை. ஆதலால், அடியாள் தேவரீரை பிரிந்திருத்தல் எவ்வாறு கூடும்?

**அரிச்சந்திரன்** — பெண்மணி! நீ கூறுவது நியாயமே. எனினும்,

விருத்தம்

கொழுநன் சொற்கட வாதுறை கொள்கையே
வழுவில் நல்லறம் வான்தவம் ஆற்றுதல்
தொழுது தெய்வம் பராய்மலர் தூவுதல்
பழுதில் கற்புடைப் பன்னியர்க் காகுமால்.

என்பது விதியாதலால்,

பாகமொழியாய் எனுரை தடுத்தலுன்றன்
விரதமல பாலனோடும்
ஆகமுற எனையீன்ற அன்னையொடும்
இப்பதியில் அமர்தல் நன்றே.

**சந்திரமதி** — நாயக! தேவரீர் கானகஞ் சென்றால், அடியாள் என் பிரிந்து தனியே இருத்தல் வேண்டும். அன்று கன்னமா நகரத்தில் என்னைத் திருமணஞ் செய்த காலத்தில் தேவரீர் எனது கரத்தைப் பற்றி, "வாழ்விலும் – தாழ்விலும், இன்பத்திலும் – துன்பத்திலும் பிரியேன்" என்று வேள்வித் தீயின் முன்பு, பெரியோர் சாட்சியாக வாக்குத் தத்தஞ் செய்தீரன்றோ? அதுபோலவே அடியாளும் தேவரீருக்கு உறுதியுரை தந்தது என் மனத்தை விட்டுச் சிறிதும் அகலவில்லை. எனது மொழி மாறாமல் யான் தேவரீரை எக் காலத்திலும் எவ்விடத்திலும் பிரியாதிருக்க உறுதிகொண்டிருப்பதையறிந்தும், தேவரீர்மட்டும் அதைத் தட்டி நடக்கத் தலைப்படுதல் தகுமோ! தெய்வச் செயலினாலாவது, நல்லொழுக்கத்தின் காரணமாகவாவது ஒருகால் பிரிதலன்றி, வேறு வகையால் நாம் எவ்வாறு பிரிதல் கூடும்; தண்ணீரினின்றும் தண்மை பிரியுமோ, தீயினின்றும் வெம்மை பிரியுமோ. இவை தனித்தனி பிரிதலுண்டானால் நாமும் பிரிதலாகும். மற்றும் அடியாள் உடலும் தேவரீர் உயிருமானபோது, உயிர் பிரியின் உடல் மாத்திரம் எவ்வாறு வாழும். ஆதலால், அடியாளை விட்டுச் செல்லும் எண்ணம் எவ்வாற்றாலும் வேண்டா.

**அரிச்சந்திரன்** — கண்மணி! உன்னைவிட்டுப் போகவேண்டுமென்னும் கருத்து எனக்குச் சிறிதும் இல்லை. வனவாசமென்பது சாமானிய மன்று. சிறிது கஷ்டம் நேரிட்டாலும், மனிதர், 'இதென்ன வனவாசமாக இருக்கின்றதே' என்பர். நீ என்னோடும் வனத்திற்கு வந்தால், வாடையால் உன் மேனி

வாடுமே, பனியால் உன் முகம் பாழ்படுமே, கற்களால் உன் பாதங்கள் கன்றுமே என்று கலங்குகின்றேன். அன்றியும், நல்லுணவின்றிக் காய்கனி கந்தமூலாதிகளை யுண்டு, அடகுநீர் அருந்தி, புழுதியில் பொருந்தி வசித்தல் வேண்டுமே என்றும் ஏங்குகின்றேன். மற்றும் நடுராத்திரியில், சிங்கம் முழங்குதலும், யானை பிளிறுதலும், புலி யுறுமுதலும், நரி யூளையிடுதலும் ஆகிய பேரொலிகள் நினது நெஞ்சில் அச்சுறுத்துமே! அப்போது அஞ்சி யலறுவையே! என்று பின்னும் பதைக்கின்றேன். இவையே அன்றி, வேறு ஒன்றும் எண்ணமில்லை.

**சந்திரமதி** — நாயக! மேற்கூறிய யாவும் என் மனத்தில் அச்சுறுத்துவன அல்ல. பிரிவு என்பது ஒன்றுமே மிக அச்சுறுத்துகின்றது. என் கண்மணி யன்ன காதல! அடியாளை விட்டுச் செல்ல எவ்வாற்றானும் எண்ணங் கொள்ளவேண்டா. அடியாள் தம்மைப் பிரிந்து இருப்பது அரண்மனை யாயினும் அது அரணியமே; நாயகனில்லா விடத்தில் நங்கையர் தம்மை ஆடையணிகளால் அலங்கரித்துக்கொண்டு சுகத்துட னிருப்பது யாவர் காணவோ! அவலம், அவலம்! அடியாள் தேவரீரோடு இருந்தால், எவ்வகைய துன்பமும் தோன்றுவதற்கு இடமில்லை. அன்றியும், ஆளனைப் பிரிந்திருத்தல் அரிவையர்க்கு அழகன்று. மணாளனைப் பிரிந்த மாதர் மண்ணுவதே மாண்பாகும். அடியாளை விட்டகலும் நிமித்தம் பல வகையினும் அச்சுறுத்துவது தேவரீருக்கு அடாது. யான் எவ்வகையினும் பிரிந்திரேன். பிரியின், ஒரு கணமும் உயிர் தரியேன். இது திண்ணம், திண்ணம். இதுவே என் எண்ணம்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! நின் கருத்து அதுவாயின், நின்னை அழைத்துச் செல்வதில் எனக்குத் தடையில்லை. அவ்வாறே செல்லுவோம்.

**சந்திரமதி** — நாயக! சந்தோஷம். இனி யான் வேண்டுவது வேறு யாது மில்லை. தாங்கள் விரும்பியவாறே வானப்பிரஸ்த நிலையை யடைவோம்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! முனிவர் வந்து விடுவர். யாம் கொலு மண்டபத்திற்கு ஏகி, அவ்விடத்தே எல்லோரும் அறிய இவ்வாசை அம் முனிவருக்குத் தத்தஞ்செய்து, நாம் கானகஞ் செல்லுவோம், கடிது வருவாய்.

**சந்திரமதி** — இதோ சித்தமாக இருக்கிறேன்.

(சபாமண்டபத்தை அரிச்சந்திரன் முதலாயினோர் அடைகின்றனர்.)

## இரண்டாங் களம்



**இடம்:** சபா மண்டபம்.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சித்திர ரேகை, விசுவாமித்திரர், நட்சத்திரேசன், சத்திய கீர்த்தி, சிற்றரசர், சேனாபதிகள், பிரபுக்கள், குடிகள் முதலாயினோர்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! வந்துவிட்டோம். ஏற்பாடுகள் அனைத்தும் முறையே செய்து முடித்தனையோ? ஏதேனும் மனக்கவலை யுண்டோ?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! மனக்கவலை என்பது அணுவளவு மில்லை. "மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று" ஆகலின் தேவரீரது வரவையே பெரிதும் எதிர்பார்த்து நிற்கின்றோம்.

**விசுவாமித்திரர்** — இதோ வந்து விட்டோம். நீ செய்யவேண்டிய முறைமை யாது?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இதோ இந் நகரவாசிகள் பலரும் வந்து வீற்றிருக்கின்றனர். மற்ற அமைச்சர் முதலாயினோரும் ஈண்டு அமர்ந்திருக்கின்றனர். இவர்கள் முன்னிலையில் இவ் வரசை அடியேன் தேவரீருக்கு உரிமையாக்குவதற்கான ராஜாங்க பிரசித்த பத்திரத்தை இதோ வாசிக்கின்றேன்; கேட்டருள வேண்டும்.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, சந்தோஷம், எமக்கு உரிமையாக்கும் பொருள் அனைத்தும் இதில் குறிக்கப்பட்டிருக்கு மன்றோ?

**அரிச்சந்திரன்** — ஆம், சுவாமீ! அதனையே இங்கு வாசிக்கின்றேன்.

**விசுவாமித்திரர்** — ஆனால் சரி, ஆகட்டும்.

**அரிச்சந்திரன்** — எமது அரசாட்சியின் கீழ் அமைந்துள்ள அரசர், அமைச்சர், பிரபுக்கள், நகர மாந்தர் ஆகிய அனைவர்க்கும் தெரிவிப்பது என்னையெனின் — எமது வேண்டுகோளுக் கிரங்கி, இவ் வரசுரிமையாகிய பெரும் பொறையைத் தாங்கி யருளுமாறு, முனிவர் பெருமானாக விளங்கும் விசுவாமித்திர முனிவர் மனங்கொண்டமையால், இவ் வரசையும், இவ் வரசிற்கு அங்கமாய் விளங்கும் நால்வகைப் படைகளையும், அவர்பால் ஒப்பிப்பதே யன்றி, யாம் வசிக்கும் அரண்மனை, பொருட்சாலை முதலாயுள்ள இயங்கியற் பொருள் நிலையியற் பொருள் அனைத்தையும் அன்னவருக்கே உரிமையாக்க

மனமொழி மெய்களால் இசைகின்றோம். இல்லறம் பயின்று துறவறத்தைக் கைகொண்ட முனிவர் நாயகராகிய விசுவாமித்திரரது ஆளுகையில், நமது குடிகள் முதலாயினோர் நல் வாழ்வை எமது அரசாட்சியினும் சிறக்க எய்துவார்கள் என்னும் துணிவுகொண்டே இவ் வரசை அப் பெரியார்பால் உரிமையாக்க இசைந்தமைக்குப் போதிய காரணமாம். அதுவன்றி; யாமும் இவ் வில்லற வாழ்க்கையைத் துறந்து, வானப்பிரஸ்த நிலையை யடைய விருப்புறுகின்றோம். ஆதலின், நீவிர் யாவரும் இதுகாறும் எமக்குச் செலுத்திவந்த உரிமைகள் அனைத்தும் அப் பெரியார்க்கே செலுத்தி, அவர்பால் மெய்யன்பு பாராட்டி வரக்கடவீராக.

இங்ஙனம்,

**அரிச்சந்திரன்.**

(விசுவாமித்திரருக்கு முடிசூட்டுதல்.)

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! இவ் வரசையும், படைகளையும் எமக்கு உரிமை யாக்கினை உண்மையே. மற்றும் யாதோ குறிப்பிட் டிருக்கின்றனையே, அங்கு வாசி.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! எனது அரண்மனை, பொருட்சாலை முதலிய எல்லாப் பொருள்களையும் குறித்திருக்கின்றேன்.

**விசுவாமித்திரர்** — வெகு சந்தோஷம். பொருட்சாலை என்றால் பொக்கிஷமோ?

**அரிச்சந்திரன்** — ஆமாம், சுவாமீ.

(அரிச்சந்திரன் பத்திரத்தை முனிவரிடம் கொடுக்கின்றான்.)

**விசுவாமித்திரர்** — (பத்திரத்தைக் கையிலேற்று) சத்தியகீர்த்தி! நீ இவ் வுண்மை யனைத்தும் நமது சிற்றரசர் முதல் குடிகள் ஈறாக வுள்ள அனைவரும் அறியுமாறு விளம்பரம் செய்யக்கடவாய்.

**மந்திரி** — ஆ, ஆ, அப்படியே செய்கின்றேன், சுவாமீ!

**அரிச்சந்திரன்** — முனிநாதா! யாவும் முறையே முடிந்துவிட்டன. இனி, அடியேங்களுக்கு விடை யருளினால், யாங்கள் செல்கின்றோம்.

**விசுவாமித்திரர்** — அடியேங்கள் என்றால் யாரார்? நீ ஒருவன் தானே?

**அரிச்சந்திரன்** — சுவாமீ, அடியேன் மட்டுமன்று, எனது மனைவியும் என்னைத் தொடர மனங்கொள்கின்றாள். அதனால், சிறுவனும் வருதல் அவசியமாகின்றது. ஆதலின், மூவர்க்கும் விடை யருளவேண்டும். எனது தாயார்மட்டும் இவ்விடத்தில் இருப்பார்.

**சித்திரரேகை** — அப்பா, அரிச்சந்திர! உங்களை விட்டு, யான் மட்டும் இவ்விடத்தி லிருக்க என் மனம் எப்படி ஒப்பும்! யானும் உங்களோடு வந்துவிடுகின்றேன். இந்த முதுமைப் பருவத்தில் என்னைத் தனியே விட்டுச் சென்றால், யான் யாருடைய உதவிபெற்று இவ்விடத்தி லிருப்பேன்?

**அரிச்சந்திரன்** — அன்னாய்! தங்களைத் தனியே விட்டு ஏகுவது எங்கள் எண்ணமன்று. இந்த வயோதிக பருவத்தில் காட்டில் வசித்து, கந்த மூல பலாதிகளை யருந்தி வசிக்கத் தங்களால் இயலாது. தேவரீர் இவ்விடத்தே தானே தங்கியிருக்கலாம். முனிவர் தேவரீரை அடியேனைவிடப் பதின்மடங்கு மிகுதி யாகப் பாதுகாப்பர். திக்கற்றவர்க்கு அரசன் தந்தையாகவும் தனயனாகவும் இருக்கின்றான் என்னும் முறை அம் முனிவர் பெருமான் அறியாததன்று. அன்றி, இதோ நமது பாங்கன் இருக்கின்றான். தேவரீர் ஏவினவற்றைச் செய்வான். ஆகலால், தேவரீர் இவ்விடத்திலேயே இருத்தல் நன்று. மனங் குளிர விடை கொடுங்கள். (பாங்கனை நோக்கி) பாங்க! இதோ என் அன்னை, பரிந்து பாதுகாத்து அருகில் இருப்பாய்.

**சந்திரமதி** — மாமீ! தேவரீர் ஒன்றுக்கும் வருந்தவேண்டா. தனித்திருக்க மனமில்லையானால், தாங்கள் கன்னமாபுரிக்குப் போய், அங்கு எனது தாய் தந்தையரோடு வசித்திருங்கள்.

**சித்திரரேகை** — நான் எப்படிப் பிரிந்திருப்பேன்!

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! நீங்கள் செய்வதும், பேசுவதும் ஏதோ வஞ்சகமாகக் காண்கின்றது. அரசை யளித்து அனைவரும் போய்விட்டால், இப்பாவி விசுவாமித்திரன் அவர்களை நாட்டில் தங்குவதற்கும் இடங்கொடாமல் ஓட்டிவிட்டான் என்று உலகம் பழிக்கட்டும் என்னும் எண்ணத்தால் இவ் வாறு செய்கின்றீர்களோ! அவ்வாறு பழி சுமத்திக் கொடுப் பதானால் இவ் வரசு எமக்கு வேண்டா. நீயே எடுத்துக்கொள் ஆ, ஆ! இதென்ன வஞ்சகம், தவஞ் செய்யத் தான்மட்டும் ஏகுதல் நேரிது. பெண்டு பிள்ளை அனைவரையும் அழைத்துக்கொண்டு ஏகுதல் எதற்கு?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இப் பெண்பாலை இவ்விடத்தேதானே விட்டு அகல பற்பல நீதிகள் புகன்றேன். அவள் அவற்றை யெல்லாம் பாராட்டாமல், 'கற்பெழின் மடவார் கணவனை யகலார்' என்னும் உறுதிமொழி யொன்றனையே உளத்திற் கொண்டு, பின் தொடரப் பெரிதும் விழைகின்றாள். அதனால் அடியேனது தாயைமட்டும் ஈண்டே இருத்திச் செல்ல இசைகின்றேன். மற்றியாதும் வஞ்சக மில்லை.

**விசுவாமித்திரர்** — சரி, தாயை விட்டுச் செல்வதாயின் எமக்கு யாதும் பழியில்லை. ஆயின், நீவிர் மூவரும் ஏகலாகும். அரிச்சந்திர! நீ வாநப்பிரஸ்த நிலையை யன்றோ விரும்பினை?

**அரிச்சந்திரன்** — ஆமாம், சுவாமீ!

**விசுவாமித்திரர்** — எந்த நிலைக்கு எது தக்கதோ அதனைக் கொள்ள வேண்டும். அரசற்கு ஆடையணிகள் வேண்டும். துறவறம் பூண்பார்க்கு இவை எதற்கு? இவை யிருத்தலும் இன்னலுக் கிடமன்றோ? கானக வாழ்க்கையை விரும்பினவர்க்கு கல்லுடை யன்றோ தக்கது?

**அரிச்சந்திரன்** — ஆம், ஆம், சுவாமீ! துறவறம் புதிதாகலின் எமக்கு ஒன்றும் தோன்றிலது. பெரியார் துணையை விழைவது இதனுக்கே யன்றோ. இந்த ஆடையணிகளைக் களைந்து, தேவரீருக்கே யமைக்கின்றோம். தேவரீர் எமக்கு ஆனதோர் உடையினை யளிக்க அருள்புரிதல் வேண்டும்.

**விசுவாமித்திரர்** — சந்தோஷம், வாநப்பிரஸ்த நிலைக்கு வெள்ளுடையே யேற்றதாயினும், உன்னுடைய நல்லொழுக்கத்தின் உயர்வை யுன்னிச், சந்நியாசத்திற்குரிய காவியுடையினையே ஆசீர்வதித்துத் தருகின்றோம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தேவரீரது ஆசீர்வாதத்தை மறுப்பதாக எண்ண வேண்டா. அடியேன் மேற்கொள்வது வாநப்பிரஸ்த நிலை. அதற்கு சந்நியாசத்திற்கு உரிய உடையினை மேற்கொள்ளுதல் எவ்வாறு ஏற்றதாகும்? ஆதலின் சூரிய வமிசத்திற்குரிய இளஞாயிற்றின் நிறம் வாய்ந்த ஆடையை அருள் செய்யின் நலமாகும்.

**விசுவாமித்திரர்** — ஆனால் அவ்வாறே செய்வோம்.

(விசுவாமித்திரர் இளஞாயிற்றின் நிறமுடைய உடையினை அளிக்கின்றனர். அப்பால் சென்று மூவரும் அதனை உடுத்துக்கொண்டு, தாம் அணிந்திருந்த ஆடையணிகளைக் களைந்து கொண்டுவந்து முனிவரிடம் சேர்க்கின்றனர்.)

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இனி விடை யருளவேண்டும்.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, நீவிர் வாநப்பிரஸ்த நிலையில் வழுவின்றி நல்வாழ்வை நலக்க எய்த ஆசி புரிகின்றோம்.

**அரிச்சந்திரன்** — (தாயை வணங்கி) அன்னாய்! விடை யருளவேண்டும், செல்கின்றோம்.

**சித்திரரேகை** — என்னருமைப் புதல்வ! அரிச்சந்திர! சந்திரமதி! போய் வாருங்கள். நமது கண்மணி எங்கே — அப்பா கண்மணீ! வாடா.

(எடுத்து முத்தமிடுகின்றாள்.)

(மூவரும் அரண்மனையை விட்டு அகல்கின்றனர்.)

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திரா! அரிச்சந்திரா! இங்கு வருவாய்! இங்கு வருவாய்!

**அரிச்சந்திரன்** — இதோ வந்து விட்டேன் சுவாமீ! அடியேன் செய்யத் தக்கது மற்று ஏதேனும் உண்டோ?

**விசுவாமித்திரர்** —, அரிச்சந்திரா! என்ன இவ்வாறு செய்துவிட்டனை?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் யாதும் முறை பிறழ்ந்து செய்தே. னில்லையே!

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! உனக்குரிமையான பொருள் அனைத்-தும் எமக்கு உரிமையாக்கினை, உண்மையே. யாம் முன்பு உன்னிடம் வைத்துச் சென்ற எமது பொருளை ஒப்பித்தா யில்லையே!

**அரிச்சந்திரன்** — சுவாமீ, அதுவும் பொருட் சாலையில்தானே இருக்கின்றது. அதனையும் தேவரீருக்கு உரிமையாக்கி விட்டே னன்றோ?

**விசுவாமித்திரர்** — உரிமையாக்கியது உண்மைதான். பொருட் சாலையைக் குறித்த காலத்தில், யாம் உன்னிடம் வைத்துச் சென்ற பொருளும் அதனில் அடங்கியுளதென்று நீ கூறின தில்லையே. நீ பொருட்சாலையைக் குறித்த காலத்து, மற்று மோர் முறை தடுத்தும் வினவினோம். அப்பொழுதுங் கூறினு யில்லை. ஆதலால், அதனை நீ இப்போது தனியே கொடுக்க வேண்டு மென்பது முறையோ? அன்றோ?

**அரிச்சந்திரன்** — சொன்முறையில் முறையே யாகின்றது, சுவாமீ!

**விசுவாமித்திரர்** — நமக்குச் சொன்முறை தானே வேண்டும். சொல் பிசக லாகுமோ?

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, கூடாது கூடாது. உயிர் தவறினும் உரை தவறலாகாது. அவ்வாறே தருதற் கிசைகின்றேன், சுவாமீ.

**விசுவாமித்திரர்** — இசைவதானுல் அதனை இங்கேயே செலுத்தி-விடலா மன்றோ?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! எம்மிடமுள்ள ஆடை யணிகள் முதலிய அனைத்தையும் தேவரீருக்கே உரிமையாக்கிவிட்டோம். அது தேவரீரது திருவுளம் அறிந்ததே. இப்போது எமக்கென்று ஒரு அணுவும் இல்லை. ஆதலின், கிருபை கூர்ந்து தவணை யருளினுல், தேவரீருக்குச் சேரவேண்டிய பொருள் முழுதும் சேர்த்து விடுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — எத்தனை நாள் தவணை வேண்டும்? நீடித்த காலம் கூடாது.

**அரிச்சந்திரன்** — இல்லை, இல்லை. நாற்பது தினங்கள் அருளினால் சாலும், சுவாமீ.

**விசுவாமித்திரர்** — நாற்பது தினங்களா— சரி, இதற்குள் கொடுக்கத் தவறினால் வாக்குத் தவறியதாகும். அன்றி இப் பொருளை இந்த அயோத்தியா தேசத்தின் எல்லைக்குள் சம்பாதித்துக் கொடுத்தல் கூடாது. இந் நாட்டில் நீ தேடும்பொருள் எம்முடையதே யாகும். இப் பொருள் முழுதும் செலுத்துவதற்குமுன், நீ இந்த நகரத்தின் எல்லையில் கால் வைக்கவும் கூடாது. இவற்றிற்கு என்ன சொல்கின்றாய்?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! யாங்கள் இந்த நாட்டை யகன்று, காசியம் பதியிற் சென்று சம்பாதித்துத், தவணைக்குள் தருகின்றேன்.

**விசுவாமித்திரர்** — இது நிற்க, இந்த நாற்பது நாட்கள் வரையில் யார் உன்னோடு நீ செல்லு மிடங்களி லெல்லாம் அலைந்து திரிவர்? பொருள் பெறுவது ஒரு பாடாயின், பொழுது கழிப்பது பெரும்பாடாகக் காணுமே. உன்னோடு யாரை யனுப்புவது? உங்களோடு அவனும் அலைந்து திரிந்து சிரமப்பட வேண்டும்போல் காண்கின்றதே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! என்ன செய்வது. எவரேனும் ஒருவரை யனுப்பினால், நாற்பது தினங்களில் அவரிடம் தேவரீரது பொருளைச் செலுத்தி விடுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — (மேல்நோக்கி) யாரை அனுப்புவது — ஓ, ஓ, நமது சீடனைத்தான் அனுப்புதல் வேண்டும். நம்பிக்கை யுள்ளார் வேறு யாவர். அரிச்சந்திர! இதோ எமது சீடனை அனுப்புகின்றோம். இவற்கு வழியில் குறையொன்றும் நேராவண்ணம் பாதுகாத்துக், குறித்த தவணைக்குள் பொருளைக் கொடுத்தனுப்புவாய். **நட்சத்திரேச! (சுவாமீ!)** நீ இவ் வரிச்சந்திரனோடு சென்று, நாற்பது தினங்களுக்குள் நமக்குச் சேரவேண்டிய பொருள் நூறு லட்சம் பொன்னையும் பெற்றுக்கொண்டு, ஈண்டு திரும்பி வருவாய். நாற்பது தினங்களில் கொடுக்கத் தவறினால், மற்றும் அவனோடு இருத்தல் வேண்டா. உடனே வந்து விடுவாய்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, அப்படியே, சுவாமீ!

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர, சீடனைப் பத்திரமாய்ப் பாதுகாப்பாய். அவனே நமது முதற் சீடன். அவன் பெயர் நட்சத்திரேசன், நீ தவணைக்குள் பொருளைச் செலுத்தாவிடின் அவன் வந்து விடுவான். திரும்பவும் அவனை வருத்தாதை.

**அரிச்சந்திரன்** — இல்லை, இல்லை. தவனைக்குள் அனுப்பிவிடுகின்றேன், சுவாமீ.

**விசுவாமித்திரர்** — நட்சத்திரேச! யாம் கூறியவை அனைத்தும் மனத்தி லிருக்கட்டும். சாக்கிரதை.

(செல்லுகின்றார்கள்.)

**சிற்றரசர்** — (அரிச்சந்திரனை நோக்கி) ஆ, அரசே! யாங்கள் இனி என்ன செய்வோம்! எவ்வாறு உய்வோம்! தேவரீரை யகன்று யாங்கள் கொழுக்கொம் பகன்ற கொடியேபோல் அலமருகின்றோம். தேவரீர் எம்மிடத்துப் பாராட்டிவந்த நட்பினை என்றும் மறவோம். யாங்கள் எமது அரசுரிமையைத் தாங்குவதில் அவ் வப்போது தெரிவித்துவந்த செங்கோன் முறைகளை யினி எவ்வாறு யாரிடத்துப் பெறுவது!

**அரிச்சந்திரன்** — குலமன்னர்காள்! குறை சிறிதும் நேரிடாது. நமது முனிவர் பெருமான் உங்கட்கு உற்ற துணையாக இருந்து, யாவும் அருள்புரிவர். இப் பெரியார் நட்பன்றோ யாம் பெரிதும் விழைய வேண்டுவது. எல்லாம் இறைவன் திருவருளே யாகும்; விடை தாருங்கள்.

**சிற்றரசர்** — செய்யுங்கள், எம்மை என்றும் மறவாதிருங்கள்.

**அமைச்சர்** — அரசே! தேவரீர் ஒருவாறு வனவாசத்தை விரும்பிக் கழித்தாலும், எமது அரசியாரும், அரசிளங் குமாரும் எவ்வாறு சகிப்பர்? யாங்கள் தங்கள் அருள் முகத்தையும், அன்பினையும் எவ்வாறு மறந்திருப்போம்!

**அரிச்சந்திரன்** — மதிமந்திரிகாள்! மற்றையோர் வாடுவது ஒருவாறு பொருந்தும். நீங்கள் வருந்தலாகுமோ? ஏது வரவேண்டுமோ அது வரும். ஏது அகலவேண்டுமோ அது அகலும். இதற்கு யாம் வருந்துவதில் பயன் யாது, அமைந்திருங்கள்.

**சேனுபதிகள்** — அரசே! தேவரீர் இவ்வாறு சென்றால், எங்கட்கு யாது புகலிடம். வேட்டை முதலிய தொழில்களை மேற்கொண்டு சென்ற காலத்தே, தேவரீர் எமக்கு யாதும் துன்ப முறுவண்ணம் எவ்வகையினும் பாதுகாத்து வந்தீர்கள், இனி என்ன செய்வோம்!

**அரிச்சந்திரன்** — சேனுபதிகாள்! படைவீரர்காள்! முனிவர் பெருமான் முன்பு அரசுரிமை தாங்கினவர். அவர் யாவும் அறிவர். அவர் எம்மினும் பரிந்து பாதுகாக்கும் பண்புடையவர். வருந்தா திருங்கள்.

**பிரபுக்கள்** — *அண்ணலே! ஆ, ஆ! என்ன வியப்பு. மின்னுமை விடித்தது என்பர். அதனை இன்றே கண்டோம். வேட்டைக்குச் சென்றதும், வந்ததும், அரசை யளித்ததும், துறவு பூண்டதும் இவை யனைத்தும் நாடகமாக வன்றே காண்கின்றன. இதுவோ உலக வாழ்வு. இதனுற்முன் தேவரீர் துறவும் பூண்டாற்போல் காண்கின்றது. ஆ, ஆ! இவ் வரசியாரும், இந்த இளவரசரும் எவ்வாறு வனவாசத்தைச் சகிப்பர்! பூவின் மீதும் நடக்கப் பொருத இவர்களது பாதங்கள் முட்செறிவுள்ள அக் கானகத்தில் எவ்வாறு நடக்கும்! என்னே விதியின் பயன்! ஆயினும், "ஒழுக்க முடையார்க் கிடுக்கணுற் றுெழியும்."*

**அரிச்சந்திரன்** — *பிரபுக்காள்! விதி வலிது. அதன்முன் ஒருவர் சூழ்ச்சியும் நடவாது. எவ் வெக்காலத்தில் யாரார்க்கு எதெது நடக்க வேண்டுமோ அது நடக்கும். நாம் வீணே மனம் வருந்துவதில் பயனில்லை. அவ் வக்காலத்திற்கு ஏற்றவாறு சுக துக்கங்கள் மாறுபடும். அவற்றைத் தக்கவாறு ஏற்க உடலும் வன்மை கொள்ளும். இவை யனைத்தும் கருவில் அமைப்பு.*

**குடிகள்** — *எங்க ளாண்டவனே! ஆ, ஆ! கொடித்தேரும், படைத்துணையும் இன்றி, தேவரீர் இந்தப் பூமியின்மீது நடந்து செல்வதைப் பார்க்க எமது கண்கள் என்ன பாவம் புரிந்தனவோ! ஆ, ஆ! இவ் வரசியாரைப்பற்றி யாத்திரைப் பிராமணர்கள் வந்து கூறிய காலத்து, தேவரீருக்கு நெகிழாத நெஞ்சம் நெகிழ்ந்து, திருமணம் புரிய உடன்பட்டீர்கள். அவ்வாறே அவ் வரசியாரும் தேவரீரைக் காதலித்து மண மாலை சூட்டி, இவ் வருமைத் திருப்புதல்வரை யீன்றூர்கள். அவ் விளவரசுக்கு மகுடஞ் சூட்டி, கண் குளிரக் கண்டு, அரசு ஆளுகையில் யாங்களும் எமது சந்ததியில் வரும் மக்களும் அமைந்திருந்து இன்பமடையும் தவத்தைப் பெறுமற் போயினேம். இனி எதை எண்ணி என்ன பயன்!*

**அரிச்சந்திரன்** — *நகரமாந்தர்காள்! யாதும் ஏற்ற மில்லை. யாதும் தாழ்வில்லை. இப்போது யாங்கள் ஏற்றுள்ள நிலையே எவற்றினும் மேலானது. முனிவாது ஆட்சியில் அமைந்து, எல்லா நன்மைகளையும் அடைந்து இன்புற்றிருங்கள்.*

(செல்கின்றனர்.)

**மற்றையோர்** — (**அரசன் முதலாயினர் செல்வதைக் கண்டு சாமானியரான குடிகள்**) *ஆ, ஆ! நம் மன்னவருக்கு நேர்ந்த காலமே காலம். முனிவன் கேட்டவற்றை யெல்லாம் மறுக்காமல்*

கொடுத்த நமது மன்னவர்க்கு இப்படியும் நேரிடலாகுமா! ஆ, ஆ! இப்படிப் பரதேசிகளாய் நடப்பதைக் கண்டும், இம் முனிவனுக்கு மன மிரங்க வில்லையே. இவன் என்ன நமக்கு நன்மை செய்யப்போகிறுன். இந் நாட்டிற்கே தீவினை வந்துவிட்டது. நாம் இனி இங்கிருப்ப தென்பது வீண் எண்ணம். இப்படிப்பட்ட புண்ணிய புருஷனுக்கே இந்தக் கதியானுல், நமக்கு என்ன ஆகும். மனித வாழ்க்கை எல்லாம் இவ்வளவுதான்.

(விசனப்படுகின்றனர்.)

**விசுவாமித்திரர்** — மந்திரி! சத்தியகீர்த்தி!

**சத்தியகீர்த்தி** — சுவாமீ, அடியேன்.

**விசுவாமித்திரர்** — கண்டனையோ இவ்விடத்தே நிகழ்ந்த விஷயங்களை? அரிச்சந்திரன் இன்னும் இவ்விடத்தி லிருந்தால் இச் சிற்றரசர் முதலாயினுர் ஈண்டே நம்மைக் கொலை புரிந்திருப்பார்கள்போற் காண்கின்றது. என்ன அநியாயம். நமது முன்னிலையில் ஒன்றுக்கும் உதவாத அவ் வரிச்சந்திரனை எவ்வளவு புகழ்ந்து துதித்தனர். ஆ, ஆ! இனி நாம் சும்மா இருத்தல் கூடாது. இதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்தல் வேண்டும். இன்றேல் உள்நாட்டுக் கலகங்கள் நாற்புறத்திலும் உண்டாய் விடும். ஆதலால், நாம் பிரசித்தப் பத்திரம் ஒன்றை உடனே வெளியிடுதல் வேண்டும். அவ் விஷயம் தோட்டி முதல் தொண்டைமான் வரையில் அறியுமாறு செய்தல் அவசியம். என்ன சொல்கின்றுய்?

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! இவர்கட்கு இருந்த அன்பினுல் அவ்வாறு கூறினர். மற்று வஞ்சனையா லன்று. அப்போதும் அரசர் அவரவர்கட்கு ஏற்றவாறு விடை பகர்ந்து தேற்றினுான்றே. தேவரீருக்கு மாருக யாதும் நடவாது. ஆயினும், தேவரீர் விரும்பியவாறே பிரசித்தப் படுத்துவதும் நன்மையே.

**விசுவாமித்திரர்** — நன்று, நன்று, ஆனுல் நீர் வேண்டா. சீஷ! இதனை நீ விரைவில் வெளியிடுவாய்.

**சீஷன்** — (**விசுவாமித்திரர் கொடுத்ததைக் கையிலேற்று வாசிக்கின்றுன்.**) இந்த அயோத்தி யரசைச் சார்ந்த சிற்றரசர், அமைச்சர், பிரபுக்கள், சேனுபதிகள், நகர மாந்தர்கள் முதலாயினுர் அறிந்து நடக்குமாறு விசுவாமித்திர மகா முனிவராகிய யாம் அறிவிப்பது என்னை யெனின்:—

அரிச்சந்திர மன்னன் இந்த அரசை வலிந்து எமக்கு உரிமையாக்கிய விஷயம் முன்னரே அறிவிக்கப்பட்டிருக்கிறது.

இனி, நீங்கள் எல்லோரும் எமது ஆணைக்கு அடங்கி நடத்தல் வேண்டும். எவரும் அரிச்சந்திர மன்னனுக்கு எத்தகைய பொருளும் எவ்வித முறையாலும் கொடுத்தல் கூடாது. சென்று கண்டு வார்த்தை யாடுதலும் கூடாது. அவ்வாறு ஏதேனும் மீறிச் செய்வதாகக் காணுமாயின், அவர்களுடைய சொத்துக்க ளனைத்தும் ராஜாங்கத்தாரால் பறிமுதல் செய்யப்படுவ தன்றி, அவர்களும் இந் நாட்டினின்று அகற்றப்படுவார்கள். எமக்குச் செலுத்தவேண்டிய திறையை தினையளவும் பிசகாது, காலங் கடவாமல் செலுத்திவரக் கடவராக.

இங்ஙனம்,

**விசுவாமித்திர மகா முனிவர்.**

காவல! இதனை நாடெங்கும் விளம்பரப் படுத்துவா யாக.

**காவலன்** — சுவாமீ, அப்படியே.

(காவலன் விளம்பரப் படுத்தச் செல்கிறான்.)

**சத்தியகீர்த்தி** — முனிவர் நாயக! அடியேன் சென்று அரிச்சந்திர மகிபனைக் காண விரும்புகின்றேன். ஆதலால், தேவரீர் விடை யருளவேண்டும்.

**விசுவாமித்திரர்** — சத்தியகீர்த்தி! நம்முடைய விளம்பர விதியை நீயே கடந்து நடக்க முயன்றால், மற்றையோர் என்னுவர்? இது வேலியே பயிரை யழித்தலாக வன்றோ விருக்கின்றது.

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! அடியேன் மற்றொன்றுஞ் செய்ய விரும்பினே னில்லை. அவனைக் கண்டு வருவதற்குமட்டும் விடை யருள வேண்டுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — அது எவ்வாற்றானுங் கூடாது. உனக் கொன்றும் மற்றையோர்க் கொன்றும் விதித்தல் சரியன்று. அவ் வரிச்சந்திரனைக் காண விரும்புவோர் யாவரே யாயினும், நமது விளம்பரத்திற் கூறியவாறே செய்துவிட்டுச் செல்லக்கடவர். சென்றவர் மீண்டும் இந் நாட்டிற்கு வருதல் கூடாது.

**சத்தியகீர்த்தி** — முனிநாத! தேவரீரது திருவுளப்படியே செய்துவிட்டுச் செல்கிறேன். (ஆடை யணி முதலிய பொருள்கள் அனைத்தையும் ஒப்பித்துச் செல்கிறான்.)

## மூன்றாங் களம்



**இடம்:** *அரண்மனையின் ஒரு புறம்.*

**காலம்:** *மாலை.*

**பாத்திரங்கள்;** *விசுவாமித்திரர்.*

**விசுவாமித்திரர்;**— *அந்தோ குளிக்கப் போய் சேற்றைப் பூசிக்கொண்ட தன்மையாயிற்று நமது நிலை. வசிட்டனை வெல்லுமாறு எண்ணங்கொண்டு, உலக வலையிற் சிக்கிக்கொண்டோம். ஒரு சம்சாரத்தினையே சாகரத்திற்கு ஒப்பிட்டு உரைப்பரென்றால், இத்தகைய ராஜ்ய பாரத்திற்கு எதனை உவமை கூறுவது. நாம் முற்காலத்தில் இவ்வகைய அரசியலைத் தாங்கி, அதனால் உண்டான இன்னல்கள் அனைத்தையும் அடைந்து, அந்த நிலையை வெறுத்தே, இந்த உயர் நிலையை யடைந்தனம். இப்போது, முன்பின் யோசியாது விளையாட்டுத்தனமாய் இப்பெரும் பொறையைத் தலையில் ஏற்றுக்கொண்டோம். இனி நமது தவமெல்லாம் அவமாக வன்றோ முடியும். இனி என்ன செய்வது. அந்த அரிச்சந்திரனை நன்னெறியினின்று விலக்கப் பற்பல சூழ்ச்சிகள் புரிந்தும் அவை முற்றும் பயனில வாயின. அந்த மங்கையர் மயலில் சிக்கியிருப்பானேல் மற்றெல்லாத் தீயொழுக்கங்களும் அவனிடம் தோன்றுதற்கு இடமுண்டு. மங்கையர் மயலை யொழித்தவனுக்கு மற்று எதுதான் உலகில் அரியது. தீயொழுக்கங்கள் இனி நம்மை யணுகுமே யன்றி, அந்த அரிச்சந்திரனைச் சிறிதும் அணுகா. நாம் எவ்வளவோ அரிய தவங்களைச் செய்து, ஜிதேந்திரியனாக விருந்தும், நம் தீவினை நம்மை இந்த அல்லலில் புகுவித்தது. "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான்முந் துறும்" என்பதற்கு நாமே யிலக்கியமாக இருக்கின்றோம். ஆயினும், இவ்வாறு மனஞ் சோர்வுபடுதலும் ஆகாது. சூழ்ச்சியால் ஆகாத காரியம் ஒன்றுமே யில்லை. அரிச்சந்திரன் நமக்குச் சேர்க்கவேண்டிய இந்தப் பெருந் தொகையை எப்படிச் சேர்க்கப் போகிறான். இவ் விஷயத்தில் அவன் வாக்குத் தவறி விடுவான். அதனால் நாம் வெற்றி யடைந்து விடுவோம். எனினும், இடையிடையே அவ் வரிச்சந்திரனுக்கு இன்னல் பல இழைக்குமாறு நமது சீடர்களையே ஆளாக்குதல் வேண்டும்.*

## நான்காங் களம்



**இடம்:** அயோத்தியை யடுத்த ஒரு சோலை.

**காலம்:** நண்பகல்.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், நட்சத்திரேசன், பரமாநந்தன்.

**பரமாநந்தன்** — (விரைந்து ஓடி வந்து, அரிச்சந்திரனை யணுகி) எங்கள் ஆண்டவனே! (முகத்தில் கை வைத்துத் துக்கித்து நிற்கின்றான்.)

**அரிச்சந்திரன்** — ஐயா! நீர் யார்? எதற்காக விசனிக்கின்றீர்?

**பரமாநந்தன்** — அரசே! நான் அயோத்தி நகரத்தில் வசிப்பவன். தேவரீருடைய தாயாரின் நிலைமையைத் தங்களுக்கு அறிவிக்கும்படி ஓடி வந்தேன். தயை செய்து உடனே புறப்பட்டு வரவேண்டும்.

**அரிச்சந்திரன்** — ஐயா! என் தாயார் நிலைமை என்ன? உற்ற விஷயங்களை விசனப்படாமல் சொல்லும். என்ன நேர்ந்தது என் தாயாருக்கு?

**பரமாநந்தன்** — அரசே! நான் என்னவென்று சொல்லுவேன்! ஐயோ, என் நாவும் எழவில்லையே. தங்கள் தாயார் தாங்கள் பிரிந்ததை எண்ணி வருந்தி, உணர்வற்றுக் கிடக்கின்றார். எடுப்பாரும் பிடிப்பாரு மின்றித் தவிக்கின்றார். தங்கள் நாமதேயத்தையே சொல்லிச் சொல்லி வருந்துகின்றனர். அடியேனைப் போன்றவர்கள் அருகில் சென்று என்ன கேட்டாலும், தங்கள் நாமதேயத்தை யன்றி மற்றொன்றும் சொல்லாமல், கண்ணை மூடிக்கொண்டு, அசைவற்றுக் கிடக்கின்றனர். தாங்கள் வந்ததாகச் சொன்னால்மட்டும், விழித்துச் சுற்றிச் சுற்றிப் பார்க்கின்றனர். காணாமையால் பின்னும் கண்ணை மூடிக்கொண்டு கலங்குகின்றனர். முடிவில், 'என் கண்மணியை அழைத்துக்கொண்டு வாருங்களேo' என்று ஈனசுரத்தோடு கூறினார். பாங்கனைத் தேவரீரது தாயாருக்கு அருகில் இருக்கவொட்டாமல் வேறு காரியத்திற்குச் செல்ல விட்டமையால் அடியேன் தேவரீரைத் தேடி ஓடோடியும் வந்தேன். தயை செய்து தட்சணமே புறப்பட வேண்டும்.

**அரிச்சந்திரன்** — (தலை குனிந்து எண்ணமிட்டுக் கண்ணீர் உகுத்தபடியே) ஐயா! என் தாயாரைத் தேற்றி யாற்றித் தைரியஞ் சொல்லுவார் ஒருவரும் அங்கு இல்லையா? என்ன காலம்!

**பரமாநந்தன்** — அரசே! ஒருவரும் அருகில் அணுகுவா ரில்லை. நானும் இன்னும் இரண்டொருவரும் மாத்திரம் இவ் விஷயம் கேள்விப்பட்டு ஓடிவந்தோம். உணர்வு சிறிதுமில்லாமல் நிலத்தில் விழுந்து கிடந்தனர். எடுத்து உபசரித்து எங்களால் ஆனமட்டும் பற்பல வகையில் தேறுதல் சொல்லியும், ஒன்றும் பயன்படவில்லை. ஐயோ! இதற்குள் என்ன நிலையில் இருக்கின்றனரோ தெரியவில்லை! தேவரீர் தக்ஷணமே புறப்பட்டு வந்தால், தங்களைக் கண்டதும் சோகம் தீர்ந்துவிடும். மற்றொரு நேரியு மில்லை.

**சந்திரமதி** — ஐயோ, அம்மணீ! என்ன கதி தங்களுக்கு! அநாதையாய் இருந்து வருந்தவும் நேர்ந்ததா! தெய்வமே! என் அருமை மாமிக்கு இப்படியும் நேரலாமா! பிராணநாதா! தாங்களே இவ்வாறு வருந்தினால், நாங்கள் என்ன செய்வது?

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! ஆலசியம் செய்வதால் என்ன பிரயோசனம். அந்தம்மாளும் கண்ணீர் விடுகிறாள். நீயும் கலங்குகின்றாய். உங்கள் முகத்தைப் பார்த்துப் பையனும் பதைக்கின்றான். இப்படியிருந்தால் என்ன காரியம் முடியும். ஏதோ சங்கடம் நேர்ந்துவிட்டால், ஆண் பிள்ளைகள் அதற் கேற்றபடி, பரிகாரங்களைத் தேட வேண்டாமா. இதை விட்டு, சங்கதி சொல்ல வந்தவனைப் பிடித்துக்கொண்டு பல பல வார்த்தைகளைக் கேட்டுக்கொண் டிருந்தால் என்ன நடக்கும். என்ன முடியும்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இப்போது யான் என்ன செய்வது! இருதலைக் கொள்ளியுள் எறும்புபோல் தவிக்கின்றேன். செய்வது ஒன்றுந் தோன்றவில்லை.

**நட்சத்திரேசன்** — சரி, சரி, நன்றாய் இருக்கிறது! செய்வது ஒன்றுந் தோன்றவில்லையா. பாபம், தாயார் புத்ர வாத்ஸல்யத்தால் பிராணனை விடுகிறாள். இந்தச் சமயத்தில் ஒன்றுந் தோன்றவில்லை என்கிறாயே, இது சற்புத்திரர்களுக்கு அழகா! எந்தத் தெய்வத்திற்குத்தான் இது சம்மதமாகும்! "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பது உனக்குத் தெரியாதா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் கூறுவன அனைத்தும் நியாயமே. யான் இப்போது என்ன செய்யலாம்! நாட்டின் எல்லையை விட்டு நெடுந்தூரம் வந்துவிட்டோமே.

**நட்சத்திரேசன்** — எல்லையைக் கடந்து வந்துவிட்டால் என்ன முழுகிப் போய்விட்டது! இந்தச் சங்கதியைக் கேட்டது முதல் என் மனமே துடிக்கிறதே. நீ இப்போது இதையெல்லாம் எண்ணிக்கொண் டிருக்கலாமோ. உடனே போய்

முகத்தைக் காட்டினால் சோகம் நீங்கிப், பிராணன் நிலைக்குமே. பிறகு, வேண்டிய தைரியம் சொல்லிவிட்டுத் திரும்பிவிடலாம். புறப்படு, யானும் வருகிறேன். உன்னுடைய மனைவியும் மனம் பதைத்துக் கன்றிக் கண்ணீர் விடுகின்றாள், பாவம்.

**பரமானந்தன்** — ஆமாம், ஆமாம், மகாராசாவைக் கண்டதும் அந்தம்மாளுக்கு ஒன்றுமில்லாமல் குணப்பட்டுவிடும். தடையேயில்லை.

**நட்சத்திரேசன்** — கேட்டாயோ அரிச்சந்திர! இன்னும் என்ன யோசனை. புறப்படு போய் வருவோம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் என்ன இவ்வாறு சொல்கின்றீர்கள்! நாங்கள் அயோத்தியினின்று புறப்படும்போது, முனிவர் கடனைத் தீர்க்காமல், மறுபடியும் அயோத்தியில் அடியெடுத்து வைப்பதில்லை யென்று வாக்களித்து வந்திருப்பது தங்களுக்கு ஞாபகமில்லையோ? அதற்கு மாறாக இப்போது நடப்பது எப்படி? என் தாய்க்கு அவ்வாறான முடிவு நேர வேண்டு மென்பது இறைவனுடைய திருவுளமானால், நாம் செய்யத் தக்கது யாது!

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இந்தச் சந்தர்ப்பத்தில் இவற்றையெல்லாம் எண்ணி, உயிரினும் அரிய தாயாரை வதைய வைப்பது உயர்ந்தோர் செய்கை யன்று. புறப்படு, புறப்படு, போய் வருவோம். திரும்பி வருவதில்லை யென்று வாக்களித்தது உண்மையே. இப்படிப்பட்ட எதிர்பாராத இடையூறு உண்டாகுமென்று எண்ணினோமா? இல்லையே. உனக்குத்தான் இந்த நிபந்தனையால் மனம் கல்லானாலும், பெண்பால்களுக்கு எப்படி மனம் சகிக்கும்! வேண்டாம், உயிருள்ளளவும் இது உடலை உருக்கும். இதனால் ஒன்றும் குற்றமில்லை. புறப்படு, போவோம்.

**அரிச்சந்திரன்** — சுவாமி! சத்தியமே தாய். உயிர் ஒன்றே அழியாதது. ஆதலால், இவ்வுயிருக்கு உறவான தாயாகிய சத்தியத்தையே போற்ற வேண்டும். உடல் அழிவது. அந்த உடலுக்கான தாயாரை எண்ணி, உயிரின் தாயான சத்தியத்தை யிழப்பது அறிவீன மாகும். அன்றியும், எவ் வெக் காலத்தில் எதெது எப்படி நடக்கவேண்டுமோ அதது அப்படியே நடந்து தீரும். "ஆவாரை யாரே யழிப்பார், அதுவன்றிச் சாவாரை யாரே தடுப்பார்." எல்லாம் இறைவனது திருவுளப்படியே ஆகும். அதற்காக நாம் சிந்தித்துப் பயனில்லை.

கலித்துறை

ஊட்டுவிப் பானும் உறங்குவிப் பானுமிங் கொன்றொடொன்றை
மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப் பானும் ஒருவனுண் டேதில்லை யம்பலத்தே

என்பது உண்மையே யன்றோ.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! உன்னைப்போல் கன்மன முள்ளவரை யான் இதுவரையிற் கண்டதில்லை. மகத்தான ஞானிகளும் தமது தாயாருடைய மரண நிலையைக் கேட்டு வருத்தமடைவது இயற்கை. அதையும் நீ மறுக்கின்றனையே, உன்னுடைய மனத்திற்கு ஒப்பு உன்னுடைய மனமே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அவ்வாறு எண்ணவேண்டா. என் மனம் அழலிற் பட்ட மெழுகைப்போல் உருகுகின்றது. உரைத்த சொல் ஒன்றே தடுக்கின்றது. அச்சொல்லை மறுத்து நடக்க மனம் சிறிதும் சம்மதிக்கவில்லை.

**நட்சத்திரேசன்** — அம்மா! உன்னுடைய நாயகனது மனநிலை அவ்வாறு இருக்கின்றது. நீயும் உன் மைந்தனுமாவது சென்றால் உன் மாமிக்கு ஒருவாறு திருப்தி ஏற்படலா மன்றோ? உனது நாயகனைப்போல் நீயும் வாக்களிக்க வில்லையே.

**சந்திரமதி** — சுவாமீ! மனைவி மணாளனில் அடக்கமானவள்; தனக்கென்று ஒரு சிறிதும் சுதந்தர மில்லாதவள். அதனால், நாயகனுக்கு உடன்பாடானது நாயகிக்கும் உடன்பாடானதே. நாயகனுக்கு உடன்பாடாகாதது நாயகிக்கும் உடன்பாடு ஆகாததே. இதுவே சகல சாஸ்திர சம்மதம் என்று தேவரீரைப் போன்ற பெரியோர்கள் கூறக் கேட்டிருக்கின்றேன். ஆதலால், மன்னவர் வாக்களித்தது அடியாளும் வாக்களித்தபடியே யாகும். எமது புத்திரனோ எம்மை யன்றி வேறானவன் அல்லன். அதனால் அவனும் வாக்களித்தபடியே யாம். ஆதலால், எங்கள் மூவரில் ஒருவரும் வாக்குத் தத்தத்தை மீறி நடப்பதற்கு இடமில்லை. என்ன செய்வது, எல்லாம் இறைவன் திருவுள மென்றே எண்ணி அமைந்திருக்க வேண்டும்.

**நட்சத்திரேசன்** — ஆனால் சரி. ஆணுக்குமே லிருக்கிறது பெண். நான் ஏதோ உன்னாலாவது அரிச்சந்திரன் அசைவான் என்று பார்த்தேன். அதுவுங் காணோம். எனக் கென்ன, ஐயோ பாவம் ஒரு ஆன்மா பதைக்கிறதே என்று பரிதாபங் கொண்டு சொன்னேன். இவ்வளவு தூரம் தேடி ஓடி வந்தவனுக்கும்

வேலை யில்லை. பயித்தியக்காரன். (பரமாநந்தனை நோக்கி) என் அப்பா! கேட்டாயோ ஞானங்களை யெல்லாம். நீ வந்த வழியைப் பார்த்துக்கொண்டு போய் வா.

**பரமாநந்தன்** — அரசே! அடியேனுக்கு என்ன கட்டளை யிடுகிறீர்கள்? தாங்கள் வந்து முகத்தைக் காட்டினால், சோகம் உடனே நீங்கிவிடும். மன நோயன்றி மற்றொரு நோயு மில்லை.

**அரிச்சந்திரன்** — ஐயா! உம்முடைய அன்பிற்கும் உழைப்பிற்கும் யான் என்ன செய்யப் போகின்றேன்! யான் திரும்பவும் அயோத்தியில் அடியெடுத்து வைக்கக் கூடாதவனா யிருக்கின்றேன். நீங்கள் தயவுசெய்து என் அரிய தாயை முனிவருடைய அனுமதிபெற்று இங்கு தூக்கிக் கொண்டு வந்துவிட்டால், யான் அந்த நன்றியை ஒருநாளும் மறவேன். இது ஒன்றே யான் இப்போது செய்துகொள்ளும் விண்ணப்பம். தயை செய்ய வேண்டும்.

**பரமாநந்தன்** — அரசே! அப்படியே செய்யலாம். அதற்கும் உடனிருந்து உதவுவார் ஒருவரும் அங்கு இல்லை. இதற்குள் அந்தம்மாள் நிலையும் எப்படியிருக்குமோ தெரியவில்லை. ஆயினும், அடியேனால் கூடியமட்டும் பார்க்கின்றேன். போய் வருகின்றேன்.

**அரிச்சந்திரன்** — ஐயா! போய் வாரும். என் தாயைக் கொண்டு வந்து தயை செய்து சேர்க்கவேண்டும்.

(பரமாநந்தன் வணங்கிச் செல்கின்றான்.)

**நட்சத்திரேசன்** — (பரமாநந்தனோடு தனியே) பரமாநந்த! பார்த்தனையோ இம் மன்னவன் மன வலிமையை. இப்படிப்பட்டவனை நாம் எவ்வாறு வெல்வது. அந்தப் பெண்பாலும் சத்தியத்தின் மீதிலேயே மனமுள்ளவளாய் இருக்கின்றாள். போய், நமது முனிவருக்கு இவ் விஷயங்களை விவரமாய்ச் சொல்லுவாய்.

**பரமாநந்தன்** — இதற்குள் நாம் சோர்வடைய லாகுமா. முனிவர் எத்தனை தந்திரங்கள் செய்திருக்கின்றனர். இது ஒன்றுதானா!

(போகிறான்.)

## ஐந்தாங் களம்



**இடம்:** *சரயு நதிக் கரை.*

**காலம்:** *மாலை.*

**பாத்திரங்கள்:** *நட்சத்திரேசன், அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி.*

**நட்சத்திரேசன்** — *அரிச்சந்திர! நாம் இதோ சரயுநதியை யடைந்தோம். இரவியும் மேற்கடலை யடைந்தான். நாம் இன்று இவ்விடத்துத்தானே தங்கவேண்டும். இனி இருளில் நடந்து செல்வது கூடாமை.*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! அவ்வாறே செய்வோம். இங்கு இவ்விரவைக் கழித்து, நாளைய வைகறையிற் பிரயாண மாவோம்.*

**நட்சத்திரேசன்** — *அரிச்சந்திர! என்ன காலம்! நாம் ஏன் இவ்வகைய துன்பத்திற் கிடங்கொடுக்க வேண்டும். இன்ப துன்பங்கள் நம்மால் வருவதன்றி வேறன்று. எதையும் யோசித்துச் செய்தல் வேண்டும். நீ யோசியாமற் செய்துவிட்டதனால், அனைவரும் துன்பமுற நேர்ந்தது. அந்தோ! இச் சிறுவனது வாட்டத்தைக் காணச் சகிக்கவில்லை. உன் மனைவியின் நிலையோ அதனினும் இரங்கத்தக்கதா யிருக்கிறது. உங்களோடு யானும் துன்புறவேண்டி வந்தது. எல்லாம் நீ யோசியாமற் செய்துவிட்ட காரியத்தா லன்றோ? என்ன அனியாயம், இன்று இப்பனி யிருளில் இந்த மரத்தின்கீழ் எவ்வாறு துயில்வது!*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! ஒரு நாளில் இரவும் பகலும் மாறி வருவதேபோல், இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது வழக்கே. இன்பத்திற்கு மகிழ்வதும், துன்பத்திற்கு துக்கிப்பதும் கீழோர் செய்கை. மேலோர் இன்ப துன்பங்களைச் சமமாகப் பாவிப்பர். ஓடும்—பொன்னும், உறவும்—பகையும், வீடும்-காடும் வேறு எனக் கருதுதல் விஞ்ஞானமன்று. ஆதலின், இவற்றிற்கெல்லாம் அஞ்சி அறத்தைக் கைவிடலாகாது. ஆயினும், எம்மால் தேவரீர் வருந்துவது உண்மையே. என்னசெய்வது, பிணைப்பட்டுத் துணைப்பட்டால், துன்பம் நேருமென்பது துணிபே யன்றோ! அதனால் தேவரீர் மனங்கொண்டு எம்மை மன்னித்தருள வேண்டும்.*

**நட்சத்திரேசன்** — *சரி, சரி, வந்தாயிற்று. இனி இவற்றைப் பேசி என்ன பயன். நீ சொல்வது சரிதான். உங்களுக்கு உற்-*

றதை யானும் அனுபவித்துத்தான் தீரவேண்டும். மற்றெப்படி முனிவர் பொருள் கைக்கு வருவது.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ, சந்திரமதி! இங்கு இம்மரத்தின்கீழ் அமைந்துள்ள மணல் மேட்டின்மீது நமது சிறுவனேடும் அமர்ந்திருப்பாய்.

**சந்திரமதி** — பிராணநாதா! தாங்களும் இவ்விடத்தே அமரலாமே.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அப்படியே செய்வோம், பெண்மணீ!

(சத்தியகீர்த்தி வருகிறான்.)

**சத்தியகீர்த்தி** — அரசே! வந்தனம்.

**அரிச்சந்திரன்** — ஆ, இது யார்? நமது சத்தியகீர்த்தியேபோல் காண்கின்றது! மந்திரீ!

**சத்தியகீர்த்தி** — ஆம், அரசே! அடியேன் சத்தியகீர்த்தி.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, இதென்ன கோலம்! மந்திரீ நீர் ஏன் இங்கு வந்தீர்? நாட்டிலிருந்து, முனிவர்க்குச் சிரமந் தோற்றுமல் அரசை நடத்துவீர் என்றன்றே உம்மை அவ்விடத்தில் இருத்தி வந்தது. நீர் இவ்வாறும் வந்து விடல் தகுதியோ! அதனினும் உருமாறி, உடைமாறி வருவானேன்?

**சத்தியகீர்த்தி** — அரசே! இவ்வாறு வரவேண்டிய காலம் நேர்ந்தபோது என்ன செய்யலாம்!

**அரிச்சந்திரன்** — மந்திரீ! நீரும் துறவறம் பூண்டீரோ?

**சத்தியகீர்த்தி** — இல்லை, யரசே! முனிவர் அடியேனைத் துறவறம் பூணும்படி செய்தனர்.

**அரிச்சந்திரன்** — மந்திரீ! அம் முனிவரது நல்லுபதேசங் கொண்டு நீரும் துறவறம் எய்தினீரோ?

**சத்தியகீர்த்தி** — அரசே! முனிவர் தேவரீரை உண்மையாகத் துறவறம் அடைவித்தார். தம்மை யடுத்த அடியேனைப் போலியாகத் துறவறம் அடைவித்தனர்.

**அரிச்சந்திரன்** — நீரோ போலியாகத் துறந்தீர்? அதெப்படி?

**சத்தியகீர்த்தி** — அரசே! நடந்தவற்றை நவில்கின்றேன். தயைசெய்து கேட்டருள வேண்டும். தேவரீர் அயோத்தி நகரை அகன்ற பின்னர், முனிவர் அவ்விடத்திலிருந்த மற்றையோரிடத்தில் வெறுப்பும் வெஞ்சினமும் கொள்ளத் தொடங்கினர்.

**அரிச்சந்திரன்** — அவர்கள் அவ்வாறு என்ன செய்தார்கள்? மந்திரீ!

**சத்தியகீர்த்தி** — அவர்கள் யாதும் செய்தா ரில்லை யரசே! தங்களது பிரிவாற்றாமையால் அவர்கள் வருந்திக்கொண் டிருக்கின்றனர் என்பதே காரணம்.

**அரிச்சந்திரன்** — மற்றும் நடந்தது யாது?

**சத்தியகீர்த்தி** — முனிவர் அனைவர்மீதும் சீற்றங் கொண்டனர். அன்றித் தேவரீரைக் காணும்படி ஒருவரும் செல்லுதல் கூடாதெனவும், தேவரீருக்கு இம்மியும் உதவுதல் கூடாதெனவும், இவற்றை மீறி நடப்போர் நகரத்தினின்றும் அகற்றப்படுவதன்றி, அன்னார் பொருள் முற்றும் பறிமுதல் செய்யப்படும் எனவும், நகரத்தினின்றும் அகற்றப்பட்டோர் திரும்பவும் நகரவாசிகளாக வருவது தகாதெனவும், அனைவோரும் அறிய விளம்பரப்படுத்தினர். அதனையும் தமது சிஷ்யர் ஒருவரைக்கொண்டே நடத்தினர். பின்னர், அடியேன் தேவரீரைத் தரிசிக்க விரும்பி விடை யருளுமாறு வேண்டினேன். அதற்கு அம் முனிவர் பெருமான், அடியேனது சொத்துக்களே யன்றி, அணி யாடைகளையும் ஒப்பித்துச் செல்லுமாறு உருத்துக் கூறினர். அவ்வாறே செய்துவிட்டு இத் துறவறக் கோலத்தோடே ஈண்டு அடைந்தேன். இதுவே அடியேன் போலித் துறவு பூண்டமைக்குக் காரணமாகும்.

**அரிச்சந்திரன்** — மந்திரி! உமது மதியில் விளங்காத தன்று யாம் கூறுவது. முனிவர் நன்மையை நாடியே அவ்வாறு செய்தனர்போல் காண்கின்றது. எம்மீது பரிவுகூர்ந்து நகரவாசிகள் அனைவரும் எம்மோடு நகர்ந்து விடுவாராயின், அரசில் விரச மன்றோ உண்டாகும்? அதனை யுன்னி முனிவர் அவ்வாறு செய்திருக்கலாம். "மாசற்ற நெஞ்சுடையார் வன்சொல்லும் இனிது" என்பதும் இதுவே யாகுமன்றே. மற்றும் நீர் ஈண்டு வருவது அவருக்குச் சம்மத மில்லாமை ஒருவாறு ஏற்றதே. ராஜாங்கத்தில் தலைமை வகிக்கும் நீரே அவரது ஆணையைத் தட்டி நடத்தல் எவ்வாறு பொருந்தும்? ஆயினும், எம்மைக் காணவேண்டும் என்னும் விருப்பத்தினால் முனிவர் கூறியவை உமக்கு மாறாகப் பட்டனபோலும். விதி வலிது, விதி வழி மதி சேரும். நீரும் எம்மோடு இன்னலுற வேண்டும் என்பது இறைவ னருளாயின், அதனைத் தடுத்தல் எவ்வாறு இயலும். உம்முடைய பிரிவால் முனிவர்க்கு இடையூறில்லா தொழியினும், நகர மாந்தர் பெரிதும் இடர்ப்படுவரே என்று மனங் கவல்கின்றது. அதற்கு யாம் என்ன செய்வது. ஈண்டு அமரும், நம் சிறுவனை அருகில் இருத்திக்கொள்ளும்.

(மந்திரி அமர்ந்து சிறுவனை மடியில் அமர்த்திக் கொள்கிறான்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இது அழகாய் இருக்கின்றதா உனக்கு? பற்றற்று விளங்கிய பரமயோகியின் தலையில் பாரத்தைச் சுமத்திவிட்டு வேடிக்கை பார்ப்பதா? இந்த மந்திரியும் இப்படி வந்துவிட்டால், முனிவரே தம்மா லாகாதென்று அரசைத் திரும்ப அளித்துவிடட்டும் என்று இவ்வாறு செய்தனையோ? இது அநியாயம், அநியாயம்! நாமே கொடுத்தோம், தானே தரட்டும் என்பதோ கருத்து!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இப்போது இங்கு நடந்தவை யனைத்தையும் தாமே கேட்டருளினீர்கள். இதில், அடியேன்மீது ஏதேனும் குற்றமிருந்தாற் கூறுங்கள்.

**நட்சத்திரேசன்** — அம் மந்திரி வந்தது உனக்கு மனமில்லா திருந்தால், திரும்பவும் நாட்டிற்கு வரும்படி சொல்லியிருப்பா யன்றோ, வந்ததே போதும் என்று இருந்துவிட்டாயே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! சென்றவர் மறுபடியும் திரும்பி நகரத்துள் பிரவேசித்தல் கூடாதென்று முனிவர் விளம்பரஞ் செய்திருப்பதாகத் தெரிவதனுல், மறுபடியும் போகச் சொல்வது எவ்வாறு என்று வாளா இருந்தேனே யொழிய வேறன்று.

**சத்தியகீர்த்தி** — ஆம், ஆம். வந்தால் போவதென்பது எவ்வகையினும் கூடாமையே.

**நட்சத்திரேசன்** — அப்படியாயின் உங்களிஷ்டப்படியே யாகலாம். நாம் என்ன செய்வது. பொருள் பெறவேண்டுவது நமது காரியமே யன்றி, புத்தி கூறுவது நமது காரிய மன்று. பொழுதாகின்றது, நித்திரைக்குப் போவோம். (தனக்குத் தானே) ஐயோ கதியே, இதுவும் நமது விதியா! இம் மணலிற் படுக்க. பன்னசாலையி லிருந்தாலும் பனி தெரியா திருக்குமே.

(படுக்கின்றான்.)

## ஆறுங் களம்



**இடம்:** ஒரு சுரம்.

**காலம்:** நண் பகல்.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, நட்சத்திரேசன்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! பொழுது உச்சிக்கு வந்துவிட்டது. பதினைந்து நாழிகை யிருக்கும்போற் காண்கின்றது. ஆ, ஆ! என்ன வெய்யில்! சற்றும் சகிக்கக் கூடவில்லையே. எனக்கே

இப்படியானால், பாபம், உங்களுக்கு எப்படியிருக்கும்! கனல் வீசுகின்றதே! அரிச்சந்திர! இது ஒரு சுரம்போறக் காண்கின்றது. மணற் பரப்பில் மரமென்பது காணப்படவில்லை. சுழல் காற்று மணலைத் தூண்போல் எழுப்புகின்றது. இதனைக் காண்போர் கண்ணும், இதன் பெயரை நவில்வோர் நாவும் தீய்ந்துவிடும்போற காண்கின்றதே. ஆ, ஆ! இதைக் காணவும் சில கவிகள் என் ஞாபகத்தில் வருகின்றன.

கலித்துறை

விடத்தே ரிலைவெந்து கள்ளியுந் தீய்ந்து விட அரவின்
படத்தே நிழலுக்கு எலியொதுங் காநிற்கும் பாலையென்னும்
தடத்தே நடந்திடற் கஞ்சிய மேகமும் சந்திரனும்
துடித்தோடு வேர்வை மழைபனி யாமெனச் சொல்லுவரே.

ஆ, ஆ! பல்லாயிர வருடம் வரையில் மழை பெய்யா தொழிந்தாலும் வாட்டமென்பதைச் சற்றும் அறியாத விடத்தேரிலையும் வெந்து, கள்ளியுந் தீய்ந்துவிடப் பாம்பின் படத்து நிழலில் எலியானது அச்சமின்றி ஓடி ஒதுங்க விரும்பும் கொடுமையினையுடையது இந்தப் பாலை நிலம். உலகமுழுதுங் குளிரச்செய்யும் மேகமும் சந்திரனும் இந்த நிலத்தின் வழியாய்ச் செல்வதற் கஞ்சித் துடித்து ஓடினதனால் உண்டான வேர்வையையே மழை யென்றும் பனி யென்றும் உலகத்தவர் கூறுகின்றனர் எனக் கற்றோர் பாலைநிலத்தை வருணிப்பர். அதனை இங்கு நிதரிசனமாய்க் காண்கிறோமே. அதினும் இவ் வேனிற் காலத்தில் இந்தக் கடுஞ் சுரத்தில் நாம் வந்துவிட்டோம்.

விருத்தம்

மனிதர்வெங் கோடை தீர்க்கும் வசந்தமென் காலும் வேறு
துனிதவிர் இளங்கால் வேண்டும் சோலையும் சோலை வேண்டும்
புனிதநீர்த் தடமும் வேறோர் புதுமலர் ஓடை வேண்டும்
பனிதரு மதியும் வேறு பான்மதி வேண்டுங் காலம்.

என்ன கடுங் காலம் இவ் வேனிற் காலம்! இந்தக் காலத்தில் இவ் வெஞ்சுரத்தின் நடுவில் சிக்கிக்கொண்டோம். வயிற்றிலும் ஈரமில்லை. என்ன கஷ்டத்திற்கோ யான் உங்களோடு வர உடன்பட்டது. யார் பொருளை யார் கண்டார். அவர்தான் என்ன உன் கையிற் கொட்டிக் கொடுத்தது. புண்ணியத்திற்குக் கொடுத்தாய்; அதுவும் அவருக்கே சேர்ந்துவிட்டது. அவர் தொடு வழக்குப் பேசினால் நீயும் அச்சொல்லில் மயங்கிச் சிக்கிக்கொண்டனையே. ஒருவருடைய சொத்தை நீ

எடுத்துக் கொள்ளவில்லை. கையில் வைத்துக்கொண்டு இல்லை யென்றும் சொல்லவில்லை. இதையெல்லாம் யோசித்து, அப்போதே என்னிடத்தில் இல்லையென்று ஒழித்துவிடாமல், கொடுப்பதாக ஏற்றுக்கொண்டனையே. இப்போது இந்தத் துன்பங்களை யார் சகிப்பது. நான் படுவது ஒரு பாடாயின், நீங்கள் படுவதைப் பார்த்து வருந்துவது பெரும் பாடாக இருக்கின்றதே.

**சத்தியகீர்த்தி** — அரசே! நமது இளவரசர் இச் சுடுசுரத்தில் கால் வைக்க முடியாமல் தத்தளித்துத் தவிக்கின்றனர். சுருண்டு மடிந்து விழுவார்போற் காண்கின்றது. இனி இவரை நடக்க விடுதல் நன்றன்று.

"குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணுவர்"

என்பதற்கு நாமே இலக்காக இருக்கின்றோம்.

**சந்திரமதி** — என் கண்மணீ! தேவதாச! என்னடா வாடிவிட்டனை. இதோ வந்துவிட்டோம். இன்னும் சிறிது தூரம் சென்றால், நல்ல காய்கனிகளை யருந்தலாம், வருந்தாதே.

**சத்தியகீர்த்தி** — அரசே! தாங்களும் மெலிந்துவிட்டீர்கள். இனி, நம் இளவரசனை யான் எடுத்துக்கொண்டு நடக்கின்றேன்.

(எடுத்துக்கொள்கின்றான்.)

**அரிச்சந்திரன்** — (சந்திரமதியை நோக்கி) பெண்மணீ! என்ன, தவிக்கின்றாய். இதற்கே யன்றோ நின்னையும், நம் புதல்வனையும் நகரத்திலேயே தங்கும்படி கூறினேன். என்ன செய்வது, இனி உன்னால் நடத்தல் இயலாது. ஆதலால், யான் எனது தோள்மீது சுமந்து கொண்டுபோய், இச் சுரத்தைக் கடந்து அப்புறத்தே விடுகின்றேன்.

**சந்திரமதி** — ஆ, என் இன்னுயிர்த் தலைவ! என்ன கட்டளையிட்டீர்கள்!

கலிவிருத்தம்

பூமகளும் மண்மகளும் ஏறுதல் பொறாமல்
மாமுனிவ னுக்குற அளித்தநின் மணித்தோள்
நாமநெடு வேலிறைவ நாயினிகழ் பெண்பால்
ஆமெளியள் ஏறின்நர காழ்ந்தழிவ னன்றோ.

நாயக! தாங்கள் அருகி லுள்ள போது துன்பமும் தோற்றுமோ? ஏன் அடியாளை இவ்வாறு சோதிக்கின்றீர்கள்!

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! இந்த நற்குணம் உனக்கு இன்றே யன்று, என்றும் உண்டு. உன்னைச் சோதிப்ப தல்ல. நின் வாட்டத்தைக் கண்டு மனம் சகியாமையால் அவ்வாறு கூறினேன்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! அவரவர் துயரம் அவரவர்க்குப் பெரிது என்பர். அதுபோல் நீங்கள் ஒருவருக் கொருவர் வருந்துவதும், பரிதாபப் படுவதுமாக விருக்கின்றதே யன்றி, நம்மைக் கவனிப்பார் ஒருவரும் காணேம். நீங்களா பொருளைக் கொடுக்கப் போகின்றீர்கள். ஏது இவனுக ஓடிப் போகட்டும் என்று செய்கின்றீர்களோ! உண்மையாகச் செய்யாவிட்டாலும், ஓர் உபசார வார்த்தையாவது இல்லையா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! எல்லாந் தெரிந்த தாங்களே இவ்வாறு எண்ணங் கொண்டால், அடியேன் என்ன சொல்வது? மன்னிக்கவேண்டும்.

**நட்சத்திரேசன்** — நல்லது, நல்லது, செல்லுங்கள்; ஒருவாறு சுரத்தையும் கடந்தோம். சூரியனும் மறைந்தான். இனி இச் சோலையில் தங்குவோம். இப்போதாவது வயிற்றிற்கு ஏதேனும் உண்டா? இல்லையா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! மன்னித்துக் கொள்ளுங்கள். இதோ சென்று அதி சீக்கிரத்தில் நறுங் கனிகளைப் பறித்துக் கொண்டு வருகின்றேம்.

(சத்தியகீர்த்தியும், அரிச்சந்திரனும் கனிகளைத் தேடிக் கொண்டுவர, யாவரும் உண்டு உறங்குகின்றனர்.)

## ஏழாங் களம்



**இடம்:** கோமதி நதிக் கரை.

**காலம்:** நண் பகல்.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, நட்சத்திரேசன், சேதசன்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! நடுப்பக லாகின்றது. தேவரீர் மிகவும் வாடிவிட்டீர்கள். அனைவரையும் பசிப்பிணி வருத்துகின்றது. சமீபத்தில் ஏதேனும் நீரோடையும் நிழலும் இருந்தால், தங்கி யிருந்து, பின்பு செல்லலாம் என்று நினைக்கின்றேன்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இதோ சமீபத்தில் தோன்றும் சோலை கோமதி நதிக்கரையின் மீதே யுள்ளதாகும். அவ்விடத்தே தங்கி இளைப்பாறிப் பின்பு செல்லலாம்.

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! இந் நதி எவ்வளவு தூய்மையா யிருக்கின்றது. தண்ணீர் இருகரையிலும் புரண்டு ஓடுகின்றது!

விருத்தம்

புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடக்கும் நற்கோ மதியினைக் காணப் பெற்றோம்.

அரசே! தாங்கள் அனைவரும் இத் தருவின் நீழலில் தங்கியிருந்தால், அடியேன் சென்று கனிகளைத் தேடிக் கொண்டு வருகின்றேன்.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அவ்வாறே செய்யும். யாங்கள் சற்று இளைப்பாறுகின்றோம்.

(சத்தியகீர்த்தி கனிகள் கொண்டுவர, அவற்றை அனைவரும் உண்கின்றனர். சேதசன் தவக் கோலத்தோடு பாடிக்கொண்டு வருகின்றான்.)

**சேதசன்** —

வெண்பா

இல்லறத்தா னல்லேன் இயற்கைத் துறவியல்லேன்
நல்லறத்து ஞானியல்லே னாயினேன் — சொல்லறத்தின்
ஒன்றேனு மில்லேன் உயர்ந்தவருட் பேரொளியே
என்றே நான் ஈடேறு வேன்.

**அரிச்சந்திரன்** — (எதிர் சென்று வணங்கி)

விருத்தம்

கண்டிகை போற்றி நீறு காட்டிடுங் கோலம் போற்றி
குண்டலம் போற்றி காவிக் குடையொடு கரகம் போற்றி
தண்டமார் திருக்கை போற்றி சடைமுடி போற்றி செய்ய
மண்டிணி யாடை போற்றி மலரடி போற்றி போற்றி.

சுவாமீ! எழுந்தருள வேண்டும். சுவாமிகள் எங்கிருந்து எங்குச் செல்கின்றதோ, அருளவேண்டும்.

**சேதசன்** —

கலித்துறை

பொருளுடை யோரைச் செயலினும் வீரரைப் போர்க்களத்தும்
தெருளுடை யோரை முகத்தினுந் தேர்ந்து தெளிவதுபோல்
அருளுடை யோரைத் தவத்தில் குணத்தில் அருளில் அன்பில்
இருளறு சொல்லினுங் காணத் தகுங்கச்சி ஏகம்பனே.

என்றபடி, உனது இனிய சொல்லினாலேயே நீ பரம சாது வென்பது விளங்குகின்றது. அதனால்,

கலிவிருத்தம்

அன்ப வாழி யருந்தவ முற்றிநல்
இன்ப மெய்தி இரும் பிறவித் துயர்
வன்பு கொய்துமெய்ஞ் ஞான மருவியே
துன்பு தீர்ந்தருட் சோதியிற் சார்கவே.

அன்ப, யாம் ஒரு சந்நியாசி. அயோத்தியினின்று புறப்பட்டுக் காசி யாத்திரை செய்கின்றோம்.

**அரிச்சந்திரன்** — அயோத்தியினின்றா வருகின்றீர்கள். தங்கள் ஜன்ம தேசம் அயோத்தி தானோ?

**சேதசன்** — ஆம், அயோத்திக்கு அண்மையிலுள்ள ஒரு கிராமத்தில் சாதுசங்கத்தில் சாஸ்திர விசாரணை செய்துகொண்டிருப்பது.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அயோத்தியில் ஏதேனும் விசேடங்கள் உண்டோ?

**சேதசன்** — நம்மைப் பரதேசி யாக்கியதுதான் விசேடம்.

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! அதென்ன அவ்வாறு சொல்கின்றீர்கள்?

**சேதசன்** — என்ன அநியாயம்! என்ன கொடுங்கோன்மை! பாவம், அந்த அரிச்சந்திர மன்னன் குடிகளைத் தன் கண்ணேபோல் காத்துவந்தான். பின்பு, அவ் வரசை ஒரு முனிவருக்குக் கொடுத்துவிட்டான். அம் முனிவர் உடனே ஒரு விளம்பரம் வெளியிட்டார். ஆ, ஆ, அதைக் கேட்டதுமுதல் அந் நகரம் தத்தளிக்கின்றது. ஒருவரும் அரிச்சந்திர மன்னனைக் காணவும் படாதாம். காணச் செல்ல மனமுள்ளவர்கள் தமது சொத்துக்களை அம் முனிவருக்கு ஒப்பித்து, நகரை விட்டு அகன்று விட வேண்டுமாம். திரும்ப அந்நகரில் அடியெடுத்தும் வைக்கப்படாதாம். ஆ, ஆ! என்ன அநியாயம்.

**அரிச்சந்திரன்** — இதனால் தங்களுக் கென்ன? தாங்கள் முற்றுந் துறந்த தவசியே யன்றோ? வாழ்வும் தாழ்வும் தங்களுக்கு இல்லையே.

**சேதசன்** — ஐயா! எமக் கொன்று மில்லை. ஜனங்கள் தவிப்பதைக் காண மனம் சகிக்க வில்லை. அவர்கள் அம் முனிவரது அரசாட்சியில் அமைந்திருக்கச் சற்றும் மனமில்லா திருக்கின்றனர். சிலர், அவரிஷ்டப்படியே எல்லாம் துறந்தாயினும் தமது மன்னவனைக் காண விருப்பங் கொண்டிருக்கின்றனர்.

அதற்குள் மற்றொரு மஹா பாதகம் நடந்தது. அதனைக் காண-வும் மனம் பொறுமல், உடனே ஊரினின்றும் அகன்றுவிட்-டோம். அந்த அநியாயத்தைக் கூறவும் நா எழவில்லை.

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! அது யாதோ?

**சேதசன்** — அதுவா! அதனை என்னென்று கூறுவது. மனமார தன் அரசை மகிழ்வோடு அளித்த அம் மன்னவனோடு தொடர் வழக்கிட்டுக் காட்டிற்குத் தொலைத்துவிட்டார் அந்த முனி-வர். அதனோடும் அமையாமல், அந்தோ, அம் மன்னன் தாயார் — நரையும் திரையும் வாய்ந்த விருத்தை.

**அரிச்சந்திரன்** — ஆமாம், சுவாமீ! அந்தம்மாளுக்கு என்ன! சுக-மாய் இருக்கின்றனரோ?

**சேதசன்** — இருக்கிறாள், பாபம், பரலோகத்தில்.

**அரிச்சந்திரன்** — ஆ, அப்படியா? எப்போது சுவாமீ? பிறகு என்ன கதியாயிற்று? சற்று தயைசெய்து கூறுங்கள்.

**சேதசன்** — மூன்று தினங்களாகின்றன. ஐயோ, ஐயோ! தெய்-வமே! அம் மகா ராணியாருக்கு ஈமக்கடன் செய்வாரும் இல்-லாமல் போயினர். ஆ, ஆ! அது நெடுநேரம் அநாத பிரேத-மாக இருந்து, முடிவில் இரண்டு பறையர்கள் வந்து, கட்டிச் சுருட்டிக் கொண்டுபோய் தகனஞ்செய்தனர். சில புண்ணிய புருஷர்கள் நம் அரசியார் என்னும் பரிவினால் சஞ்சயனம் முதலியவற்றை முறையாகச் செய்ய ஒன்று கூடினர். அந்தோ! அம் முனிவர் அவர்களை யெல்லாம் அதட்டி யகற்றுவித்தது மன்றி, மீறி நடப்பவர்களைச் சிறையி லிடுவதாகவும் கட்டளை யிட்டார். என்ன செய்வார்கள்! அடடா என்ன பரிதாபம்! பாபம்! என்ன காலம்!

(சந்திரமதி தலைசாய்த்துக் கண்ணீர் உகுக்கின்றாள். சத்தியகீர்த்தி அங்கம் பதறுகின்றான். துக்கிப்பார் முகத்தைப் பார்த்து தேவதாசன் ஏங்குகின்றான்.)

**அரிச்சந்திரன்** — ஆ! தெய்வமே!

வெண்பா

ஐயிரண்டு திங்களா அங்கமெலாம் நொந்துபெற்றுப்
பையலென்ற போதே பரிந்தெடுத்துச்—செய்ய இரு
கைப்புறத்தி லேந்திக் கலசப்பால் தந்தாளை
எப்பிறப்பில் காண்பேன் இனி.

ஆ பரமேசா! இவ்வாறு அவல மரணமும் என் அன்னைக்கு நேரலாமோ! ஆ, அன்னாய்! பாவியேன் இருந்தும் என்ன

பயன்! எமக் கடன்களை முடிப்பதற்கும் யான் உதவாமற் போயினேனே! என்னையொத்த பாவியும் உலகில் உண்டோ! ஆ, என் அருமை யன்னாய்! என்னைக் கட்டி எடுத்து முத்த மிட்ட வாயினையும், உச்சிமோந்த நாசியையும், அன்புடன் பார்த்த கண்களையும், என் சொல்லைக் கேட்டு மகிழ்ந்த செவிகளையும், கட்டிலைப்போல் ஏந்திய கரங்களையும் எவ்வாறு மறப்பேன். இதற்கோ என்னைத் தவமுயன்று பெற்றனை! யாது மறியாத குழவிப் பருவத்தில், ஈ எறும்பு அணுகாமல் பாதுகாத்தது இதற்குத்தானோ? ஆ, ஆ! 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பதில் முதற் றெய்வத்திற்கே யான் பயன்படாமற் போனேனே! என் தீவினை இருந்தவாறு என்னே! ஆ, பரமேசா!

(பாடுகிறான்.)

எண்ணிலாத நெடுங்காலம் எண்ணிலாத பல பிறவி
எடுத்தே யிளைத்திங் கவைநீங்கி இம்மா னிடத்தில் வந்துதித்து
மண்ணின் வாழ்க்கை மெய்யாக மயங்கி யுழன்று லடியேனுன்
மாறாப் பெருமை தரும்பாத வனசத் துணையென் றடைவேனோ?

(சோகமுறுகின்றான். சேதசன் அதிசயித்தாற்போல் பார்க்கின்றான்.)

**சந்திரமதி** — தேவரீர் இவ்வாறும் வருந்தலாமோ! தாங்களே இவ்வாறு மனங் கவன்றால், யாங்கள் எவ்வாறு கலங்குவது. சென்றதை யுன்னிக் கன்றுவது எதற்கு! அமைந்திருங்கள்.

**சத்தியகீர்த்தி** — அரசே! உலகியல் தாங்கள் அறியாத தன்று. எல்லாம் தோன்றி மறைவனவே. வாழ்வோ சந்தையிற் கூட்டம், இதன் பொருட்டுக் கவல்வது எதற்கு. என்று பிறப்புண்டோ அன்றே இறப்பு முண்டு.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர ஆ, ஆ, ஆ! என்ன காலம். 'பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்' என்பார்கள். அதனை உன்னிடத்திலேயே காண்கின்றேன். தாயைத் தகனஞ்செய்ய உதவாத தநயன் நீயே யாயினை. என்ன பரிதாபம்! தாயே முதற் றெய்வம். தாயார் மகிழ நடப்பதே தநயன் கடமை. அவளுக்குச் செய்யுந் தொண்டே பெருந் தவம். தாயை விட்டுத் தவஞ்செய்யப் புறப்பட்டாயே, இதுவா தவம்! இனி எதையும் கருதுவதில் பயனில்லை. நீ உடனே அயோத்தியை யடைந்து, உன் தாய்க்குச் செய்யவேண்டிய உத்தரகிரியை முதலியவற்றையாவது முறையாகச் செய்து, அந்த ஆன்மாவிற்குத் திருப்தி செய்வதே நலம். உடனே புறப்படு, போகலாம்.

**அரிச்சந்திரன்** — அவரவர் வந்த வழியே அவரவர் செல்வர். அதன் பொருட்டு மற்றையோர் கவல்வது அறியாமையாம். சுவாமீ!

ஆதலால், முனிவர்க்கு மொழிந்த வாக்கின்படியே பொருளைச் செலுத்த முயல்வதே முதற் கடன். யாது வரினும் வருக. வாய்மையே வெற்றி யுடையது. ஆதலின், காசி நகரம் சென்று பொருள்தேட முயலவேண்டும். அவ்வாறின்றி அயோத்திக்குச் செல்ல எண்ணங்கொள்வது எவ்வாற்றானும் நன்றன்று.

**நட்சத்திரேசன்** — அப்படியாயின் உன் இஷ்டம். உள்ளதை யுரைத்தேன். கொள்ளுவதும் தள்ளுவதும் உன்னிஷ்டமே யன்றோ?

**சேதசன்** — ஓ, ஓ! இவர்தாம் அரிச்சந்திர மன்னர்போல் காண்கிறது. ஆ, ஆ! என்ன நிலை! என்ன பரிதாபம். பெற்றோர் இதம் பெறுவதற்கே புத்திரப் பேற்றையடைவது. சற்புத்திரன் தாய் தந்தையர்க்குப் புரியுந் தொண்டையே அருந்தவமாக எண்ணுகின்றான். செங்கோலரசனாக இருந்து, சகல சாஸ்திரங்களின் உட்கருத்தையும் உணர்ந்த நீரே தாய்க்குச் செய்யவேண்டிய கடமைகளைத் தவிர்த்து நடந்தால், மற்று யாவர் விதிவிலக்குகளை உணர்ந்து நடப்பவர். அந்தோ! அநாத பிரேதத்தைச் சம்ஸ்காரம் செய்பவருக்கே கர்ம காண்டத்தில் மகா புண்ணியம் சொல்லப்பட்டிருக்கிறது. மற்றும் தாய் தந்தையர்க்குச் செய்வதனால் உண்டாகும் பயன்களைச் சொல்லி முடியுமோ. விதிப்படி பார்த்தால் தநயன் தாய் தந்தையரை வயோதிக பருவத்தில் விட்டுப் பிரிதலே தகாது. அருகிலிருந்து வேண்டிய உபசாரங்களை மகிழ்வுடன் புரிந்து, சரமதசையில் ஆன்மாவுக்குத் திருப்தி செய்ய வேண்டும். உங்கள் காலமலன் ஏதோ அவ்வாறு செய்வதற்கு இயலாமற் போயிற்று. ஆயினும், பத்துத் தினங்களுக்குள் தகனஞ் செய்யப்பட்ட ஸ்தானத்தை யடைந்து, கர்ம கிரியைகளை முடித்தாலும் அந்த ஆன்மா சுகிர்த மடையும். இல்லாவிடில் என்ன பயன். புத்திரன் என்னும் பெயர் உனக்கு எவ்வாறு பொருந்தும். பிதுர்க்கடன்களை முடித்துப் பெற்றோரைப் புத் என்னும் நரகத்தை யடையாமற் செய்வதனாலன்றோ புத்திரன் எனப் பெயர் பெறுகின்றான். அதனைச் செய்யாதொழிந்தால் அப்புத்திரன் எதற்கு. அன்றியும் தாய் தந்தையர்க்குச் செய்யவேண்டிய கடன்களைத் தப்பி நடக்கும் தநயன் ரௌரவாதி நரகங்களை யடைவான் என்று சாஸ்திரம் விதிக்கின்றது. ஆதலால் காலதாமத மின்றிப் புறப்படுவதே நலம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேனுடைய நிலை தங்களுக்குத் தெரிந்திருக்கலாம். இன்றேல், கேள்விப்பட்டாவது இருக்கலாம்.

என்ன செய்வது, யாவும் தெய்வச் செயலின்படியே முடியும். அடியேன் சாஸ்திர விரோதியன்று. யான் திரும்பி அயோத்தியை அடைவது எவ்வாற்றானும் ஏற்காது. கங்கையாதி மஹா தீர்த்தங்களில் பிதுர்க்கடன்களைச் செய்வதே சிறப்பென்று தேவரீரை யொத்த தவசிகள் திருவாய் மலர்ந்தருளக் கேட்டிருக்கின்றேன். அதனா லன்றோ கயை முதலிய இடங்களில் தன் ஆன்மாவின் பொருட்டும் ஸ்ரார்த்தம் செய்கின்றனர். ஆகையால், அடியேனும் அவ்வாறே என் தாயார்க்கும் கங்கையில் செய்து முடிக்க எண்ணுகின்றேன். தேவரீர் கூறியவற்றை மறுத்துரைப்பதற்கு மன்னிக்கவேண்டும்.

**சேதசன்** — (தனியே நட்சத்திரேசனைச் சந்தித்து) நட்சத்திரேசரே! என்ன இப்படி யிருக்கின்றதே! நீர் என்ன செய்தீர்?

**நட்சத்திரேசன்** — சேதச! தாயார் மரணத்திற்கே மனம் சலியாத போது, மற்றும் எதற்குத்தான் சலிக்கப் போகிறான். அவர்களுடைய மன வலிமை தவசிகளுக்கும் உண்டாவது அருமை. என்ன செய்யலாம். என்னால் கூடியவரையில் பார்க்கிறேன். நீ போய் முனிவருக்கு எனது நிலைமையைச் சொல்லு.

**சேதசன்** — சரி, இருக்கட்டும். இன்னும் எத்தனை பரீக்ஷைகள் இருக்கின்றன, பார்ப்போம்.

(போகின்றான்.)

~~~~~~~~~~~~~~~

## எட்டாங் களம்



**இடம்:** கங்கைக் கரையை யடுத்த ஒரு சோலை.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, நட்சத்திரேசன், வைகானசன், வசிதரன், சாரங்கன்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! ஏது பின்னிடுகின்றாய்! கால்கள் உளைக்கின்றனவோ? இதோ வந்துவிட்டோம். இனி இந்தச் சோலையில் தங்கி இளைப்பாறுவோம், வருந்தாதே.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! வேளைக்குப் புசிப்புக் கொடுக்க வேண்டுமே என்பதை நீ எண்ணுவ தில்லையோ. நீங்கள் எப்படித்தான் இருக்கின்றீர்களோ!
~~~~~~~~~~~~~~~

வெண்பா

மானம் குலம் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம் உயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேல் காமுறுதல் பத்தும்
பசி வந்திடப் பறந்து போம்

என்பார்கள். உங்களிடத்தில் அது காணோமே. என்னால் முடியாது முடியாது, இனி நகரவும் முடியாது.

**சத்தியகீர்த்தி** — இதோ வந்துவிட்டோம் சுவாமி. இனி இந்தச் சோலையில் தங்கலாம். அதி சீக்கிரத்தில் கொண்டு வருகின்றோம் புசிப்பிற்கு.

(யாவரும் சோலையில் அமர்கின்றனர். சத்தியகீர்த்தி கனிகளைக் கொண்டு வர,)

**அரிச்சந்திரன்** — சத்தியகீர்த்தி! நல்ல கனிகளை நமது முனிவர்க்குக் கொடும். மற்றையவற்றை நாம் புசிப்போம்.

(உண்கின்றனர். வைகானசன், வசிஷ்ரன், சாரங்கன் மூவரும் போர் வீரர் கோலங்கொண்டு ஒரு மரத்தடியில் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.)

**அரிச்சந்திரன்** — சத்தியகீர்த்தி! அம்மரத்தடியில் அமர்ந்திருப்பவர் யாவர்? போர் வீரர்போற் காண்கின்றது.

**சத்தியகீர்த்தி** — ஆம் அரசே! விசாரிக்கின்றேன். (போர் வீரரை யணுகி) ஐயன்மீர்! நீங்கள் யார்? எங்கே போகின்றீர்கள்?

**போர்வீரர்** — ஐயா! நாங்கள் கன்னமாபுரியின் போர்வீரர்கள். இப்படித் தேசாந்தரம் போகின்றோம்.

**சத்தியகீர்த்தி** — போர்வீரர்கள் ஏன் தேசாந்தரம் போகவேண்டும்? போர்வீரரது உடையோடு இருப்பதன்றி, போர்க்களத்தில் சண்டை செய்து, உடைகளில் இரத்தக் கறையும் காண வருகின்றீர்களே, நீங்கள் தேசாந்தரம் போவது யாது காரணம்?

**போர்வீரர்** — காரணமா கேட்கின்றீர்கள்! என்ன காரணத்தை எடுத்துரைப்போம்.

(சந்திரமதியும் அரிச்சந்திரனும் வியப்புடன் பார்க்கின்றார்கள்.)

**சத்தியகீர்த்தி** — என்ன அவ்வாறு கூறுகின்றீர்கள்? உங்கள் நகரத்தில் என்ன விசேஷம்? மன்னர் ஏதேனும் அநியாயம் புரிந்தாரோ?

**போர்வீரர்**—அரசர் ஏன் அநியாயம் புரிகின்றார். ஐயோ! எங்கள் ஆண்டவனைப்போல் இன்னும் எந்தக் காலத்தில் ஒருவரைக் காணப்போகின்றோம்!

**சந்திரமதி** — ஆ என்ன செய்வது; பிராண நாதா! என்ன விஷயம் என்று விசாரியுங்கள்.

(கலங்குகின்றாள்.)

**அரிச்சந்திரன்** — ஐயா! என்ன நடந்தது? அதைச் சற்று விவரமாய்க் கூறுங்கள்.

**போர்வீரர்**—ஐயோ! என்ன சொல்வோம். வேற்றரசன் ஒருவன் கன்னமா புரியின்மேல் படையெடுத்து வந்து, அரசர் நிராயுதராயிருந்த காலத்தே அதர்ம யுத்தஞ் செய்து முடிவில் அவனே வெற்றி யடைந்தான்.

**சந்திரமதி** — ஆ, தெய்வமே! என்ன காலம்? இப்படியும் சோதிக்கலாமா, தெய்வமே!

(அரிச்சந்திரன் தலை வணங்கிக் கலங்குகின்றான். சத்தியகீர்த்தி தேவதாசனை யணைத்துத் துக்கிக்கின்றான்.)

**நட்சத்திரேசன்** — அதன் பிறகு என்ன நடந்தது? ஒளியாமல் உரையுங்கள். பாவம் அவர்கள் கலங்குகின்றார்களே.

**போர்வீரர்** — ஐயோ! இதென்ன? இவர்கள் யார்? ஏன் இவர்கள் கலங்கவேண்டும்?

**நட்சத்திரேசன்** — இவர்கள் அந்த அரசருக்கு உரிய பந்துக்கள். இந்த அம்மாள் அவரது புத்திரி.

**போர்வீரர்** — ஆ, ஆ, எங்கள் சந்திரமதி யரசியாரா, இந்தம்மாள்!

**நட்சத்திரேசன்** — ஆமாம், ஆமாம்.

**போர்வீரர்** — (கலக்கத்தோடு) எங்க ளம்மணீ! என்ன செய்வோம். ஐயோ! வெற்றிகொண்ட அப் பாவி எங்க ளரசரையும், அரசியையும் சிறையிலிட்டு, அன்னபானுதிகள் அளிக்காமல், பூட்டி வைத்தான். அவர்கள் தண்ணீர் தண்ணீர் என்று கத்திக் கதறி துடித்து உயிர் விட்டார்கள் அம்மணீ!

**சந்திரமதி** — ஆ, ஆ, தெய்வமே! இந்தக் காலக்கேடும் உண்டோ உலகத்தில்! என் மாமியாரோ திக்கற்ற பிணமாயினர். என் தாய் தந்தையரும் இக் கதி யடைந்தார்களே! இனி இதனினும் துக்கம் ஒன்று உண்டா! ஆ, ஆ! யாங்கள் யாருக்கு என்ன தீங்கு இழைத்தோமோ! இக் காலத்தில் எங்கள் மனமார ஒரு சிறு தீங்கும் புரியவில்லையே. ஆ, தெய்வமே! இப்படியும் சோதிக்கலாமா!

(மண்ணிற் சாய்கின்றாள்.)

**அரிச்சந்திரன்** — (சந்திரமதியை எடுத்துத் தேற்றி) பெண்மணீ, சந்திரமதி! இவ் வுலகமோ ஒரு நாடக மேடை. நாமெல்லோரும்

நாடகப் பாத்திரங்கள். அவரவர் வினை முடிந்ததும் அவரவர் செல்லுவர். நம்மால் என்ன ஆகும். விதியின் கையில் நாம் சூத்திரப் பாவைகள். அவ்விதி நம்மை எவ்விதத்திலும் ஆட்டலாம். பெண்மணீ! மனம் வருந்தாதே நமக்கும் அதுவே வழி.

**போர்வீரர்**—ஐயா! எனது அரசர் உயிர்விடுந் தருணத்தில் எங்களையழைத்து, தங்கள் மரணத்தை அரிச்சந்திர மகாராசருக்கு அறிவித்து, படை எடுத்துவந்து அப்பாதகனை வென்று, பழிக்குப்பழி வாங்கும்படி சொல்லியபின் உயிர் துறந்தனர். யாங்களே அருகிலிருந்தவர்கள். ஆதலால், அதனை அறிவிக்க அயோத்திக்குச் சென்றோம். அங்கு இம் மன்னர் தம் அரசை யாரோ ஒரு முனிவருக்குக் கொடுத்துவிட்டுக் காட்டுக்குச் சென்றார் எனக் கேள்விப்பட்டோம். இம் மன்னரது தாயார், புத்திர சோகத்தினால் உயிர்விட, அப் பிரேதத்தை எடுத்து ஈமக்கடன்களைச் செய்பவும் திக்கின்றி, முடிவில் இரண்டு புலையர்கள் கொண்டுபோய் தகனஞ் செய்தனரென்றும் அறிந்தோம். அவ்வூரார் இவ் விஷயங்களையும் அம்முனிவர் செய்யும் அநியாயங்களையும் சொல்லிச் சொல்லிக் கதறுகின்றார்கள். 'உறிர்ச் சுற்றின்மேல் உலக்கை விழுந்ததுபோல்' இந்தச் செய்தியைக் கேட்டு, அங்கு நிற்கவும் மனமின்றித் திரும்பி, காசியைக் காண விரும்பி, விரைந்து வந்தோம். கடவுளருளால் உங்களை இங்கே கண்டோம். நடந்த விஷயங்களை உங்களுக்கு அறிவித்தோம் என்னும் திருப்தி ஒன்று இப்போது எங்கள் மனத்திற்கு ஏற்பட்டது. இனி நாங்கள் என்ன செய்வது?

(அனைவரும் விசனிக்கின்றனர்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இடர் வந்த காலத்தில் இன்னலுறுவது அறிவுடைமைக்கு அழகன்று. அக் காலத்தில் மனச் சோர்வு கொள்ளாமல், திடங்கொண்டு, தக்கது புரிதலே அறிவுடையார் கடமை. அதை விட்டு நீயும் பெண்பாலோடு விசனிப்பது வீண். அரிச்சந்திர! யான் ஒன்று கூறுகின்றேன், அதனை நீ கைக்கொண்டு நடந்தால் நலமாகும்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அது யாதோ? அருள்புரியவேண்டும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! யான் ஏதோ கூறுகின்றேன் என்று பராமுகங் கொள்ளாதே. உனக்குற்ற துன்பத்தைக் கண்டு மனம் தாளாமல் இதனைக் கூறுகின்றேன். பொய், களவு, கொலை முதலியவை சாமானியருக்குள் நடந்தால்மட்டும்

இழிவாக எண்ணப்படுகின்றன. ராஜாங்கத்தில் பொய்யும், களவும், கொலையும் பிறவும் இல்லை. அதேன் என்று மயங்காதை. யான் கூறுங் கருத்தைக் கவனி. அதன் உண்மைப் பொருளை உய்த்துணர்ந்து பார். ஒருவன் மற்றொருவனைக் கொன்றால், அரசன் முன்னிலையில் அவன் குற்றவாளியாகித் தண்டிக்கப்படுகின்றான். ஓர் அரசன் காரணம் ஒரு சிறிதுமின்றி, மற்றோர் அரசன்மீது படை எடுத்துப்போய், பல்லாயிரம் உயிர்களைக் கொலைபுரிந்து விட்டு, வெற்றி யடைந்ததாகக் கொடி பிடிக்கின்றான். அவனைத் தண்டிப்பார் ஒருவரும் இல்லை. அதுபோல் ஒருவன் பொருளை மற்றொருவன் கவர்ந்தால், அவன் களவு செய்தான் என்று அரசனால் சிறைப் படுத்தப் படுகின்றான். ஓரரசன் தன் ஆசையே காரணமாக மற்றொரு நாட்டிற் புகுந்து, கொள்ளையடித்து, அதனைத் தனக்கு வெற்றியாகக்கொண்டு களிக்கின்றான். அதுபோலவே ஒருவன் உள்ளதை இல்லை யென்றாவது, இல்லதை உள்ளதென்றாவது உரைப்பானாயின், அது பொய்யாகக் கொள்ளப்படுகின்றது. ஓர் அரசன் மற்றோர் அரசனிடத்தாயினும் குடிகளிடத்தாயினும் வஞ்சக எண்ணத்துடன் எத்தனை பொய் புரட்டுகளைப் புகன்றாலும் அவை ராஜதந்திரங்கள் எனப் புகழப்பட்டு, உடம்பாடாகக் கொள்ளப்படுகின்றன. ஆதலால், எதற்கும் அதனுண்டாகும் இடத்தை நோக்கியே மதிப்பும் இழிவும் ஏற்படுகின்றன. இவ் விஷயங்களை யோசிக்குங்கால், இப்போது உன்னுடைய அரசை முனிவர் வெற்றியால் அடையவில்லை. நீயே தத்தஞ் செய்தாய். அதுவும் அவர் உன்னைவிடப் பதின்மடங்கு நன்றாய் அரசு புரிவார் என்னும் நோக்கங்கொண்டு செய்தனை. அவரோ செய்வதெல்லாம் அநீதியா யிருப்பதாக நாம் பலர் கூறக் கேள்விப்பட்டோம். ஆதலால், முன்போல் நீ உன்னுடைய நாட்டை ஏன் அடைதல் கூடாது?

**அரிச்சந்திரன்**— ஒரு முறை கொடுத்துவிட்டதை மறுபடி எவ்வாறு பெறுவது? சுவாமீ!

**நட்சத்திரேசன்** — பெறுவதற்கா வழியில்லை. ஒரே சூழ்ச்சி சொல்கிறேன். நானே அதைச் சொல்லுதல் கூடாது. எனினும், உன் நிலைமையையும், நகரமாந்தர் அடையும் துன்பத்தையும் உன்னிக் கூறுதற்குத் துணிந்தேன். அது என்ன என்றால்— "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்னும் நீதியை நீ யறிவை யன்றே. ஒரு நாட்டைக் காக்க ஒரு நகரத்தை யழிக்கலாம். ஒரு நகரத்தைக் காக்க ஒரு கிராமத்தை அழிக்கலாம். ஒரு

கிராமத்தைக் காக்க ஒரு வீட்டை யழிக்கலாம் என நீதிநூல் கூறுகின்றது. அதனால் முன்பு முனிவர்க்கு அளித்த நாட்டை 'அளித்த தில்லை' என்று கூறினால், அம் முனிவரை நகர மாந்தரே ஓட்டிவிடுவர். உன்மீதும் பழி ஏற்படாது. இதனால் நாட்டுக்கு விளையும் நன்மையை நாடிப்பார். இது ஒன்றே நேரிய வழி.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! மேற்கண்ட முறைகள் நமது கருத்தில் குற்றமாகா தொழியினும், தெய்வத்தின் முன்னிலையில் பெருங் குற்றங்களேயாம்! எது எப்படியாயினும் நாம் அற நெறியைக் கைவிட லாகாது.

தேவாரம்

வாழ்வாவது மாயம்இது மண்ணாவது திண்ணம்
பாழ்போவது பிறவிக்கடல் பசிநோய்செய்த பறிதான்
தாழாதறஞ் செய்ம்மின் தடங்கண்ணான் மலரோனும்
கீழ்மேலுற நின்றான் திருக் கேதாரமெனீரே.

ஆதலால், இவ்வுலக இன்பத்தை விரும்பி, ஆன்ம வின்பத்தைத் துறத்தல் அறியாமையும் பழியும் பாவமும் ஆகும். முனிவர் நம் பொருட்டாகச் சில விளம்பரங்களை வெளியிட்டிருப்பினும், குடிகளுக்கு யாதொரு குறையும் புரியார். அவர் தன்னுயிரேபோல் மன்னுயிரை யுன்னுந் தயாநிதி. ஆதலின், குடிகள் பொருட்டு மனமிரங்கி நாம் இப் பெருங் குற்றத்திற்கு ஆளாவது ஏற்றதன்று. எது எப்படியாயினும், நாம் முனிவர் கடனைத் தீர்க்க முயல்வதே முறையாகும். இனிப் பொழுதாகின்றது, செல்வோம், சுவாமீ!

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! யான் கூறுவதைச் சற்றுங் கவனித்தாயில்லை. இன்னமொன்று உரைக்கின்றேன் கேள். உனது மாதுலர் உயிர்விடுங் காலத்தே உனக்கு உணர்த்தும்படி சொல்லியதை நீ யறிவை யன்றே. இறந்தவர் வார்த்தையை ஏற்றமாகக் கொள்ளவேண்டும். அதனை இகழ்ச்சி செய்யவொண்ணாது. இகழ்வது பெரும் பாதகமாகும். அதன் பொருட்டாயினும் நான் கூறியபடி செய்வாய். யான் உன் நிலைமைக்கு இரங்கிக் கூறுகின்றேன் என்பதைச் சற்றும் எண்ணுகின்றா யில்லையே.

**சந்திரமதி** — பிராண நாதா! எது எவ்வாறாயினும் நாம் சத்தியம் தவறலாகாது. போனவர் போயினர். அவர் பொருட்டு இருப்பவர் தீங்கிழைக்க எண்ணுவது இயல்பன்று.

வெண்பா

ஆண்டாண்டு தோறும் அழுது புரண்டாலும்
மாண்டார் வருவரோ மாநிலத்தீர் — வேண்டா
நமக்கும் அதுவழியே நாம்போ மளவும்
எமக்கென்னென் றிட்டுண் டிரும்

என்பது சத்திய பிரமாணமே யன்றோ.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தேவரீர் எமது நிலைமைக்கு இரங்குவதைக் கண்டு பன்முறை வந்தனம் புரிகின்றோம். ஆயினும், நன்னெறியினின்றும் விலகுவது அறிவுடையோர் செய்கையாகாது. எனது மாதுலர் யான் அயோத்தியில் அரசுரிமை செய்கின்றேன் என்னுங் கருத்தினால் அவ்வாறு கூறினர். என்னரசை முனிவருக்கு அளித்தேன் என்பதை உணர்ந்திருப்பின், அவ்வாறு புகன்றிருப்பாரோ. இரார், இரார். ஆதலின், அவர் கூறியதன் பொருட்டு நாம் தீமைக்கு உள்ளாக வேண்டுவதில்லை. சுவாமீ! தேவரீர் எம்மீது கொண்ட இரக்கத்திற் கிலக்காக மனங்கொண்டு, காசி மாநகரம் சேரும் வரையில் மன்னித்தருளினால், எந்த விதத்திலாயினும் முனிவருக்கு மொழிந்தவாறே அவர் பொருளை அளித்து விடுகின்றேன். தயை செய்யவேண்டும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! ராஜாங்கத்தில் நிகழக்கூடிய நீதிகளை ஓதினேன். இஷ்ட மில்லையேல் விட்டுவிடு. நீ விரும்பியவாறே போவோம்.

(அனைவரும் செல்கின்றனர்.)

## ஒன்பதாங் களம்



**இடம்:** சோணமா நதிக்கரை.

**காலம்:** நடுப்பகல்.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, சோசியர்.

**சத்தியகீர்த்தி** — அரசே! இதோ சோணமா நதி தோன்றுகின்றது. முனிவரது இனிய அருளினால் புண்ணிய தீர்த்தங்கள் பலவற்றைத் தரிசிக்கவும், அவற்றில் படிந்து வினைகளைப் போக்கிக் கொள்ளவும் பாத்திரராயினோம். இன்று இந் நதி தீரத்தில் தங்கிப் போகலாம் என்று எண்ணுகின்றேன்.

**அரிச்சந்திரன்** — சத்தியகீர்த்தி, அவ்வாறே செய்வோம். தெளிந்த யோகியரும் தீர்த்த யாத்திரையை நாடுவர். அது நமக்கு எளிதில் கிடைத்தமை நாம் புரிந்த பெருந்தவமே யாகும். இவ்விதத்திலாயினும் நம் வினையைக் கழுவித் தூய்மையை யடைவோம். (நட்சத்திரேசனை நோக்கி) சுவாமீ! இன்று இச் சோணமா நதிக்கரையில் தங்கி, இப் புண்ணிய நதியில் நீராடிச் செல்ல நினைக்கின்றோம். தேவரீரது திருவுளம் யாதோ? வெளியிடல் வேண்டும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! காலதாமதஞ் செய்வதனால், உனக்கு நஷ்டமே யன்றி, எனக்கு ஒன்று மில்லை. எவ்விடத்தி லிருப்பதும் எனக்கு ஒன்றே. உணவுமாத்திரம் தளராமல் வேண்டும். முன்பு அதற்கு வழி தேடுங்கள். பின்பு உங்கள் ஆடல் பாடல்கள் இஷ்டம்போல் ஆகலாம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! உணவுக்கு ஒருபோதும் தடை யுண்டாகாது. யாங்கள் சென்று நறுங் கனிகளை நாடிப் பறித்துக்கொண்டு அதி சீக்கிரத்தில் வருகின்றோம்.

(போகின்றனர்.)

(அரிச்சந்திரனும், சத்தியகீர்த்தியும் முன்பு வந்து நட்சத்திரேசனிடம் சேர்கின்றனர். சந்திரமதி சிறிது தூரத்தி லிருந்துகொண்டு கனிகளைத் தேவதாசனுக்கு ஊட்டுகின்றாள்.)

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! இதோ கொண்டுவந்தோம் கனிகள். தயவு செய்து, நல்ல கனிகளைப் புசித்தருளுங்கள்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இது மிகக் கனிந்திருப்பதாய்க் காண்கின்றது பாருங்கள். (சத்தியகீர்த்தியை நோக்கி) சத்தியகீர்த்தி! நமது குழந்தை எங்கே சென்றான்?

**சத்தியகீர்த்தி** — இளவரசரும் அரசியாரும், அதோ இருக்கின்றார்கள். அரசியார் அவருக்குக் கனிகளை உண்பிக்கின்றனர்

**அரிச்சந்திரன்** — சரி, அப்படித்தான் சில கனிகளை யுண்பிக்கட்டும்.

(சோசியர் வருகின்றார்.)

**சோசியர்** — ஐயா! நீங்கள் காசிக்குச் செல்கின்றீர்களோ?

**சத்தியகீர்த்தி** — ஆம் ஐயா, யாங்கள் காசிக்குச் செல்வது தங்களுக்கு எவ்வாறு தெரியும்?

**சோசியர்** — நமக்கு சோசியம் கைகண்ட பொருள். எதையுங் கண்டதுபோல் கூறுவோம்.

**சத்தியகீர்த்தி** — அப்படியா, வெகு சந்தோஷம். தாங்கள் கையாடுவது எந்த சாஸ்திரமோ?

**சோசியர்** — (சிரிப்புடன்) ஆ, ஆ, ஆ, சாஸ்திரமா! நாம் பால்யம் முதல், சுகர் பெருநாடி, சுகர் சிறுநாடி, கந்தர் நாடி, சப்தரிஷி வாக்கியம், நந்தி வாக்கியம், கயமுனி வாக்கியம், கந்த ராரூடம், புலிப்பாணி சோதிடம், காக்கையர் சோதிடம், அகஸ்தியர் பஞ்சபட்சி, உரோமரிஷி பஞ்சபட்சி, பராசரீயம், சந்திரகாவியம், ஜெயமுனி சூத்திரம், புஜண்டர் நாடி, ஜாதக சூடாமணி, துய்ய கேரளம், மணிகண்ட கேரளம், மாணகண்டி சோதிடம், ஜாதக கணிதாமிருதம், சுந்தர சேகரம், குமார சாமீயம், வசிஷ்டர் உபநிடதம், போகர் சிந்தாமணி,' கமலமுனி சூத்திரம், மார்க்கண்டேயர் உபவாக்கியம், ஜாதக அலங்கார உபநிஷதம் முதலிய பலகோடி கிரந்தங்களைப் பார்த்துப் பார்த்து ஒதுக்கிவிட்டோம்.

**சத்தியகீர்த்தி** — ஆ, ஆ, அப்படியா! இப்போது கொஞ்சம் ஜாதகம் பார்க்கக் கூடுமோ?

**சோசியர்** — ஆ, ஆ, அதற்கென்ன, பார்க்கலாம். ஆனால், இப்போது மிகுதியும் பசியா யிருக்கிறது.

**அரிச்சந்திரன்** — அப்படியானால் இக் கனிகளில் சிறிது உண்டு பசியாறலாமே. (கொடுக்கின்றான். சோசியர் தின்றுகொண்டே)

**சோசியர்** — யாருடைய ஜாதகம்? ஜாதகம் இங்கு இருக்கிறதோ?

**அரிச்சந்திரன்** — நமது சிறுவனது ஜாதகந்தான். ஜாதகம் இவ்விடத்தில் இல்லை. பிறந்த நாள் முதலியவை ஞாபகமுண்டு.

**சோசியர்** — ஓ, போதும், போதும், அதுவே போதும். அறுபது வருடங்களுக்கு வேண்டுமாயினும் அரை க்ஷணத்தில் பஞ்சாங்கம் கணித்துவிடலாம். அது பெரிய காரியமல்ல. ஆனால், சிறுவன் பிறந்த நாளைச் சொல்லுங்கள்.

**சத்தியகீர்த்தி** — துர்முகி வருஷம், தைமீ, பூர்வ பக்ஷம், நவமி திதி, பரணி நட்சத்திரம், கடக லக்கினம், $26\frac{1}{2}$ நாழிகை.

**சோசியர்** — சரி, சரி. இதோ சக்கரம் போட்டுக்கொள்கின்றேன். (சற்று மேல் நோக்கி,) ஊம்—ஊம் ஐந்தாம் தேதியோ, சரி குழந்தைக்கு எட்டு வயது ஆயிற்று?

**அரிச்சந்திரன்**—ஆம், சரியாக எட்டுத்தான் தேதி சொல்ல மறந்தோம்.

**சோசியர்** — சோசியம் சரியா யில்லாமற் போகுமா; எல்லாம் கணிதந்தானே.

**அரிச்சந்திரன்** — ஆமாம், அதற்கென்ன தடை. இந்த ஜாதகத்தைச் சற்றுக் கவனமாய்ப் பாருங்கள்.

| | | | |
|---|---|---|---|
| | சந்திரன் | கேது | |
| | இராசி சக்கரம் | | லக்கினம் குரு |
| சூரியன் அங்காரகன் சனி | | | |
| புதன் | சுக்கிரன் இராகு | | |

**சோசியர்** — அப்படியே. முதலில், இந்த ஜாதகத்திற்குக் கிரகநிலை சொல்லுகிறேம். சற்றுக் கவனித்துக் கேட்கவேண்டும்.

சஷ்டம பாக்கியாதிபதியாகிய பிரகஸ்பதி லக்கினத்தில் உச்சம் பெற்று இருக்கிறார்.

பவ சுகாதிபதியும் களத்திர காரகனுமாகிய சுக்கிரன் பஞ்சம கோணத்தில் நீசனுகிய ராகுவுடன் சம்பந்தப் பட்டிருக்கிறார்.

திரிதீய விரயாதிபதியாகிய புதன் ஆருமிடமாகிய தனுசில் தங்கியிருக்கிறார். இராகு பஞ்சமத்தில் இருக்கிறார்.

தன குடும்ப வாக்கு ஸ்தானுதிபதியாகிய சூரியனும், பஞ்சம தர்ம கர்மாதிபதியாகிய அங்காரகனும் உச்சம் பெற்று குருவைப் பார்க்கிறார்கள்.

சப்தமத்தில், தன வாக்குக் குடும்ப சம்பந்தப்பட்ட பிதுர் காரகனுகிய சூரியனேடும், கர்ம பஞ்சமாதிபதியாகிய சகோதர காரகனுகிய உச்ச செவ்வாயோடும் ஆயுள் காரகனுகிய சனிபகவான் சப்தமத்திலிருந்து லக்கினத்தைப் பார்க்கிறார்.

லக்கினுதிபதியாகிய சந்திரன் தத் ஸ்தானத்திற்கு கர்ம ஸ்தானமாகிய மேஷத்தை யடைந்து, அந்த ஸ்தானுதிபதி-

யாகிய அங்காரகனுல் சூரிய சம்பந்தத்துடன் பார்க்கப்படுகின்றான்.

பதினொன்று மிடமாகிய ரிஷபத்தில் கேது பகவான் வீற்றிருக்கிறார்.

இதற்குக் கால பலன் என்ன வென்றால்:—

ஒன்பது ஆறுக்குடையவன் லக்கின மேறியபடியால் கிரீடாதிபத்தியத்தை யடையவேண்டிய ஸ்தானத்தில் இந்த ஜாதகன் பிறந்திருக்கவேண்டும்.

சுகவித்யா வாகன மாதிரு பூஸ்தானத்திற் குடையவனும் கர்மஸ்தானத்திற்கு சப்தம தனாதிபதியாகிய சுக்கிரன், லக்கினாதிபதியும் கர்மஸ்தானத்தில் நிற்கும் சந்திரனுக்கு எட்டிலிருக்கிறபடியால், பிரபுஸ்தானத்தை யிழந்து, தாயோடு இருந்து, பின்பு தந்தையைக் காணுவான். மேலும் ராகுவுடன் சம்பந்தப்பட்டமையாலும், அந்த ஸ்தானத்துக்குரிய அங்காரகன் தத் ஸ்தானத்துக்கு மூன்றாமிடமாகிய மகரத்தை யடைந்து, சனியுடன் சம்பந்தப்பட்டு, தனக்குப் பகைவராகிய குருவின் பார்வை இருப்பதாலும், பரணியிற் பிறந்த ஜாதகனுக்கு ஜநநகாலத்தில் சுக்கிரதசை யாகையாலும், ஜாதகன்,

"கூறப்பா கடகத்தில் ஜநித்த பேர்க்குக்
கொடுமைபல தந்திடுவன் சுக்ரா சாரி
வாரப்பா வரம்பெற்ற மன்ன ரெல்லாம்
வருந்தி மிக மாண்டார்கள் வெள்ளியாலே" என்றபடி

பிரபு ஸ்தானத்தை இழந்து, பற்பல மனோதுக்கங்களையும், கஷ்டங்களையும், பெருந் தரித்திரத்தையும் அடைவான். அல்லாமல், மாதுர் பிதுர் வர்க்கத்தில் கர்மத்தையும் காட்டுவான். ஐயா! நாம் சொல்வதில் ஏதேனும் அநுபவம் ஏற்படுகிறதோ?

**சத்தியகீர்த்தி** — ஆ, ஆ, யாவும் உண்மையே, பிறகு சொல்லுங்கள்.

**சோசியர்** — லக்கினத்திற்கு சப்தமத்தில் அந்த ஸ்தானத்திற் குரியவனும், ஆயுர் ஸ்தானாதிபதியும், ஆயுர் காரகனுமாகிய சனி ஆட்சி பெற்றிருப்பதால் ஜாதகனுக்கு அநேக கண்டங்களுண்டாகும். (சுற்றிலும் பார்த்து) ஜாதகம் என்பது பெரும் சமுத்திரம். அது உள்ளதை உள்ளவாறே கூறுவது. நல்ல விஷயமாயின் எல்லாருக்கும் சந்தோஷம். கெடுதியாயின் வருத்தம். அதிலும் நெருங்கிய பந்துக்கள் தாய் தந்தையர்

இவர்கள் இருக்கும்போது வெளியிட லாகாது. அதிலும் பெண்பால்கள் இருக்கும்போது ஒன்றும் வெளியிட லாகா தென்பது சாஸ்திர விதி. அதுவே நமக்கும் உபதேசம். பெண்பிள்ளைகள் யாரும் இங்கில்லையே.

**சத்தியகீர்த்தி** — சமீபத்தில் ஒருவரும் இல்லை. உள்ளதை உள்ள வாறு வெளியிடுங்கள்.

**சோசியர்**— ஐயோ பாவம், பெண்பாலர்க ளிருந்தால் பெருங் கஷ்டப்படுவார்கள். அவர்கள் வந்தாலும் இதனை வெளியிட வேண்டா. என்ன பாவம் (**மெதுவாக**) விரைவில் பிதாவை யும் இழக்க நேரும்.

(சத்தியகீர்த்தி கீழ்நோக்கிக் கலங்குகின்றான்.)

**சோசியர்** — என்ன செய்வது! உள்ளதை உரைக்கச் சொன்னால் உரைத்துவிட்டேன். கலங்கினால் என்ன பயன். தாங்களே இப்படியானால், பாவம் பெண்கள் கேட்டால் எப்படி! அவர்களுடைய உயிர் உடலில் தங்குமா. ஒன்றும் சொல்லாமல் மௌனமாய் இருந்துவிடுங்கள்.

(சந்திரமதி தேவதாசனோடு வருகிறாள்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! என்ன இவ்வளவு கலங்குகின்றாய்? எனக்கேதோ இரண்டொரு செங்காயைக் கொண்டு வந்தாய். நன்றாகவு மில்லை. ஒன்றிரண்டு நன்றா யிருந்தன. அவற்றையும் சோசியருக்குக் கொடுத்துப் பிள்ளையின் சாதகத்தைப் பார்த்துக்கொண்டாய். நான் என்ன செய்வது, எழுந்துபோ. நல்லதாக இன்னும் நாலு பழங் கொண்டுவா.

(எழுகின்றான்.)

**சந்திரமதி** — பிராண நாதா! ஜாதகமா பார்த்தீர்கள்? சோசியர் என்ன சொன்னார்?

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! நமக்கு இதுவரையில் நடந்தவை யனைத்தும் முறையே விவரமாய் உரைத்தார். முடிவில்,

**சந்திரமதி** — முடிவில் என்ன கூறினார்? சற்று சொல்லுங்கள்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இருக்கட்டும். நீ போ; வீணே காலங் கடத்துகின்றாய்.

**சந்திரமதி** — பிராண நாதா! சோசியர் முடிவில் என்ன கூறினார்?

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! நமது செல்வனுக்கு இனி அநேக கண்டங்கள் நேரிடும் என்றனர்.

**சந்திரமதி** — ஐயோ, கண்டங்களா! பிறகு,

**அரிச்சந்திரன்** — பிறகென்ன, விரைவில் பிதாவையும் இழக்க நேரும் என்றார்.

(சந்திரமதி திடுக்கிட்டுக் கீழே விழுகின்றாள். பிறகு, அரிச்சந்திரன் எடுத்துத் தேற்றுகின்றான்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! அப்போதே சமிக்கை காட்டி விலகிப் போகும்படி சொன்னேன். உரைக்க வேண்டாமென்றும் உறுத்தினேன். இப்பொழுது யார் படுவது, வருவது வந்தே தீரும். வருவதைத் தடுக்க யாரால் முடியும். இதை மனத்தில் வைத்துக்கொள்ளாமல் வெளியிட்டு விட்டாயே. வேண்டாமென்று சொன்ன சோசியர் எதிரிலேயே யிருக்க, யானும் தடுத்துக்கொண்டே யிருக்க, மீறிக் கூறிவிட்டாயே. பெண்கள் வாயில் பேச்சு நிற்காது என்பார்கள். அப்பழமொழி இப்போது உன்னால் ஆண்களுக்கும் ஏற்படுகின்றதே. என்ன போ! என்ன சொன்னாலும் கேட்பதில்லை. படு, படு.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! ஒருவர் கேட்டபோது, அவர்கள் யாரேயாயினும் உள்ளதை இல்லையென்றுவது, இல்லதை உள்ளதென்றுவது கூறுவது ஒருபோதும் கூடாது. அது எங்கள் விரதத்திற்கு முற்றும் விரோதம். வருவது நன்மையே யாகட்டும், தீமையே யாகட்டும் மெய்க்கு மாறுபட்டதை ஒருபோதும் உரைத்தல் கூடாது. (சந்திரமதியைப் பார்த்து) பெண்மணீ! கலங்காதை, வருவது வரட்டும். இதற்கா நாம் மனஞ் சோர்வுபடுவது. பிள்ளை யார்? நீ யார்? நான் யார்? யோசித்துப் பார்.

**சந்திரமதி** — பிராண நாதா! இறைவனருள் அப்படியாயின், நாம் என்ன செய்யலாம்! ஆ, ஆ, இப்படியும் வருமோ காலம்! யாருக்கு என்ன தீங்கு இழைத்தோமோ!

(அனைவரும் ஒருவாறு தேறி எழுந்து செல்கின்றனர்.)

**நட்சத்திரேசன்** — ஐயா சோசியரே! நமக்கொன்றும் சோசிய மில்லையா? நானும் இரண்டு கனிகளைக் கொடுக்கமாட்டேனா? கொடுத்ததும் என்னுடைய பாகத்திற்கான கனிகள்தாமே. வஞ்சனை உதவாது, இங்கு வாரும். நமக்குச் சேரவேண்டிய பொருள், வருமோ இல்லையோ பாரும்.

(இருவரும் கலந்து பேசுகின்றனர்.)

**நட்சத்திரேசன்** — ஐயா! என்ன இம் மன்னன் சற்றும் சலிப்பவனாகக் காணோம். முனிவர் எண்ணம் அணுவும் இசையாதுபோ லிருக்கின்றதே. எவ்வளவோ தந்திரமாக உரைப்-

பினும் தான் சத்தியத்தின் மேலேயே கண்ணு யிருக்கின்றுனே. அவன்தான் அப்படியென்றுல், அம்மாதோ அவனிலும் பதின்மடங்கான உறுதிகொண் டிருக்கின்றுளே! மற்றும் அந்த மந்திரிக்குச் சத்தியகீர்த்தி யென்பது சரியான பெயர். மூன்றும் ஒன்று கூடியிருக்கிறது. இவர்களை வெல்ல நமது முனிவராலும் முடியாது, மூன்று மூர்த்திகளாலும் முடியாது.

**சோசியர்** — யாவும் யானே இப்போது நேரிற் 'கண்டேனே. நாமென்ன செய்வது. நம்மா லானமட்டும் முயன்ருேம்; ஒன்றும் பயனில்லை. அம் முனிவர்க்கு இவற்றை யெல்லாம் நன்கு தெரிவிக்கின்றேன். நம்மீது கோபிப்பார், கோபித்தால் நாமென்ன செய்யலாம். போய் வருகின்றேன்.

(போகின்றுன்.)



## பத்தாங் களம்

**இடம்:** யமுனை நதிக் கரை.

**காலம்:** நடுப் பகல்.

**பாத்திரங்கள்:** நட்சத்திரேசன், அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, தத்துவசாஸ்திரி, அஷ்டாவதாநி.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இதோ நாம் யமுனை நதியை யடைந்தோம். இனி, இங்குத் தங்கிச் செல்லுவோம். பசியினுல் களை வந்து காதை யடைக்கின்றது. காலுந் தளர்கின்றது. என்ன கஷ்டம்! என்ன சிரமம்! பிணைப்பட்டுத் துணைப்படுதல் எப்போதும் பிசகு.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! வருந்த வேண்டா. இன்னும் இரண்டொரு தினங்களிற் காசியம்பதியை அடைந்துவிடுவோம். அதுவரையில் தேவரீர் மனங்கொண்டு மன்னித் தருளவேண்டும்.

**நட்சத்திரேசன்** — என்ன மன்னிப்பது! எத்தனை நாள் உங்களோடு உழல்வது? ஏதேனும் தக்க உணவுண்டா? உறக்கமுண்டா? ஊணும் உறக்கமுங் கெட்டால் உடல் என்ன கதியாவது? இதோ யாரோ இருவர் வழிப்போக்கர் வருகின்ருர்கள். அவர்களிடத்தில் நமது நியாயத்தைச் சொல்வோம். (வழிப்

போக்கனை நோக்கி) ஐயா! சற்று இப்படி வாருங்கள், இந்த அநியாயத்தைச் சிறிது கேளுங்கள்.

**தத்துவசாஸ்திரி** — என்ன ஐயா அது, நம்மை ஏன் இழுக்கின்றீர்கள்?

**நடசத்திரேசன்** — இவர் அயோத்தியின் அரசரா யிருந்தவர். இவர் விசுவாமித்திரருக்குக் கடனுகப் பொருள் தரவேண்டும். அதனை என்னிடம் கொடுப்பதாய் ஒப்புக்கொண்டார். இன்னும் கொடுத்தபா டில்லை. யானே உணவற்று, உறக்கமற்று இவர்களோடு காட்டிலும் மலையிலும் கல்லென்றும் முள்ளென்றும் கானலென்றுங் கருதாமல் உழன்று திரிந்து, உடல் மெலிகின்றேன். இவர்களோ கண்ட நதிகளிலும், சோலைகளிலும் தங்கித் தங்கிக் காலங் கழிக்கின்றனர். பசிக்கிற தென்றால், இதோ பழங்கொண்டு வருகிறே மென்று பறந்தோடுகின்றார்கள். இதென்ன நீதி, கேளுங்கள்.

**தத்துவசாஸ்திரி** — என்ன ஐயா! நீர் கூறுவது.

**அரிச்சந்திரன்** — பொருள் கொடுக்கவேண்டுவது உண்மையே, யான் அதனை நாற்பது தினங்களிற் செலுத்திவிடுவதாக உறுதி மொழிந்து விடைபெற்று வந்திருக்கிறேன். அப்படி செலுத்த ஒருபோதும் தவறேன். கூடிய சீக்கிரத்தில் காசியம்பதியை யடைந்து கொடுத்துவிட உறுதிகொண் டிருக்கின்றேன். அதுகாறும் பொறுத்தருள வேண்டிக்கொள்கின்றேன். இதுவே எனது விண்ணப்பம், ஐயா!

**தத்துவசாஸ்திரி** — ஆ, ஆ, நீங்க ளிருவர் கூறுவதும் வெகு வியப்பாயிருக்கின்றது. பொருளாம்—கடனும், கொடுப்பதாம்—வாங்குவதாம். ஆ, ஆ, வெகு நன்று. உலகத்தில் காணப்படும் பொருள் எல்லாம் பொய்ப் பொருள். அப் பொருள்களைத் தனக்கு உடைமையாகக் கொண்டுள்ள இவ்வுடலே பொய்ப் பொருளானால், மற்று எப் பொருள் மெய்ப் பொருளாவது? இதனிலும், நீர் முற்றத் துறந்த முனிவர் வேடத்துடன் காணப்படுகின்றீர். அந்தப் பொருளும் ஒரு முனிவருக்குச் சேரவேண்டுவது என்கின்றீர். இது என்ன ஞானம்! என்ன துறவு. (**அரிச்சந்திரனை நோக்கி**) அதிருக்கட்டும், நீர் ஏன் இதற்காக வருந்துவது. எந்தப் பொருள் யாருக்கானது. இது ஏன் உமக்குத் தெரியவில்லை. பொன்னுமில்லை, பொருளு மில்லை யென்று போகச் சொல்லும்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, நல்ல மத்தியஸ்தமாக இருக்கிறதே! கடனைக் கேட்டால் ஞானம் பேசுகிறீர்களே. ஏது அரிச்-

சந்திர! இப்படியும் ஒரு ஆளை முன்னமே சித்தப்படுத்தி யிருந்தாயோ! அவர் பேசுவதைப் பார்த்தால் உன்னுடைய மனிதர்போல் காண்கிறதே. நல்லது, அவர் அபிப்பிராயப்படியே சொல்லிவிடு. நான் போய்விடுகின்றேன். எனக்கேன் இந்தத் துன்பம்!

**அரிச்சந்திரன்** — சுவாமீ; அடியேனை அவ்வாறு எண்ணவேண்டாம். (*தத்துவ சாஸ்திரியை நோக்கி*) ஐயா! தாங்கள் யாரோ பெரியோராக விளங்குகின்றீர்கள். உலகத்தில் உள்ளவை யனைத்தும் பொய்யாகுமா? பொய் என்றால் மெய் என்பது எதிர் நிற்கின்றது. அந்த மெய் ஒன்றே யாவராலும் போற்றிக் காப்பாற்றத் தகுவது. அந்த மெய்யே எல்லாம் வல்ல இறைவற்கும் உருவாயிருப்பது. அதனால் அம் மெய்யைக் கடைப்பிடித்து ஒழுகுவார்க்கு அழியாத இன்பமாயுள்ள வீடுபேறு கிட்டுவது நிச்சயம். தாங்கள் இவற்றை யுணர்ந்திருந்தும் இவ்வாறு பேசலாகுமோ?

**தத்துவசாஸ்திரி** — ஆ, ஆ, நல்ல சித்தாந்தம் இது! பொய்க்கு விரோதம் மெய்யா? ஆனால், மெய் பொய்யன்றோ?

**அரிச்சந்திரன்** — மெய் எங்ஙனம் பொய்யாகும்?

**தத்துவசாஸ்திரி** — உமது மெய் பொய்யோ மெய்யோ?

**அரிச்சந்திரன்** — ஓ, ஓ, மெய் என்றால் தேகம் என்னும் அர்த்தத்தை யெண்ணி கேட்கின்றீர்களோ? அவ்வாறாயின் மெய் பொய்தான்.

**தத்துவசாஸ்திரி** — மற்று எதைத்தான் நீர் மெய் என்று விளம்புகின்றீர்?

**அரிச்சந்திரன்** — மெய் என்றால் உண்மை. அந்த வுண்மையைப் பேசுவதைப்பற்றி யுரைத்தேன்,

**தத்துவசாஸ்திரி** — ஆ, ஆ, ஆ, என்ன கொள்கை இது! எதற்கும் கருவியா யிருப்பது இந்த மெய். இதுவே பொய்யாகுமானால் இதனிடத்தி லிருந்து வெளியாகுஞ் சொல் எவ்வாறு மெய் யாகும்? இதென்ன, 'மலடி மகன்' என்றாற்போ லிருக்கின்றதே. மெய்தான் பொய். பொய்தான் மெய். மெய்யும் பொய்யும் ஒன்றே. நாம் உரைக்கும் இதுவே மெய். நீர் எண்ணி யிருப்பதே பொய். மெய்யைப் பற்றினால் வீடுபேறு கிடைக்கும் என்கிறீர். இதென்ன பைத்தியம்! நாம் ஆராய்ந் தறியாத தத்துவ சாஸ்திரங்க ளில்லை. அவற்றில் ஒன்றிலேனும் இதுகாணுமா றில்லை. பொருளே இல்லை யென்றால் பேறு ஏது?

அரிச்சந்திரன் — ஐயா! தத்துவ சாஸ்திரங்கள் கற்றமைக்குப் பயன் இதுதானே! உலகில் அவரவர் செய்யும் நன்மை தீமைகளுக்கு ஈடாக இன்ப துன்பங்களை இறைவன் அருள்வான் என்பது தங்களுக்கு உடன்பா டில்லையோ?

தத்துவசாஸ்திரி — இன்பமாவது, துன்பமாவது, இறைவனாவது. உலகம் பஞ்சபூதச் சேர்க்கையா லுண்டானது. உலகத்திலுள்ள சராசரப் பொருள்களும் பஞ்சபூதச் சேர்க்கையா லுண்டானவைகளே. எப்பொருளும் முதலில் நீரினின்றுந் தோன்றிப் புல்லாகி, பூடாகி, இப்பியாய், ஊர்வதாய், விலங்காய் நிலைமாறிப் பின்னர் மனித யாக்கைக்கு அடுத்துள்ள குரங்கின் உருவத்தை யடைகின்றது. அதனாலேயே குரங்கும் வானர மெனப் பெயர் பெற்றது. அதன்பின் மனித வுருவ முண்டாகும். இவ்வாறு உயிரானது எண்பத்து நான்கு இலட்ச உடல்வகையில் மாறிமாறித் திரிந்து செல்லும். இது ஒன்றே உலகத் தோற்றத்திற்கு ஏற்ற காரணமாகும். இந்தத் தேகம் காப்பாற்றிய அளவு நிற்கும். இது இறந்துபட்டால் அவ்வப் பாகம் அவ்வப் பூதத்திற் கலந்து செல்லும். மண்ணிற் கலந்த பாகம் தாவரங்களுக்கு உணவாம். அத் தாவரம், மிருகங்கள் பறவைகள் மானிடர் முதலிய உயிர்களுக்கு உணவாகும். அதுவே சத்தாகிக் கருவிலமைந்து உருக்கொண்டு வெளிவரும். சிறிதுநாள் வாழும், பின்பு இறந்துவிடும். இவ்வாறே மாறிமாறி வருந் தன்மை யுடையது. இவ் வரிய நியாயத்தினை முற்றும் கைவிட்டு, உலகத்திற்குமேல் ஒருவன் உண்டென்றும், அவன் விதித்தவாறு ஒருவன் தலையில் எழுதுகின்றான் என்றும், மற்றொருவன் ஓலையைக் கிழிக்கின்றான் என்றும், ஒருவன் கட்டியிழுக்கின்றா னென்றும், நரகத்திலும் மோட்சத்திலும் அமர்த்துகிறா னென்றும், புராணக் கிழங்கள் புலம்புவதை உறுதியாகக் கொள்கின்றனர் சிலர். இவை யனைத்தும் வீண் வார்த்தை, கட்டுக் கதை. இறந்த பின்னர் உடலில்லை. உடலின்றேல் உணர்ச்சி யறும். உணர்ச்சி யற்றால் ஒன்றுமில்லா தொழிகின்றது. இதுவே நாம் கண்கூடாகக் கண்டறிவது. இதை விட்டு வீண் எண்ணங்களால் துன்பத்திற்கு ஆளாவது பேதைமை. இப்போது உமது வீண் எண்ணத்தினால் விளைந்த தீங்கை யுற்று நோக்கும். கடனில் அழுத்தியது; இதுவே இன்னல். உம்மைப்போல் உண்மையே சாதகமென்று உறுதிகொண்டிருந்தவர் இதோ இருக்கிறார். அவர் கதியை என்ன வென்று கேளும்.

**அரிச்சந்திரன்** — ஐயா! தாங்கள் யாரோ? தமக்குச் சத்தியத்தினால் என்ன தீங்கு நேர்ந்தது? சற்று விவரமாய்க் கூறுங்கள்.

**அஷ்டாவதானி** — ஐயா, நானும் உம்மைப்போல உண்மையே உறுதிப் பொருளென்று எண்ணியிருந்தேன். என் வரலாற்றைச் சொல்லுகிறேன், சிறிது கவனமாய்க் கேளும்.

கலி வெண்பா

மாசி லருந்தவத்தோர் வந்திக்கு மாண்புடைய
காசிப் பதிதன்னில் கண்ணியமாய்ப் — பேசவரு

நற்குலத்தி லேபிறந்து நானுன்காம் ஆண்டுக்குள்
கற்கவரு நூலெல்லாங் கற்றறிந்தேன் — அப்பால்

அவதான மும்பயில ஆதரித்தோ ரீராண்டில்
நவமாகும் வித்தையெலாம் நன்கறிந்தேன் — அவற்றிற்

பயிலும் வழிதன்னைப் பகருவேன் வேலும்
மயிலுமென வேசொல்ல மாறாமல் — செயலாய்

வருலாட சங்கிலியை மாட்டிக் கழற்றத்
தருவார் கவியடியைத் தான்முடிக்க — மருவும்

சதுரங்கத் திற்குதிரை தாண்டுமடி சொல்ல
சதுரனெனப் பாவுரையைத் தான்புகலப் — புதுமையுறப்

பஞ்சாங்கஞ் சொல்லப் பாவினெழுத் தெண்ணிசொலும்
விஞ்ஞானப் பாவை விளம்ப — அஞ்சாமல்

எட்டெழுத் தாணிக்கங் கேற்ற கவிசொல்ல
அட்டாவ தானவகை யத்தனையும் — மெட்டாய்

தெரிந்து வெளிப்போந்து திக்கு விசயம்
புரிந்துபல மன்னரவை புக்கேன் — பரந்த

புலமையெலாங் காட்டினேன் பூபால ரெல்லாம்
நலம்வந்த கீர்த்தி நவின்று — குலம்வந்த

செம்பொன்னாற் செய்த சிவிகையுடன் தண்டிகையும்
கம்ப மதக்கரியும் காஞ்சனமும் — செம்பட்டு

வத்திரமும் வாம்பரியும் மல்லல் வளநாடும்
மெய்த்திரமுண் டாக்கும் விருதுகளும் — சித்திரமார்

ஒன்பான் வகையில் ஒளிரு மணிபதித்த
இன்பான நற்பணிக ளெல்லாமும் — அன்புடனே

பெற்றுப் பெருமையுடன் பேரரச ரும்வியக்க
உற்றேன் புவியி லுயர்ந்து.

இத்தகைய மேன்மையுற்ற யான், அவதானத்தில் ஒரு சிறு சொல்லை மாற்றி யுரைப்பதற்கு அஞ்சி இக்கதி யடைந்தேன்.

**அரிச்சந்திரன்** — ஐயா! அவதானத்தில் மாற்றி யுரைப்பது என்ன இருக்கிறது? எல்லாம் உள்ளதை உள்ளவாறு உரைக்க வேண்டுவதுதானே.

**அஷ்டாவதானி** — நீர் சொல்லுவது உண்மைதான். அவதானத்தில் யான் வெற்றியடைந்தால், பிரபுக்கள் எனக்குப் பதினாயிரம் வராகன் பரிசளிப்பதாகவும், யான் தோல்வி யடைந்தால் யான் இதுவரையிற் பெற்றிருந்த பரிசுகள் எல்லாவற்றையும் பிரபுக்களுக்குக் கொடுத்து விடுவதாகவும் ஓர் ஏற்பாடு செய்துகொண்டு அவதானத்தை ஆரம்பித்தேன். எல்லாவற்றையும் செவ்வனே முடித்துவிட்டேன். தோல்வியென்பது எதிலும் எனக்கு ஏற்படவில்லை. அதைக் கண்ட பிரபுக்கள் பஞ்சாங்கம் சொல்வதில் யான் சொன்னதை மாற்றி எழுதிக்கொண்டு, முடிவில் படித்துக் காட்டி, யான் தோல்வி யடைந்ததாகக் கூறினர். அதன்மேல் யான் எவ்வளவு நியாயம் சொல்லியும் அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அதனால், அங்கிருந்த மத்தியஸ்தர்கள், தோற்றால் பரிசு பெற்ற பொருள்களைக் கொடுத்து விடுவதாகச் சொன்னதில்லை யென்று, என்னை வாதிக்கும்படி தூண்டினர். "பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியாகும்" என நியாயம் இருந்தபோதிலும், யான் சொன்னதை மாற்றி யுரைக்க மனமில்லாமல் மறுத்துவிட்டேன். அதனால், என்னிட மிருந்த பொருளையெல்லாம் இழந்து பரதேசியாகத் திரிந்தேன். பின்பு, இந்தத் தத்துவ சாஸ்திரியாருடைய கொள்கை மிகவும் உத்தமமாக இருக்கக் கண்டு, அவருடன் கலந்து வசிக்கின்றேன். ஆதலால், மனிதன் சமயத்திற்கு ஏற்றதுபோல் பேசித் துன்பத்திற்கு விலகி, எவ்விதத்தினும் இன்பத்தை யடைய முயலவேண்டும். இப்போது தத்துவ சாஸ்திரியார் சொன்னதைச் சற்றுக் கவனித்துப் பாரும்; உண்மை விளங்கும்.

**அரிச்சந்திரன்** — ஐயா! என்ன சித்தாந்தம் சொல்கின்றீர்கள்! இறைவனில்லை, வினை யில்லை, இன்பமு மில்லை, துன்பமும் இல்லை என்கின்றீர். உலகில் மானிடதேகம் பெற்றவர்களில் பலர் துன்பத்தில் வருந்தவும், பலர் இன்பத்திற் பொருந்தவும் நேர்ந்திருக்கின்றது. சிவிகை ஊர்வோனையும், அதனைத் தாங்கிச் செல்வோரையும் ஒத்துநோக்கி உய்த்துணர்ந்தால் விஷயங்கள் நன்கு விளங்குமே.

**தத்துவசாஸ்திரி** — இன்ப துன்பங்கள் வினையினால் வருவன வல்ல. இன்பம் ஒருவனது முயற்சிக் கேற்றவாறு இயலும். துன்பத்திற்குக் காரணம் சோம்பலே. இனி வினையினால் தேக முண்டாகின்ற தென்றால், ஆதியில் வினையின்றித் தேகம்

எவ்வாறு உண்டாயிற்று. இது நோக்கியன்றே, 'வித்து முதலா? முளை முதலா?' என்னும் 'பீஜாங்குர நியாயம்' தத்துவத்தில் ஏற்பட்டிருக்கின்றது? இவ்வாறு நல்வினை தீவினைகளின் பயனுகத் தேக மெடுத்துக்கொண் டிருந்தால், இந்த ஆன்மா எவ்வாறு வீடு பெறுவது? சற்றும் பொருத்தமற்ற வாதங்கொண்டு இன்னலிற் புகுவது எதற்கு? இனி உலகிலுள்ளமட்டும், உண்டு உடுத்துக் களிப்புடைந்து இருப்பதே இத் தேக மெடுத்ததற்குப் பெரும் பயனுகும். உய்த்துணர்ந்தால் உண்பதும் உறங்குவதுமே உலக வாழ்க்கையாக முடிகின்றது, யோசித்துப் பாரும்.

**அரிச்சந்திரன்** — ஐயா, வினையின் தொடக்கத்தினுல் தேகம் மாத்திரம் வரும். ஆன்மா நித்தியமானது. அவ்வான்மாவின் வினைக்கு ஏற்றவாறு தனு கரண புவன போகங்களை இறைவன் அருள்கின்ருன். இந்த ஆன்மாவும் முதலிற் புல் முதலாகிய பற்பல உருக்களை யடைகின்றது. பின்னர் மானிட தேகம் பெற்று, சுக துக்கங்களை ஒப்பக் கண்டு, வீடுபேற்றை யடைய விரும்புகிறது. அவ்வாறு சுக துக்கங்களை ஒப்பக் காணுவோரே மெய்ஞ்ஞானிய ராவர். மற்றையோர்க்கேயன்றி மெய்ஞ்ஞானியர்க்கும் வினை யுண்டு. அவ்வினை சஞ்சிதம், ஆகாமியம், பிராரத்தம் என மூன்று வகைப்படும். அவற்றுள் பல பிறவிகளுக்கு வித்தாயுள்ள சஞ்சிதவினை ஞானிகளது ஞானத்தீயினுல் எரிபட்டு நாச மெய்தும். இனி நேரற்பால ஆகாமியவினை சிறிதும் ஞானியை யணுகாது. நிகழ்காலத்தில் அனுபவித்தே தீரற்பால பிராரத்தவினை மாத்திரமே எஞ்சி நிற்கும். மேலோர் அந்த ஞானியை வணங்கி அவரது நல்வினையைப் பெறுவர். கீழோர் அவரை இகழ்ந்து அவரது தீவினையைப் பெறுவர். இதனுல் ஞானியாவான், நல்வினை தீவினையாகிய பகுதிகள் ஒருங்கே யற்று நித்தியாநந்தத்தை யடைவன். இனி, நீர் யாது கூறினும் மெய்யைக் கைவிடுதல் செய்யோம். சத்தியம் தலைகாக்கும் என்பது உறுதி மொழி. ஆகையால், சொன்னதை நிறைவேற்றுதலே தூயோர் கடமை. யாங்கள் செல்லுகின்ருேம், தயைசெய்து விடை தாரும்.

**தத்துவசாஸ்திரி** — அப்படியாயின் உங்களிடம் யாம் என்ன சொல்வது. தருக்க சாஸ்திரக் கருத்தை வெளியிட்டோம். கேட்டால் பயனுண்டு. இனி உங்களிஷ்டம், செல்லுங்கள்.

(போகின்றனர்.)

**நட்சத்திரேசன்** — ஐயா சாஸ்திரியாரே! என்ன ஏதேதோ தத்துவம் பேசுகின்றீர்கள். நமக்கு ஒன்றும் விளங்கவில்லையே. நமக்கு ஏதும் சொல்லப்படாதா?

**தத்துவசாஸ்திரி** — அதெல்லாம் ஒன்றுமில்லை. உலக தத்துவம் சிறிது பேசினேம் (சொல்லிக்கொண்டே நட்சத்திரேசனை யணுகி) ஐயா! இவ் வரிச்சந்திரன் என்ன சிறிதும் சலியாத மனவன்மையும், கலங்காத உறுதிநிலையுங் கொண்டவனைக் காண்கின்றான். இவனை வெல்ல யாவரால் முடியும். நமது முனிவர் முன்பின் யோசியாது சபதங்கொண்டாரே. என்ன செய்வது. நம்மாலானவரையில் முயன்றோம், முடியவில்லையே. நடந்ததைப் போய் நவில்கின்றேன்.

**நட்சத்திரேசன்** — அவ்வாறே செய்யும். சென்று என் கதியையும் முனிவருக்குச் சொல்லும்; மறந்துவிடப் போகிறீர்.

**தத்துவசாஸ்திரி** — அதற்கென்று அவற்றை யெல்லாம் நேரிற் கண்டேனே சொல்லமாட்டேனு. ஏன் மறக்கும், போய் வருகின்றேன்.

(செல்கின்றான்.)

## பதினொன்றாங் களம்



**இடம்:** வாரணாசியில் ஒரு சத்திரம்.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** நட்சத்திரேசன், சந்திரமதி, தேவதாசன், அரிச்சந்திரன், சத்தியகீர்த்தி, வைத்தியன்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இதோ அருகில் ஒரு நகரந் தோன்றுகின்றது. அது காசியம்பதியாக விருக்கலாமோ?

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இதுதான் காசி நகரத்தின் எல்லையிலுள்ள வாரணாசி என்னும் திருப்பதி. அதைக் கடந்து சென்றால் காசியம்பதி காணப்படும்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ, சந்திரமதி! இதோ நாம் வாரணாசியை யடைந்து விட்டோம். அதனை யடுத்துள்ளதே காசியம்பதியாம். நாம் இத் திருப்பதியை யடையவே, நமது வினை யனைத்தும் விடைகொண்டு ஓடும். கண்மணி, தேவதாச! இதோ வந்துவிட்டோம். இனி நாம் அதிகம் நடக்கவேண்டியிராது, வருந்தாதே.

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! இங்கு ஏதேனும் சத்திரத்தில் தங்கலாமே.

**நட்சத்திரேசன்** — இதோ காண்பது ஒரு சத்திரமே. அங்குத் தங்குவோம். நாம் இதோ சற்று நேரத்தில் காசியை யடைவோம். இனி காசு எவ்விதமாய் வருமோ தெரியவில்லை.

(எல்லோரும் சத்திரத்தில் தங்குகின்றனர்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இங்குவா, இங்குவா! வந்தையா வந்தையா!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! என்ன, என்ன!

(விரைந்து ஓடிவருகின்றான். மற்றவர்களும் வருகின்றனர்.)

**நட்சத்திரேசன்** — ஆ! அரிச்சந்திர! என்ன செய்வேன்!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! என்ன நேர்ந்தது? உள்ளதைச் சொல்லுங்கள்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, பொறுக்க முடியவில்லையே! பிராணந் துடிக்கிறதே! என்ன செய்வேன்! இதற்கா என்னை யழைத்து வந்தீர்கள்!

**அரிச்சந்திரன்** — (துக்கத்துடன்) சுவாமீ! நேர்ந்தது யாது? தேள் முதலிய விஷப்பூச்சி ஏதேனும் தீண்டிற்றோ? சொல்லுங்கள் மருந்து கொண்டுவருகின்றோம்.

**நட்சத்திரேசன்** — இல்லை, இல்லை. விஷமொன்றுந் தீண்டவில்லை. ஆ, ஆ, என்ன கொடுமை! என்ன கொடுமை!

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! என்ன நோய் இது? சொல்லுங்கள், தக்கது செய்கின்றோம்.

**நட்சத்திரேசன்** — அப்பா, அரிச்சந்திர! சத்தியகீர்த்தி! என்னமோ எனக்குத் தெரியவில்லை. வயிற்றை யிழுத்து நோகின்றது, மார்பில் அடைக்கின்றது, மூச்சுவிடவும் முடியவில்லையே!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! சற்றுப் பொறுத்துக் கொள்ளுங்கள். இதோ ஒரு நொடிப்போதில் ஒரு வைத்தியனை யழைத்து வருகின்றோம். (திரும்பி) சத்தியகீர்த்தி! நீர் விரைந்து சென்று ஒரு வைத்தியனை அழைத்து வாரும்.

(சத்தியகீர்த்தி விரைந்து போகின்றான்.)

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, அரிச்சந்திர! வைத்தியர் வந்தாரா? பிராணன் போய்விடும்போல் காண்கின்றதே. ஐயோ! என் குருநாதரும் அருகில் இல்லையே! அரிச்சந்திர! இதற்குத்தானா இவ்வாறு என்னை வதைத்தனை. பொன் பெற வந்து மண்ணாகவேண்டும்போல் காண்கிறதே. ஆ, ஆ! என்ன கதி எனக்கு! வைத்தியர் வந்தாரா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இன்னும் வரவில்லை. நாம் வந்தது புதிய ஊர். சென்ற சத்தியகீர்த்தியும் புதியவர். தேடி யழைத்து வர வேண்டும். சற்றுப் பொறுத்துக்கொள்ளுங்கள் விரைவில் வந்துவிடுவார்.

**நட்சத்திரேசன்** — ஓ, ஓ! அரிச்சந்திர! இது ஏதோ வஞ்சகமாகக் காண்கின்றது. இப்படியே இவன் இறந்துபோகட்டும் என்னுங் கருத்தோ. பிராமண அத்தி, பிராமண தோஷம். வேண்டாம். ஆ, ஆ, பொறுக்க முடியவில்லையே. இந்த நோய் வந்தமைக்கு நீயன்றோ காரணம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் யாதும் வஞ்சகம் செய்யவில்லையே. இவ்வாறு சொல்லின், அடியேன் என்ன செய்வது.

**நட்சத்திரேசன்** — ஒன்றும் செய்யவில்லையா? உன்னோடு வந்து இருபது இருபத்திரண்டு தினங்களாக, பச்சைக் காய்களையும், கிழங்குகளையுந் தின்றல்லவா இந்த நோய் வந்தது. ஆ, ஆ, இருப்புச்சலாகை வயிற்றிற் செருகினாற்போல் நோகின்றதே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! என்ன செய்வது? சற்றுப் பொறுத்துக்கொள்ளுங்கள்.

**நட்சத்திரேசன்** — அப்பா! அரிச்சந்திர! உங்கள் இருவரால் யான் உயிர் துறக்க நேரும்போல் காண்கின்றது. முனிவர்க்கு அரசு கிடைத்துவிட்டது. இனி இப்பொருள் கிடைத்தாலும் கிடைக்காதொழிந்தாலும் ஒன்றுதான். ஐயோ! உன்னோடு பேசவும் எனக்கு முடியவில்லையே!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! சத்தியகீர்த்தியுடன் வைத்தியர் வந்துவிடுவார். நோயைக் கவனியாமல் சற்றுப் பொறுங்கள்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! நீ பொருள் கொடுக்க இன்னும் எத்தனை நாள் செல்லுமோ தெரியவில்லையே. யான் சீக்கிரம் திரும்பிப் போய்விட்டால், முனிவர் தக்க மருந்துகள் கொடுத்துக் குணப்படுத்துவர். வீணே என்னைக் கொன்றுவிடாதே.* வைத்தியர் கிடைப்பது ஏது? கிடைத்தாலும் பொருளின்றிச் சிகிச்சை செய்வாரோ? இது வீண் முயற்சி.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! ஒன்றுந் தீங்கு நேராது. நாம் காசியம்பதியில் சேர்ந்திருக்கின்றோம். துன்பம் ஒருபோதும் அணுகாது. நாம் நன்னெறியைக் கடைப்பிடித்தால் யாவும் நன்மையே நேரும். சற்றுப் பொறுங்கள். வைத்தியர் வந்துவிடுவர். மற்றும் சீக்கிரத்தில் முனிவர் பொருளைத் தந்து அனுப்பிவிடுகின்றேன். அதுகாறும் மன்னித்தருளவேண்டும்.

(வயிற்றை யழுத்திக்கொண் டிருக்கின்றார்கள்.)

## பன்னிரண்டாங் களம்



இடம்: வாரணாசியில் ஒரு வைத்தியர் வீடு.

காலம்: மாலை.

பாத்திரங்கள்: வைத்தியன், சத்தியகீர்த்தி.

[ஒரு வைத்தியர் வீடு. வைத்தியர் புத்தகங்களை வைத்துக்கொண்டு பார்வையிடுகின்றார். சுவரில் ஓர் பலகை தொங்கவிடப்பட்டிருக்கிறது. அதில் **ஆயுர்வேத பாஸ்கர வைத்தியசாலை ஏழைகளுக்குத் தரும வைத்தியஞ் செய்யப்படும்** என்று எழுதப்பட்டிருப்பதைச் சத்தியகீர்த்தி பார்த்து, வைத்தியரிடஞ் சென்று வந்தனஞ் செய்கின்றான்.]

**வைத்தியர்** — யார், ஐயா!

**சத்தியகீர்த்தி** — ஐயா! யான் அயோத்தியா நகரவாசி.

**வைத்தியர்** — இங்கு யாது கருதி வந்தீர்?

**சத்தியகீர்த்தி** — யாத்திரை காரணமாய் இங்கு வந்தோம். எங்களில் ஒருவர்க்கு வயிற்றுவலி கண்டுவிட்டது. தாங்கள் தயை செய்து சற்று வந்து பார்க்கவேண்டும்.

**வைத்தியர்** — யாம் செய்வது தரும வைத்தியம். யாம் ஒரு பொருளையும் இச்சிப்பதில்லை. பொருள் பெறுமலே வைத்தியம் செய்யவேண்டும் என்பது ஆயுர்வேதத்தின் துணிபு. வியாதியஸ்தரை இங்கு அழைத்து வாரும். யாம் வருதல் கூடாது. மற்றும் உம்மைப்போல் பல்லாயிரம் பேர் இங்கு வருவர். அக்காலத்தில் யாம் இங்கு இல்லாதிருத்தல் தகுதியன்று, போம், அழைத்து வாரும். ஒரு நொடிப்போதில் தீர்த்து விடுகின்றோம்.

**சத்தியகீர்த்தி** — ஐயா! தாங்கள் உரைப்பன யாவும் தங்கள் விளம்பரப் பலகையாலேயே நன்கு விளங்குகின்றன. வியாதியஸ்தர் இங்கு வரத்தக்க நிலையில் இல்லாமையால், தாங்கள் தயை செய்து அங்கு வருதல் வேண்டும். அதிக சமீபத்திலேயே இருக்கின்றனர்.

**வைத்தியர்** — ஆனல் சரி, பார்ப்போம் வாரும். (வருகின்றனர்.) எவ்விடத்தில் இறங்கி யிருக்கின்றீர்கள்?

**சத்தியகீர்த்தி** — ஐயா! இவ்வூர் எல்லையிலுள்ள ஒரு சத்திரத்தில் இறங்கி யிருக்கின்றோம்.

**வைத்தியர்** — சரி, போவோம்.

**சத்தியகீர்த்தி** — ஐயா! தாங்கள் செய்வது அனுபவ முறையோ? வாகட முறையோ?

**வைத்தியர்** — உமக்கும் வைத்தியந் தெரியும்போற் காண்கின்றதே.

**சத்தியகீர்த்தி** — யான் வைத்தியம் செய்ய, அறியேன். சொன்முறையில் சிறிது அறிவேன், ஐயா.

**வைத்தியர்** — நல்லது, நாம் செய்வது சித்தர் நூல் முறை. அகத்தியர் பூரணம், பூகமுனிவர் பெருநூல், பூரணசூத்திரம், ஆயுர்வேத பாராவாரம், போகர் ஏழாயிரம், தன்வந்திரி ஜீவரக்ஷாமிருதம், தேரையர் வைத்திய நூல்கள், கொங்கணர் கடைக்காண்டம், சிரோரத்தின வைத்திய பூடணம், நந்திகலாஞானம், பிரம்மமுனிகள் கடைச்சூத்திரம், புலிப்பாணி வைத்தியம், வைத்திய சிந்தாமணி இவை முதலான பெரு நூல்களனைத்திலும் எமக்குப் பெரும் பழக்கமுண்டு. இவற்றிற் சொல்லப்பட்டவாறே, செய்முறை, கைமுறை பிறழாமல், சித்த மகாத்துவஜ ரசம், மேகாந்தக ரசம், குன்மகுடோரித் திராவகம், அகஸ்தியர் சண்டமாருத மெழுகு, காளமேக நாராயண சிந்தூரம், ஜ்வர கஜாங்குசம், அக்கினி குமாரகம், சதபுட அப்ர சிந்தூரம், அமிர்த சிந்தாமணி ரசம், கண்டபேருண்ட ரசம் முதலாயுள்ள மகா ஔஷதங்களையெல்லாம் முடித்திருக்கின்றோம். இந்த ஔஷதப் பிரயோகத்தால் காலனூருக்குப் போக இருந்த உயிரையும் திருப்பிக் கொண்டுவந்திருக்கின்றோம்.

**சத்தியகீர்த்தி** — ஆ, ஆ! வெகு நூல்கள் பார்வையிட்டிருக்கின்றீர்கள். ஔஷதங்களும் தக்கவையாகவே புலப்படுகின்றன. பெயரைக் கேட்டே பிணிகள் பறக்கும்போற் காண்கின்றது. எங்கள் நற்காலம் தாங்கள் எதிர்ப்பட்டது. (**சத்தியகீர்த்தியும் வைத்தியரும் சத்திரத்திற்கு சமீபத்தில் வருகிறார்கள்.**) இதோ வந்துவிட்டோம். இந்தச் சத்திரத்தில்தான் தங்கி இருக்கின்றோம்.

**வைத்தியர்** — அதோ படுத்துக்கொண் டிருக்கிறவர்தாமோ?

**சத்தியகீர்த்தி** — ஆம், ஐயா!

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! வைத்தியர் வரவில்லையே, என்னை இவ்வாறும் வதைத்தலாமோ?

**அரிச்சந்திரன்**—(**சத்தியகீர்த்தியோடு மற்றொருவர் வருவது கண்டு**) இதோ வந்துவிட்டார் வைத்தியர், சுவாமீ!

**நட்சத்திரேசன்** — வந்துவிட்டாரா? ஐயா வைத்தியரே! கொஞ்சம் கைபாருங்கள்.

(வைத்தியர் உட்கார்ந்து நட்சத்திரேசரது வலதுகையைப் பற்றி, நட்டை உடைத்து, நாடி பார்க்கின்றார். மேல்நோக்கிச் சற்றுக் கவனித்து விரலைக் கீழே தட்டுகின்றார்.)

**அரிச்சந்திரன்** — ஐயா! வைத்தியரே என்ன நோய் இது? எதனால் நேர்ந்தது? என்ன சிகிச்சை செய்யவேண்டும்? தயை செய்து சொல்லவேண்டும்.

**வைத்தியர்** — ஐயா! இது வாத பித்த சிலேத்தும நாடிகளின் ஏற்றத் தாழ்வினால், உஷ்ணவாயு அதிகரித்து, கடத்தில் சம்பந்தப்பட்டிருக்கிறது. இது அகால போஜனமும், நித்திரா பங்கம், அதிக நடை, ஆகாரக் குறைவு முதலியவற்றால் நேர்ந்திருக்கலாம். தக்க ஔஷதம் கொடுத்தாலன்றித் தீராது. நல்ல வேளைக்கு நம்மை யழைத்தீர்கள். நம்மை யழைத்து வந்தவர் எங்கே? இப்படி வாருமையா! (சிறிது அப்புறஞ் செல்கின்றனர். அரிச்சந்திரனும் உடன் சென்று,)

**அரிச்சந்திரன்** — ஐயா! நாடி எப்படி யிருக்கிறது? சற்று விவரமாய்ச் சொல்லுங்கள்.

**வைத்தியர்** — நோயாளியின் குணங் குறிகளை வைத்தியர் வெளிப்படையாகச் சொல்லுதல் கூடாது. அது ஆயுர்வேத விதிக்கு முற்றும் விரோதம்.

**சத்தியகீர்த்தி** — ஐயா! அவ்வகைய சந்தேகம் தங்களுக்கு எம்மிடம் வேண்டுவதில்லை. யாங்கள் எப்போழ்தும் உண்மைக்கே உத்தரவாதமாவோம். தயை செய்து கூறுங்கள்.

**வைத்தியர்** — உங்களுக்கு உரைப்பதில் எமக்குத் தடையில்லை. இது நோயாளிக்குத் தெரிதல் கூடாது. தெரிந்தால் ஐந்து தினங்களில் நீங்கு முயிர், ஐந்து நாழிகையில் நீங்கிவிடும். வாத நாடி அழுந்தியிருக்கின்றது. அது எழுந்தால்தான் தைரியம். இல்லாவிடில் ஒன்றும் இல்லை. இப்பொழுதே முக்காற் பங்கு முழுகி அசாத்தியத்தில் இருக்கிறது. இனி நம்முடைய ஔஷதம் வேலை செய்தால்தான் உண்டு. சண்ட தண்ட நீலகண்ட பதாங்குசம் என்பது இந்த ஔஷதத்தின் பெயர். சஞ்சீவி, முப்புக் கலந்துள்ளது. இதைப் பிரயோகிக்கிறேன். பிறகு உங்கள் அதிர்ஷ்டம். ஆனால், சொன்னதைமாத்திரம் நோயாளிக்கு வெளியிடவேண்டாம். நாம் அகல வந்து பேசியதனால், அவரும் சந்தேகப்பட்டு, வைத்தியர் யாது கூறினார் என்றால், அதெல்லாம் ஒன்றுமில்லை, விரைவிற் குணமாகு மென்று சொன்னார் என்று தைரியஞ் சொல்லுங்கள்.

**அரிச்சந்திரன்** — இந்த மாத்திரைக்கு அநுபானம் யாதோ?

**வைத்தியர்** — அநுபானம் ஒன்றுமில்லை. இந்த மாத்திரையை வாயிலிட்டு ஒரு மிடறு தண்ணீர் விட்டாற்போதும். போய்ச் சீக்கிரம் கொடுங்கள். வாய் தவறிச் சங்கதியை வெளியிடப் போகின்றீர்கள்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! ஔஷதம் ஒன்றுமில்லையா! யாதோ தூரத்தில் சென்று பேசுகின்றீர்களே.

**அரிச்சந்திரன்** — இதோ மருந்து கொண்டு வருகின்றோம்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர, உடற்கூறு எவ்வாறிருக்கின்றதாம்?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! வாதம் அழுந்தி,

**வைத்தியர்** — ஆ, ஆ, இரும். மாத்திரையைக் கொடும்.

**நட்சத்திரேசன்** — அதிருக்கட்டும். வைத்தியர் என்ன சொல்கின்றார்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! வாதநாடி அழுந்தியிருக்கின்றதாம் (வைத்தியர் முறைத்துப் பார்க்கின்றார்.) அது எழுந்தாலன்றி உறுதி கூறுவது கூடாதாம். அது எழுவதற்கே இப்போது ஔஷதம் கொடுப்பது. இதனை அருந்துங்கள். இறைவ னருளாற் குணப்படும். குறை யாதும் நேராது. (மருந்து கொடுக்கிறான்.)

**வைத்தியர்** — யாரையா நீர்! நாம் முன்னமே வரமாட்டோம் என்றோம். வலிந்து அழைத்து வந்தீர். நாம் வேண்டாமென்று பல முறை. தடுத்து உரைத்தும், அதனை அசட்டை செய்து, நோயாளி நிலைமையுமாறு சொல்லிவிட்டீர்கள். இதனால் எமக்கு எவ்வளவு பாவம் நேர்ந்துவிட்டது. புண்ணியத்திற்கு வந்து, பாவத்தைக் கட்டிக்கொண்டாற்போலாயிற்றே. குளிக்கப் போய்ச் சேற்றையா பூசிக்கொள்வது. இதென்ன காலம்! வேண்டாம் என்றதை ஏன் வெளியிட்டீர்? பயமே பாதி உயிரைப் போக்கிவிடுமே. ஆ, ஆ, என்ன, அறியாமல் வந்துவிட்டோம்! இட மறியாமல் இதம் புரிய லாகாது. பாத்திரம் அறிந்து பிச்சை யிடு என்று வீணைகவா வாக்கியம் பிறந்திருக்கின்றது.

**அரிச்சந்திரன்** — ஐயா! மன்னிக்கவேண்டும். உண்மைக்கு ஒரு காலத்தும் பழுதில்லை. உயிரினும் உண்மையே சிறந்தது. ஆதலால், பொய்ம்மொழி புகலுவது ஒருபோதுங் கூடாது. அதனால் உள்ளதை வெளியிட்டேன். மன்னித்துக்கொள்ளுங்கள்.

**வைத்தியர்** — என்ன மன்னிப்பது. உயிரினும் உண்மை சிறந்தது. உம்முடைய உயிராயின் உமக்குத் தெரியும். பிறர்

உயிர் எப்படியானால் உமக்கென்ன. அச்சத்தினால் தீங்கு விளையும் என்று சொன்னால், கலைஞானங்க ளெல்லாம் பேசுகின்றீரே. (நட்சத்திரேசரை நோக்கி) இவர்களோடு உம்மை யாரையா வரச் சொன்னார். உம்மை உயிரோடு வதைத்து விடுவார்கள்போற் காண்கின்றதே. உடனே உம்முடைய ஊர் போய்ச் சேருமையா! உம்மைக் கண்டால் உத்தமர்போற் காண்கின்றது.

**நட்சத்திரேசன்** — ஐயோ, அரிச்சந்திர! என்னை இப்படியும் வதைக்க லாகுமா. வைத்தியரும் கைவிட்டார். இனி ஒரு க்ஷணமும் உங்களோடு யான் இருப்பது கூடாது. பிறவுயிர் காப்பதே போறும். இதை யோசித்து எனக்குச் சேரவேண்டிய பொருளைச் செலுத்திவிடு. யான் போகின்றேன். ஐயோ அநாதபிரேதமாகப் போகும்போற் காண்கின்றதே. என் குருநாதர் அருகில் எனது உயிர் நீங்கினால் எனக்கு எல்லாப் பதவியும் சித்திக்குமே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் அஞ்சவேண்டாம். கடவுளருளால் தங்களுக்கு ஒரு குறையும் நேராது. இப்போது தாங்கள் உட்கொண்ட மருந்தே இறைவனருளால் குணஞ் செய்துவிடும். சீக்கிரத்தில் தம்மை யனுப்பி விடுகின்றேன். மன்னிக்கவேண்டும்.

**நட்சத்திரேசன்** — ஐயா வைத்தியரே, கேட்டீர்களோ இந்த நியாயத்தை. இப்படி வாரும், மற்றொரு முறை கை பாரும்.

**வைத்தியர்** — (அருகிற்சென்று கையைப் பற்றிக்கொண்டு) நட்சத்திரேசரே, நாம் எவ்வாறு முயன்றும் பயன் காணோம். சிறு பொய்யும் வெளிப்படுத்துவதாக ஏற்படவில்லை. உலகில் எப்படிப்பட்டவரும் நோயாளிக்கு மறைத்துக் கூறுவர். அவ்விடத்தும் இவன் மனம் அசையவில்லையே. இன்னும் முனிவர் எப்படித்தான் இவனை வெல்வாரோ அறியோம்! யான் செல்கின்றேன்.

**நட்சத்திரேசன்** — செல்லும். சென்று எல்லாவற்றையும் சொல்லும்.





# அங்கம்—III

## முதற் களம்

**இடம்:** *கங்கைக் கரை, ஆலயம்.*

**காலம்:** *காலை.*

**பாத்திரங்கள்:** *அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்திய கீர்த்தி, நட்சத்திரேசன், இரசவாதி.*

**அரிச்சந்திரன்** — பெண்மணீ, சந்திரமதி! இதோ நாம் கங்கைக் கரையினை யடைந்தோம். இனி, நாம் இந்தப் புண்ணிய நதியில் நீராடி, பூசை முடித்து, ஆலயத்தை யடைவோம். இந் நதிக் கரையில் காணும் ஒவ்வொரு துறையும் ஒரு கட்டம் எனப்படும். ஒவ்வொரு கட்டத்திற்கும் ஒவ்வொரு பயன் உண்டென்று துறவிகளும் கட்டந்தோறும் நீராடுவர். இது வருண கட்டம், இது சந்திர கட்டம், அது பரமபதி கட்டம். மற்றும் பல கட்டங்கள் உண்டு. இவை யனைத்தினும் பரமபதி கட்டமே மிக மேலானது. படிந்தோருடைய பாசமனைத்தும் போக்கிப் பரகதியை யடைவிக்கும் பண்பினை யுடையது. அதன்கண்ணே நாமும் நீராடுவோம்.

**சத்தியகீர்த்தி** — அரசே! அடியேன் அவ்வருண கட்டத்தில் இறங்கி நீராடுகின்றேன்.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அப்படியே செய்யும். (*நட்சத்திரேசனை நோக்கி*) சுவாமீ! தாங்களும் இறங்கலாமே.

**நட்சத்திரேசன்** — நானும் இறங்கலாமா — இதிலொன்றும் பயனில்லை. பொருள் வரும் வழியைத் தேடுங்கள்.

(*நீராடி ஆலயத்தை யடைகின்றனர்.*)

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! இதோ கண்டனையா கோபுரந் தரிசனமாகின்றது. இதனையே ஸ்தூல லிங்கம் என்பர் பெரி-

யோர். அதனை முன்பு வணங்குதல் வேண்டும். (கும்பிடு-கின்றார்கள்.)

**சந்திரமதி** — கண்மணீ, தேவதாச! இதோ கோயில் தெரிகின்றது, பார். கை கூப்பிக் கும்பிடு. (கும்பிடுகின்றான்.)

**அரிச்சந்திரன்** — சத்தியகீர்த்தி! இது கண்டீரோ! இவ்வாலயக் கோபுர முற்றும் பொன்மயமாகக் காண்கின்றது. பொற்கோ-புரமென நம் குருநாதர் கூறக் கேட்டிருக்கின்றோ மன்றே.

**சந்திரமதி** — ஆம் அரசே! பொற்கோபுர தரிசன பலத்தினால், நமக்கும் பொன் கிடைத்து, முனிவர் பொருளைக் கொடுத்து-விட நேரும். அதற்கே இது முற்குறிபோற் காண்கின்றது.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! ஆலயத்துள் ஒடுங்கி ஒதுங்கி வருவாய். இனி, இறைவனையும், இறைவியையும் துதித்துப் பாடுவோம்.

(பாடுகின்றான். மற்றையோர் கைகூப்பி நிற்கின்றனர்.)

திருச்சிற்றம்பலம்

பத்தனாய்ப் பாட மாட்டேன் பரமனே பரம யோகி
எத்தினாற் பத்தி செய்கேன் என்னைநீ இகழ வேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத் தாடு கின்ற
அத்தாவுன் ஆடல் காண்பான் அடியனேன் வந்த வாறே.

கருத்தனாய்ப் பாட மாட்டேன் காம்பன தோளி பங்கா
ஒருத்தரா லறிய வொண்ணாத் திருவுரு வுடைய சோதீ
திருத்தமாந் தில்லை தன்னுள் திகழ்ந்தசிற் றம்ப லத்தே
நிருத்தநான் காண வேண்டி நோபட வந்த வாறே.

பொய்யினைத் தவிர விட்டுப் புறமலா வடிமை செய்ய
ஐயநீ யருளிச் செய்யாய் ஆதியே ஆதி மூர்த்தி
வையகந் தன்னின் மிக்க மல்குசிற் றம்ப லத்தே
ஐயநின் ஆடல் காண்பான் பரமநான் வந்த வாறே.

திருச்சிற்றம்பலம்

மெய்யனே விமலா காசி மேவிய கருணை வாழ்வே
கையனேன் களைக ணில்லேன் கருத்தொடுங் கருமம் பொல்லேன்
உய்யநேர் வழிகண் டெந்தாய் உனதடிக் கடிமை பூண்டேன்
பொய்யிலார் உள்ள மேவும் புனிதனே போற்றி போற்றி.

மெய்யுரு வான நின்னை மெய்யினால் அறிய தல்லால்
பொய்யுரு வான மாந்தர் பொய்ம்மையா லறித லாமோ
செய்யுறு வளஞ்சால் காசிச் செல்வனே யுனைய டைந்தேன்
பொய்யிலார் உள்ள மேவும் புனிதனே போற்றி போற்றி.

தையலார் மையல் கொய்தும் தவம்பல வருந்திச் செய்தும்
மெய்யிலா ரானபோது மெய்ப்பொருள் காண்ப தேது
நெய்யிலார் சுவையாய்க் காசி நிலவிய பரனே எந்தாய்
பொய்யிலார் உள்ள மேவும் புனிதனே போற்றி போற்றி.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இதென்ன வீண் காலட்சேபமாக விருக்கின்றது. பொழுதாக வில்லையோ! உங்களுக்கென்ன, எங்கிருந்தாலும்? நானன்றோ பாடுபடுகிறவன். "காசிக்குப் போனாலுங் கருமந் தொலையாது" என்னும் முதுமொழியை அறியாயோ! முயற்சி திருவினை யாக்கும். வீணே கோயி-லில் நின்று புலம்புவதில் என்ன குணம். புறப்படு, புறப்-படு. தத்துவ சாஸ்திரி என்னென்ன ஓதினார். அவற்றைக் கேட்டும் உனக்கு இப் பயித்தியம் விடவில்லையே!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இதோ வந்துவிட்டோம். 'அவனருள் அற்றார், அனைத்தையும் அற்றார்' என்பர் மேலோர். நாம் அனைவரும் இறைவனது உடைமைகள். அவன் கையிற் பாவைகள். அவன் பாவையாகிய நம்மை வினையாகிய கயிற்-றால் ஆட்டுகின்றான். அதனால் அவனருளை நாடினோர்க்கு யாவும் எளிதிற் கிடைக்கும். இனி, வாருங்கள் போவோம்.

(அனைவரும் வெளிவருகின்றனர்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இந்த வாசா கயிங்கரியங்க ளெல்-லாம் அப்படி யிருக்கட்டும். நீ கும்பிடு, வணங்கு, விழு, பாடு எனக்கென்ன? செலுத்தவேண்டிய பொருளுக்கு வழி சொல்லு. காசி, காசி என்றாய்; காசிக்கும் வந்தாயிற்று. கடனுக்கு என்ன செய்யப் போகின்றனை. இனி, ஒரு கண-மும் யான் பொறுத்தல் முடியாது. கொடுத்தால் உடனே கொடு, இன்றேல் இல்லையென்று சொல்லிவிடு, யான் போகின்-றேன். தாட்சிண்யம் தன நாசம். இனி உன்னிடத்து இரக்-கங் காட்டுவதில் பயனில்லை. என் குருநாதரும் கோபிப்பர்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! சற்று மன்னிக்க வேண்டும். இனி ஒன்-றும் தடையிராது. எவ்விதத்தாலாயினும் விரைவிற் பொருள் முழுதுஞ் செலுத்தி விடுகின்றேன்.

**நட்சத்திரேசன்** — பொருள் முழுதும் என்றால் தெரியவில்லையே. அரை குறையாகச் செலுத்தவும் அபிப்பிராயமுண்டோ! அதையாயினும் முன்பு வெளியிடு.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் இவ்வாறு தர்க்கித்தால் அடி-யேன் எவ்வாறு விடை யுரைப்பது. இன்று சிறிதும், மறுதி-னஞ் சிறிதும் கொடுத்து ஒப்படையாமல், ஒரே முறையில் முழுவதும் கொடுத்து விடுகின்றேன் என்றேனே யல்லது வேறன்று.

**நட்சத்திரேசன்** — ஆனால் சரி, சரி, ஆகட்டும். விரைவில் முடித்து-விடு.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அவ்வாறே செய்கின்றேன். தாங்கள்மட்டும் சற்று மன்னிக்கவேண்டும். (சற்று அப்பாற் சென்று) சத்தியகீர்த்தி! நாம் இக் காசியம்பதியை யடைந்து இரண்டு நாட்களாகின்றன. முனிவர் கடனைத் தீர்த்தற்கு நாம் முயல்வது ஒரு பங்காயின், இத் தாரகைத் தணிவிப்பதற்கு முயல்வது நூறுபங்காக விருக்கின்றது. தவணையும் சமீபித்து விடுகின்றது. பொருள் வருவாய்க்கு ஒரு வழி தேடுதல் வேண்டும். என்ன செய்யலாம்? சத்தியகீர்த்தி!

**சத்தியகீர்த்தி** — அரசே! இக் கவலை அடியேனது மனத்தினின்று சற்றும் அகன்றதன்று. நாம் நகரைவிட்ட நாள்முதல் இதனையே மனத்துள் நாடி வருகின்றேன். நாம் நமது நாடு முதலிய பொருள் முழுதும், முனிவர்க்கு உரிமையாக்கி விட்டோம். நாம் உடுத்துள்ளதும் பழய வஸ்திரங்கள். நமக்கு உடைமையாய் நின்றது நமது உடல் ஒன்றே. அவ்வுடலையே எவர்க்காயினும் உழைக்க உடன்பட்டு, அதன்பொருட்டு முற்பொருள் கொண்டு, முனிவர் கடனைத் தீர்க்க முயலவேண்டும். அதற்குத் தங்களது அடைக்கலப் பொருளாயுள்ள அடியேனே ஒருவர்க்கு உழைக்க உடன்படுகின்றேன். தேவரீர் அப் பொருளைப் பெற்று முனிவரது கடனை முட்டின்றித் தீர்த்துவிடலாம். மற்றும் பற்பலவாறாய் எண்ணுவதில் பயனின்று, அரசே!

**அரிச்சந்திரன்** — சத்தியகீர்த்தி! நீர் கூறியது உண்மையே. எனினும், நீர் தாமே உழைப்பதாய்ச் சொல்விக்கவேண்டும் என்னும் குறிப்பினால் அன்று யான் உம்மை வினவியது. எமது கடன்பொருட்டு நீர் உம்மை ஒப்புக்கொடுக்க உடன்பட்டமைக்குச் சால மகிழ்கின்றேன். முனிவர்க்குக் கடமைப்பட்டவன் யானே. ஆதலால் யானே ஒருவர்க்கு உழைத்து அக் கடனைத் தீர்த்தல் முறையாவதன்றி, அதன்பொருட்டு உம்மை உழைக்கச் செய்வது எவ்வாற்றானும் பொருந்தாது.

(இரசவாதி வருகிறான்.)

**இரசவாதி** — ஐயா நீங்கள் யார்? ஏதோ பொருளென்றும், பொன்னென்றும், உழைப்பதென்றும் பேசுகின்றீர்களே அதென்ன? அதை நாமும் சிறிது அறியலாமோ?

**சத்தியகீர்த்தி** — ஐயா! பொன்னுமில்லை, பொருளுமில்லை. ஏதோ எங்கள் விஷயமாய்ப் பேசுகின்றோம்.

**இரசவாதி** — ஐயா! தாங்கள் ஏதோ இரங்கிய மனத்துடன் பேசுகின்றீர்கள். அதற்கு முன் "கடன், உடன்" என்றாற்போற் காதிற்பட்டது. அது இன்னதென்று சிறிது தெரிந்தால்,

நாம் ஏதேனும் செய்யலாம் என்னும் எண்ணங்கொண்டே உங்களைக் கேட்டது. மற்றொன்று மில்லை. மன்னித்துக்-கொள்ளுங்கள்.

சத்தியகீர்த்தி — ஐயா! தங்களது இரக்கத்திற்கும், இனிய மொழி-க்கும் வந்தனம் புரிகின்றோம். தாங்கள் அறியக்கூடாதது ஒன்றுமில்லை. யாங்கள் ஒரு முனிவர்க்குக் கடன் கொடுக்க-வேண்டும். அதன்பொருட்டு யோசிக்கின்றோம்.

இரசவாதி — ஓகோ, அப்படியா? அதற்குத்தான் கேட்டது. இந்த நாய்க்கு இறைவனருளாற் சிறிது பொருள் உண்டு. அது குரு கடாக்ஷத்தினு லுண்டானது. இந் நாய் இளமைமுதல் பெரியோர் தொண்டுசெய்து, அந் நாதாக்களுடைய அநுக்-கிரகத்தினுல் கொஞ்சம் நன்மார்க்கத்தை யடைந்தது. பிறகு இக் கோபுரத்தைப் பொன்னுல் புதுக்கியதும் இந்த நாய்தான். இப்போதும் அந்த நாதாக்களுடைய கட்டளைப்படியே கொஞ்சம் பரோபகாரம் செய்துவருகின்றது. நோயாளிக்கே மருந்து குணஞ்செய்யும். அதுபோல், துன்ப முற்றூர்க்கே உபகாரம் பயனுடையதாகும். நீங்கள் நன்னிலையி லிருந்த-வர்களாக உங்கள் முகங் காட்டுகின்றது. உங்களுக்குள்ள கடன் இவ்வளவு என்று வெளியிட்டால் தக்கது செய்யலாம்.

அரிச்சந்திரன் — ஐயா! 'திக்கில்லார்க்குத் தெய்வமே கதி' என்பது போல் தங்களை இவ்விடத்தே இறைவனருள் கூட்டுவித்தது. யாங்கள் விசுவாமித்திர முனிவர்க்கு நூறு லட்சம் பொன் கடன் செலுத்தவேண்டும். இது ஒன்றே எங்களுக்குள்ள பெருங்கவலை.

இரசவாதி — ஓ, ஓ, தொகை சற்று அதிகமாகத்தா னிருக்கின்றது. நூறு லட்சம் பொன்னு! எனினும் இந்த நாய்க்கு இது ஒரு பெருங் காரியமன்று. ஒரு நாழிகை முயற்சியும், ஒரு கடு-களவு அழுக்குமே செலவு. இருக்கட்டும். இதற்கு நீங்கள் ஈடாகக் காட்டுவது யாது?

அரிச்சந்திரன் — ஐயா! ஈடு காட்டுவதற்கு ஏதாவது இருப்பின், எமக்கு ஏன் இப் பெருங் கலக்கம். எங்களது உடலன்றி வேறொன்றும் எமக்கு உடைமை யில்லை. தாங்கள் தயை-கூர்ந்து இந்தத் தொகையை யளித்தால், எங்களில் ஒருவரே-னும், அனைவருமேனும் தங்களுக்கு அடிமைப்பட்டு உழைக்-கின்றோம். இது ஒன்றே எமக்குள்ள வழி.

இரசவாதி — நூறு லட்சம் பொன்னுக்கு ஒப்புப்பொருள் ஒன்று மில்லையா? நீங்களென்ன இந்த நாய்க்கு உழைப்பது. உங்-

களை உற்றுக் கவனித்தால் சிறிதும் சிரமப்பட்டு உழைக்கக் கூடியவர்களாகக் காணப்படவில்லையே.

**அரிச்சந்திரன்** — ஐயா! அவ்வாறு எண்ணவேண்டாம். தாங்கள் தயைகூர்ந்து இப் பொருளை யளித்துவிடின், தாங்கள் காலாற் காட்டிய வேலையைக் கையாற் செய்துகொண்டு, இட்டதை யுண்டு, நாள் கழிப்போம். இதிற் சற்றும் ஐயம் வேண்டாம்.

**இரசவாதி** — சரி இருக்கட்டும். நமக்கும் ஆட்கள் வேண்டுவது அவசியமே. முனிவர்க்குக் கடன் செலுத்தவேண்டியவர் உங்களில் யாவர்?

**அரிச்சந்திரன்** — ஐயா! அடியேன்தான்.

**இரசவாதி** — ஆ, ஆ, அப்படியா! அதை இங்குப் பெற்றுக்கொள்பவர் யார்?

**அரிச்சந்திரன்** — ஐயா! அதோ நிற்கும் அந்தணரே பொருளைப் பெற்றுக்கொள்ள எம்முடன் வந்திருப்பவர்.

**இரசவாதி** — சரி, (நட்சத்திரேசனை நோக்கி) ஐயா சுவாமிகளே! இப்படிச் சற்று வாருங்கள்.

**நட்சத்திரேசன்** — இதோ வந்துவிட்டேன். பொருள் வந்துவிட்டதோ?

**இரசவாதி** — ஆ, ஆ, பொருளுக் கென்ன, இதோ இந்த நாய் ஒரு நாழிகையில் கொடுத்துவிடும். உமக் கென்ன நூறு லட்சம் பொன்னு சேரவேண்டும்?

**நட்சத்திரேசன்** — ஆம், ஆம், அவ்வளவுதான்.

**இரசவாதி** — இந்தத் தொகை முழுதுக்கும் செம்பொன் வேண்டுமோ? வெண்பொன் வேண்டுமோ.

**நட்சத்திரேசன்** — ஏன் கரும்பொன் கொடுத்துவிடுமே. இவ்வளவு பெரிய தொகைக்கு ஒருவன் வெண்பொன்கூட வேண்டுவானோ?

**இரசவாதி** — சரி, செம்பொன்னே தருகின்றோம். ஆனால் ஒன்று. சற்றுக் கவனமாய்க் கேளும். நாம் செய்துள்ள பொன் சாதாரணப் பொன்னைப் போன்றதல்ல.

**நட்சத்திரேசன்** — என்ன, என்ன! நீங்கள்—செய்துள்ள பொன்னு!

**இரசவாதி** — ஆமாம், ஆமாம். இந்த நாய் செய்துள்ள பொன். அது எட்டு மாற்று பத்து மாற்றுப் பொன்னல்ல. ஆயிரம் மாற்றுள்ள சாம்பூநதத்திற்கும் உயர்வானது. அதுவே சிவம். ரவியைக் களிம்பு நீக்கி வெட்டையைப் போக்கினல்,

அதறகு முன் எந்தப் பொன் நிற்கும். இதற்குத்தான் மகான்களெல்லாம் தவம் செய்வது. பொன்னம்பலம் என்பது என்ன 'பொன்னைக் கண்டவனே பொன்னம்பலத்தைக் கண்டவன்' என்னும் வாக்கியம் தெரியாதா! இந்த நாய் அநேக மகான்களை அடுத்து, அவர்களிட்ட எச்சிலை யுண்டு, தொண்டு செய்து பெற்ற அநுக்கிரகம் இது. இதற்காகக் காட்டிலும் மலையிலும் திரிந்து, காய்கனிகளை யருந்திக் காத்திருந்து, பருவம்நோக்கி, வழலையை எடுத்து, தீட்சை செய்து, செய நீர் இறக்கி, முப்பு முடித்து, அதையே காயகற்பமாக்கி யுண்டு, ஜீவன்முத்த பதத்தை யடைந்திருக்கிறது இந்த நாய். அப்படிப்பட்ட அரிய தவத்தால் வரும் பொன்னின் தன்மை எப்படியிருக்கும், யோசித்துப் பாரும்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, அப்படியா? இவை யனைத்தும் யாருக்குத் தெரியும்! இருக்கட்டும், அதனால் உமது கருத்து யாது?

**இரசவாதி** — கருத்தா சொல்லுகிறேன். நாம் கொடுக்கும் ஒரு வராகன் எடைப் பொன்னைச் சாதாரண பொன் நூறு வராகன் எடைக்கு ஒப்பாக ஏற்றுக்கொள்ளவேண்டும். இதற்கு உடன்பட்டால், உடனே அளித்துவிடத் தடையில்லை. பாவம் அவர்கள் ஏன் வீணாக வருந்தவேண்டும்.

**நட்சத்திரேசன்** — சரி, என்ன செய்வது. இன்னும் இருந்து இவர்களிடத்தில் நமது உயிரைப் பறிகொடுப்பதிலும் வந்த வரையில் பெற்றுக்கொண்டு போவதே நலம். கொடும், கொடும், உடனே எண்ணிவிடும்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அவ்வாறு குறைவாகப் பெற்றுக்கொண்டு போகவேண்டாம். அப்பொருளைப் பார்த்து, அவர் சொல்வதுபோல் ஏற்றுக்கொள்ளத் தக்கதாயின் பெற்றுக்கொள்ளுங்கள்; இன்றேல், மறுத்துவிடுங்கள். யாங்கள் மற்றெவருக்கேனும் அடிமைப்பட்டுத் தங்கள் பொருளைச் செலுத்தி விடுகின்றோம்.

**நட்சத்திரேசன்** — சரி, சரி, இனி இவற்றையெல்லாம் கவனித்தால் பயனில்லை, கொடுத்து விடட்டும். "வாதப் பொன்னுக்கு மாற்றதிகம்" என்பர் எமது குருநாதரும். ஐயா! நீர் தருவது சுயமான வாதப்பொன் தானே.

**இரசவாதி** — என்ன அவ்வாறு கேட்கின்றீர்கள்? சந்தேகமோ? இதோ பாரும் ஒரு துண்டு. கரியை ஊதி யூதிக் கண்கெட்ட போலி வாதிகள், ரவியையும் மதியையும் கலக்கப் பார்த்து, தாயைச் சேர்த்து, பித்தலாடகம் செய்கின்றார்களே, அவ்-

வாறு இந்த நாய் செய்யாது. சோதித்துப் பாரும் நன்றாய். (கொடுக்கிறான். அரிச்சந்திரனை நோக்கி) ஐயா! இங்கு சற்று வாரும். (அரிச்சந்திரன் போகின்றான். இரசவாதி ரகசியமாய்) ஐயா! ஏழைகளை ஏமாற்ற லாகாது. உள்ளதை உரைக்க வேண்டும். எங்கள் குருநாதர் கட்டளை அப்படியே. இந்த ரகசியத்தை வெளியிடவேண்டாம். எல்லாம் தந்திரந்தானே. உலகமே மயக்கமானது. மயக்கமில்லாமல் ஒன்றுமில்லை. அந்த மயக்கந்தான் மாயை. கேட்டீரோ, இப் பொன் மிக மேலானது. மாற்று நிறம் நயப்பு முதலியவற்றில் இதற்கு இணையாக இவ் வுலகில் வேறு கிடையாது. ஆனால் ஒன்று. இக் குணங்களெல்லாம் இரண்டு வருடங்கள் வரையில் எள்ளளவும் வாங்காது. பின்பு கொஞ்சம் வெளிறு காட்டும். அப்போதும் தங்கத்திற்குப் பின்வாங்காது. முனிவர் இப்பொன்னை இரண்டு வருடம் வரையிலா வைத்திருக்கப் போகின்றார். அவரும் செலவுதானே செய்யப்போகின்றார். இதை உமக்குச் சொல்லிக் கொடுக்கவேண்டும் என்பது என் எண்ணம். ஏனெனின், இன்றிருந்து நாளை போய்விடுகிறவர்களானால் எப்படியுஞ் செய்யலாம். சதா நம்மிடம் ஆட்பட்டிருக்கப் போகிறவர்கள். எப்படியும் உங்களுக்குத் தெரிந்துவிடும். அப்போது நீங்கள் என் விஷயமாய் ஏதோ நினைக்கவரும். அதனினும் இப்பொழுது உரைத்துவிடுவதே நலமென்று சொல்லிவிட்டேன். என்ன சொல்லுகிறீர்கள்? கொடுத்துவிடலாமே.

**அரிச்சந்திரன்** — ஐயா! இது பெருஞ் சூது, வஞ்சகம். இக் காரியம் எவர்க்கும் அடாது. இவ்வாறு செய்வதினும் ஒருவன் தன் உயிரை விடுதல் நலம். 'வஞ்சகம் பேசேல்' என்பது நீதி வாக்கியம். வஞ்சகம் பேசுதலே தீது என்றால், அதைச் செய்வது என்னாகும்! தாங்கள் உள்ளதை உரைத்ததற்கு ஒரு கோடி வந்தனம் புரிகின்றேன். யாங்கள் போய் வருகின்றோம்.

**இரசவாதி** — என்ன ஐயா! பயித்தியமாயிருக்கிறீர். உம்மைப்போல் உலகத்தில் ஒருவரையுங் காணவில்லை. இரும் சொல்கின்றேன். (சத்தியகீர்த்தியை நோக்கி) ஐயா! உம்மைத்தான், இங்கு வாரும்.

**சத்தியகீர்த்தி** — ஐயா! இதோ வந்தேன்.

**இரசவாதி** — இவரென்ன உலகியல் ஒன்றுந் தெரியாதவராக இருக்கிறார். சற்று அருகில் வாரும். அந்தத் தாரகருக்குக் கேட்கப்போகிறது. பெண்கள் காதில் படுவதும் கூடாது. என்ன, ஒரு சிறு விஷயம். இந்தப் பொன்னைப் பார்த்தீரா?

**சத்தியகீர்த்தி** — ஆமாம், ஆமாம். இளஞ் சூரியன்போல் இருக்கின்றது.

**இரசவாதி** — இருக்கிறதன்றே! அதில் ஒரு சிறு குறை யுண்டு. அதாவது இரண்டு மூன்று வருடங்களுக்குப் பிறகு சிறிது நிறம் மாறிக் காட்டும். அப்போது அதற்குத் தக்கவாறு சற்று விலை குறைபடும். நான் உள்ளதை உரைத்து, இதைக் கொடுத்துவிடலாம் என்றேன். இவர் ஏதோ கூடவே கூடாதென்று மறுக்கின்றார். நீரே அவருக்கு ஏற்றவாறு சொல்லும்.

**சத்தியகீர்த்தி** — ஐயா! அவருக்கா நாம் சொல்வது! சத்தியமே உருக்கொண்டு இந்த தாணியில் வந்தவர். அவருக்குச் சொல்வது இருக்கட்டும், இவ்வகைய வஞ்சகம் மானிடர்க்குச் சிறிதும் அடாது. விலங்கினங்களும் இதனை விலக்கி நடத்தல்வேண்டும் என்றால், நாமோ செய்வது! கூடாது கூடாது. இதனினும் இல்லையென்று மறுத்துவிடல் நலமாகுமே.

**இரசவாதி** — சரி, அப்படியாவது சொல்லிவிடலாம். இதற்கு ஏதேனும் எழுத்து மூலமாய்ப் பத்திரமுண்டோ!

**சத்தியகீர்த்தி** — ஐயா! இக் கொடுமையான சொற்களை எங்கள் காதில் போடவேண்டாம். கொடுக்கவேண்டிய பொருளை இல்லை யென்று யார் சொல்வது! அது மனித ஜன்மத்திற்குத் தகுமா? மோசம் முத்திக்கு நாசம். எழுத்திருந்தால் உண்டு என்பதும், எழுத்தில்லாவிடில் இல்லை யென்பதும் யாவர் செய்கை! ஆ, ஆ, என்ன காலம்! என்ன உலகம்! உலகம் பொய் என்பது இதுதானே! ஐயா எம்மை மன்னித்துக்கொள்ளும். தங்களுக்கு வீணே சிரம முண்டாக்கினோம். போய், வேறு வகையில் பொருள் தேடிக், கடனை யடைக்கின்றோம். (அரிச்சந்திரனை நோக்கி) அண்ணலே! வாரும், போகலாம்.

**இரசவாதி** — ஐயா! கோபம் வேண்டாம், யான் உங்களுக்கு நற்காரியம் சொன்னேன். மனமிருந்தால் செய்யுங்கள். இல்லாவிடின் இவ்விடத்திலேயே இவ் விஷயத்தை விட்டுவிடுங்கள். மறுபடியும் நினைக்கவும் வேண்டாம். ஒருகால் அந்தத் தரகர் என்னவென்று கேட்டால், என்னை யிழுத்து வெளியிடப் போகிறீர்கள். புண்ணியம் பார்க்கப் போய் பாபம் வாய்க்கப் போகிறது.

**அரிச்சந்திரன்** — (நட்சத்திரேசனை நோக்கி) சுவாமி வாருங்கள் போவோம்.

**நட்சத்திரேசன்** — போவதா! பொருளெங்கே?

**அரிச்சந்திரன்** — அது தங்களுக்குப் பயன்படாது. வாருங்கள்.

**நட்சத்திரேசன்** — பொன் பயன்படாதா! என்ன புதுமை! கடன் கொடுக்க மனமில்லையோ? இதைவிட இல்லையென்று சொல்லிவிடுவதற் கென்ன தடை? யாரோ புண்ணிய புருஷன் பொருள் கொடுக்க முன்வந்தால், அது பயன்படா தென்கின்றாயே. உன் கருத்துத்தான் என்ன? மனத்தில் ஒன்று வைத்துக்கொண்டு, என்னை எதற்கு இப்படி வதைக்கின்றாய். "உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவோர் உறவு கலவாமை வேண்டும்" என்பதை உன் விஷயமாகச் சொல்லலாம்போற் காண்கின்றதே. பொன் ஏன் பயன்படாதென்கிறாய்? என்ன சங்கதி? சத்தியகீர்த்தி!

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! அரசரே அனைத்தும் உரைப்பர். அவசரப்பட்டால் என்னாகும்? சுவாமீ!

**நட்சத்திரேசன்** — அவசரமா! நடுவில் ஒரு வார்த்தை நன்றாய்க் கூறுகின்றாயே. இருக்கட்டும், நமது காலபலன். அரிச்சந்திர! என்ன சங்கதி.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! யாங்கள் தங்களை வஞ்சிப்பது தருமமாகுமா?

**நட்சத்திரேசன்** — பொன்னைப் பெற்றுக்கொண்டு என்னிடம் கொடு என்றால் வஞ்சிக்கலாமோ என்கிறாயே. வஞ்சிக்கலாம், வஞ்சித்தாலென்ன. இது எப்படி வஞ்சகமாகும். எனக்கு ஒன்றுந் தோன்றவில்லையே. எல்லாம் மறைத்துப் பேசுகின்றீர்களே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! மறைப்பது ஒன்றுமில்லை. அவர் பொன்தர உடன்பட்டனர். பின்பு—

**நட்சத்திரேசன்** — பின்பு என்ன கொடுக்கமாட்டேன் என்றாரோ?

**அரிச்சந்திரன்** — கொடுக்கமாட்டேன் என்னவில்லை.

**நட்சத்திரேசன்** — மற்றென்ன? உனக்குக் கொடுக்க மனமில்லையோ?

**அரிச்சந்திரன்** — அந்தோ, அவ்வாறு முண்டோ! அவர் தரும் பொன் சுமார் இரண்டு வருடங்களுக்குப்பின் குணத்திற் சிறிது குறைபடும் என்கின்றனர்.

**நட்சத்திரேசன்** — குறைபட்டால் என்ன?

**அரிச்சந்திரன்** — அப்போது விலையிலுங் குறைபடு மன்றே? அவ்வாறு வஞ்சித்தலாகுமா? சுவாமீ!

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, அரிச்சந்திர! இவற்றையெல்லாங் கவனித்தால் காரியமில்லை. பொருள்கள் நாள்பட்டால் குணத்திற் சிறிது குறைவுதான்படும். அதனால் அதை வேண்டாம் என்னலாமோ. அன்றியும் இரண்டு வருடவரையில் இருப்பவர் யாவர்? இறப்பவர் யாவர்? அப்படித்தான் இருப்பினும், இப்பொருளை முனிவர் தம் கையிலா வைத்திருக்கப் போகிறார். பலர்க்குப் பல பாகமாகப் போகப்போகிறது. அப்போது யார் நஷ்டத்தை யார் காணப்போகின்றார். வீணே என்னை வருத்தாதே. புண்ணியவான் தருவதற் கிசைந்த பொன்னை வாங்கிக் கொடுத்துவிடு. நான் போகின்றேன். நானன்றோ வேண்டாமென்று மறுக்கவேண்டும். நானே ஒப்புக்கொள்ளும்போது, உனக் கென்ன தடை? வாங்கு, வாங்கு. இதனால் ஒன்றுமில்லை தீங்கு.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் இவ்வாறு சொல்லுவது அடியேன் மனத்தை வருத்துகின்றது. நாளடைவில் பொருள்கள் குணத்தில் மாறுபாடடைவது திண்ணம். அத்தகைய குணம் பொன்னுக்கு இன்மையால், அது உலகில் பெரு மதிப்புடன் போற்றப்படுகிறது. இயற்கைப் பொன்னுக்கு இத்தகைய குணமிராது என்பது நாம் உணர்ந்திருந்தும் செயற்கைப் பொன்னைத் தருவது வஞ்சகமாகும். அன்றி இரண்டு வருடங்களில் இருப்பாரார் போவாரார் என்கிறீர்கள். எவர் இருப்பினும், எவர் இறப்பினும் அவரவருக் குண்டான இகழ்வும் புகழ்வும் என்றும் மறையா. ஒருவரை வஞ்சித்து, அதனால் வரும் இகழுடம்பை உலகத்தில் நிறுவுவது எழுமைக்கும் நரகினை விளைக்கும். அன்றி, அப்பொன் பலரிடம் செல்லும் எனின், அதனால் ஒருவரை யன்றிப் பலரையும் வஞ்சித்ததாகும் அன்றோ? இதனினும் நரகிற் கிடந்து வருந்தல் நலமாகுமே. சுவாமீ! சிறிது மன்னித்துக்கொண்டால் நல்வழியில் பொருள் தேடிச் செலுத்திவிடுகிறேன்.

**நட்சத்திரேசன்** — நீ நன்றாய்ப் பேசக் கற்றுக்கொண் டிருக்கின்றாய். அதற்கு ஒவ்வொரு நியாயங் கூறுகின்றாய். எனக்கென்ன, நாள் நெருங்கிவிட்டது. பட்டதும் பட்டேன், இன்னும் சில நாளும் பட்டுவிடுகின்றேன். பொருளைச் சேகரம் செய்.

**இரசவாதி** — ஐயா! மிகச் சமர்த்தராக இருக்கின்றீரே! ஏது இக்காலத்தில் புண்ணியம் பார்ப்பவருக்கு அதன் பயன் உடனே சித்திக்கிறது. நான் ஏதோ நன்மைக்குச் சொன்னால், முடி-

வில் நடுத்தெருவில் இழுத்துவிட்டீரே. உமக்கு எவர் ஐயா உதவி செய்வார்! போம், போம்.

**நட்சத்திரேசன்** — (இரசவாதியை நோக்கி) ஐயா, அரிச்சந்திரனுக்கு என்ன சொன்னீர்? இப்படி வாரும்.

**இரசவாதி** — ஆமாம், சொன்னேன். சொன்னதுதான் வெளிவந்ததே (என்று சொல்லிக்கொண்டே கிட்டுகின்றான்.) நட்சத்திரேசரே! இதென்ன ஆகிற காரியம் என்று நினைக்கின்றீர்? என் புத்தியில் ஒன்றும் படவில்லை. அவனென்ன இம்மியளவும் அசைபவனாகக் காணேமே. இவனையாவது ஏமாற்றுவதாவது. அதை விட்டுவிடும், வீண் காரியம்.

**நட்சத்திரேசன்** — பார்த்துக்கொண்டீரன்றோ. இனி நான் ஒன்றும் சொல்லவேண்டியதில்லையே. போய் முனிவருக்குச் சொல்லும், என் கதியையும் சிறிது எடுத்துப் பேசும்.

**இரசவாதி** — அதற்கென்று கண்ணார இவ்வளவும் பார்த்தேனே, சொல்லமாட்டேனா! போய் வருகின்றேன்.

(போகிறான்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! வந்த பொருளையும் வேண்டாமென்றாய், இனி என்னதான் செய்யப்போகின்றாய்?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இரண்டொரு நாட்களிற் செலுத்திவிடுகின்றேன். தங்கள் பொருள் தடைபடாது, மன்னியுங்கள்.

**நட்சத்திரேசன்** — மன்னிப்ப திருக்கட்டும். எவ்விதத்தில் எனக்குப் பொருள்தரத் தீர்மானித்திருக்கின்றனை. அதையேனும் வெளியிடு. பார்ப்போம், கூடும் கூடாதென்பதை.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் சென்று, இந்நாட்டின் அரசனை யணுகி விண்ணப்பித்து, ஒரு தொழிலில் அமர்ந்து, அதன்பொருட்டு முற்பொருளாக முனிவர்க்குச் சேரவேண்டிய அளவு பொன்னைப் பெற்றுச் செலுத்திவிடுகின்றேன்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, வெகு விந்தை! இது உடனே பொருள் வரும் மார்க்கந்தான். அரிச்சந்திர! அரசன் நிலைகெட்டு மற்றோர் அரசனிடம் தொழிலில் அமர்வதா! என்ன, இவ்வாறும் உனக்கு மனந்துணிந்ததா! புலி பசித்தாலும் புல்லைத் தின்னுமா? கடுகு செத்தாலுங் காரம் போகுமா? அப்படியாயினும் நீ மனுச்செய்வ தெப்போ? அதற்கென முற்பொருள் பெறுவது எப்போ? இதென்ன! துன்பத்திற்கே இடமாயிருக்கிறது நமக்கு. இதோவென்றாலும் இரண்டு நாட்கள் செல்லுமே. சென்றாலும் பொருள் வருகிறதென்பதற்கு உறுதி

யென்ன? உன்னை இங்கு யார் அறிவர்? கைகொடுப்பார் எவர்? கொடுத்தாலும் இவ்வளவு பொருளை எவர் முன்னால் கொடுப்பர்? ஒன்றும் ஆவதாகக் காணேமே!

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் இக் காசி யரசனை நேரிற்கண்டு, எனது நிலையினை விண்ணப்பித்து, முற்பொருள் பெற்றுச் செலுத்திவிடுகின்றேன். அதனால் மிகுதியுங் காலங்கடவாது.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! என்ன, நீ கூறுவன யாவும் அதிசயமாகக் காண்கின்றன. அரசனை நேரிற் காண்பதா! செங்கோல் நீங்கவே திகைப்புண்டாயிற்றோ. தம் நாடு விட்டு வேறு நாடு சென்று தங்குங் கருத்துடையோர், அந் நாட்டிற் சென்று தம் நாட்டிற்குப் பிரதிநிதியாய் விளங்குகின்றவரிடந்தன்றோ முதலில் மனுச் செய்துகொள்ளவேண்டும். இதனை நீ முற்றும் மறந்தனையோ?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! மறந்தேனில்லை. பிரதிநிதியின் அனுமதிபெற்ற பின்னரே அரசனை நேரிற் காண விழைந்தனன்.

**நட்சத்திரேசன்** — ஓ, ஓ, அவ்வாறாயின் விரைவிற் செல்லுவாய். என்னை இன்னும் வருத்தாதை.

(செல்கின்றனர்.)

## இரண்டாங் களம்

**இடம்:** *பிரதிநிதியின் வீடு.*

**காலம்:** *காலை.*

**பாத்திரங்கள்:** *அரிச்சந்திரன், பிரதிநிதி, நட்சத்திரேசன்.*

[அரிச்சந்திரன் பிரதிநிதியைக் கண்டு வந்தனம் புரிகின்றான்.]

**பிரதிநிதி** — ஐயா! நீவிர் யாவர்?

**அரிச்சந்திரன்** — ஐயா யான் அயோத்தி நாட்டினன்.

**பிரதிநிதி** — அயோத்தி நாட்டினரா? வாரும். ஈண்டு உட்காரும், யாது கருதி யீண்டு வந்தீர்?

**அரிச்சந்திரன்** — ஐய! விசுவாமித்திர முனிவர்க்கு யான் பொருள் தரவேண்டும். அதனைத் தீர்க்க இந்த ராஜாங்கத்தில் ஏதேனும் ஒரு தொழில் பெறக் கருதித் தங்களைக் காண விரும்பி வந்தனன்.

**பிரதிநிதி** — விசுவாமித்திரருக்குப் பொருள் தரவேண்டுமா? ஓ, ஓ! நீர்தாமோ அரிச்சந்திர ரென்னும் அரசர்?

**அரிச்சந்திரன்** — ஆம் ஐய, அடியேனைத்தான் அவ்வாறு கூறுவர்.

**பிரதிநிதி** — ஆ, ஆ, இங்கு வாரும். அருகில் அமரும். அந்தோ! அரசர்க்கே இவ்வகைய நிலை நேர்ந்தால், மற்றவர்க்கு என்னாகும்! முனிவர்க்கு அரசை யளித்தவர் நீர்தாமே. என்ன உதாரம்! உம்மைக் காணவும் எமக்கு மனம் உருகிப் புண் படுகின்றது. என்ன செய்வது, வினைப்பயன். நல்லது, இவ்வரசில் தொழில் வேண்டுகின்றீர். யாம் எம்மாலான முயற்சி செய்கின்றோம், தடையில்லை. ஆயின், அருங்கடன் பட்டார்க்கு ராஜாங்கத்தில் அலுவல் கிடைக்காதென்பது, அரசராயிருந்த நீர் அறிவீரன்றே. ஆதலால், இப்பொருள் கடன் தீர்த்தற் கென்று கூறும விருப்பதோடு நீர் அயோத்தியினின்று வந்ததாகவும் புகலவேண்டா. கடனுக்கன்று என மொழிந்தால் யாமே அரசன்பாற் சென்று ஏற்றது செய்து விடுகின்றோம். அயோத்தி நகரத்தினர் அல்லவென்று மறுத்துவிடின் மற்றோர் நாட்டின் பிரதிநிதியின் சார்பில் தொழிலில் அமர்த்துகின்றோம். இவற்றுள் ஏதேனும் ஒன்றை யுறுதி கொள்ளின், தக்கது புரியலாம். அந்தோ, உமக்கும் இக்கதி நேரலாமோ!

**அரிச்சந்திரன்** — ஐயா, தாங்கள் கூறிய இரண்டில் ஒன்றையும் யான் மேற்கொள்ள இயலாது. உள்ளதைக் கூறுவதல்லது ஒன்றையும் ஒளித்துரையேன். யான் அயோத்தி நகரத்தினின்றும் வந்தவனே. முனிவர்க்குக் கடன்பட்டிருப்பவனே. இவற்றில் ஓர் எழுத்தினையும் மாற்றி யுரைப்பதற்கு மனம் இடங்கொடாது. உண்மைக்கு ஒரு சிறிதும் ஊனமின்றி எதனை வேண்டினும் செய்கின்றேன்.

**பிரதிநிதி** — இது பொய்யு மன்று, புரட்டு மன்று. நீர் கேட்கும் பொருள் எதற்கெனின், கடனுக்கென்று உரைத்தல் வேண்டாம். இவ்வளவுதானே.

**அரிச்சந்திரன்** — கடன் கொடுப்பதற்கென்று பெறுவதை, அதற்கு அல்ல வென்று எவ்வாறு புகல்வது. அவ்வாறு புகன்றால் பொய்மையே யன்றோ. பொய் சொல்லிப் புவியில் வாழலாமோ! அது எனக்கு முற்றும் ஆகாது.

**பிரதிநிதி** — அது போகட்டும். கடனுக்கென்றே சொல்லும். வேறு நாட்டினர் என்று கூறுவதிற் குற்றமென்ன?

**அரிச்சந்திரன்** — அதுவும் பொய்மையே யன்றோ. எமது நாடு உள்ளவாறு அயோத்தியேயாகவும், அதனை மறுத்து, மற்றொன் றென்பது சரியாமோ. அது பொய்மை யாவதுமன்றி தான் தோன்றிய தாய்நாட்டிற்கு வஞ்சகம் புரிவதுமாகும். ஒருவன் தன் தாய் தந்தையரை மறப்பினும், தன் நாட்டினை மறத்தல் பெரும் பாதகமாம். அந்தோ! சிற்றறிவுடையோரும் தம் தாய்நாட்டில் மிகுதியும் பற்றுடையராக, யான் அதனை மறுத்து உரைப்பேனேல், நான் அவரினும் கடையேனாகக் கருதப்படுவே னன்றோ! தம்மை யடுத்ததற்கு இவ்வாறும் புத்தி புகட்டலாமோ!

**பிரதிநிதி** — ஐய, நீர் ஒன்றுக்கும் உடன்பட்டு வருபவராகக் காணப்படவில்லை. உலகியலும் உமக்குத் தெரியவில்லை. இதனாலன்றோ ஒரு மொழியில் உள்ளவை யனைத்தும் இழந்துவிட்டீர். போம், போம், எம்மால் ஒன்றும் ஆகாது.

**அரிச்சந்திரன்** — ஐயா! கோபிக்க வேண்டாம், போய் வருகின்றேன், வந்தனம்.

(வெளியில் வந்துவிடுகின்றனர்.)

**நட்சத்திரேசன்** — 'இல்லாதவனுக்கு எண்ணம் அதிகம்' என்பார்கள். அதுபோல் நீ ஏதேதோ யோசிக்கின்றாய். ஒன்றுக்கேனும் உடன்பட்டு வருகின்றவனாகக் காணப்படவில்லை. ராஜாங்கத்தில் உத்தியோகம் வேண்டுகின்றனை. அதற்கெல்லாம் தந்திரங்களுண்டு. அவைகள் உனக்குச் சரிப்படவில்லை. இப்படிப்பட்ட உனக்கு ராஜ சமுகத்தில் உத்தியோகம் கிடைப்பினும், அதனை நீ எவ்வாறு காப்பாற்றுவை. தொழிற்றுறைகளில் சந்தர்ப்ப நோக்கிப் பல தந்திரங்கள் புரியவேண்டி வரும். அதன்றியும், ராஜாங்கத்தில் செய்ய வேண்டிய ராஜ தந்திரங்கள் எண்ணிறந்தனவாகும். இவை யாவும் உனக்கு உடன்பாடாகாவிடில், மற்றென்ன செய்வது. உலகமே உனக்கு விரோதமாக இருந்தால், உலகத்தவர் உன்னை எங்ஙனம் நட்பாகக் கொள்வர். இதென்ன, இது யாருக்குத் தெரியாது! உன் இஷ்டம்போல் செய்யலாம். என் பொருளை முன்னே வைத்துவிடு. பிறகு, எட்டி அடி யெடுத்துவை. வருவதையும் தட்டி நடக்கின்றாய். இனி ஒரு கணமும் பொறுத்தல் முடியாது. என்ன சொல்கின்றாய். இரண்டி லொன்று — உண்டா? இல்லையா?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! ஏற்காத வார்த்தையை இயம்பென்றால் என்ன செய்வது. 'யதார்த்த வாதி வெகுசன விரோதி' என்னும் முதுமொழிபோல, உண்மையைக் கடைப்பிடித்து ஒழு

குவோன் உலக விரோதியாகின்ருன். இதனுலென்ன, உண்மையையே தனக்கு உருவமாகக் கொண்டுள்ள அவ் விறைவனை உவப்பித்தலே உயிர்களுக்கு உற்ற கடமையாகும். ஆதலால், இப்பொய்யுலகை நம்பி மெய்யுலகைக் கைவிடலாகாது. பொய் பொய்யனை நாடும்; பொய்யுலகமும் பொய்யினைப் போற்றுகின்றது. பொய்யுரை புன்மையிற் புகுத்தும். சுவாமீ! எவ்வகையினும் தமது பொருளைச் சேர்த்துவிடுகின்றேன். பொறுத்தருளவேண்டும்.

**நட்சத்திரேசன்** — பொறுப்பதென்ன! பொறு, பொறு என்று புகல்கின்ருய். பொறுக்காமலா இத்தனை நாட்கள் கழிந்தன? எப்படித் தருவாய்? உனது முயற்சிகளில் ஒன்றேனும் முன்னுக்கு வரவில்லை. எல்லாவகையினும் முயன்ருய். ஒன்றும் பயனில்லை. இனி அடிமைப்படுவது ஒன்றே மிகுந்திருக்கின்றது. இவ்வூரில் அடிமைப்பட்டால் ஏற்போர் பலர் உண்டு. இது செல்வர் செறிந்த நகரம், யோசித்துப்பார்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் உரைப்பன யாவும் உண்மையே. அடிமைப்பட்டாயினும் தங்கள் பொருளைச் செலுத்தத் தடையில்லை. உண்மையினைத் துணையாகக் கொண்டோர் எவ்வகை நிலையினும் இருத்தலாகும். அறிவுடையார்க்கு அரசன் நிலையும், ஆண்டி நிலையும் ஒன்றே. ஆதலின், எவர்க்கேனும் அடிமைப்பட்டாயினும் தங்கள் பொருளைச் செலுத்திவிட மனமொழி மெய்களால் உறுதி கூறுகின்றேன். ஆயின் ஒன்று, இந் நகரம் எமக்குப் புதிதாகலின், யாரை அடுத்து அடிமைப் படுவதென்று அறியாமல் அலமருகின்ருேம். இது ஒன்றே எமது மயக்கத்திற்குக் காரணமாக நிற்கின்றது.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! உன்மீது வருத்தம் ஒருபாலும், இரக்கம் ஒருபாலும் உதிக்கின்றன. உன் துன்பத்தைக் கண்டால் மனம் பதைக்கின்றது. என் சிரமத்தை நோக்கிஞல் வருத்த முண்டாகின்றது. ஆனுல், இரக்கமே மிகுதியாகி அவ் வருத்தத்தை மறக்கச் செய்கின்றது. ஏதேனும் மயக்கப்பொடி உன்னிடமுண்டோ, யாதோ தெரிந்திலது. இருக்கட்டும், இந் நகரம் உங்களுக்குப் புதிது என்பது உண்மையே. உனக்கு என்னுல் ஆனதோர் உதவி புரிகின்றேன். சற்று இரு. எனக்கு எவரேனும் இந் நகரத்தில் தெரிந்த பொருளாளிகள் இருக்கின்ருர்களா வென்று யோசிக்கின்றேன். (*சற்று ஒதுங்கி மூக்கின்மீது விரல்வைத்து மேல்நோக்கி சொல்கின்ருர்.*) இப்போது என்ன செய்வது! எவ்விதத்தினும் இவன் ஏமாறுவதாகக் காணப்படவில்லை. இவர்கள் இந் நகரத்தில் வேறு எவர்க்கேனும் அடிமைப்பட்டுவிட்டால் நமது காரியம்

முற்றுங் கெட்டுவிடும். இவர்கள் குணத்தைக் கண்டால் எவரும் பொருளுதவி புரிய உட்படுவர். அவ்வாறு நடவாதபடி, நாம் நன்மை செய்வதுபோல வெளியே சென்று நம்மவரில் ஒருவனைக் கொண்டுவந்து அவனுக்கு அடிமையாக்கி விடவேண்டும். பின்பு ஏற்றவாறு இவர்களை ஆட்டி வதைத்து, நமது முனிவர் கருத்தை முடித்துவிடலாம். (திரும்பி வந்து) அரிச்சந்திர! யான் சென்று எவரேனும், தக்கவரைச் சரிப்படுத்தி யழைத்து வருகின்றேன். என்ன செய்வது, என் பொருளின் நிமித்தம் யானும் சிரமப்பட வேண்டியிருக்கின்றது. உன்னால் எனக்குண்டாகும் சிரமத்தைப் பார். யாவும் சரிவர முடிக்கின்றேன். பிறகு, நம்மை மறந்துவிடாதே, ஞாபக மிருக்கட்டும், போய் வருகின்றேன்.

**அரிச்சந்திரன்** — ஆம், சுவாமீ! போய் வாருங்கள், "ஒருவருக்கொரு செல்லலுற்றால் அது அருகுளோர்களையும் அடைவது திண்ணமே" என்பர் மேலோர். அதனால் தமக்கும் சிறிது சிரமம் நேருவதாயிற்று. போய் வாருங்கள், வந்தனம்.

## மூன்றாங் களம்

**இடம்:** காசிநகரத்தின் வீதி.

**காலம்:** முற்பகல்.

**பாத்திரங்கள்:** அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்திய கீர்த்தி, நட்சத்திரேசன், காலகண்ட ஐயர்.

[நட்சத்திரேசன் காலகண்ட ஐயரைக் காண்கின்றார்.]

**காலகண்ட ஐயர்** — நட்சத்திரேசரே! ஜயந்தானோ?

**நட்சத்திரேசன்** — ஜயமாவது. ஊம், அதெல்லாம் ஒன்றுமில்லை. யாவும் பயமாகத்தான் இருக்கிறது.

**காலகண்ட ஐயர்** — என்ன அப்படிச் சொல்லிவிட்டீர்? இத்தனை பேர் இத்தனைமுறை முயன்றுமா பயமாயிருக்கின்றது.

**நட்சத்திரேசன்** — எத்தனை பெயர் எத்தனை தரந்தான் முயன்றாலென்ன? அவன் மனத்தை மாற்ற எவராலாகும்? அவனிருக்கட்டும் ஒரு பட்சம். அப் பெண் அவனிலும் பதின்மடங்காக இருக்கின்றாளே. போதாக் குறைக்கு சத்தியகீர்த்-

தியும் சேர்ந்துவிட்டான். அவன் இவர்கள் அனைவரிலும் அசாத்தியனாகக் காண்கின்றான். இவர்களெல்லாம் ஒருபுற மிருக்கட்டும் ஏதோ வயது வந்தவர்கள், விவகாரம் தெரிந்தவர்கள்; விதிவிலக்குகளை அறிந்தவர்கள். பாலன் சிறுவன் வாயில் பால் மணம் அறவில்லை. அவனுமன்றோ சத்தியந் தவறாமல் நிற்கின்றான். அந்தக் குடும்பமே சத்திய உற்பத்திபோல் காண்கின்றது. நானும் என்னால் ஆனமட்டும் பார்க்கின்றேன். ஒரு தினையளவும் மாறவில்லையே. இனி அவர்களை தனித்தனி பிரித்துப் பார்த்தால், ஏதாவது ஏமாற்றலாம் போல் காண்கிறது. அதற்கும் ஒரு வழி ஏற்பட்டிருக்கின்றது! அதற்காகவே உம்மிடம் இப்போது வந்தது.

**காலகண்ட ஐயர்** — ஆ, ஆ, அப்படியா? முனிவரும் இதை எண்ணியே என்னையும் அனுப்பினர். நற்குறியாக உம்மை யீண்டு கண்டுகொண்டேன். நீர் சொல்வதைக் கேட்டால் ஒன்றுங் காரியமில்லைபோற் காண்கின்றதே.

**நட்சத்திரேசன்** — நான் சொல்வதென்ன? மற்றவர்கள் வந்து சொல்லவில்லையோ?

**காலகண்ட ஐயர்** — ஆமாம், ஆமாம், சொன்னார்கள். முனிவரும் ஒவ்வொன்றையுங் கேட்டு மிக வருத்தப்பட்டனர். இப்போது அரிச்சந்திரனை நாம் வருத்தப்போய் நாம் வருந்துவது பெருங்காரியமாக இருக்கிறது. நமது சிரமம் ஒருவாறிருக்க முனிவர்க்கு இரவு பகலாய் நித்திரையில்லை. ஆ, ஆ, ஒவ்வொருவனும் நமது காரியம் ஈடேறவில்லை என்று கூறும்போது அவர் முகங் கறுத்து, பல்லை உறுத்திக்கொள்ளும் வருத்தத்திற்கு ஒரு அளவே இல்லை. அவிழ்க்கப் போய் முடியிட்டுக்கொண்ட கதையா யிருக்கின்றது. முடிவில் அரிச்சந்திரனுக்கு ஒரு கஷ்டமானால் முனிவர்க்கு ஒன்பது கஷ்டமாக விருக்கின்றதே. நாம்தாம் யோசிப்போமே. மெய்யைப் பொய் எவ்வாறு வெல்லும். சரி, இனி ஆனதாயிற்று, நாம் என்ன செய்யலாம். நம்மாற் கூடியவரையில் முனிவர் பொருட்டுப் பாடுபடுதல் வேண்டும். நீர் இப்போது எனக்குச் சொல்வது என்ன? சொல்லும் அவ்வாறே யானும் செய்கின்றேன்.

**நட்சத்திரேசன்** — அதெல்லாம் இருக்கட்டும். உம்மிடத்தில் பொருளிருக்கின்றதா.

**காலகண்ட ஐயர்** — ஆ, ஆ, வேண்டியமட்டுமிருக்கின்றது. பொருளுக்கென்ன குறை புண்ணியவான் அரிச்சந்திரனுடைய பொக்கிஷம் இருக்கும்வரையில். எதற்காகப் பொருள்?

**நட்சத்திரேசன்** — சொல்லுவதற்குள் அவசரமா உமக்கு, அவர்கள் மூவரும் ஒன்றாயிருப்பதனால் ஒருமிக்க மனவுறுதி கொண்டிருக்கின்றனர். அவர்களைத் தனித்தனி பிரித்துவிடில் சுலபமாகக் காரியம் முடிந்துவிடும். இப்போது அவர்கள் எவர்க்கேனும் அடிமைப்பட்டாயினும் முனிவர் பொருளைக் கொடுத்துவிடத் தீர்மானித்திருக்கின்றனர். வேறு யார்க்காயினும் அடிமையாய்விட்டால் நமது காரியம் பலனற்றுப்போகும். ஆதலால், நீர் வந்து முனிவர் கடனுக்குள்ள பொருளைக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு ஒருவரை அடிமை செய்துகொள்ளும். அதில் ஆண் அடிமை வேண்டா, பெண் அடிமை வேண்டும் என்று வற்புறுத்தும். அவ்வாறு ஒப்புக்கொண்டால் சிறுவனையும் உடன் அனுப்பும்படி கேளும். பின்பு, நீர் தாயையும் தநயனையும் அழைத்துக்கொண்டு போய் முனிவர் மொழிப்படி செய்யும். அவர்கள் இருவோரும் பிரிவதனாலேயே நமது காரியம் உடனே கைகூடும். இல்லாவிடின் அம்மந்திரியையும் அரிச்சந்திரனிடமிருந்து பிரித்துத் தனியாக்கிய பின்பு, பொய் புகலச் செய்துவிடலாம். இதுவே ஏற்ற மார்க்கமாகும். நீர் என்ன சொல்கின்றீர்.

**காலகண்ட ஐயர்** — ஆ, ஆ, அதற்கென்ன. நீர் சொல்வதே சரி. அவர்களிடத்தில் இத்தனை நாள் பழகியிருக்கிறீர். உமக்கு அவர்களுடைய தன்மைகள் நன்கு விளங்கியிருக்கும். ஆதலால் உம்முடைய வார்த்தையினால் முனிவர்க்குச் செயமுண்டாகு மென்றே நம்புகின்றேன்.

**நட்சத்திரேசன்** — ஆனால் சரி, வாரும் போவோம். எல்லாம் சமீபந்தான். அதோ தெரிகின்றதே அந்தச் சத்திரந்தான்.

(நட்சத்திரேசனும் காலகண்ட ஐயரும் அரிச்சந்திரன் முதலாயினரைச் சந்திக்கின்றனர். அரிச்சந்திரன் இவர்களைக் கண்டதும் வந்தனம் செய்கின்றான்.)

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இதோ அழைத்துக்கொண்டு வந்தேன். இவர் ஒரு அந்தணர், இந்தக் காசியம்பதியில் புரோகிதஞ் செய்பவர். இவருக்கு ஓர் ஆள் வேண்டுமாம். நற்குணம் வாய்ந்தவர். நீ அரசனாகி இருந்து கேவலம் ஒருவர்க்கு அடிமையாவதென்றால் என் மனம் பதறுகின்றது. அதனால் அந்தணராயிருந்தால் நன்றென்று உன்னி, அதிக சிரமப்பட்டு இவரை நாடிக் கொணர்ந்தேன். நம்மை மறந்துவிடாதே, இவருடன் ஏற்றவாறு பேசிக் காரியசித்தி செய்துகொள்.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அவ்வாறே செய்கிறேன் சுவாமீ! (காலகண்ட ஐயரை நோக்கி) சுவாமி நமஸ்கரிக்கிறேன்.

**காலகண்ட ஐயர்** — *சுகீபவ, சகல மங்களாநி பவந்து! ஐயா! என்ன சங்கதி?*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! யான் விசுவாமித்திர முனிவர்க்குக் கடன் பட்டுள்ள பொருளை அவருக்குச் செலுத்தி, எங்களைத் தமது அடிமைகளாகக் கொண்டருள வேண்டுகின்றோம்.*

**காலகண்ட ஐயர்** — *ஓரம்மே கடன் என்னு கூடமாவன்னோ இருக்கு. அது இம்மாத்தம் என்னு சொன்னுவன்னோ தாவளே.*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! யான் அம்முனிவர்க்குப் பட்டுள்ள கடன் நூறு லட்சம் பொன். அதனையே தாங்கள் ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும்.*

**காலகண்ட ஐயர்** — *ஆ, ஆ, நூறு லட்சம் பொன்னு. இதேது மோசமாவன்னோ இருக்கு. பெருந்தொகையா இருக்கே. இருக்கட்டும் பார்ப்போம். இதற்கென்ன ஏற்பாடு?*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! தாங்கள் தரும் தொகையின்பொருட்டு யானும், இதோ நிற்கும் என் மனைவியும், என் தநயனும் அடிமைப்பட்டுத், தாங்கள் ஏவும் பணிவிடைகளைச் செய்து, இட்ட உணவை யுண்டு, தங்களிடத்திலேயே இருக்கின்றோம்.*

**காலகண்ட ஐயர்** — *(சத்தியகீர்த்தியைச் சுட்டி) இவர் யார்? இவர் உங்களோடே சேர்ந்தவா அன்னோ?*

**அரிச்சந்திரன்** — *அவர் அடியேனது நண்பர். அவர்க்கும் இந்த அடிமைத் தன்மைக்கும் யாதும் சம்பந்தமில்லை.*

**காலகண்ட ஐயர்** — *இதெல்லாம் இருக்கட்டும். தொகை என்னமோ பெரியதாக இருக்கு. எங்க பிதாமகன் முதலானவா தேடிவைச்ச சொத்தெல்லாம் சேர்த்தாலும் இவ்வளவுக் கிருக்குமோ என்னு சந்தேகமா இருக்கு. இருந்தாலும் இருக்கட்டும். நம்ம ஆத்திலே ஆம்படையாளுக்கு வார்த்தை சொல்ல திக்கில்லே. அவளுக்கு ஒரு பெண் துணைதான் வேணும். அதிலும் உன் சம்சாரத்தைப் பார்த்தாக்கெ வேலைக்கு ஆட்டாளியாக காணல்லே. ஓரம்மெ வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தாலும் தாவளே.*

**நட்சத்திரேசன்** — *அதற்கு அந்தம்மாள் மிக்க ஏற்றவளே. நல்ல அந்தஸ்தில் இருந்தவர்கள், நல்ல துணையாக இருக்கும்.*

**காலகண்ட ஐயர்** — *நேக்கும் அதுதான் யோசனெ. நம்ம ஆம்படையாள் ரெம்ப சிறியவள். துணையில்லாமலே மொட்டு மொட்டென்னு மூலையிலே குந்திண்டு கிடைக்கிறு. நானோ*

காரியமாக வெளியே போக வேண்டியிருக்கு. அப்போது கொஞ்சம் வார்த்தை சொல்லிண்டு துணையா யிருப்பள். பொருள் போனாலும் சுகமாயிருக்கும். மற்றப்படி ஆண் பிள்ளை நேக்கு வேண்டா. இவா செய்ய நம்ம ஆத்திலே என்ன வேலெ கிடக்கு. நாங்கள் இரண்டு ஜீவன்கள். பொங்குவது, தின்பது, உறங்குவது. இதுதான் வேலே. இதற்கென்னத்திற்கு வேலைக்காரர். எங்க இருவர்க்குப் பொங்குவதற்கே அவளுக்கு அலுத்துப்போறது. இன்னும் இவாளுக்கெல்லாம் கூழாவது காச்சவேண்டாமோ.

**நட்சத்திரேசன்** — என்ன அரிச்சந்திர! உன் மனத்தில் உள்ளதைச் சொல்லலாமே. சும்மா விழித்துக்கொண் டிருந்தால் பயன் என்ன? (அருகில் அழைத்து) இதையும் நழுவ விடாதே. யார் எங்கிருந்தா லென்ன? பிராமணன் பேராசைக்காரன், ஏதோ அவன் ஒப்புக்கொண்டதே நமக்கு நற்காலம். சீக்கிரம் முடித்துக்கொள். பிறகு, நம்மை மறந்துவிடாதே.

**அரிச்சந்திரன்** — (காலகண்ட ஐயரைப் பார்த்து) சுவாமீ! தாங்கள் விரும்பியவாறே செய்யுங்கள். என் மனைவியை மட்டுமே தாங்கள் அடிமையாகக்கொண்டு, அப்பொருளைக் கொடுத்து விடுங்கள்.

**காலகண்ட ஐயர்** — இதென்ன! கொடுத்துவிடுங்கோன்னு எப்படி? அதுக்கென்னு சீட்டு நாட்டு ஒன்னுமில்லையோ? இதென்ன வஞ்சனையாயிருக்கே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! வஞ்சகம் ஒரு சிறிதுமில்லை. அடிமைச் சீட்டு எழுதிக் கொடுக்கின்றேன். அதற்கொன்றும் தடை-யில்லை. தங்கள் கருத்தை வெளியிட்டால் அவ்வாறே எழுதலாகும்.

**காலகண்ட ஐயர்** — என் கருத்தென்ன? எல்லாருக்கும் ஒத்தது தானே? அதுபோல் பத்திரம் எழுதும்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இவ்வாறு இருக்கவேண்டும் என்று தெரிவித்தால், யோசித்துப் பத்திரம் எழுதலாம் என்பது அடியேன் கருத்து. அடிமைச் சீட்டு எழுதப் பார்ப்பது இதுவே அடியேனுக்கு முதல் முறை. ஆதலால், அவ்வாறு கேட்கின்றேன். மன்னிக்க வேண்டும்.

**நட்சத்திரேசன்** — நீர் தாம் உம்முடைய அபிப்பிராயத்தைச் சொல்லுமே. வாங்குவோர் அபிப்பிராயத்தைக் கலக்க-வேண்டுவது அவசியந்தானே.

**காலகண்ட ஐயர்** — அப்படியா! சரி, இன்ன வருஷம், இன்ன மாசம், இன்ன தேதியில் இன்னாருக்கு இன்னார் எழுதிக்கொடுத்த அடிமைச் சீட்டு. இன்ன காரணத்திற்காக இன்னாரிடம் இன்னார் பெற்றுக்கொண்ட ரொக்கம் பொன் இம்மாத்தம். இதற்கு இன்னின்னாரை அடிமையாக வைத்திருக்கு. அவாள் இன்னார் சொல்லும் காரியங்களை யெல்லாம் தட்டுத் தடை யன்னியில் செய்யவேண்டியது. இப்போது கொடுத்த தொகையை மறுபடியும் இன்னார் இன்னாருக்குக் கொடுத்து விட்டாக்கே, அன்னைய தேதி முதல் இந்த அடிமைச் சீட்டு ரத்து செய்துவிடப்படும். அப்போது இன்னின்னாரை இன்னார் தன் வசப்படுத்திக்கொள்ளலாம். இந்தப்படிக்கு இன்னார் மனோராஜியில் சம்மதித்து எழுதிக்கொடுத்த அடிமைச் சீட்டு. இப்படிக்கு என்று சீட்டெழுதிக் கொடுப்பவர் கையெழுத்து செய்யவேணும். பிறகு சாட்சிகள் கையெழுத்து போடுவாள். இவ்வளவுதான். இதற்கென்ன யோசனை. இது எல்லாருக்கும் தெரிந்த விஷயந்தானே. இந்தவூரில் இது சர்வ சாதாரணம். குழந்தையைக் கேட்டாலும் சொல்லுமே.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் கூறியவற்றுள் அடியேனுக்கு இரண்டு சந்தேகங்கள் உண்டாகின்றன. அவற்றைத் தயை செய்து தீர்த்தருளவேண்டும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! பார்த்தாயா, மறுபடியும் உன்னுடைய பழங்கதையையே எடுத்துக்கொண்டனையே. அதெல்லாம் வேண்டாமென்று முன்னமே சொல்லினே னன்றோ, இதெல்லாம் வீண் சந்தேகம். அவரோ பிராமணோத்தமர். ஒன்றும் பிசகு சொல்லார். அப்படியும் அவர் விவரித்தொன்றும் கூறவில்லையே. இன்னின்னபடி யென்று தானே சொன்னார். இதில் உனக்குச் சந்தேகமென்ன?

**காலகண்ட ஐயர்** — அதென்ன, முன்னமே ஏதோ சொன்னதாகச் சொல்றீர். உமக்குள் ஏதாவது ரகசியமுண்டோ? இருந்தால் சொல்லிவிடும். பிராமணனை ஏமாற்றி விடாதீர். உம்மை நம்பினேன். நம்பினவாளை துரோகஞ் செய்தாக்கே மஹா தோஷம் சம்பவிக்கும்.

**நட்சத்திரேசன்** — அதெல்லாம் ஒன்றுமில்லை. அரசாக இருந்தவ ரன்றோ. எழுத்தற இருக்கவேண்டும் என்பது அவர் எண்ணம். உலகத்தில் அப்படியே நடைபெறுகின்றதா? அதற்குத்தான் சொன்னேன். மற்றப்படி வஞ்சகம் ஒன்றுமில்லை. அதிலும் பிராமணரைத்தானா வஞ்சிக்கவேண்டும்.

**காலகண்ட ஐயர்** — என்ன ஐயா சந்தேகம் உமக்கு? சொல்லுமே, பார்க்கலாம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் கூறியதில் 'இன்னின்னுரை அடிமையாக்கி' என்றும், 'சொல்லியவற்றை யெல்லாம் செய்யவேண்டும்' என்றும் கட்டளை யிட்டீர்கள்.

**காலகண்ட ஐயர்** — ஆமாம், அதில் என்ன சந்தேகம்?

**அரிச்சந்திரன்** — மற்றொன்றுமில்லை. தாங்கள் அடியேனது மனைவியைமட்டும் அடிமையாகக்கொள்ள சம்மதித்தீர்கள். மற்றும் 'இன்னின்னுரை' என்றால் ஒருவர்க்கு மேற்பட்டவராகக் காண்கின்றதே, அப்போது அடியேனையும் உடன் கொள்வதாக எண்ணமோ என்பதை அறிய வேண்டுகிறேன்.

**காலகண்ட ஐயர்** — நட்சத்திரேசரே! கேட்டீருமோ? அடாடாடா. ஆ, ஆ, ஆ, நன்னாயிருக்கே. (**அரிச்சந்திரனை நோக்கி**) இன்னின்னுரை என்னு உம்மையும் உம்முடைய ஆம்படையாளும் என்னு அர்த்தம் பண்ணிப்போட்டீர். அடா பைத்தியமே. இது விபரீதமாகவன்னோ விருக்கு. பாபம் செல்வத்தில் இருந்தவா. லோகநடவடிக்கை ஒன்னுந் தெரிந்தவா அல்ல. ஐயா, அது அப்படியன்னு. உம்முடைய ஆம்படையாளே மாத்திரம் அடிமையாகக் கொள்றது. ஆம்படையாளைக் கொண்டா கூட பையனுமன்னோ வருவன். இது தெரியாதோ.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! பையனையும் தாங்கள் அடிமையாகக் கொண்டாலன்றோ வருவான். இன்றேல் அவன் அடியேனோடன்றோ இருப்பான்.

**காலகண்ட ஐயர்** — அது அப்படி யன்னு. லவுகீகந் தெரியாமெ வார்த்தெ சொல்றீர். இப்போது ஒரு பசுவை ஒருவன் வெலைக்குக் கொண்டாக்கெ, அதன் கன்னும் அதோடு வருமன்னோ. அதுபோல தாயை வாங்கினக்கெ பிள்ளையும் அவளோடு சகஜமா வரவேண்டியதுதானே. இதைப்பற்றி என்ன வியாஜ்யம்? அப்படி இஷ்டமானால் பாரும், இல்லாவிட்டால் விவகாரத்தை நிறுத்திப்போடும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! உலக வழக்கத்திற்கு ஒருவரும் விரோதித்தல் ஒண்ணாது. இது உனக்கே யன்று, அனைவர்க்கும் ஆனதே. வேண்டாம், மறுக்காதே, சொல்கின்றேன்.

**காலகண்ட ஐயர்** — நீர் ஏன் வருத்தப்படுத்துறீர்? அவாளவாளுக்குள்ள துஷ்டம் அவாளவாளுக்குத் தெரியும். நீர் ஓரம்மே இரும். அவாளுக்குத் தைரியமானால் செய்யட்டும்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தங்கள் விருப்பத்தின்படியே செய்யுங்கள். நால்வர்க்குள்ளது நமக்கு. ஊருடன் கூடி வாழ்தலே உத்தமம். அவ்வாறே செய்யுங்கள்.

**காலகண்ட ஐயர்** — *ஆமாம், இது கடக்கட்டும். இன்னொரு சந்தேகம் என்னீரே அதென்ன? அதையும் இப்போதே சொல்லி விடும். பிறகு, சச்சரவு வேண்டாம்.*

**அரிச்சந்திரன்** — *ஆம் சுவாமீ! அதுவும் முக்கியமான தொன்றே.*

**காலகண்ட ஐயர்** — *சரி, அதென்ன?*

**அரிச்சந்திரன்** — *'சொல்லிய அனைத்தும் செய்வது' என்ருல் அதென்ன? அதனை விளக்கமாக உரைக்கவேண்டும்.*

**காலகண்ட ஐயர்** — *இதென்ன, விபரீதமாக இருக்கு. அடிமைப் பட்டாக்கே, சொன்னதைச் செய்யவேண்டாமோ? இதற் கென்ன உரை சொல்றது? நேக்குத் தெரியவில்லையே.*

**நட்சத்திரேசன்** — *அரிச்சந்திர! வீண் ஆட்சேபம் ஏன்? முன் ஒன்று கேட்டாய், அதென்ன பயன்பட்டதா? அடிமைப்பட்டால் சொன்னதைச் செய்யவேண்டாமா? நீ அரசனாக இருந்தபோது, உன்னிடத்தில் ஒருவன் உத்தியோகத்திலமர்ந்தால் நீ சொன்னதைச் செய்யவேண்டாமா? இதற்கொரு கேள்வியா? என்னபோ! இப்படியும் உனக்கு மதி மயங்கிவிடுமா? தொட்டதெல்லாம் சந்தேகமானல் காரியம் எவ்வாறு நடக்கும்?*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! கோபிக்கவேண்டா. ஒருவர் ஒரு தொழிலில் அமர்ந்தால், அவர்க்கு இன்னின்னவற்றைச் செய்வது கடமை என்ற ஓர் ஏற்பாடுண்டு. அதுபோல் அடிமைப்பட்டாலும் அவர்கட்கு இன்னின்ன தொழில் என்று வரையறையுண்டு. சொல்லிய வனைத்தும் செய்வது என்ருல் பழி பாவங்களுக்குரிய தொழிலைச் செய்யச் சொல்லுதலுங் கூடுமன்றே; அவ்வாருயின் அவற்றை எவ்வாறு செய்வது? இதொன்றே அடியேன் கொண்ட ஐயம்.*

**நட்சத்திரேசன்** — *ஒரு பிராமணர், அதிலும் புரோகிதர், நாட்டுக்கு நன்மை புரிபவர், அவர் பழிபாவங்களைச் செய்யச் சொல்லுவரோ? யோசித்துப் பாரும்.*

**காலகண்ட ஐயர்** — *ஆரம்பத்திலேயே இத்தனை சந்தேகமானுக்கே, இவா என்ன எங்க ஆத்துலே வேலைசெய்யப் போரு. நேக்கு வேண்டாம், போய்வாரும்.*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! கோபிக்கவேண்டா. மன்னியுங்கள். சொல்லிய அனைத்தும் என்றதனல் அடியேனுக்கு அவ்வகைய ஐயம் பிறந்தது. இன்றேல், அதனையும் கேட்க எண்ணேன்.*

**காலகண்ட ஐயர்** — *நீர் எப்படிச் சொல்றீர் சொல்லுமே, பார்ப்போம்.*

**அரிச்சந்திரன்** — பெரியோர்களாலும், சாஸ்திரங்களாலும் விலக்கப்பெற்ற தீய ஒழுக்கங்கள் ஒழிய, மற்றவை எவையேனும் அவற்றைச் செய்யவேண்டும் என்றெழுதுவது நன்றென்று எண்ணுகிறேன்.

**காலகண்ட ஐயர்** — தீய ஒழுக்கம் என்னு அர்த்தமாகலையே, கொஞ்சம் விசதமா சொல்லும்.

**அரிச்சந்திரன்** — தீய ஒழுக்கங்கள் என்றால் களவு, கொலை, பொய், பொருமை, கற்பழித்தல், பிறர் நிந்தை முதலாயுள்ளன. இவை முதலாயின ஒருவனை மஹாபாவங்களுக் குள்ளாக்கி முடிவில் நரகிற் புகுத்துவனவாம். ஆகலின் அத்தகைய தீய ஒழுக்கங்களை அறவே நீக்கி, மற்ற எவையேனும் செய்தற்கு உடம்படுகின்றோம்.

**காலகண்ட ஐயர்** — இந்தப் பாபங்களைக் கூடச் செய்யச்சொல்லி யார் சொல்வா! ஐயோ தோஷம், தோஷம்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தாங்கள் செய்யச் சொல்வீர்கள் என்றல்ல அடியேன் ஐயமுற்றது. சொல்வது அனைத்தும் என்னும் சொல்லின் உறுதிகொண்டே ஐயமுற்றேன். எழுதுவதில் ஐயத்திற்கு இடமுண்டாக்கினால், முடிவில் இன்னலை விளைக்கும். அதுகொண்டே அடியேன் இவ்வளவும் வற்புறுத்தி வாதாடுவது.

**காலகண்ட ஐயர்**—ஆமாம், மெய்தான். அரசராயிருந்தவா அன்னு, இப்படி எத்தனை விஷயம் பார்த்திருப்பா? அதனால் சந்தேகம். நமக்கு இதெல்லாந் தோணுமா? சரி, சரி. இதன்னியில் உமக்கு வேறே ஆக்ஷேப மில்லையே.

**அரிச்சந்திரன்** — ஒரு சிறிதும் ஆக்ஷேபமில்லை, சுவாமீ.

**காலகண்ட ஐயர்** — அப்படியானுக்கே நீர் சொல்லியபடியே எழுதுமே. ஏடும் எழுத்தாணியுந் தரட்டுமா? நீர் எழுதுறீரோ, அவா எழுதுவாளோ? பொது மனுஷா அவா எழுதினுக்கே இருதாத்தாருக்கும் சுகம்.

**சத்தியகீர்த்தி** — ஆ, ஆ, அப்படியே செய்கின்றேன் சுவாமீ!

**காலகண்ட ஐயர்** — ஏன் நட்சத்திரேசரே நீர் எழுதலாமோ?

**நட்சத்திரேசன்** — வேண்டாம், அவரே எழுதட்டும். நான் சாட்சியம் போடுகிறேன்.

**காலகண்ட ஐயர்** — ஆனல் அப்படியே ஆகலாம்.

(ஏடும் எழுத்தாணியும் காலகண்ட ஐயர், சத்தியகீர்த்தியிடம் தருகின்றார். அவர் அதனை ஏற்று எழுதுகின்றார்.)

**சத்தியகீர்த்தி** — சுவாமீ! இப்போது தாங்கள் கூறியவாறு தானே எழுதவேண்டும்.

**காலகண்ட ஐயர்** — ஆமாம், அப்படித்தான். அவர் சொன்னதையும் சேர்த்துக் கொள்ளுங்களேன். இல்லாவிட்டால் வேறொன்று எழுதச் சிரமம் உண்டாகும்.

## அடிமைச் சீட்டு.

துவாபரயுகம் 10367-இல் செல்லாநின்ற குரோதி வருஷம் மாசி மாதம் 10-உயில் காசிமா நகரத்தில் வசிக்கும் பிராமணகுலம், சிவமதம், புரோகிதம், பிரம்மஸ்ரீ காலகண்ட ஐயரவர்கட்கு; அயோத்திமாநகரம் க்ஷத்திரிய குலம், சிவமதம், திரிசங்கு மன்னவர் புத்திரர் அரிச்சந்திர மன்னவன் எழுதிக் கொடுத்த **அடிமைச் சீட்டு** என்னவென்றால்:—

யான் விசுவாமித்திர முனிவர்க்குக் கொடுக்கவேண்டிய கடன் நூறு லட்சம் பொன்னுக்காக என் மனைவியும், கன்னமாபுரியின் அரசர் மதிதய மன்னவர் புதல்வியும் ஆகிய சந்திரமதியையும், என் குமாரன் சிரஞ்சீவி தேவதாசனையும் மேற்கண்ட ஐயரவர்கட்கு அடிமைப்படுத்தி, மேற்கண்ட தொகை நூறு லட்சம் பொன்னையும், நாளது தேதியில் ரொக்கமாகப் பெற்றுக்கொண்டேன். இன்றுமுதல் என் மனைவியும் மைந்தனும் மேற்கண்ட மறையவர்க்கு அடிமையாகி, பெரியோர்களாலும், சாஸ்திரங்களாலும் விலக்கப்பட்ட தீய ஒழுக்கங்கள் நீங்க, மற்றைய பணிவிடைகளை அவர்கள் செய்து வர வுடன்படுகின்றேன். மேற்கண்ட தொகையை யான் மேற்கண்ட ஐயரவர்கட்கு, எக் காலத்தில் செலுத்திவிடினும் அக் காலத்தில் என் மனைவி மக்களைப் பெற்றுக்கொள்ளக் கடவேன். அந்தக் காலமட்டும் இவர்கள் மேற்கண்டவாறு தீய ஒழுக்கங்களுக்குக் காரணமாகிய பணிகள் நீங்கலாக மற்றையவற்றை மனப்பூர்வகமாய்ச் செய்து, அவர்களிட்ட உணவை யுண்டு, அவர்களிடத்திலே இருப்பார்களாக. இந்தப்படிக்கு யான் மனப்பூர்வகமாய்ச் சம்மதித்து எழுதிக் கொடுத்த அடிமைச் சீட்டு.

சாட்சி, இப்படிக்கு,

நட்சத்திரேசன். **அ. தி. அரிச்சந்திரன்.**

இவ்வடிமைச் சீட்டு எழுதியது **சத்தியகீர்த்தி.**

(சத்தியகீர்த்தி படித்துக் காட்டுகின்றான். நட்சத்திரேசனும், காலகண்டரும் சரி சரி என்கின்றனர்.)

**காலகண்ட ஐயர்** — *அரிச்சந்திரரே! சம்மதந்தானே.*

**அரிச்சந்திரன்** — *சம்மதந்தான் சுவாமீ.*

**காலகண்ட ஐயர்** — *உமது ஆம்படையாளைக் கேட்டீரோ? அந்தம்மாள் வாயைக்கூடத் திறக்கவில்லையே. ஏனம்மா உனக்கு சம்மதந்தானா இந்த விஷயம்?*

**சந்திரமதி** — *சம்மதந்தான் சுவாமீ!*

**காலகண்ட ஐயர்** — *சரி, சாட்சியம் ஆச்சோ? நட்சத்திரேசரே, நீர் போட்டீரோ?*

**நட்சத்திரேசன்** — *ஆ, ஆ! போட்டுவிட்டேன்.*

**காலகண்ட ஐயர்** — *அவர் போட்டாச்சோ?*

**நட்சத்திரேசன்** — *அவர்தானே எழுதினார். போட்டுவிடுகிறார்.*

**சத்தியகீர்த்தி** — *சுவாமீ! யானும் போட்டுவிட்டேன்.*

**காலகண்ட ஐயர்** — *சரி விவஹாரம் முடிந்துவிட்டது. இனி முடிப்பு அவிழ்க்க வேண்டியதுதான் பாக்கியோ? வாங்கிக்கொள்பவர் யார்?*

**நட்சத்திரேசன்** — *அதென்ன யார் என்கிறீர்? நான்தான்.*

**காலகண்ட ஐயர்** — *ஐயா, அரிச்சந்திரரே! நீர் வாங்கிக்கொள்ளும். பிறகு, யாருக்கு வேண்டுமானாலும் கொடும். நியாயம், உம்மிடத்தே கொடுக்கவேண்டும். இந்தாரும், எண்ணும். பத்திரம், பத்திரம்.*

**அரிச்சந்திரன்** — *ஆம், ஆம், பெற்றுக்கொண்டேன் சுவாமீ.*

**காலகண்ட ஐயர்** — *நூறு லட்சம் பொன்னும் இருக்கோ பாரும். நீர் பயித்தியமா யிருக்கிறீர். உலக வ்யவஹாரம் தெரியல்லே உமக்கு. சரியாய் எண்ணிக் கொடும்.*

**அரிச்சந்திரன்** — (நட்சத்திரேசனை நோக்கி) *சுவாமீ! தேவரீர் இந்தப் பொருளை ஏற்றுக்கொள்ளுங்கள்.*

**நட்சத்திரேசன்** — *இதோ, இதற்குத்தானே இவ்வளவு பாடு.*

(வாங்கிக் கொள்கின்றார்.)

**காலகண்ட ஐயர்** — *அரிச்சந்திரரே! எங்களுக்குத் தேசகால மாறது. நாங்கள் போகவேணும். சேஷி தனியே யிருப்பள். இவாளை அழைச்சிண்டு போகலாமே?*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! இனி எனது அபிப்பிராயம் எதற்கு? இவர்கள் தங்களுடைய சொத்துக்கள். அழைத்துச் செல்லுங்கள்.*

(சந்திரமதியை நோக்கி)

*பெண்மணீ! நீயும், நமது செல்வனும் இம் மறையவர் வீடு சென்று, அவர்களிட்ட பணிவிடைகளை அன்புடன் இயற்றி, இட்டதை யுண்டு இருங்கள். அந்தோ, பெண்மணீ! வருந்தாதை, எல்லாம் இறைவனருளாம்.*

**சந்திரமதி** — *என் இன்னுயிர்த் தலைவ! என்ன செய்வேன்! தம்முடைய அருள் முகத்தைக் காணாது எவ்வா றிருப்பேன்! மணாளனை யகன்ற மங்கையர் உயிர்வாழ்வது எதற்கு. அந்தோ, அந்தோ, பரமேசுவா! இதுவும் நின் அருளா! முற்பிறப்பில் எவர் உறவைப் பிரித்தோமோ! எவர் வாழ்வைக் கெடுத்தோமோ! யாதோ தெரியவில்லையே. பிராணநாத! அடியாள் என்ன குற்றம் புரிந்தோ இவ்வகைய நிலைக்கு ஆளானது. (கைகளை எடுத்து) அந்தோ, இக்கரங்களை எவ்வாறு மறப்பேன்!*

(துடித்து விழுகின்றாள்.)

**அரிச்சந்திரன்** — *(சந்திரமதியை எடுத்து மார்போடு அணைத்து) பெண்மணீ! கலங்காதை, எல்லாம் நன்மைக்கே யாகும். நமது விதி இவ்வாறாயின் நாம் என்ன செய்வது. அழுதாற் பயனென்ன, நொந்தாற் பயனென்ன, ஒன்றும் ஆவதில்லை. எவ்வாறாயினும், நாம் முனிவர் கடனை மொழிதவறாது தீர்த்தமை ஒன்றே நம்மிடத்து இறைவன் காட்டிய பேரருளாகும். இதனை யுன்னி மகிழ்தல் வேண்டும். கண்ணீர் விட்டுக் கலங்காதை, தேர்ந்திருப்பாய். நமது செல்வன் இதோ ஏங்கி நிற்கின்றான்.*

**சந்திரமதி** — *பிராணநாத! பகுத்தறிவற்ற விலங்கினங்களும், பறவைகளும் தத்தம் துணையைவிட் டகலாமல் நேசம் பாராட்டுகின்றனவே. அந்தோ! அவ்வகைய இன்பமும் நமக்கு இறைவ னருளாதிருக்க யாம் யாது தீவினை யிழைத்தோமோ? அவ்விதி இவ்வாறு வருத்துவதைவிட உடலினின்றும் உயிரைப் பிரித்துவிடுதல் சாலச் சிறப்பாகுமே. அந்தோ, அந்தோ, பிராணநாத! மங்கையர் எப்பொருளைத் துறப்பினும், எவ்வகைய இன்னலில் இருப்பினும் மணாளனோ டிருப்பரேல், மனத்தில் வாட்ட முறாது. எவ்வகைச் செல்வ மிருந்தும் மணாள னின்றேல், அவர்கள் வாழ்வு எதற்காகும். அந்தோ, நாடு துறந்து, நலமனைத்துந் துறந்து, தாய் தந்தையரை யிழந்து, எல்லாவற்றிலுந் திக்கற்று, இன்னலுற் றிருந்தும்,*

மனத்தில் சிறிது துன்பமும் தோன்றவில்லை. இனி என் கண்மணிக்கு ஒப்பாகிய காதலரையும் பிரித்து வைத்த என் விதியை என்னென்று நோவது! அந்தோ,

கலிவிருத்தம்

அல்லலே பெண்ணெனப் பிறத்தல் ஆங்கதில்
அல்லலே இளமையிற் சிறத்தல் ஆங்கதில்
அல்லலே கட்டழ குடைமை ஆங்கதில்
அல்லலே இரவலர்ச் சார்பி னுருதல்

என்பதே போல், பெண்பிறப்பே அவலம் அவலம். அதற்கு யானே திருஷ்டாந்தமாக நிற்கிறேன். ஆ தெய்வமே, இவ்வாறும் சோதிக்கலாகுமோ!

(அரிச்சந்திரன்மீது சாய்கின்றாள்.)

**அரிச்சந்திரன்** — (சந்திரமதியைத் தாங்கிக்கொண்டு) பெண்மணீ! அந்தணர் காத்திருக்கின்றனர். இவ்வாறு வருந்துவது அழகன்று. எவ்வெக் காலத்தில் எதெது நடக்குமோ அது நடக்கும். அதனை விலக்க ஒருவராலும் இயலாது. வினைப் பயனை அநுபவித்தே ஒழித்தல் வேண்டும். இன்றேல், அது பிறவிகடோறும் தொடர்ந்து வருத்தும். அதனாலே மெய்ஞ்ஞானியரும் தத்தம் வினையை அவ்வப் போது அநுபவித்தே ஒழிப்பர். நல்வினை எவற்றையும் ஆக்கும், தீவினை எவற்றையும் போக்கும்.

வெண்பா

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மற்றோர் கொள"

என்பது தேற்றமே யன்றோ. இறைவ னருளிருப்பின் நாம் விரைவிற் சந்திப்போம். நீ மனங்கவலாது சென்று, நமது சிறுவனைக் கவனமாய்ப் பார்த்துக்கொள்.

**காலகண்ட ஐயர்** — அரிச்சந்திரரே! இதென்ன அவஸ்தையா வன்னோ போச்சு. இப்படிப்பட்டவா எப்படி வேலை செய்யப்போறா? இப்படித்தான் அழுதிண் டிருப்பளோ? என் சேஷியன்னோ என்னை விட்டுப் போறதானா சந்தோஷமா கும்மாள் மிட்டுண்டு போறா. புருஷனைத் தொலைச்சிப் போறதானா பொண்டுகளுக்கு சந்தோஷமா வன்னோ இருக்கும். இதென்னமோ நேக்கு நன்னாயில்லை. என் பொருளைப் போட்டுவிடு. நீங்கள் எப்படியாவது இழுத்துப் பறிச்சிண்டு கிடங்கள்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அதெல்லாம் ஒன்றுமில்லை. விவாகமான பிறகு, அடியேனை விட்டுப் பிரிந்தவ ளல்லள். அதனால், வருந்துகின்றாள். இதோ அனுப்பி விடுகின்றேன். இவர்களைத் தாங்கள் காத்து ரக்ஷிக்கவேண்டும். நீங்கள்தான் தாய் தந்தை குரு தெய்வம் யாவும். இச் சிறுவன் ஒன்றும் அறியான். அவன் மீது சற்று அருள் வைக்கவேண்டும். அழைத்துக்கொண்டு போங்கள்.

**தேவதாசன்** — ஊஉம், ஊஉம், நான் அம்மாளோடு போக்மாட்டேன். நான் இங்கேயே இருப்பேன். எனக்குப் பழம் பறித்துக் கொடுங்கள், போதும்.

**அரிச்சந்திரன்** — (**கண்ணீர் கலங்க**) அடா கண்மணீ! நீ அம்மாளோடு போய், அங்கேயே இரு. நான் பிறகு வருகிறேன். இதோ ஐயா இருக்கிறார். அவர் உனக்குத் தின் பண்டங்கள் கொடுப்பார், போ. அழாதே.

**தேவதாசன்** — எனக்குப் பண்டங்கள் வேண்டாம். பழமிருந்தால் போதும். அம்மாளையும் இங்கேயே வைத்துக்கொள்ளலாம்.

**அரிச்சந்திரன்** — அந்தோ, பரமேசா! இந்தப் பாலனுக்கு என்ன சொல்லித் தேற்றுவது. அப்பா! வேண்டாம், அம்மாளோடு போ, பிறகு வருகின்றேன்.

**சந்திரமதி** — அப்பா, கண்மணீ! வாடா, நாம் போவோம்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! அந்தணர் காத்திருக்கிறார். போய் வாருங்கள். இறைவன் எல்லாம் நன்மையாகவே முடிப்பார்.

**சந்திரமதி** — இப்பாத தரிசனை இனி என்றோ கிடைப்பது (**பாதத்தில் விழுந்து கண்ணில் ஒற்றிக்கொள்கிறாள். பின்பு கைகளைப்பற்றி**) இக் கரங்களை என்று காண்பேன் (**கண்ணில் ஒற்றிக் கொண்டு முத்தமிடுகின்றாள்**) பிராணநாத! வருகின்றோம். அடியாளை மறக்கவேண்டாம். போய் வருகின்றோம். ஐயா சத்தியகீர்த்தியாரே! போய் வருகின்றோம். நீர்தாம் என் கண்ணாளரைப் பாதுகாக்கவேண்டும்.

**சத்தியகீர்த்தி** — என்னம்மணீ! அடியேன் தங்கள் அடிமை, காத்துக்கொண்டிருக்கிறேன். அவ்வப்போது வந்து மன்னவர் விஷயங்களை அறிவிக்கின்றேன். அம்மணீ! வருந்தவேண்டா. இளவரசரைப் பத்திரமாய் பாதுகாவுங்கள்.

**சந்திரமதி** — ஆ, விதியே! இன்னுமா இளவரசர்! அடிமைப்பட்டும் அரசர் என்ற பெயரா!

**சத்தியகீர்த்தி** — அம்மணீ! வாழ்வுந் தாழ்வும் நிலையல்ல. வாழ்வு என்றவுடனே தாழ்விருக்கின்றது. தாழ்வு என்றவுடனே வாழ்விருக்கின்றது. உயர்ந்தோர் தாழ்வர், தாழ்ந்தோர் உயர்வர். காலம் இவ்வாறே இராது. ஆதலின், வருந்த வேண்டா.

(அரிச்சந்திரனும் சத்தியகீர்த்தியும் கலங்கி நிற்கின்றனர். சந்திரமதி கண்ணீர் விட்டுக்கொண்டே திரும்பித் திரும்பி நாயகனைப் பார்த்துப் பதறிக்கொண்டு செல்கின்றாள். அதுகண்ட காலகண்ட ஐயர்,)

**காலகண்ட ஐயர்** — அரிச்சந்திரரே! இதென்ன போகச்சேயே அபசகுனமாக இருக்கு. சேஷி கண்டாக்கே ஓரம்மே வைவள். இதெல்லாம் சரிப்படாது. நீங்களும் அடிக்கடி வாறோம் என்னு சொல்றீர்கள். அப்போதும் இப்படித்தானாகும். சேஷிக்குச் சமாதானம் சொல்ல நேக்கு முடியாது. நீங்கள் ஒருத்தரும் ஆத்தண்டை தலைகாட்டப்படாது. இதற்குச் சம்மதமா சொல்லுங்கள். இல்லாவிட்டால் சீட்டே ரத்துபண்ணிப் போடுங்கள். இதென்ன அல்லும் பகலும் அறுவது நாழிகையும் தியாஜ்ஜியமா யிருக்கு.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! யாங்கள் ஒருவரும் அவ்விடம் வரவில்லை. தாங்கள் அழைத்துக்கொண்டு போங்கள். எவ்வளவுதான் அடக்கினும் பெண்பால்களுக்கு மனம் கேட்காது. இது தாங்கள் அறியாத தன்றே.

**காலகண்ட ஐயர்** — நேக்குத் தெரியும் பெண்கள் சுபாவம். ஆத்துலே நம்ப சேஷி அறிவளோ? அவளை யன்னோ திருப்தி செய்யவேணும். நாமென்ன, சம்பாதிச்சிண்டு போரவா. அவாளன்னு அதிகாரஞ் செய்ரவா. புருஷா பெண்களுக்கு அடங்கி யன்னு இருக்கவேணும். போய் வாறோம்.

(போகிறார்கள், வழியில்.)

**காலகண்ட ஐயர்** — சந்திரமதி!

**சந்திரமதி** — சுவாமீ.

**காலகண்ட ஐயர்** — நம்ம ஆத்துக்கு சமீபிச்சி வந்துவிட்டோம். நம்ம ஆம்படையா செத்தெ பொருள்மேலெ பிரீதியுள்ளவள். அதிகஞ் செலவானு அறுத்திண்டு சாவள். இவ்வளவு பொன் கொடுத்து உங்களெ கொண்டே னென்னுக்கே எரிஞ்சி விழுவள். சண்டை பிழுப்பள். சமைக்காமகூட இருந்துடுவள். உனக்கு ஒரு சங்கதி சொல்றேன். அதுபோல நீயும் ஆமாம் என்னுக்கே சரி என்பள். அப்படிச் சொல்லிப்போடுவையோ?

**சந்திரமதி** — சுவாமீ! அது யாதோ தெரிவித்தால், சொல்லக்கூடியதானால் அப்படியே சொல்கின்றேன்.

**காலகண்ட ஐயர்** — *அதென்ன அப்படி நினைக்கிறு. சொல்லக் கூடாததையும் சொல்லச் சொல்வாளோ. இதென்ன பயித்தியமாயிருக்கே.*

**சந்திரமதி** — *சுவாமீ! அடியாளைத் தேவரீர் மன்னிக்கவேண்டும். தாங்கள் சொல்லப்போவது இன்னதென்பது அடியாளுக்குத் தெரியாது. தெரியாதமுன் அவ்வாறே யாகட்டும் என்று வாக்குக் கொடுத்துவிட்டு, பின் அக்காரியம் சொல்லக்கூடாத தாயின் என்ன செய்வது. அப்போது, முன்கூறியது சொல் தவறுதலாக வன்றோ முடியும். அதனால் இவ்வாறு சொன்னேன் சுவாமி.*

**காலகண்ட ஐயர்** — *ஆ, ஆ, ஆ, நண்ணு வார்த்தை சொன்னு. விசேஷம் ஒன்னுமில்லெ. ஆத்துலே சேஷி கேட்பள். அப்போ எல்லாம் ஒரு ஆயிரம் பொன் கொடுத்துதான் உங்களை வாங்கினேன் என்பேன். அப்போ உன்னைக் கேட்டாக்கே ஆமாம் என்னு சொல்லவேணும், அவ்வளவுதான்.*

**சந்திரமதி** — *இதற்குத்தான் அடியாள் முன்பே கூறினேன். சுவாமீ, தேவரீர் திரண்ட பொன் கொடுத்து எம்மை யடிமை கொண்டமை என் மனம் நன்கு அறியும். அதனை மறுத்து எவ்வாறு ஓராயிரம் பொன்தான் என்று கூறுவது. அது பொய்ம்மை யாகும். உள்ளதை இல்லதென்று கூறுதல் ஒருவர்க்கும் அடாது சுவாமீ. அடியாளை இதன்பொருட்டு மன்னித்தருளவேண்டும். அடியாளைக் கேட்டால் உள்ளதை யல்லது வேறு கூற இயலாது, சுவாமீ.*

**காலகண்ட ஐயர்** — *இதேது ஆரம்பத்திலேயே மோசமா யிருக்கே. இப்படி நிர்தாக்ஷண்யமா யிருந்தாக்கே சம்சாரத்தில் எப்படியாகும். ஒரு சம்சார மென்னு இப்படியும் அப்படியுந்தான் இருக்கவேணும். என்ன செய்றது. கொண்டாச்சு, இனி குலம் பேசினுக்கே பலனென்ன, வாருங்கோ, வாருங்கோ.*

(வீட்டை யடைகிறார்கள்.)

## நான்காங் களம்



**இடம்:** *காசிமாநகரத்தில் ஒரு சத்திரம்.*

**காலம்:** *பிற்பகல்.*

**பாத்திரங்கள்:** *அரிச்சந்திரன், சத்தியகீர்த்தி, நட்சத்திரேசன், வீரவாகு.*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! சேரவேண்டிய பொருள் முற்றுஞ் சேர்ந்து விட்டதன்றோ?*

**நட்சத்திரேசன்** — ஆம், ஆம், எனக்குச் சேரவேண்டிய தரகு போக மற்றது மாத்திரம் முனிவர்க்குச் சேர்ந்துவிட்டது.

**அரிச்சந்திரன்** — தங்களுக்குச் சேரவேண்டிய தரகு ஏது சுவாமீ! நயவுகூர்ந்து வெளியிடவேண்டும்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, என்ன காலம். ஒரு சொல்லுக்கு நாடு நகரங்களையும் சொத்துக்களையுங் கொடுத்ததுமன்றி, நூறு லட்சம் பொன்னையும் கொடுக்க ஒப்புக்கொண்டு கொடுத்து விட்டாய். காடு மலைக ளெல்லாம் கால் கடுக்கச் சுற்றி, படாத பாடுகளெல்லாம் பட்டு, பசியினால் மெலிந்து, வாதை யுற்று வருந்திய கஷ்டம் உனது மனமே யறியும். அதெல்லாம் ஏதோ எமது முனிவர்பொருட்டு அனுபவித்ததாக எண்ண இடமுண்டு. அதிருக்கட்டும், நீங்கள் ஏதோ வழியி லெல்லா முயன்றும் பயன்படாமல் படுங்கஷ்டத்தை யுன்னி, இந் நகர முழுதுஞ் சுற்றி, நல்ல பிராமணராகப் பார்த்துக் கொணர்ந்து, கொடாதவனைக் கொடுக்கும்படி செய்து, பொருள் வாங்கித் தந்தது மன்றி, அவ்வப்போது ஒரு முறைக்கு இரண்டு முறை, என்னை மறக்கவேண்டாம் மறக்கவேண்டாம் என்று வற்புறுத்தியும் சொன்னேன். அதைக் கேட்டதுமன்றி என் சிரம முழுவதும் பார்த்திருந்தும் தரகு ஏது என்று கேட்கின்றாயே இது தருமமா! ஒன்றுமில்லை, இந்தக் கையிலிருந்து அந்தக் கைக்கு கடன் வாங்கிக் கொடுப்பவர்க் கன்றோ நூற்றுக்கு இரண்டு மூன்று தரகு கிடைக்கின்றது. இல்லை யென்றால் போய்விடுகின்றேன். போய், முனிவர்க்கு என் தரகு போக மற்றதைக் கொடுத்தா யென்று சொல்லிவிடுகின்றேன்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! வருந்த வேண்டாம். தாங்கள் சொல்லியது ஞாபகத்திற்கு வந்தது. தாங்கள் தரகு சம்பந்தமாக அடையவேண்டுவது எவ்வளவோ, அதனை அருள் செய்யவேண்டும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! நமக்கு அதிக ஆசை வேண்டுவதில்லை. அதிக ஆசை அதிக நஷ்டம். நீயோ கையி லில்லாதவன். எங்காவது அடிமைப்பட்டுத்தான் தரவேண்டும். ஊரில் நூற்றுக்கு எட்டு பத்து வாங்குகின்றனர். இவ்வகைய சிரமமானால் பன்னிரண்டு பதினைந்தும் வாங்குவார்கள். நமக்கு அவ்வளவும் வேண்டாம். நூற்றுக்கு ஆறேகாலாவது சரிப்படுத்தினால் ஒருவாறு ஏற்றுக்கொள்ளலாம். பிறகு உனதிஷ்டம். இதெல்லாம் கொடுப்பவர் இஷ்டத்தைப் பொறுத்தது.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இப்போது தாங்கள் புகன்றவாறே அடியேன் எவர்க்கேனும் அடிமைப்பட்டே தமக்குரிய பொருளைத் தருதல் வேண்டும். தேவரீர், முன்போல் சென்று மற்றொருவரை யழைத்துவந்து, முன்பு தாங்கள் புரிந்த நன்மையின்பொருட்டுத் தமக்குச் சேரவேண்டிய பொருளுக்கும், இப்போது படும் சிரமத்தின் பொருட்டுச் சேரவேண்டிய பொருளுக்குமாக அடியேனை அடிமையாக்கிப் பெற்றுக்கொள்ள வேண்டுகிறேன். இதுவே அடியேன் விண்ணப்பம்.

**நட்சத்திரேசன்** — ஓ, ஓ, அப்படியா செய்துவிட்டாய். ஆமாம், பாவம், நீ தான் என்ன செய்வாய். என் பொருளுக்கும் யான்தான் முயலவேண்டும். ஆகட்டும், அப்படியே செய்கின்றேன். யாவராயினுங் குற்ற மில்லையே?

**அரிச்சந்திரன்** — பொருள் தருவார் யாவராயினும் குற்றமில்லை. தயவுகூர்ந்து அழைத்துவரவேண்டும்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, அப்படியே செய்கிறேன்.

(நட்சத்திரேசன் சென்று வீரவாகுவைச் சந்திக்கின்றான்.)

**வீரவாகு** — ஓ, ஓ, நட்சத்திரேசரே வாரும் வாரும். நற்காலத்திற்கு எதிரி லகப்பட்டீர். முனிவர் உம்மைச் சந்திக்கவென்று கட்டளையிட்டார். எங்கு சந்திப்பது என்று எண்ணமிட்டுக்கொண்டே வருகின்றேன். எதிரி லகப்பட்டுக் கொண்டீர். சந்தோஷம், என்ன சங்கதி? பெருங் காரியங்களெல்லாம் முடிப்பதாகக் காண்கின்றது. பெண்டு பிள்ளையைப் பிரித்து ஆயிற்று. இனி என்ன தடை, வெற்றி பெறுவதற்கு?

**நட்சத்திரேசன்** — பெண்டு பிரிந்தா லென்ன? பிள்ளை பிரிந்தா லென்ன? உறுதியும் உண்மையும் பிரிவதாகக் காணவில்லை. வெற்றி எங்கிருந் துண்டாகும்? முனிவர் ஏதோ வீணெண்ணங் கொள்கின்றனர். அவருக்கு இவ்விடத்தில் உண்டாகும் இன்னலில் எவ்வளவுந் தெரிவதற் கிடனில்லை. நீங்களும் அவ்வப்போது வந்து போகின்றீர்கள். உங்களுக்கு யான்படும் சிரமம் எவ்வாறு தெரியும்? தெரியாது, தெரியாது. இரவும் பகலும் அவனோடு உழன்று எவ்வகைய தந்திரம் புரியினும் ஒன்றும் பயன்படவில்லையே. என்ன செய்வது. நீர் வந்திருக்கின்றீர், நீராவது அவனை நன்னிலையினின்றும் சற்று விலகும்படி செய்துவிடும் பார்ப்போம்.

**வீரவாகு** — நட்சத்திரேசரே! என்ன இவ்வாறு கூறுகின்றீர். உம்முடைய வருத்தத்தை நீர் பெரிதாக மதிக்கின்றீர். உலகத்-

தில் அவரவர் தத்தம் வருத்தத்தினையே பெரிதாக எண்ணு-வர். அதிருக்கட்டும், நமது முனிவர் படும் வருத்தம் ஒரு-வருக்கும் இராது. நாம் எவ்வளவு முயன்றாலும் முடிவில் ஏற்படும் மானமும் அவமானமும் அவருடையன வன்றோ. நமக்கு உழைப்போடு தொலைகின்றது. அவர்க்கு பழியும் பாவமுமாக வன்றோ முடிகின்றது. இவைமட்டுமோ, இதனா-லுண்டாகும் அவமானத்திற்கும் எல்லையுண்டோ? இவற்றை யெல்லாம் அவர் உய்த்துணர்ந்து, அவர் படும் சிரமும், மன-வருத்தமும், யோசனையும் இவ்வளவின வென்று கூற எவ-ரால் முடியும். ஒவ்வொரு முறையிலும், பலவாறு எண்ணி, ஏதோ ஒன்றை மனத்திற்கொண்டு எமக்குப் புகட்டி யனுப்பு-கின்றனர். யாங்கள் திரும்பிச் சென்று, எண்ணம் ஈடேற-வில்லை என்று கூறும்போது, அவர் படும்பாடு பெரும்பாடாக வன்றோ இருக்கின்றது. எங்களுக்கோ அவர் சொல்லியபடி செய்து, அவருக்குத் திருப்தி யுண்டாகுமாறு புரிவது பெருங் கஷ்டமாக இருக்கின்றது. இப்போது ஒரு திருஷ்-டாந்தங் கூறுகின்றேன் கேளும்.

**நட்சத்திரேசன்** — அதென்ன அப்படிப்பட்டது! சற்றுத் தயை-செய்து கூறும், கேட்போம்.

**வீரவாகு** — அவ்வாறு கேளும் கூறுகின்றேன். முனிவர் என்னி-டம் திரண்ட பொருளீந்து, அதைக்கொண்டு இக் காசியம் பதியில் யாகசாலைகளை இயற்றி, மயானம்போல் மாற்றி வைக்க வெனக் கட்டளை இட்டனர். மிகவும் மெய்வருந்தி அதனை அவ்வாறே செய்து முடித்து ஈண்டடைந்தேன். என்-னோடு வல்லபனையும் கூட்டிவந்தேன். அதுவன்றி ஒரு கன்-னிகையையும் என் மனைவியாக அழைத்துக்கொண்டு வந்-துள்ளேன். சந்நியாசியாக வந்தும் சனியன் தொலையவில்லை. காசிக்குச் சென்றாலுங் கருமம் தொலையாது என்பார்களே, அதனை நம்மிடத்திலேயே காணலாகும். என்ன செய்வது, ஆசிரியர் சொல்லை அணுவும் தட்டி நடத்தல் கூடாது.

**நட்சத்திரேசன்** — ஓகோ! இவ்வளவு காரியங்கள் நடந்து விட்ட-னவா? சரி, சரி, அதிருக்கட்டும். இவ் வூரில் மயான மில்-லையா? இந் நகரத்தில் நீர் எவ்வாறு மயான முண்டாக்குதல் கூடும்? அதனைச் செய்வதில் உண்டாகும் உட்கருத்து யாது? ஒன்றும் விளங்கவில்லையே.

**வீரவாகு** — நட்சத்திரேசரே! நம்முடைய காரியங்கள் வரவர வன்றோ முதிர்ச்சி யடைகின்றன. இதுகாறும் நாம் செய்-துள்ள முயற்சிகள் அனைத்தினும் இது மிக முக்கியமானது. அதன் பயன் பின்பு தெரியும். இப்போது மயானம் பெற்ற

வகை சொல்கின்றேன் கேளும். முனிவரிடம் பொருள் பெற்றுக்கொண்டு இந் நகரத்தை யடைந்தேன். இங்குதான் நமது காரியங்கள் அனைத்திற்கும் உதவியாக ஒரு பிரதிநிதி இருக்கின்றாரே. அவரைக் கண்டு, அவரிடம் எனது அபிப்-பிராயத்தை முனிவர் உரைப்படியே மொழிந்தேன். அவர் அதன்மேல் அரசருக்குத் தெரிவித்து, ஒரு மயான முண்-டாக்க அநுமதி பெற்றுக் கொடுத்தனர்.

**நட்சத்திரேசன்** — ஆமாம், உண்மையாயுள்ள மயானம் என்ன வாயிற்று? ஒன்றிருக்க அரசர் மற்றொரு மயானத்திற்கு அநுமதி யளிக்கக் காரணம் யாது?

**வீரவாகு** — ஓ கோ, இவ் வூர் முறையை நீர் அறியீரோ! சரிதான், இந் நகரில் மயான மென்பது இல்லை.

**நட்சத்திரேசன்** — அதென்ன? மயான மில்லாமலும் ஒரு நகர முண்டோ? இவ் வூரில் ஒருவரும் இறப்ப தில்லையோ?

**வீரவாகு** — ஆ, ஆ, ஆ, நன்றாய்ச் சொன்னீர். வெகு கூர்மையாய்ப் பகுத்தறிகின்றீரே. அப்படியன்று. இவ் வூரில் இறந்துபட்ட உடல்களை கங்கை நதியில் எறிவது வழக்கம். அதனால், அவ் வுயிர் நற்கதியடையும் என்பது நம்மவர் கொள்கை. பலர் தத்தம் தாய் தந்தையர் முதலாயினோர் இறந்துபட்ட பின், அவர்களுடைய என்பினைக் கொணர்ந்து கங்கையில் விட்டுத் திரும்பி வருகின்றனரே, அதனை அறியீரோ? அத-னால், இங்கு மயானமே யில்லை.

**நட்சத்திரேசன்** — அவ்வாறாயின், நீர் எவ்வாறு அரசனது அநுமதி பெற்றீர்?

**வீரவாகு** — யான் இந்த மயான முண்டாக்கும் நிமித்தம் அரசர்க்-குப் பற்பல காரணங்கள் காட்டினேன். அதென்னவெனில், இந் நகரில் பலர் தம்மவர் உடலை நதியில் எறிந்துவிடாமல் சமாதி செய்ய விருப்பங்கொள்கின்றனர். அன்றி மெய்ஞ்ஞா-னியர், முனிவர் முதலியோர் உடலை சமாதி செய்தலே ஏற்ற தாகும் என் றியம்பினேன். அதனால், மன்னன் மகிழ்ந்து அரசவையில் நிகழும் ஆணையின்படியே குற்றவாளிகளைத் தண்டனைபுரியுந் தலைமைத் தன்மையும் அளிக்கவும் உடம்-பட்டனன். அதனால், யான் இப்போழ்து மயானத் தோட்டி வேடங்கொண்டு, வீரவாகு வென்னும் பெயரால் வெளிப்பட விருக்கின்றேன். முனிவர் ஆணையும் இதேயாகும். இனி, நீர் யாரைத் தேடிக்கொண்டு வந்தீர்? சொல்லும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திரன் தன் மனைவியையும் மைந்தனையும் விற்று, முனிவர்க்குச் சேரவேண்டிய பொருள் முழுவதும்

செலுத்திவிட்டனன். பின்பு, சிறிது யோசித்து, எனக்கும் தாரு கொடுக்கவெனக் கேட்டேன். அவன் அதற்கும் உடன்பட்டுத் தன்னையே எவர்க்கேனும் அடிமையாக்கி எனக்குச் சேரவேண்டிய தாரகினைப் பெற்றுக்கொள்ளுமாறு கூறினன். நம்மவரில் எவரேனும் எதிர்ப்படுவரோ என்னும் நோக்கங்கொண்டு ஈண்டு அடைந்தேன். உம்மைக் கண்டேன். மற்றும் உம்முடைய ஏற்பாட்டினுல் உள்ளங் குளிர்ந்தேன். இனி, நீர் தோட்டியாக வருதலே நன்று. அவன் இழிஞர்க்கு அடிமைப்பட நாணி, ஒருவாறு தாரு கொடுக்க வேண்டிய தில்லை யென்று சொல்லுதலுங் கூடும். மற்றும் அவனுக்கு அடிமைப்பட மனங்கொள்வானுல், அவனைக் கணமும் விட்டகலாத சத்தியகீர்த்தியை அவனிடத்தினின்று பிரித்துவிடுதல் வேண்டும். அவன் அகன்ருயின் அரிச்சந்திரன் மனநிலை மாறுபடும். அதற்கு அணுவளவும் ஐயமில்லை. இதொன்றே நேரிய வழி, வாரும், வாரும், போவோம்.

**வீரவாகு** — ஆகா, அதற் கென்ன, இனி, இவ்வளவு காரியங்கள் நடைபெறுவதனுல், அவ் வரிச்சந்திரன் மனநிலை மாருமலிருக்குமா? இராது, இராது. அவ்வாறும் உறுதிகொள்வானுயின், யான் அவனைக் காவலில் வைத்துப் பலவகையிலுந் துன்புறுத்திச் சத்தியந்தவறச் செய்துவிடுகின்றேன். நமது நண்பன் வல்லபன் துணையாக வந்திருக்கின்ருனே. அவனது வன்மையை நீர் நன்கு யறிவீ ரன்ருே? அவனே அவ் வரிச்சந்திரனைப் பற்பல தீயொழுக்கம் புரியுமாறு ஒரு நொடிப்போதில் செய்துவிடுவான். இனி, அஞ்சவேண்டா.

**நட்சத்திரேசன்** — ஆனுற் சந்தோஷம். நீர் ஈண்டே இரும். நீர் என்னேடு வருவது நன்றன்று. அன்றி, அடிமை கொள்வார் ஒருவரும் இலர் என்று கூறினுல், ஒருகால் துன்பத்திற் கஞ்சி முற்கூறியதை இல்லையென்று மறுத்தலுங் கூடும். இன்றேல், சத்தியகீர்த்தி என்பான், அடிமை கொள்ளத் தக்கவரை நாடி இங்கு வருவன். அப்போது அவனேடு ஏற்றவாறு பேசி முடிவு செய்துகொள்ளும். அவ்வாறின்றி, நீர் என்னேடு வருவீரேல், அவ் வரிச்சந்திரன் நம்மிடத்துள்ள சூழ்ச்சியை உணர்வதற்கு இட முண்டாகும். அதனுல், மற்றும் மனவுறுதி கொள்ளுவான். நானே முன்பு செல்கின்றேன்.

**வீரவாகு** — ஆம், ஆம், நீர் கூறுவனவும் உண்மையே. அவ்வாறே செய்யும். கொள்வார் இல்லை யென்ருல், குணம் மாறுபடும். இல்லாமை எல்லாத் துர்க்குணத்திற்கும் இருப்பிடமாகு மன்றே. செல்லும், செல்லும்.

(நட்சத்திரேசன் தனியே வந்து, அரிச்சந்திரனைச் சந்திக்கின்ருன்.)

**நட்சத்திரேசன்** — *அரிச்சந்திர! என்ன, நின் தீவினை இவ்வாறு இருக்கின்றது. இந் நகர முழுதுஞ் சுற்றினேன். அடிமை கொள்ளத் தக்கவர் ஒருவரும் கண்ணிற் பட்டாரில்லை. இது நினது தீவினையன்று, எனது தீவினை. தீவினை எதனையும் சேரவொட்டாது. என்ன செய்வது. எனது சிரமத்தை யுணர்ந்து, நீயே தேடித் தந்தால் பெறுகின்றேன். இல்லையென்றால் போய்விடுகிறேன். நீதான் என்ன செய்வை.*

**அரிச்சந்திரன்** — *சுவாமீ! வருந்த வேண்டா. அடியேனைக் கொள்ளத் தக்கவர் எவரேயாயினும் அவர்க்கு அடிமைபூண்டு, தமக்குச் சேரவேண்டிய பொருளை யளித்துவிடுகின்றேன். சிறிது மன்னித்தருள வேண்டும்.*

**நட்சத்திரேசன்** — *கொள்ளத் தக்கவரை என்னாற் கூடியவரையில் தேடினேன். இனி, நீங்களே முயல வேண்டும்.*

**அரிச்சந்திரன்** — *சத்தியகீர்த்தி! என்ன செய்வது; இனி நாமே முயல வேண்டும். இந் நகர் நமக்குப் புத்தம் புதியது. யாரை யண்டிக் கேட்பது. சற்றுத் திரிந்து வருவமேல், ஏதேனும் ஓர் வழி ஏற்படும், செல்வோமா?*

**சத்தியகீர்த்தி** — *அரசே! அவ்வாறே செய்வோம். எத் திசையிற் செல்வது.*

**அரிச்சந்திரன்** — *முதல் செல்வர்கள் வசிக்கும் திருவீதியிற் செல்வோம்.*

**சத்தியகீர்த்தி** — *ஆம், ஆம், அது நன்று அரசே! அவ் வீதியும் யாண்டுள்ளதோ அறியோம். அதோ ஒருவன் காவற்காரனே போல் காண்கின்றான். அவனை யண்டிக் கேட்போம்.*

(*வீரவாகு சமீபிக்கின்றான்.*)

**சத்தியகீர்த்தி** — (*வீரவாகுவை நோக்கி*) *ஐயா! நீர் யார்?*

**வீரவாகு** — *நானு, நாo இந்த வூருதாo. ஏன்யா கேக்கிறிங்கோ? நீங்க யெந்த வூரு?*

**சத்தியகீர்த்தி** — *நாங்கள் அயலூர், இந்த வூரில் நல்ல பணக்காரர்கள் இருப்பது எந்த வீதி?*

**வீரவாகு** — *அசலூரா? அசலூருண்ணு தெரிலேயெ. நீங்க ஏo கேக்கிறிங்க? செத்த வெவரமா செல்லுங்களெo, நாo அப்பாலெ செல்றேo.*

**சத்தியகீர்த்தி** — *நாங்கள் அயோத்தி நகரத்தில் உள்ளவர்கள் இங்கு ஒரு காரியமாக வந்தோம். அதற்காகப் பிரபுக்கள் வீட்டைத் தேடுகிறோம். ஆகையால், வழிகாட்டும், நாங்கள் போகின்றோம்.*

**வீரவாகு** — அப்படி செல்லுங்களேo. நல்ல நல்ல பணக்காரு இக்ருங்கோ, மெய்தான். அ, ஆo. நீங்க இன்ணு வேலெயா வந்திங்கொ? நாo கேக்கறேண்ணு கோய்ச்சிக்காதிங்கோ. எனக்கு இந்த ஊரு சங்கதி நொம்ப நொம்ப தெரியும். அதுக்குதாo கேக்றேo.

**சத்தியகீர்த்தி** — அப்படியா, நல்லதையா, நாங்கள் ஒருவர்க்குக் கடன்பட்டிருக்கின்றோம். அதை இன்று மாலைக்குள் செலுத்தி விட வேண்டும். ஆதலால், எவர்க்கானாலும் வேலையாளாக அடிமைப்பட்டு அதைக் கொடுத்துவிடலாம் என்பது எங்கள் எண்ணம். அதனால்தான் அவசரப்படுகிறோம்.

**வீரவாகு** — கடெo இண்ணு, இண்ணைக்கி இல்லாபூட்டா, நாளக்கி குடுக்க கூடாதா?

**சத்தியகீர்த்தி** — கூடாது, கூடாது. இன்றைக்கே சொல் தவறாமல் கொடுத்துவிட வேண்டும்.

**வீரவாகு** — அது கடக்கிட்டுo. நீங்க இன்னின்ணு வேலைசெய் விங்கோ?

**அரிச்சந்திரன்** — ஐயா! எம்மை அடிமைகொள்வோர் விரும்பியபடி அமைந்து நடந்துகொள்வோம். அவர்கள் நியாயமாகச் சொல்லும் எல்லா வேலைகளையும் தடையின்றிச் செய்வோம். எங்களுக்கு அவசரம். சற்று விரைவாக வழி சொல்லும்.

**வீரவாகு**— அவுசுரம் படறிங்களே, உங்களே பாத்தாக்கா நல்லா வாய்ந்தவங்களாட்டங் கீது. நீங்க இன்ணு வேலை செய்யப் போறிங்க. ஐயோ பாவம்.

**அரிச்சந்திரன்** — ஐயா, எங்களுக்குக் கடன் தீரவேண்டியதே முதற் காரியம். அதுவும் இன்று பொழுது சாய்வதற்குள் கொடுத்துவிட வேண்டும்.

**வீரவாகு** — கடேo எம்மாத்தம் குடுக்கணுo.

**அரிச்சந்திரன்** — பதினாயிரம் பொன் கொடுக்க வேண்டும்.

**வீரவாகு** — அம்மா அம்மாத்தமா! பது-ணு-யிரம் இண்ணு, பத்து ஆயிரமா? (இரண்டு கைகளையும் பார்த்து) இது அஞ்சி, இது அஞ்சி, பத்தாச்சி. ஆ, ஆ, இம்மாத்தமா! இதுகீட்டo, நீங்க ரெண்டுபேருந்தானே வேலெ செய்விங்கோ?

**அரிச்சந்திரன்** — இல்லை, இல்லை. நான் ஒருவன்மட்டுமே அடிமைப்படுவேன். கடன்பட்டிருப்பவன் யான் ஒருவனே அவர் என் சிநேகர். என்னோடு எப்போதும் இருப்பவர்.

**வீரவாகு** — த்ரோ யப்பா! பணத்தெ பாத்தா பத்தாயிரமா கீது, வேலே செய்றது ஒருத்தராமே! யாரியா கொடுப்பாங்கோ இம்மாத்தம்?

**அரிச்சந்திரன்** — என்ன செய்வது, எந்தப் பாடாயினும் பட்டு, இன்று விளக்கு வைக்குமுன் பொருளைச் சேர்த்து விட-வேண்டும். கால தாமதம் ஆகிறது. எங்களுக்கு வழியைக் காட்டும், நாங்கள் போகிறோம்.

**வீரவாகு** — சும்மா அவசரபடாதிங்கோ. நீங்க இன்னு, ஐய-மாரு, மொதலிமாரு, செட்டிமாரு இவுங்க ஊட்லெதான் வேலெ செய்விங்களோ?

**அரிச்சந்திரன்** — ஏன் ஐயா அப்படிக் கேட்கின்றீர்? யாராயிருந்தால் என்ன? என்னைக் கடனிலிருந்து நீக்குவோர் யாராயிருந்தா-லும் அடிமைப்படுவேன்.

**வீரவாகு** — குடியானவங்க ஊட்லே வேலைகொரு கொள்ளே கொள்-ளெயா குவிஞ்சி கீறுங்க. நாஂ கூட ஒத்தாசைக்கி ஒரு ஆளு-வோணுண்ணுதாஂ இப்டீ போறேஂ.

**அரிச்சந்திரன்** — ஐயா, நீர் யார், உமக்கு என்னத்திற்கு ஆள் வேண்டும்?

**வீரவாகு** — நான் இந்த வூரு வெட்டியாஂ. சொடலெ காக்கிறது ஏஂவேலெ. இப்போ இப்போ நொம்ப நொம்ப பொணங்க வந்து உயுது. ஏஂ கூடொ இன்னொரு புள்ளாண்டாஂ கீறாஂ. ரெண்டு பேருக்கும் வேலெ நாம்பு கயிண்டு போவுது. அதுக்-குதான் யாரு ஆப்புடுவாங்களாண்ணு போறேஂ. நீங்-கள்ளாஂ ஏங்க கிட்ட வேலெ செய்விங்களா?

**அரிச்சந்திரன்** — ஐயா, எனக்குக் கடன் தீரவேண்டும். சொன்ன சொல் நிறைவேற வேண்டும். அதனால், எனது கடனை தீர்க்க வல்லவர் யாராயினும் அவருக்கு யான் அடிமைப்பட்டு வேலை செய்ய யாதொரு தடையு மிராது, ஐயா.

**வீரவாகு** — எம்மாத்தங் குடுக்குணுஂ. இன்னுருதாட்டி செல்-லுங்க. கோயிச்சிக்காதிங்க. நாஂ எயுத்து தெரியாத குரு-டன். செத்தெ செல்லுங்க.

**அரிச்சந்திரன்** — ஐயா, நான் செலுத்தவேண்டிய கடன் பதினாயிரம் பொன். அதை இன்று மாலைக்குள் செலுத்திவிட வேண்டும்.

**வீரவாகு** — பதினாயம் — (**விரல்களைப் பார்த்து**) ஒண்ணு, யெண்டு, மூணு, நாலு, அஞ்சி, ஆறு, ஏயு, எட்டு, ஒம்பேது, பெத்து. டேயப்பா, இம்மாத்தமா! இத்தினி ஆய்ரமா! இக்கட்டும்.

எப்படினாச்சும் வேலெ ஆவுணுo. ஏo யப்பா! ரவ வெலெயெ கொறிக்ககூடதா? பாரு யப்பா.

**அரிச்சந்திரன்** — குறைப்பது ஒன்றுமில்லை. யான் செலுத்தவேண்டிய தொகை அவ்வளவு. அதில் சிறிதும் குறைக்க முடியாது.

**வீரவாகு** — அப்படின சரிதாo. யாருக்கு குடுக்குணுo கடன்? கடங்காரு எங்கெ கீறுரு?

**அரிச்சந்திரன்** — ஐயா! அதோ தெரியும் அந்தச் சத்திரத்தில்தான் இருக்கிறார். அங்கே போனால் அவரைப் பார்க்கலாம்.

**வீரவாகு** — சரிதாo. கிட்டதாo கீது. ஆமாo எம்பொருலே நாங் குடுத்தூட்டா, எனக்கின்ன வயி! பொருலெ வாங்கினு அப்பரம் போண்ணுக்கா என்ன செயாது? அதுக்கெல்லாo முன்னுக்கே வயி செல்லியா.

**அரிச்சந்திரன்** — ஐயா! அப்படி யொன்றும் வஞ்சிக்கமாட்டோம். சொல் தவறமாட்டோம். அதற்குண்டானபடி அடிமைச் சீட்டு எழுதிக் கொடுக்கின்றோம். அதற் கொன்றும் அஞ்ச வேண்டாம்.

**வீரவாகு** — அதென்னமோ எனக்கு தெரியாது. நாங்க படிச்செவுரு இல்லா. நாங்க பண்ணக்காரு போனு எங்க ஆண்டமாருக்கு எயிதி குடுக்றமே, அப்படி எயிதி குடுக்கணுo.

**அரிச்சந்திரன்** — அப்படியே ஐயா! அதுதான் அடிமைச் சீட்டு என்பது. முறிச் சீட்டு என்றும் சொல்வார்கள்.

**வீரவாகு** — அ, ஆo, அதுதாo அதுதான்o மொறிச் சீட்டு. அப்படி செல்லுங்கொ. நீங்க என்னென்னமோ கொயப் பிரிங்களே. மொறிச் சீட்டு எயிதி குடுப்பிங்களா இல்லயா?

**அரிச்சந்திரன்** — ஆ ஆ, அப்படியே எழுதிக் கொடுக்கின்றோம்.

**வீரவாகு** — இந்த ஐயனுo, பணம் வாங்கிக்குதே அந்த ஐயனும் சாக்கி கையெழுத்து போடுவாங்களா செல்லுங்க.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அப்படியே போடுவார்கள். அதற்கொன்றும் சந்தேக மில்லை.

**வீரவாகு** — ஆனா, போலாo வாங்க.

(போய் சத்திரத்தை யடைகின்றனர்.)

**அரிச்சந்திரன்** — சுவாமீ! என்னை அடிமையாகக்கொண்டு, தமக்குப் பொருள் செலுத்த வல்ல ஒருவரை அழைத்துக்கொண்டு வந்துள்ளேன். தயை செய்து அதற்கான அடிமைச் சீட்டை அருகிலிருந்து முடித்துக் கொடுத்துத் தமக்குச் சேரவேண்டிய பொருளைப் பெற்றுக்கொள்ளும்.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, அப்படியா! வெகு சந்தோஷம். இதோ வருகின்றேன். அரிச்சந்திர! இவர்தானா பொருள் செலுத்து-வோர்?

**அரிச்சந்திரன்** — ஆம் சுவாமீ!

**நட்சத்திரேசன்** — ஐயா! நீர் யார்?

**வீரவாகு** — நானு! நாம இந்த வூருதான்.

**நட்சத்திரேசன்** — இந்த வூர் என்பது சரிதான். உமக்கு என்ன வேலை? எங்கிருப்பது?

**வீரவாகு** — அதெல்லாம் யாங் கேக்கிறிங்கோ? அதெல்லா முன்-னடிக்கே செல்லீட்டனே. அல்லாத்துக்கும் ஒப்பிக்கினு-தானே அயிச்சாந்தாங்கோ.

**நட்சத்திரேசன்** — அது சரிதான். அரிச்சந்திர! இவர் யார்? என்ன முடிவு செய்தாய்?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இவர் இவ்வூர் சுடலையைக் காவல் செய்-பவராம், அவருக்கு ஒரு அடிமை வேண்டுமாம். அதற்கு யான் ஆட்படுவதாய் ஒப்புக்கொண்டேன். அவரும் தமக்-குச் சேரவேண்டிய பொன் பதினாயிரத்தையும் செலுத்தி விடுவதாய் ஒப்புக்கொண்டனர்.

**நட்சத்திரேசன்** — சுடலை காப்பவனென்றால் வெட்டியானன்றோ. அந்தோ! பரமேசுவா, இப்படிப்பட்ட சொல்லும் காதிற் படலாமா! வேந்தனா யிருந்தவன் வெட்டியானாவது எங்ஙு-னம்! என்னே நிலை, என்ன வாழ்வு! அரிச்சந்திர, என்னை வருத்துவதற்காகவே இவ்வாறு செய்தனையோ. ஐயோ! எனக்குப் பொன்னும் வேண்டா, பொருளும் வேண்டா. இதென்ன அநியாயம், வேண்டா, வேண்டா. யான் போ-கின்றேன். ஒருகால் எவரேனுங் கேட்டால், பாவம் அவ் வரிச்சந்திரன் யான் பட்ட பாட்டைப் பார்த்துப் பதி-னாயிரம் பொன் கொடுப்பதாய் உடன்பட்டு வாக்களித்-தான். கொடுக்க இசையாமையால் இல்லையென்று சொல்லி-விட்டான். அவன்றான் என்செய்வான் என்று சொல்லி விடுகின்றேன். (**வீரவாகுவைப் பார்த்து**) ஐயா! நீர் போம், அவர் கடன் கொடுக்கவேண்டிய தில்லை. இருந்தாலும் உமக்கு அடிமைப்படமாட்டார்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேனை இவ்வாறு பழிக்குப் பாத்திர னாக்குவது தேவரீருக்குத் தருமமன்று. சொன்னதை இல்லை யென்று மறுக்கேன். சொன்னதை யில்லை யென்பவனுக்குச் சுவர்க்கமும் இல்லையாகும். யான் எவருக்கு அடிமைப்

பட்டால் என்ன. தமக்குச் சேரவேண்டிய பொன்னைத் தாம் பெற்றுக்கொண்டு செல்லும். தாம் அடியேன்பொருட்டு வருந்துவதினும், அடியேனுக்கு இதனால் நேரும் பழிபாவங்களினின்றும் அடியேனை விலக்குவிப்பதே பேரருளாகும். மனம்புரிந்து பொருளைப் பெற்றுக்கொள்ளும்.

**வீரவாகு** — இந்த ஐயெ இன்னு செல்லுது. ஏ கிட்ட வேலெ செய்ய கூடாதுண்ணு செல்லுது. ஏன் செல்து. இந்த ஐயன் கடங்காரந்தானே, கடந்தானே வாங்கினு. இந்த வம்பு வயக்கெல்லாம் ஏ பேசுது. இந்த ஐய பாப்பரையனு?

**நட்சத்திரேசன்** — ஏன் வீண்பேச்சுப் பேசுகிறாய்? போ.

**வீரவாகு** — நா ஏன்ய்யா போறே, நீ போய்யா. அது கீட்டம், ஏகிட்ட வேலெ செய்ய கூடாதுண்ணெயே. ஏ, நாங்க வெட்டியான் வேலெ செய்ரமண்ணு, அதின்னு வெட்டியா வேலெண்ணு அம்மாத்தம் எளக்காரம். நீங்க பாப்பாரு. வேதங்களே பாப்பாரு. நாங்க வேதங்களெ வெட்ரவங்க. ஜாதி, ஜாதி இண்றிங்களே அதின்னு பொறப்புலெயெ ஜாதி கீதா, ஐயன் உனக்கின்னு அஞ்சி கண்ணு வைச்சி கீறது. ஒண்ணு மிலேயே, எங்களுக்கு கீற கையுங் காலுந்தா ஊங்களுக்குங் கீது. ரத்தம் என்னமணு உங்களுக்கு வெள்ளோயா இக்குதா. அத்தெகூட காணமே. அல்லா ஒண்ணுதாங் கீது. நீ பாப்பரையன். நா பறையன், இம் மாத்தந்தானே. செல்லுக்கு பாத்தாகூட நாம்ப ரெண்டு பேருந் அண்ணந் தம்பியாதானே கீறோ. ஏன்யா இந்த பொறுமே.

**நட்சத்திரேசன்** — அடே அப்படியெல்லாம் தாறுமாறாய்ப் பேசிச் சாஸ்திர விரோதியாகாதே. உயர்குலத்திற் பிறப்பதற்கு எவ்வளவோ புண்ணிய விசேடம் வேண்டும். சாஸ்திரம் சொல்லுவதைக் கேள்.

விருத்தம்

எறும்புகடை யானைதலை யெண்பத்து நான்கிலட்ச ஜென்மபேதம்
பிறந்துழலு முயிர்க்கெல்லாம் மனிதராய்ப் பிறப்பரிது பிறந்தாரேனும்
பறம்பர்சோ னகர்சூனர் ஈனர்கா னவர்நுளையர் பழையராதி
அறைந்தகீழ்க் குலநீங்கி மேற்குலத்தி லவதரிப்ப தரிதமைந்தா.

தாழ்குலத்தோர் கோடிசென்மந் தவம்புரிய வேண்டுமுயர் சதுர்த்தராகக்
கேழுழவர் கோடிதவஞ் செயவேண்டும் வணிகர்சென்மங் கிடைக்கவேண்டில்
சூழ்வணிகர் கோடிசென்மந் தவமபுரியின் அரசரெனத் தோன்றுநிற்பர்
வாழரசர் கோடிசென்மந் தவஞ்செயினுங் கிடையாது மறையோர்சென்மம்.

*அந்தணராய்ப் பிறந்திடினுங் குருடுசெவி யூமைமுட மகன்றுமேனி*
*சந்தவடி வுடன்பிறப்ப தரிதுபிறக் கினும்பாலைத் தானமாதி*
*கந்தல்வனம் புனமொருவி நீர்நாட்டில் வரலரிது கண்டாய்பார்மேல்*
*முந்துறவித் தனைக்குயர்சீர் பெற்றனன்எத் தனைதவமோ முயன்றுமுன்னர்.*

**வீரவாகு** — சும்மா பாட்டெ செல்ரிங்களே, நானே எய்த்து தெரி-யாத குருடெo. ரவெ வெவரமா செல்லுங்க கேப்பொo.

**நட்சத்திரேசன்** — அப்படிக் கேள். கேட்டுத் தெரிந்துகொள் சொல்கிறேன். எறும்பு முதல் யானை வரையிலுள்ள எண்-பத்து நான்கு லட்சம் சீவராசிகளில் மனிதராய்ப் பிறப்பது அரிது. மனிதராய்ப் பிறந்தாலும் பறம்பர், சோனகர், சூனர், ஈனர், கானவர், நுளையர் முதலிய இழி குலத்திற் பிறவாது உயர்குலத்தில் பிறப்பது மிகவும் அருமையாகும். இழிகுலத்திற் பிறந்தோர் கோடி ஜென்மங்கள் எடுத்துத் தவம்-புரியின் சூத்திரராகப் பிறப்பர். சூத்திரர் கோடி ஜென்மங்க ளெடுத்துத் தவம்புரியின் வைசியராகப் பிறப்பர். வைசியர் கோடி ஜென்மங்க ளெடுத்துத் தவம்புரியின் க்ஷத்திரியராகப் பிறப்பர். அப்படிப்பட்ட க்ஷத்திரியர் கோடி ஜென்மங்க ளெடுத்துத் தவம்புரியினும் அந்தணர் பிறப்புக் கிடைப்பது அருமை. இப்படிப்பட்ட அரிய அந்தணர் பிறவியை யடைந்தாலும் குருடு செவிடு ஊமை முடம் முதலிய அங்க-வீன மில்லாமல் அழகிய உருவுடன் பிறப்பது அரிது. அவ்-வாறு பிறந்தாலும் பாலைவனம் காடு முதலிய வெற்றிடம் நீங்கி, நல்ல நீர்வளமுள்ள நாட்டிற் பிறப்பது அரிது. இத-னால் யான் முன் பிறவிகளில் எவ்வளவோ தவம்புரிந்து இவ்வரிய உடலைப் பெற்றிருக்கின்றேன் என்பது விளங்க வில்லையா?

**வீரவாகு** — கிடo, போரும், போருo. இதெல்லாம் உங்களெபோல ஐயமாரு எயிதி வச்சிதுதானே. எனக்குகூட ரெண்டு எய்த்து தெரிஞ்சா, இதுக்கு மேலெ எங்க கொலத்துக்கு எயிதி வெய்ப்பேo—போரும். ஓo கிட்டெ எனக்கு வெவாா மில்லெ. (அரிச்சந்திரனை நோக்கி) ஏo ஐயா, நீ செல்லு, நீ முன்னே வாக்கு சென்னுப்பிலே வேலெக்கி வரியா? இல்-லியா? செல்லு. எனக்கு வேலெ ரொம்ப கீது. எங்களெ ரொத்து செல்லு செல்றிங்கொ. பறையo இல்லாபோனுகா தெரியுo பாடுபடாதெ குந்திகினு துண்றது. ஓசந்த சாதி எப்படி நடந்தாலும் பரவா யில்லெ. நாங்க சேஞ்சாதானு பாவம். பாவமண்ணு கள்ளு குடிக்கிறது, திருடாது, பொய் செல்றது, கொலெ செய்றது இதுங்கள்ளாo பாவம். இத்தை செய்றவன் பாப்பானு இந்தாலும் பறையந்தாo. இத்தெ

செய்யாதவெං பறையனு இந்தாலும் பாப்பாந்தாං. ரிசிங்கள்ளே எத்தினிபேரு சக்கிலிச்சிக்கும், செம்படச்சிக்கும் பொறந்துட்டு பாப்பாரா கீறுங்க. இப்போ அப்டியல்லாං சொல்லாதிங்கையா.

**அரிச்சந்திரன்**—ஐயா, இதோ வருகின்றேன். சொன்னது சொன்னதே. (*நட்சத்திரேசனை நோக்கி*) சுவாமீ தாங்கள் பொருளைப் பெற்றுக்கொள்ளுங்கள். அடியேனுடைய கவலை தமக்கு வேண்டா. இத்தேகம் எவருக்கு அடிமைப்பட்டாலென்ன. மன மொன்றே அவ் விறைவற்கு அடிமைப்பட் டிருத்தல் வேண்டும். இப்பொழுது அவர் கூறியவாறு பழி பாவங்களை எவர் இயற்றுகின்றனரோ, அவரே புலையர். மற்றையோர் புலையராகார். அதனை ஆராயுமிடத்து, சாதி சமய அபிமானங்களால் விளையுந் தீங்குகள் சொற்பமல்ல. ஒன்றுக்கும் பற்றாத இவ்வபிமானங்களே, நாட்டிற் குண்டாகும் நன்மைக ளனைத்தையும் நாசமாக்க முன்னிற்கின்றன. நல்லறிவாளர் இவ்வழியறியாக் காட்டிற் புகுந்து அல்லலுறார். ஒழுக்கமொன்றே உயர்குலமாகப் போற்றத் தகுவது. 'ஒழுக்கம் விழுப்பந் தரலால், ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' என்பர் மேலையோர். அன்றி, பிறப்பிட நோக்கி ஒரு பொருளுக்கு ஏற்றத் தாழ்வு ஏற்படாது. தாமரை, பொன், முத்து, சாமரை, கோரோசனை, பால், தேன், பட்டு, புனுகு, சவ்வாது ஆகிய இவை முதலாயின பிறப்பிடத்தை நோக்காது பெரிதும் போற்றப்படுகின்றன. அவனவன் கூட்டுறவு நோக்கியே குணம் ஏற்படும் அல்லது பிறப்பிடத்தை நோக்கியன்று. ஆதலின் தாங்கள் இவர் தரும் பொருளைப் பெற்றுக்கொண்டு அடியேனைப் புனிதனாக்குதல் வேண்டும்.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர, உன் கருத்து அவ்வாறாயின் யாம் என்ன செய்வது. 'விதிவழி மதி' அவ்வாறே செய்வம். அதன்பின் ஆவனவற்றைச் செய்து முடி.

**அரிச்சந்திரன்** — ஆவன யாவை? அடிமைச் சீட்டு ஒன்றே.

**நட்சத்திரேசன்** — ஐயா, அடிமைச் சீட்டு எழுதலாமோ?

**வீரவாகு** — எய்துங்க.

**நட்சத்திரேசன்** — உம்முடைய பேர் யாது? அந்தச் சீட்டில் என்னென்ன எழுதவேண்டும்?

**வீரவாகு** — எம்போரா எம்பேரு என்? அந்த ஐயந்தானே என்கு எய்திகுடுக்கணுං.

**நட்சத்திரேசன்** — அவர்தான் எழுதிக் கொடுக்கவேண்டும். இன்னு-ருக்கு எழுதிக் கொடுப்பது என்று இருக்கவேண்டாமா?

**வீரவாகு** — ஆ, ஆ௦. மெய்தான், மெய்தான். என்பேரு வீரவாவு.

**நட்சத்திரேசன்** — என்ன, நன்ருய்ச் சொல்லும்.

**வீரவாகு** — வீரவாவு, வீரவாவு.

**நட்சத்திரேசன்** — வீரவாவு என்ருல், ஓ, ஓ, வீரவாகுவோ.

**வீரவாகு** — அ ஆம், அ ஆம். அத்தான் அத்தான். உடாதிங்கோ.

**நட்சத்திரேசன்** — சரி, சீட்டில் என்னென்ன எழுதவேண்டும்.

**வீரவாகு** — அதின்னு, என்னெ கேக்கிறிங்களே. ஓங்களுக்கு தெரியாதா. நா௦ இன்னு, கண்ணு தெரியாத குருட்டு மவெ௦. என்ன கேக்கிறிங்களே.

**நட்சத்திரேசன்** — ஏன், உமக்குக் கண் தெரியாதா? பார்வை இல்லையா?

**வீரவாகு**—நல்லா கெக்கிரிங்களே. சாமி, உங்க புண்ணியத்திலே கண்ணு தெரியுது. எயுத்து தெரியாது. என்னமோ 'என்னும் எயுத்தும் கண்' ணுண்ணு செல்ராங்களே படிச்செவுருங்க.

**நட்சத்திரேசன்**—ஆ, ஆ, ஆ, அப்படியா. படித்தவர்களைக்கூடக் கண்டிருக்கிருயா?

**வீரவாகு**—படிச்சவுங்க, பணக்காருங்க ஆரானுலும் கடிச்சிலே ஏன் கிட்டதானே வரணு௦. அவங்க படிப்பே கிடிப்பே யெல்-லா௦ ஏங்கிட்டதானே ஒப்பிக்கணு௦. இந்தக் கண்ணு எத்-தினி மன்னுதி மன்னருங்க மண்ணுபோனதே பாத்துகிது. வெந்து புடி சாமலானத்தெ பாத்துச்சி. இந்த கை எத்தினி பேரை குத்திக் களறி மடிக்கி வேவவைச்சிச்சி. நீங்கள்ளாங் கூட எங்க கிட்ட வாரத போரிங்களா? வருவிங்க. கிட்டம். காரியத்தெ பாருங்க. இத்தினிநேரம் எத்தினி பொணங் குவிச்சி கடக்குதோ, எயவு.

**நட்சத்திரேசன்**—சீட்டில் என்னென்ன எழுதவேண்டும் சொல்லும்.

**வீரவாகு**—என்னு எயிதாது. நா௦ சென்ன தெல்லா௦ செய்யணும்௦, செத்தமாட்டெ அறுக்கணு௦.

**நட்சத்திரேசன்**—ஐயோ. காசிநாதா! இது என்ன கதி.

**வீரவாகு** — ஏன்யா, அது செய்ய மாட்டிங்களோ?

**அரிச்சந்திரன்** — அதற்கென்ன தடை ஐயா? உம்முடைய வேலையை யான் செய்யத்தானே வேண்டும்.

**வீரவாகு** — இதின்ன, இந்த ஐயேo கலககார ஐயறு கீது. இந்த ஐயo வாறு, அந்த ஐயo எயிதட்டும்.

**அரிச்சந்திரன்** — அதெல்லாம் ஒன்றும் கலகம் நடவாது. சற்று பொறுத்துக்கொள்ளுங்கள்.

**நட்சத்திரேசன்** — சரி, சரி, எனக்கென்ன, செய்பவருக்கு மனமுள்ளபோது மற்றதையும் சொல்லும்.

**வீரவாகு** — இன்னo என்ன கடக்குது. சொடலெயிலே கொண்டாரா பொணத்துக்கு வாக்கரிசி, மொயந்துண்டு, காபணம் கொடுப்பாங்க. அத்தெ வாங்கி எனக்கு சேக்கணும். வாக்கரிசியெ அந்த ஐயே எடுத்து ஆக்கித் துண்ணனும். இது தாo எழுதுங்க. இப்ப, நாo குடுக்கிற பணத்தெ எழுதுங்க. அந்தய்யெo ஏo ஆளுக்கா அடிமெ எண்ணு எழுதுங்க. மறந்துட போறிங்க.

**நட்சத்திரேசன்** — அரிச்சந்திர! இப்போது அவர் சொன்னவை யனைத்தும் உனக்கு விளங்கிற்ரு? அவை யனைத்தும் உனக்குச் சம்மதந்தானே?

**அரிச்சந்திரன்** — சுவாமி! முதலில் அவர், தான் சொல்லிய அனைத்தும் செய்யவேண்டும் என்கின்றூர். அதில், பெரியோர்களாலும் சாஸ்திரங்களாலும் தீயவை என்று விலக்கப்பட்டவை நீங்கலாக மற்றவை யனைத்தும் செய்யவேண்டும் என்றிருத்தல் வேண்டும். இது ஒன்றே யான் சொல்ல வேண்டுவது. மற்றவை யனைத்தும் எனக்கு உடம்பாடே.

**நட்சத்திரேசன்** — ஐயா! இப்போது இவ் வரிச்சந்திரன் சொல்வது தெரிகின்றதோ?

**வீரவாகு** — ரவெ தெரிஞ்சிசி, ரவெ தெரிலெ.

**நட்சத்திரேசன்** — தெரியவில்லையா பாவமான காரியங்கள் தவிர, மற்றெல்லாக் காரியங்களும் செய்வதாக ஒப்புக்கொள்கின்றூர்.

**வீரவாகு** — நல்லா சென்னிங்க. பாவஞ்செய்ய செல்லி யார்தாஞ் செல்வாங்க. அப்படியாபட்ட வேலெ செய்யவாரு. கொற யெல்லாo செய்யர்த்துக்கு இன்ன?

**நட்சத்திரேசன்** — மற்றதெல்லாம் செய்ய உடன்படுகிறூர்.

**வீரவாகு** — அது கிட்டo, மொதலு இந்த ஐயo பேரு இன்ன?

**நட்சத்திரேசன்** — இவர் பெயர் அரிச்சந்திரன்.

**வீரவாகு** — இன்ன, அரிச்சி துண்ரவரு. ஏன் சோறு துண்ணுதோ.

**நட்சத்திரேசன்** — ஆ, ஆ, ஆ, (நல்ல எஜமான்) அரிசி தின்பவன் அல்ல. அரிச்சந்திரன்.

**வீரவாகு** — அரிச்சந்திரன் இண்ணு சொல்றிங்க. சரி, சரி, எய்துங்க.

**நட்சத்திரேசன்** — அப்பா சத்தியகீர்த்தி! இதனை எழுதுவாய்.

**சத்தியகீர்த்தி** — (தாழ்ந்த குரலோடு) ஆ பரமேசுவரா! இதுவும் என் தீவினையா! என் அண்ணலை அடிமையாகக் காணவும், அவ்வடிமைச் சீட்டை யானே எழுதவும் நேர்ந்தன. இதனினும் தீவினை என்ன வேண்டும். (எழுதுகிறான்.)

## அடிமைச் சீட்டு.

துவாபரயுகம் 10367-ல் செல்லாநின்ற குரோதிஞூ மாசிமீ 11உ யில் காசிமாநகரத்தில் வசிக்கும் வெட்டியார வேலை, சிவபாதம், ம-ா-ா-ஸ்ரீ வீரவாகு என்பவருக்கு, அயோத்திமாநகர் க்ஷத்திரியகுலம் திரிசங்கு மன்னர் புத்திரன் அரிச்சந்திரன் எழுதிக்கொடுத்த அடிமைச் சீட்டு என்னவென்றால்—

நான் நட்சத்திரேசருக்குத் குரு சம்பந்தமாய்ச் செலுத்த-வேண்டிய பதினாயிரம் பொன்னுக்காக யானே மேற்கண்ட வீரவாகு என்பவருக்கு அடிமையாகச் சம்மதித்து, பதினாயி-ரம் பொன்னையும் ரொக்கமாகப் பெற்றுக்கொண்டேன். ஆகை-யால், இன்றுமுதல் யான் மேற்கண்ட வீரவாகு என்பவருக்கு அடிமையாளாகி, பெரியோர்களாலும், சாஸ்திரங்களாலும் விலக்கப்பட்ட தீய ஒழுக்கங்கள் தவிர, மற்றைய தொழில்கள் அனைத்தையும் அவர் உத்தரவுப்படி செய்ய உடன்படுகின்-றேன். மேற்கண்ட தொகை எக்காலத்தில் யான் மேற்-கண்ட வீரவாகு என்பவருக்குச் செலுத்திவிடுகின்றேனோ அன்று முதல் யான் விடுதலையடைய பாத்தியதை யுண்டு. அந்தக் காலம்வரையில் முன் கூறியவாறே தீய ஒழுக்கங்கள் நீங்கலாக, மற்றக் காரியங்களை அவரது விருப்பத்தின்படி என் மனப்பூர்வகமாய் வஞ்சனையின்றிச் செய்துவரக் கடவேன். ஒவ்வொரு பிணத்திற்கும் கொடுக்கப்படும் கூற்பணமும், முழந்துண்டையும் மேற்கண்ட வீரவாகு என்பவருக்குச் சேர்த்துவிட்டு, வாய்க்கரிசையைமட்டும் யான் அடையக்கடவேன். இந்தப்படிக்கு யான் என் மனப்பூர்வகமாய் எழுதிக் கொடுத்த அடிமைச் சீட்டு.

சாட்சி, இப்படிக்கு,

நட்சத்திரேசன். **அ. தி. அரிச்சந்திரன்.**

இவ்வடிமைச் சீட்டு எழுதியது **சத்தியகீர்த்தி.**

(சத்தியகீர்த்தி படித்துக் காட்டுகின்றான்.)

**நட்சத்திரேசன்** — ஐயா வீரவாகு! இவைகள் எல்லாம் உமக்குச் சம்மதந்தானே?

**வீரவாகு** — சரிதான், படிச் செவருங்க நீங்க. நீங்க மோசமா பண்ணப் போறிங்க. அல்லாம் சரிதாo. இந்தாங்க உங்க பணம். எண்ணிகிங்க. ரொம்ப இருந்தா ஏங்கிட்ட குடுத்துடுங்க. ஏயெ பணம்.

**நட்சத்திரேசன்** — எங்களுக்கேன் உன் பணம்? அப்படியெல்லாம் மோசம் நடவாது.

**வீரவாகு** — இந்த ஐயனுக்குப் பணத்தே எடுத்து குடுத்துடுங்கo. கடெo தீந்துதுண்ணு வந்தூடுங்க.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இதனைப் பெற்றுக்கொள்ளுங்கள். எண்ணிப் பாருங்கள்.

**நட்சத்திரேசன்** — சரிதான், எண்ணிதான் ஆயிற்றே. அரிச்சந்திர! என் மனம் தத்தளிக்கின்றது. உன் கதி இப்படியும் இருந்தது! என்ன செய்வது. நானும் என் வருத்தம் பொறுக்க முடியாமல் சிற்சில சமயங்களில் கோபமாய்ப் பேசிவிட்டேன். அதை எல்லாம் மனத்தில் வையாதே. நான் போகின்றேன். முனிவர்க்கும் சொல்கின்றேன். உன்னைப் பார்க்கப் பார்க்க என் மனம் பதறுகின்றது. நீ ஒருபுறம், உன் மனைவி ஒரு புறம், மைந்தன் ஒரு புறம். அதிலும் அடிமைத்தன்மை. எக்காலத்தில் நீ இதனினின்றும் அகல்வது. இதெல்லாம் நன்றாயில்லை. நான் சொல்வதைக் கேள். நன்மையுண்டு. தந்திரம் வேண்டும் மனிதர்க்கு. இப்போது முனிவர்க்கு நன்றாய் மனத்தில் பட்டிருக்கும். பெரும்பாரத்தைத் தலையில் தூக்கிக்கொண்டோமே யென்று மறுபடியும் அந்த அரசு உனக்கு வேண்டும் என்று சொல், ஒரு கணப்போதில் வாங்கிக் கொடுத்துவிடுகின்றேன். வீணாக வருந்தாதை. நீதான் ஆண்பிள்ளை, அந்தப் பெண்பாலையும், சிறுவனையும் அடிமையாக்கி அல்லலிற்படுத்துவது அழகல்ல, சொல்கிறேன். கவனி.

**அரிச்சந்திரன்** — அது வேண்டாம் சுவாமீ! கொடுத்ததைப் பின்னும் பெறுவதினும் பெரும்பழி வேறில்லை. கொடுத்தது கொடுத்ததே. இவ்வுடல் யாவருக் கடிமைப்படினும் மனத்தின்கண் தூய்மை வேண்டும். உண்மை நிலை யழியாதிருத்தலே உயர்வு. அதனால் தேவரீர் அவ்வாறு புத்தி புகட்ட வேண்டாம். மற்றும் தாங்கள் இன்னலொன்றும் இழைக்க-

வில்லை. இந்த நாற்பது நாள்வரையில் தாங்கள் எம்மோடு வருந்தி அன்ன பானுதிக ளின்றி துன்புற்றதன்பொருட்டு எம்மை மன்னித்தருள வேண்டும். தாங்கள் அவ்வப்போது கூறியவை வன்சொற்கள் அல்ல, இன்சொற்களே. அவ்வின் சொல்லே, தமக்குப் பொருளை விரைவிற் சேர்க்குமாறு தூண்டிற்று. பெரியோர் வன்மொழி கூறினும் அதன் பயன் நன்மையே பயக்கும். 'மாசற்ற நெஞ்சுடையார் வன்சொல்லும் இனிதே' யன்றோ.

**வீரவாகு** — என்னென்னமோ பேசிறிங்க இன்னுப்யா. எனக்கு ரொம்ப ரொம்ப வேலெ கெடக்குது. பணம் வாங்கர வரிக்கும் அவசருமா இருந்துச்சோ. நல்லாகீதே நாயம்.

**அரிச்சந்திரன்** — இதோ வந்து விடுகின்றோம். மன்னித்துக்கொள்ளுங்கள். (நட்சத்திரேசனை நோக்கி) சுவாமீ! போய் வாருங்கள். முனிவருக்கு எமது வந்தனஞ் சொல்லுங்கள்.

**நட்சத்திரேசன்** — ஆம், போய் வருகின்றேன்.

(நட்சத்திரேசன் போகின்றான், வீரவாகு முன்செல்ல, அரிச்சந்திரனும், சத்தியகீர்த்தியும் பின்செல்கின்றனர்.)

**வீரவாகு** — (திரும்பிப் பார்த்து) இந்த ஐயெ ஓங்கூட வேலெ செய்யாது இண்ணியே. இப்ப யே கூட வருது.

**அரிச்சந்திரன்** — ஐயா, அவர் எனது சிநேகர். அவர் என்னோடே இருக்க விரும்பி வருகிறார்.

**வீரவாகு** — த்ரோ யப்பா, நீங்க யெண்டுபோருமா குந்திகினு பேசிகினு கீசினுங் கேளிவலாசமா கிலாண்ணு பாக்கிறிங்களோ. டேயப்பா. வாணு வாணு! எம் பணத்தே ஏ கிட்டே போட்டுடு. வந்தா, நீ மாட்டம் வா. இல்லாகட்டி வாணு.

**அரிச்சந்திரன்** — ஐயா, நாங்கள் ஒன்றும் அப்படிச் செய்யமாட்டோம். உங்கள் சொற்படி நடப்போம்.

**வீரவாகு** — ஊஹும், எங்கப்பாணே அதெல்லாங் கூடாது. செல்ரபடியே செய்யறே இண்ணயே, இப்பயே அந்த ஐயன் கூட வாணுண்ணு ஒணுமன்றோ. இத்தாணு செல்ரபடியே செய்ரது.

**அரிச்சந்திரன்** — ஆனால் தங்கள் இஷ்டப்படியே நடந்துகொள்கிறேன். (சத்தியகீர்த்தியை நோக்கி) சத்தியகீர்த்தி! என் விதியை என்னென்று நோவது. எல்லாவற்றையும் பிரித்துவிட்டது. உயிர்க்கு உயிராயிருந்த உம்மையும் பிரித்துவிடுகின்றது. அடிமைகொண்டு ஆள்பவருடைய அநுமதிப்படி நடத்தல்

வேண்டுமென்றே. நீர் இவ்விடத்திற்றானே தங்கி, ஏதேனும் ஒரு சத்திரத்தில் வசித்துக்கொண் டிரும். பின்னர், இறைவனருள்படி நடப்பன நடக்கட்டும். நாம் என்ன செய்வது!

**சத்தியகீர்த்தி** — ஆ, என் அண்ணலே, அடியேனைப்போலும் பாவியர் உலகில் எவரிருப்பர். அடியேன் தேவரீரை அகன்றிருக்கப் பொறுமல் அனைத்தையும் துறந்து, தேவரீரை யடைந்தேன். என் தீவினை அதனையும் அழித்து அல்லலிற் புகுத்திவிட்டது. அந்தோ, எம் அண்ணலே! தேவரீருக்கு எவ்வகையில் மனம் ஆறும். என் செய்வது. ஆ, ஆ, இதுகாறும் துன்பமென்பது அடியேனுக்கு அணுவளவுந் தோன்றவில்லை. தம்மைப் பிரிய நேர்ந்த இது ஒன்றே என் என்பையும் உருக்குகின்றது. அந்தோ, பரமேசுவரா! உண்மையை நம்பினோர்க்கு உறுநிலை இதுதானே!

(தலை சாய்கின்றான்.)

**அரிச்சந்திரன்** — சத்தியகீர்த்தி! வருந்தாதீர். எல்லா முணர்ந்த நீரே இவ்வாறு வருந்தலாகுமோ? உலக வாழ்வு சந்தையிற் கூட்டம் என்பதை உணரீரோ? ஈண்டே ஒரு சத்திரத்தின்கண் வசித்திரும். போய் வாரும்.

**சத்தியகீர்த்தி** — (வீரவாகுவை நோக்கி) ஐயா! எனது அண்ணலை யான் ஒருநாளும் பிரிந்தவன் அல்லன். தாங்கள் தயை செய்து வாரத்திற்கு ஒருமுறையாவது யான் இவரைக் காணும்படி அநுமதி கொடுக்கவேண்டும்.

**வீரவாகு** — அதெல்லாம் பொய் பேச்சி. மாஸ்த்துக்கு ஒருதாட்டி எப்பண்ணா அப்டீ வரலாம். அதுக்கு மேலே ஒண்ணுஞ் சாயாது. (அரிச்சந்திரனை நோக்கி) பொய்து போவுது, எங்க செல்வி தெருவெ தெருவெ வந்து பாத்துக்கினு இருப்பா, இன்னா செல்றே.

**அரிச்சந்திரன்** — இதோ வந்துவிட்டேன் ஐயா. போவோம் (மந்திரியை நோக்கி) சத்தியகீர்த்தி! போய் வாரும்.

**சத்தியகீர்த்தி** — அண்ணலே! போய் வாருங்கள். யான் தங்குகின்றேன்.

(சத்தியகீர்த்தி தயங்கி நின்று கண்ணீர் விடுகின்றான். அரிச்சந்திரன் வீரவாகுவின் பின்சென்று மறைகின்றான்.)

**வீரவாகு** — எங்க ஊட்டுகாரி நொம்ப நெல்லவ. செத்த கோவக்காரி. அங்கே போனுக்கா, என்னா குடுத்து வாய்ங்காந்தே எண்ணுவா. இம்மாத்தம் பணங் கொடுத்தேண்ணுக்கா எரிஞ்சி உயுவா. நாம அஞ்சி நூறுதாம குடுத்தேன்றேம.

உன்னெ கேட்டாள்ணு யப்பா, அப்படித்தாo ஆமாண்ணு சொல்லிடு. இல்லாபோணுக்கா, எம்மயிரெ பிச்சிடுவா.

**அரிச்சந்திரன்** — ஐயா! நான் அவ்வாறு சொல்ல என் மனம் இடம் கொடாது. அதற்காக என்னை மன்னிக்க வேண்டும். என்னைக் கேட்டால் நான் உள்ளதைத்தான் சொல்வேன்.

**வீரவாகு** — இதின்ணுடா பெரிய யெயவா கீது. இதுலே உனக்கு இன்ணு யப்பா கஷ்டம். நான் இம்மாத்தம் குடுத்தேண்றேo. நீயுo ஆமாண்ணு தலெயெ ஆட்டிட்டு போயேo.

**அரிச்சந்திரன்** — ஐயா, தாங்கள் சொல்வதை யான் செய்யவேண்டியதே. ஆனால், இது பொய். உண்டானதை இல்லை யென்று சொல்லக் கூடாது. கண்ணால் பார்த்ததையும், தன் மனம் அறிந்த விஷயத்தையும் மாற்றிச் சொல்வது பொய். அது மகா பாபம். அப்படிச் சொல்வதற்கு எண்ணவுங் கூடாது. அவ்வாறு தாங்களும் சொல்ல வேண்டாம். உண்மையைச் சொன்னால், ஒருபோதும் பயமில்லை.

**வீரவாகு** — ஓகோ, என்கே புத்தி சொல்தே இந்த ஐயன். எங்க ஊட்டுக்காரிக்கி தெரியாதே, ரவெ கள்ளு தண்ணியே கூட ஊத்திக்கிவேo. சொடலிலே வர்ர பணத்தெகூட அதுக்குண்ணு அவளுக்கு தெரியாதே மறைப்பெo. இத்தெ யெல்லா அவ உன்னெ கேட்டாக்கா செல்லிடுவேபேல கீதே. இதின்ணுடா யப்பா! பூனெயெ கட்டிகினு சயனம் பாக்கிறுப்லே கீது.

**அரிச்சந்திரன்** — தெரிந்ததை தெரியாதென்று ஒருபோதும் சொல்லமாட்டேன். அதற்காக மன்னிக்க வேண்டும்.

**வீரவாகு** — சரி, சரி, இப்பவே சொல்லீட்டயே யப்பா, அதுவே நல்லதா போச்சி. கீட்டும், வா போவோம்.

(இருவரும் வீரவாகுவின் வீட்டை யடைகின்றனர்.)

## ஐந்தாங் களம்



**இடம்:** வீரவாகுவின் வீடு.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** வீரவாகு, அரிச்சந்திரன், செல்லி.

**வீரவாகு** — டீ செல்லி, அடியேய், ஏ—செல்லீ.

**செல்லி** — ஏ இப்டி கயிதெயாட்டம் கத்ரியே. இதோத்தான் வந்து குனு கீறனே. அதுக்குள்ள வவுத்து கொடலு வாயிலே வராப்பிலே கத்ரியே. தோ வந்தனே செல்லேம். அஞ்சி மூணும் அடுக்கா தேடியாந்தாயா?

**வீர்வாகு** — ஏண்டி நாயாட்டங் கொலைக்கிறியெ, தோ பார்ரீ ஒரு ஆளெ இட்டாந்தெம் வேலெக்கி.

**செல்லி** — ஐயே, தீயன்னுடி யக்கா. இந்த ஐயன் யார்ரீ!

**வீரவாகு** — இத்ரீ, உன்க்கு வேலெசெய்ய வெலைக்கி வாய்ங்காந்தண்டீ. நீதாம் வேலெ செய்ய மூக்காலே அயுவுரியே, யெம்மவுளே.

**செல்லி** — தா, உன்னை தான், இந்தா. இப்டிவா செத்தே, எம்தோம் குடுத்து இந்த மன்சனெ வாய்ங்காந்தே.

**வீரவாகு** — நல்ல ஐயண்டி, நல்லா நல்லா வாய்ந்தவங்க. நம்பவூட்லே வேலெ செய்ய வருவாங்களா பார்ரீ. நாம் எம்மாத்தங் கஸ்டபட்டு வாய்ங்காந்தேம். இவுளுக்கு தெரிதா, பார்ரா.

**செல்லி** — இது இன்னுடி யம்மா. இது என்னமோ இப்படி பொவுசுகெட்டு போயி கீது. எம்மாத்திக்கி வாங்கியாந்தேண்ணு என்னென்னமோ ரவுசியம் பேசவருதே.

**வீரவாகு** — இத்ரீ, நீயேண்டி சும்மா கூச்செ போட்ரே. அல்லாந் தீந்து போச்சி. முறிசீட்டு கூட எயிதியாச்சி, இதோ பார்ரீ.

(சீட்டைக் காட்டுகிறான்.)

**செல்லி** — நம்ப அடிமெகார ஐயனு இந்த ஐயேம். நல்லா வாய்ந்தவனுட்டங் கீதே. இந்த ஐயன் பேரின்னு?

**வீரவாகு** — போராடீ கேக்ரே, எங்க அயித்தேக்கி நாத்தனுருக்கு மச்சினியார் ஓரவத்திக்கி அண்ணெம் இல்லெ, அவன் பேருதாம்.

**செல்லி** — த்ரீ யக்கா. மொயநீட்டம் செல்றயே.

**வீரவாகு** — (அரிச்சந்திரனைப் பார்த்து) ஏ யப்பா, நீ ஊம்பேரெ செத்தே செல்லு யப்பா.

**அரிச்சந்திரன்** — என் பெயர் **அரிச்சந்திரன்.**

**செல்லி** — த்ரீஇ, இதின்னுடி யக்கா. இந்த பேரெ கேள்ரீ. பல்லெகூட நெரியையிலே. ஏம் வாயிலே வராது அந்த பேரு.

**வீரவாகு** — டியே, வம்புகாரடீ நீ. செல்ல வரா போனு, நாம் சென்னனே அவெம் பேரே செல்லி கூட்டண்டி.

**செல்லி** — அந்த பொவுசு கெட்ட மவன் பேரு **அனிச்சேம்.**

**வீரவாகு** — அக்காண்டி, அந்த பேரெத்தான் வெச்சி செல்லண்டி.

**செல்லி** — ஆமா சரிதான், நம்ப சாதிக்கி அப்படித்தான் கீணும் பேரு.

**வீரவாகு** — ஏயப்பா, இன்னமே எம் பெண்சாதி அனிச்சாண்ணு கூப்புடுவா, அப்ப யேOண்ணு யப்பா. இல்லாபோனா யெரிஞ்சி வுயுவா. அப்றம் எம் மூஞ்செகூட பாக்கமாட்டா. பத்ரம் பத்ரம்.

**அரிச்சந்திரன்** — ஐயா, அவ்வாறே நடந்து கொள்கின்றேன். தடையில்லை.

**வீரவாகு** — ஏ யப்பா அனிச்சா! நீ பொய்து வெடிஞ்சா என்ன செய்ணும் தெரியுமா?

**அரிச்சந்திரன்** — தெரியாதையா, சொன்னால் அதன்படியே நடக்கிறேன்.

**வீரவாகு** — பொயுதுபோனா பொயுது வெடிஞ்சா ராவா பவுலா நீயும் இன்னொரத்தெO கீரான் வீரன், அவனும் சொடலெயே காத்துக்குனு கடக்கணுO. அத்தாO நம்பளுக்கு பொயப்பு. திடீல்னு ஆஜாவூட்லே இருந்து ஆள் வஞ்சினா அப்பவே வீரனெ தெருத்து. ரெண்ட்லே மூண்லெ ஆண்டமார்து மாடு கண்ணு செத்துபோவும். அத்தெ இயுத்தாந்து அறக்கணும். பங்குபோட்ணும், எம் பங்காளி பயித்தாளிங்களுக்கு பங்கு குடுக்கணுO. ஏயப்பா அனிச்சா! இந்தா, நீதாO பங்குபோண்ணும். கணக்கு வயக்கு உன்க்கு நல்லா தெரியும். பங்கு போட்ரயே, யப்பா, அப்போ என்னெ மறந்துபோவாதே. அந்த ஈரகொலெ ஒருதொடே இதுங்களெ எடுத்து வெச்சிட்டு, அப்புரம் பங்கு போடு. வீரெO கண்லேகூட காட்டாதே. அத்தை குடுக்கா போனியோ, என் பெஞ்சாரி கோவிச்சிக்குவா. பத்ரம் யப்பா.

**அரிச்சந்திரன்** — ஐயா! எல்லாம் சரிதான் தங்கள் சொல்படியே நடக்கிறேன். இறந்துபோன மாடு கன்றுகளையும் அறுக்கிறேன். அதில் கொஞ்சம் எடுத்து மறைத்து வைப்பது மாத்திரம் என்னால் ஆகாது. அது திருட்டுத்தன மாகும். அதுவு மன்றி பிறரை வஞ்சிப்பதும் ஆகும். அது பெரும் பாவம். இவ்வாறு செய்ய என்னால் இயலாது. இதற்காக என்மீது வருத்தம் வேண்டாம். இதற்காகவே முதலில் அடிமைச் சீட்டு எழுதும்போதே சொல்லிவிட்டேன்.

**வீரவாகு** — இது இன்னடா எயவா போச்சி. காலுக்கு போட்டா தலக்கி போட்ரே, தலக்கி போட்டா காலுக்கு போட்ரே.

அவ காதுலே கேட்டாகூட கடிஞ்சி உயுவாளே. அப்படி-யாணு கிட்டம். நீ போயி வேலெயெ பாரு.

**சேல்லி** — தா உன்னெ தான்.

**வீரவாகு** — ஏண்டீ.

**சேல்லி** — இண்ணிக்கில்லாம அந்த பசுவுங் கண்ணும் மலமலண்ணு பசியா கடக்குதே. பொயுது வெடிஞ்சி ஒரு செத்த பில்லு கூட இல்லெயே, இன்ணு செய்ரது. இந்த பாவிக்கி குடுத்-தனமாச்சேண்ணு ரவண்ணு இல்லெயே, என்ணு செய்ரது. கயிதெயெ கட்டிகினு ஓமம் வளக்கிருப்லே கீதே யேம்பாடு.

**வீரவாகு** — டீயே! இதுக்கல்லாம் ஒணுமுணுதானே ஒரு ஆளெ புடிச்சாந்தேம். ஏண்டி சும்மா நீட்ரயே. (*அரிச்சந்திரனைப் பார்த்து*) ஏயப்பா, அனிச்சா! தோ எரப்பிலே செருவிகீதே அரிவா, அத்தெ கையிலே புடிச்சிணு, நெடுவே போயி, தோ தெரிதெ அந்த கயினிகட்லே ஒரு நாலுபுடி பில்லு அறுத்-தாந்து, அந்த பசுவுக்குப் போடு யப்பா. பாவம், பொயுதி-ணிக்கம் சும்மா கடக்குது.

**அரிச்சந்திரன்** — ஆ, ஆ, அப்படியே செய்கிறேன்.

(*அரிவாளை எடுத்துக்கொண்டு சென்று, புல்லுள்ள ஓரிடத்தை யடைந்து புல்லை யறுத்துக்கொண்டே தன்னுள் எண்ணமிடுகின்றான்.*)

ஆ, பரமேசா! இது என்ன காலம். நாடு துறந்து, நகரந் துறந்து, பந்துக்களைத் துறந்து, முடிவில் மனைவியையும் மைந்தனையும் ஒருவர்க்கு அடிமையாக்கி, யானும் ஒருவர்க்கு அடிமையாகி, உயிருக் குயிராயிருந்த சத்தியகீர்த்தியையும் பிரிந்து, தனித்து நின்று இந்தப் புல்லை யறுக்க என்ன பாவம் புரிந்தேனோ! நல்லோரைக் கண்டு நகைத்தேனோ! நல்-லோர் வாழ்வை நாசப்படுத்தினேனோ! யாதோ சற்றும் அறி-யேனே. ஆ, பரமபதீ! உமக்கு உண்மையே உருவமென்று உன்னி, அதனையே உறுதியாய்ப் பற்றுகின்றேன். மற்று யாது வரினும் வருக. யான் சிறிதும் பின்னிடேன். இப் புல்லைப்பற்றி யீர்க்கவும் நமக்குத் தெரியவில்லையே! ஆ, காசி நாதா! அறுக்குந்தோறும் அரிவாள் முனை அங்கையிற் படு-கின்றதே. அடிமை கொண்டவர்க்கு இதனை உரைத்தலுங் கூடுமோ. கூடாது, கூடாது. இவ்வளவு புல்லைக் கொண்டு போயினும், இது சிறிதளவா யிருக்கிறது, பற்றாது என்பார்-களோ, என்செய்வது, பொழுதும் சாய்ந்துவிட்டது. இனி இருளாகும். இதனைக் கொண்டுபோவோம். பற்றாதென்றால், நாளை முதல் அதிகமாக அறுத்துச் செல்வோம்.

(சுமைகட்டிப் புல்லை எடுத்துக்கொண்டு சென்று வீரவாகுவின் வீட்டைச் சேர்கின்றான்.)

**செல்லி** — அனிச்சா, இத்தானு பில்லு! ஒரு வாய்க்கி பத்துமா இது. இதுக்குதானு இத்தினி நாயி கயிச்சி வந்தெ. நாO போனு இதுக்கு பத்தத்தினி கொண்ணாந்துடுவெனே. போடு, போடு. யாராருக்கு அநியாயகாசி அயுவுணுமோ, அத்தே அயுதுதானே தீரணுO. நீ யின்னு செய்வே. உன்னெ வாங்கியாந்தானே அந்த மன்சனுக்கு செல்லணுO. அப்படி போடீட்டு போ. வெரல்லே மண்ணு படாதெ, கடந்தவங்களெ வேலெக்கி வெச்சிகினு இப்படிதாO.

**அரிச்சந்திரன்** — அம்மா கோபிக்க வேண்டா. நாளை முதல் அதிகமாகக் கொண்டு வருகின்றேன்.

(அரிச்சந்திரன் திரும்புகின்றான்.)

**வீரன்** — (**வீரவாகுவை நோக்கி**) ஒ யண்ணு! இந்தா, இந்தா.

**வீரவாகு** — ஏண்டா யெம்மவுனே! அப்டி கத்தரே, காதடிச்சிகினு போராப்லே.

**வீரன்** — இந்தாண்ணு, அவுசுரம்.

**வீரவாகு** — ஏண்டா?

**வீரன்** — அந்த ஐயெO இல்லெ, நம்ப ஆண்டெ.

**வீரவாகு** — எந்த ஆண்டெடா?

**வீரன்** — நம்ப ஆண்டெ, அந்த மூலெயிலே மெத்த வூட்லே கிராங்களே.

**வீரவாகு** — செரியா செல்லண்டா யெம்மவனே. கெடாயிக்கி ஆனுப்லே ஆச்செடா வயிசி.

**வீரன்** — அதொ அவுங்கத்தாண்ணு, தோ அண்ணிக்குகூட கூயு வூத்தனுங்களே. அந்த வூடு, அண்ணிக்கி நெடுஞ்சாங்கடியா உயுந்து கடந்தொO, தலெ துணி யெடுத்து விசிறி போட்டாங்களே, அந்த ஐயெO.

**வீரவாகு** — ஒ, ஒ, அந்த ஐயனு, நம்ப ஆண்டே, ஆஜாகிட்ட அலுவுலா கிராங்களே, அந்த ஐயெO. அப்டினு செல்லாத்தானே, பொவுசி கெட்ட மவுனே, இன்னுடா ஆவுருக்கு.

**வீரன்** — அவங்க வூட்லேண்ணு.

**வீரவாகு** — அவுங்க ஊட்லே இன்னுடா? எம்மவுனே, கடிய செல்லண்டா.

**வீரன்** — காத்தாலே ஒரு கண்ணு இயுத்துக்கிச்சி, அத்தெ வந்து சொன்னுங்கோ.

**வீரவாகு** — போயி இயுத்துக்குனு வரத்தானே. ரெண்டு மூணு நாளா ஐவ்வு எலும்புகூட இல்லாதெ காஞ்சி கடக்குதே. அதில்லாத்தானெடா கள்ளு தண்ணிகூட வாயிலே ஊத்திகாதெ கீரெ௦. போயி கடுவ இயுத்துக்குனு வா. ஓடு, ஓடு.

**வீரன்** — அதெல்லா௦ இயித்தாந்தாச் சிண்ணு, பின்னெ இன்னுத்துக்கு இத்தினி கடிய எரைக்க எரைக்க ஓடியார்ரே௦. கடுவ கத்தி யெடுத்துக்குணுவா, பங்கு போடு, கண்ணெமாத்தம் எனக்கு குடுத்துடு. நொம்ப நொம்ப கஸ்ட்டப்பட்டே௦.

**வீரவாகு** — டே, யெம்மவனே அட்டித்தா சேஞ்சுட போரே. கள்ளு தண்ணிக்கி கண்ணுதான் காட்டா யிக்கும். இதோ நம்ப ஆளு கீறுன், அனிச்சென் அவனெ இட்டுகினு போயி, கிட்ட இந்துக்கினு சரியா அறுத்து, பங்கு போட்டு கண்ணெ தோண்டி கண்ண எடுத்துக்கு ஓடியா. பொரிச்சிகுணு போலாங் கடிக்கி.

**வீரன்** — அது யாரண்ணு புச்சாகீது.

**வீரவாகு** — அவெ௦தா நம்ப அடிமைக்காரன். இண்ணிக்கி வாங்கி யாந்தண்டா எம்மவனே. இந்த மன்செனெ கிட்ட வெச்சிகினு, செல்ராப்லே நட்ரா எம்மவனே. தலெ கொயுத்த தனம் பண்ணுதே. எதுணு தெரியாபோனு செல்லிகுடு, போ போ. (அரிச்சந்திரனை நோக்கி) ஏயப்பா, அனிச்சா! செத்த கூட போ யப்பா, போயி சீரா அறுந்து குடுத்தனுப்பு யப்பா.

(அரிச்சந்திரன் வீரனோடு போகின்றான்.)

**வீரன்** — ஏ யண்ணு! இத்தான் நம்ப குடிசெ. இங்கெதான் கண்ணு குட்டி கடக்குது. நீ இங்கதான் நில்லு. நான் போயி ஆய்தங்களெ எடுத்தார்ரே௦.

(ஆயுதங்களை எடுத்து வந்து அரிச்சந்திரனிடம் கொடுத்து அறுக்கச் சொல்கின்றான்.)

**அரிச்சந்திரன்** — அப்பா, வீர! கன்றறுப்பது இவ்விதம் என்பது எனக்குத் தெரியாது. நீ தயைசெய்து முறையாகச் சொல்லி வந்தால், நான் அவ்வாறே அறுக்கின்றேன்.

**வீரன்** — அப்படியின்னு, நீ ஆசாவா இருந்தவ௦. நீ யேன் செய்ரே, நா௦ அறக்கிறெ௦.

**அரிச்சந்திரன்** — அப்பா, அது சரியல்ல. அரசரும் வினையால் அற்பத்தொழில் புரிவர், அதனால் குறைவில்லை. நமது எஜ-

மானர் எனக்கு அறுக்கும்படி கட்டளையிட்டார். அதைத் தட்டி நடக்கக்கூடாது. நீ தயைசெய்து சொல்லிக்கொண்டே வந்தால் அப்படியே செய்கின்றேன். பிறகு, எனக்குந் தெரிந்துவிடும்.

**வீரன்** — அவரு சென்னு இன்னு. நான் சேஞ்சாலும், நீ சேஞ்சாலும் ஒண்ணுதானே இப்படி கொண்டா கத்தியெ.

**அரிச்சந்திரன்** — அப்பா வீர! அது வேண்டாம். எஜமானர் கட்டளையைச் சிறிதும் மீறி நடக்கலாகாது. எனக்குச் சொல்லியதை யானே செய்யவேண்டும். மேலும், யான் எவ்வாறு அத்தொழிலைக் கற்றுக்கொள்வது. இன்றில்லாவிட்டாலும் நாளையாவது நான்றானே செய்யவேண்டும்.

**வீரன்** — ஆனு சரிதான். அப்டித்தான் செய்யோ. இந்தா இந்த கத்தியெ எடுத்துக்குணு மின்னெ கயித்தெ அறுத்துபுடு.

(கழுத்தை அறுக்கின்றான்.)

**அரிச்சந்திரன்** — (மெல்ல) அந்தோ பரமேசா! இதனினும் வேறொரு சோதனையும் வேண்டுமா!

**வீரன்** — இன்னு யண்ணு யென்னென்னமோ சொல்லிக்குனு கண்ணெ பெசிரியே?

**அரிச்சந்திரன்** — ஒன்றுமில்லையப்பா, என் விதியை நினைக்கின்றேன்.

**வீரன்** — அப்ா தோலெ உரிச்சிடு. வவுத்தே கீறு. கொடெலெ தள்ளு. ஈரகொலையை வேறெ எடு, கொடலெ வெறெ எடு, அத்தெ சாணிபோவ நல்லா கழுவு. தண்ணி ஊத்தி நல்லா அலச்சு. தொடைங்களை துண்டுதுண்டா வெட்டு. கொறையும் அப்டியே வெட்டிபோடு. அப்புறம் தலெயெயும் உரிச்சி வெட்டி பங்குபோட்லாம். ஏ யண்ணு, செத்தெ பாருயண்ணு இப்டி.

**அரிச்சந்திரன்** — ஏனப்பா?

**வீரன்** — தோகீதே அத்தான் மண்ணு ஈரலு. அது சுட்டு துண்ணு, நண்ணு இக்கும். அத்தெ மாத்தம் இப்டிபோட்டுடு யண்ணு குண்டிகாயெல்லாம் அப்படியே கீட்டும்.

**அரிச்சந்திரன்** — அப்பா, வீர! இதில் அணுவளவும் எடுத்துக் கொடுக்க முடியாது. எல்லாம் சரிப்படுத்தி எஜமானரிடத்தில் ஒப்பித்து விடுகின்றேன். பிறகு, நீ அவரைக் கேட்டுப் பெற்றுக்கொள். யஜமான துரோகம் கூடாது. அதிலும் இது களவு.

**வீரன்** — யண்ணு, அந்த மண்செ0 பாத்தாகூட குடுப்பாணு! மண்ணு ஈரலுண்ணு வாயிலே தண்ணி ஊருமே அவனுக்கு. நீ சும்மாயிரு யண்ணு. நா0 எடுத்துக்கிறேன்.

**அரிச்சந்திரன்** — களவு ஒருபோதுங் கூடாது. எஜமானருக்கு விருப்பமான பொருளை வஞ்சித்துக்கொள்வது மகாபாதகம். எப்போதும் உண்மை வேண்டும். அன்றி, எஜமானரை அவன் இவன் என்று அவமானமாய்ப் பேசுதலும் பெருந் தீது. அப்படிப் பிறர் பேசவுங் கேட்கலாகாது. நாம் அவருக்கு அடிமைப்பட்டிருந்து இவ்வாறு வஞ்சிக்க நினைப்பதும் மரியாதையற்றுப் பேசுவதும் நல்லதாகுமா! அப்பா வீர! இனி அப்படிச் செய்யாதே. மனத்திலும் தீங்கு நினையாதே.

**வீரன்** — ஆணு ஊன் இஸ்டம். அறுந்து பங்கு போடு. பொயுது போவுது. (*அரிச்சந்திரன் பங்கு போட்டு, வெவ்வேறு காவடியில் வைத்து, தூக்குகின்றான்.*) யண்ணு! நீ இங்கதா0 இரு. நாந் தூக்கினு போயி குடுத்தூட்டு வர்ரேன்.

**அரிச்சந்திரன்** — அப்பா வேண்டாம். யானே எடுத்து வருகின்றேன். நீயும் கூடவே வா. இருவரும் கொடுத்துவிட்டு வருவோம்.

(*அரிச்சந்திரன் காவடியைத் தூக்கிக்கொள்ள, வீரன் கூடச் செல்கின்றான்.*)

**வீரவாகு** — ஏயப்பா! அனிச்சா. அல்லாம் ஆச்சா. ஒப்பிடி பண்ணீட்டாயா. கண்ணும் மண்ணு ஈரலுங் கீதா யப்பா.

**அரிச்சந்திரன்** — எல்லாம் இருக்கின்றது. ஒன்றும் குறைவில்லை ஐயா.

**வீரவாகு** — ஆணு இப்படி வெச்சூடு யப்பா. உங்க ஆண்டச்சி வந்து எடுத்துக்குனு போவா. நீ போயி சொடலெயண்டெ என்னமாணு சவிங்க வந்துகீதா பாரு. ஆரும் இல்லாபோணு ஆண்டமாரு கோயிச்சிக்க போராங்கோ. போ, போ. டே யப்பா! வீர நீ போயி உங்க ஆண்டாசாரே அயிச்சிக்கினு வா.

(*அரிச்சந்திரன் திரும்புகின்றான். வீரன் ஓடுகின்றவன்போல் போய் அரிச்சந்திரன் கண்ணுக்கு மறைந்ததும் வீரவாகுவினிடம் வருகின்றான்.*)

**வீரவாகு** — என்ன! அரிச்சந்திரன் எவ்வளவில் இருக்கின்றான்? ஏதேனும் முனிவர் எண்ணம் முன்னுக்கு வருமா?

**வீரன்** — முன்னுக்காவது, ஒரு இம்மியளவும் அம் மன்னனை அசைக்க முடியாது. அக் கன்றை யறுக்கும்போது பார்க்கவும் மனம் பதறுகின்றது. அம்மன்னன் தன் துயரமனைத்தும் உள்ளடக்கிக்கொண்டு, உண்மை யொன்றினையே உறுதியாகக்கொண்டு, யான் கற்றுக்கொண்டு சொல்லியவா றெல்-

லாம் அறுத்துத் தீர்த்துவிட்டான். அம் மன்னீரலே எனக்குக் கொடுக்கும்படி எவ்வளவோ சூழ்ச்சியாற் கேட்டும், அவன் மனம் அசைய வில்லேயே. பொய் மொழிவதையே தனக்குப் போசனமாகக் கொண்டுள்ள ஒருவனே அம் மன்னனிடம் இரண்டு தினங்கள்வரையில் விட்டுவைத்தால் அவ்னது உருவ முழுதும் மெய்மையே யாகும்படி செய்துவிட வல்ல வன்மையுடையவன். ஒழுக்கத்திற்கு மாருகச் சிறிது செப்பினும் இடித்துரைப்பதுபோல் விடை கூறுகின்றான். இந்தக் கன்றை யறுக்க அஞ்சி மறுத்தால், முறிச்சீட்டுக்கு முரணி நடந்தான் என்று காணலாம் என்ற கருத்தினுல், யான் இன்றெல்லாம் இவ் வூர் முழுதுந் தேடித் திரிந்து, முடிவில் ஒரு புலேயனே யடுத்து, ஐந்து பொன் கொடுத்து இறந்துபட்ட இக் கன்றினேப் பெற்றுக்கொண்டு, மற்றொரு பொன் கொடுத்து அதனே அறுக்கும் முறைகளேயும் கற்றுவந்தேன். என்ன பயனுயிற்று. இனி, அவனேப் பரீக்ஷிப்பது வீணுகும். நீர் கண்ட அளவில் எவ்வாறு இருக்கின்ருன் கூறும், பார்ப்போம்.

வீரவாகு — ஆமாம், ஆமாம், அதற்கென்ன தடை; யான் வாங்கி வரும்போது, என் மனேவி மகா கோபி, பதினுயிரம் பொன் கொடுத்தே னென்ருல் கடிந்து பேசுவாள்; ஆகையால், ஓர் ஆயிரம் பொன்தான் கொடுத்ததாகச் சொல்கின்றேன், உன்னேக் கேட்பினும் அவ்வாறே சொல் என்றேன். அதற்குச் சற்றும் உடன்படாமல் எனக்கே புத்தி சொல்ல ஆரம்பித்துவிட்டானே. தப்பி நடந்தால் தயை தாட்சண்ணியமின்றி யாவரையுங் கண்டித்து நல்வழியில் நிறுத்துகின்ருன். இவன் மனத்தை மாற்ற இறைவனுலு மாகாது. நமது முனிவர் தோற்கவேண்டியவரே. வசிட்ட முனிவர் மாணவரோடு வாதிட்ட நாமும் வாயடங்கிக் கிடக்கவேண்டியவர்களே. இவனிடத்து இவ்வளவு வுறுதியில்லாவிட்டால் வசிட்டர் தான் வாயெடுத்துப் பேசுவாரா, அதிலும் மகவானுடைய மகத்தான சபையில். என்ன செய்வது, அதற்கென்று வெளி வந்து வெட்டியார வேடமும் போட்டுக்கொண்டாயிற்று. இனி மற்றதும் பார்த்து விடுவோம். முனிவர் இன்னும் ஏதேது செய்ய இருக்கின்ருரோ, பார்க்கலாம். உடனே சென்று அவனேடு கூடியிரு.

(போகிருன்.)

## ஆறாங் களம்



**இடம்:** காலகண்ட ஐயர் வீடு.

**காலம்:** பகல்.

**பாத்திரங்கள்:** காலகண்டி, இலக்குமி, காலகண்ட ஐயர், சந்திரமதி.

[காலகண்டி தன் புருஷனை நாடி தெருவில் வருவதும் உள்ளே செல்வதுமாக இருக்கின்றாள். அப்போது அயல் வீட்டு இலக்குமி கேட்கின்றாள்.]

**இலக்குமி** — அடீ காலகண்டீ, என்னடி அது. முத்தத்துக்கு ஓரம்மெ வாரதும் போரதுமா இருக்கிறு.

**காலகண்டி** — அடீ எச்சுமீ, பார்த்தியோ எங்க ஆத்துக்காரெ, எப்போ போனார். இன்னும் வரக்காணலெயெ. இந்தப் பிராமணெ எங்கதான் போவரோ! சேஷி மொட்டு மொட்டென்னு இருப்பாளே என்னு கொஞ்சமானாலும் தோணுதாடீ.

**இலக்குமி** — புருஷாளுக்கெல்லாம் கல்லுமனசுடீ. எங்க ஆத்துக்காரெ பாக்கலேயோ. அவரும் இப்படித்தான் செய்ரா. அதோ வாராளே அவா யார். உங்க ஆத்துக்காரெபோல இருக்கே.

**காலகண்டி** — ஆக்காண்டீ, எங்க ஆத்துக்கார்தான். கூட யாரோ வர்ராளே, ஒரு ஸ்திரீயும் புள்ளேயுமா. நான் உள்ளே போரண்டி. முத்தத்திலே இருக்க பார்த்தாரானு எறிஞ்சி வுழுவர். போரேன்.

(காலகண்ட ஐயர், சந்திரமதி, தேவதாசன் மூவரும் வீட்டையடைகின்றனர்.)

**காலகண்ட ஐயர்** — அடீ சேஷீ, அடீ, என்னடீ வார்த்தெ சொல்லாமெ ஒரெம்மெ இருக்கிறு? ஏண்டீ.

**காலகண்டி** — போதுக்கும் இப்படி விட்டேட்டு போரீரே இங்கே யார் இருக்கிறு? நேக்கு எப்படித்தான் போது போகும். எண்ணைக்கும் இப்படிதானே செய்ரீர். வார்த்தை என்ன சொல்ரது?

**காலகண்ட ஐயர்** — இப்படி வாடி.

**காலகண்டி** — இதோ வந்தேன். இவா யார்? எதோ பசுவுங் கன்னுமா இழுத்திண்டு வந்தீரே.

**காலகண்ட ஐயர்** — அன்னுடி, ஒனக்காகத்தான் இவளெ வாங்கிண்டு வந்தெம்.

**காலகண்டி** — நேக்கு ஏன் அவா? அதென்ன விசித்திரம் பேசி-ரீருமே?

**காலகண்ட ஐயர்** — விசித்திர மன்னுடீ, ஆத்திலே ஒனக்கு கஷ்-டமாயிருக்கே, வேண்டிய வேலெயெ செய்து வார்த்தெ சொல்லிண்டிருப்பாண்ணு வாங்கிண்டு வந்தேஹ.

**காலகண்டி** — நேக்கென்ன இவா வேலெ செய்ரது. இதென்ன இப்படி வார்த்தெ சொல்ரீரே. பணத்தெ கொட்டி கொடுத்-தீருமொ, என்ன?

**காலகண்ட ஐயர்** — அதெல்லாம் அதிகமில்லெடி. கொஞ்சம் போதுதான் கொடுத்தெஹ.

**காலகண்டி** — ஏண்டியம்மா, ஒன்னெ கொண்டது நிஜந்தானு? எம்மாத்தங் கொடுத்தா? சொல்லு.

**சந்திரமதி** — அம்மணீ! நாங்கள் ஒருவருக்கு நூறு லட்சம் பொன் கடன்பட்டிருந்தோம். அத்தொகை முழுதுங் கொடுத்து-விட்டு எங்களை யடிமை கொண்டாரம்மா.

**காலகண்டி** — ஐயையோ, ஐயையோ! நேக்கு அடிவயத்தே பத்-திண்டு எரியர்தே. ஐயையோ, இந்தப் பிராமணருக்கு இப்-படிக்கூட பயித்தியம் பிடிக்குமோ? இதென்னடி யம்மா. பணமென்னு ஓரம்மெ ஒடா. வீதியிலே கடக்கிறதா— செடியிலே காய்க்கிறதா. முட்டெ வித்து, கட்டெ வித்து ஒன்னுக்கு ரெண்டு ஜலஞ் சேத்த மோர் வித்து, பால் வித்து சேர்த்துவைச்சா இப்படி தண்டத்துக்கு அழுதூட்டு வந்தீரே. உமக்கென்ன பயித்தியங் கியித்தியம் பிடிச்சிண்-டதோ. எப்படியானு நேக்கென்ன? ஆகிற சம்சாரமானு-லன்ன ஆகப்போறது. இது அழிர சம்சாரம், போகட்டும், நேக்கென்ன?

**காலகண்ட ஐயர்** — அன்னுடி சேஷி, நோக்கு அப்படி நஷ்டம் வரச் செய்வேனோ? நோக்கு நஷ்டமானு நேக்கும் நஷ்ட-மன்னோ? இவள் சாணந்தட்டி முட்டையாக்குவள். நெல்லு குத்துவள். மோர் பால் இதுகளை விப்பள். இன்னும் நம்ம ஆத்திலுள்ள காரியங்களெ செவ்வையா செய்வள். போது போக்க ஒன்னோடே வார்த்தெ சொல்லிண்டிருப்பாள்.

**காலகண்டி** — ஆனுக்கே சந்தோஷந்தான். இந்தப் பையன் ஏதுக்கு? ஓரம்மெ சாதத்துக்கு கேடுதானே.

**காலகண்ட ஐயர்** — அப்படி யன்னுடி. அந்தப் பையன் காட்டுக்-குப் போவன், மாவிலெ, சமுத்து, தருப்பெ வேணமட்டும்

கொண்டு வருவன். நேக்கு கைகால் நொந்தால் பிடிப்பன். இந்த மாடு கன்னுகளை மேய்ப்பன்.

**காலகண்டி** — ஆனுக்கே சரிதான், நீர் ஓரம்மெ கண்ணெ மூடிண்டு பணத்தெ கொட்டி கொடுப்பீரா? கடகட்டும் இவா நாமதேய மென்ன?

**காலகண்ட ஐயர்** — இவள் பேர் சந்திரமதி. இந்தப் பயல் பேர் தேவதாசன்.

**காலகண்டி** — அதென்னமோ, நேக்கு அத்தனெ நீளம் சொல்ல வராது. நாo அவளெ சந்தின்னு அழைப்பெo. இந்த பயலே நீர் ஏதாவது வைத்து அழைச்சுக்கொள்ளுo.

**காலகண்ட ஐயர்** — நான் தாசா என்பேன். இதற்கென்ன இப்போது அவா நம்ம அடிமெயாச்சு. நாம் எப்படியானாலும் அழைக்கலாமன்னோ?

**சந்திரமதி** — தங்கள் இஷ்டம்போல் அழைக்கலாம் அம்மணீ. தாங்கள் ஐயர்மீது கோபிக்கவேண்டாம். தாங்கள் காலாற் காட்டிய வேலையைக் கையாற் செய்துகொண்டு, தாங்கள் இட்டதை யுண்டு விழுந்து கிடக்கின்றோம் அம்மணீ. அடியாள் செய்யவேண்டிய பணிவிடைகளைக் கட்டளையிட்டால் தினந்தோறும் தாமதப்படாமல் செய்துவிடுகின்றேன்.

**காலகண்டி** — இவள் இத்தனை அமெரிக்கையா வார்த்தெ சொல்யாளே, இவள் எங்கிருந்தவள்? ஏண்டீ சந்தி. நீதான் சொல்லெo நேக்கு விவரமா.

**சந்திரமதி** — அம்மணீ எங்கள் குறையை என்னென்று சொல்வோம்!

**காலகண்டி** — கொறெ இல்லாமெ இருக்கிறவா எவா, நீ சொல்லு.

**சந்திரமதி** — அம்மணீ! அடியாள் அயோத்தி யரசர் மனைவி. எங்களது அரசாட்சி முதலியவற்றை ஒரு முனிவர்க்கு உரிமையாக்கினோம். பின்னும் அவர்க்கு நாங்கள் செலுத்தக் கடமைப்பட்டிருந்த பொன்னைச் சேர்ப்பிக்க எண்ணி, இந் நகரத்தை யடைந்து, தங்களுக்கு அடிமைப்பட்டு, அதனைத் தீர்த்தோம் அம்மணீ! இதுதான் எங்கள் வரலாறு.

**காலகண்டி** — ஐயோ! அப்படியா சங்கதி. அயோத்தியரசன் அரிச்சந்திர னன்னோ?

**சந்திரமதி** — (தலைசாய்ந்து துக்கத்துடன்) ஆம் அம்மணி! அப் பெருமான்தான் அடியாளுக்குத் தலைவர்.

**தேவதாசன்**— அம்மா! நம்ம அப்பா பேர்தானே சொல்வது. அப்பா வண்டைப் போகலாம் வா.

**காலகண்டி** — கேட்டயாடி, இந்தப் பட்டுகிடப்பான் வார்த்தெ சொன்னதெ. அப்பாவையன்றோ தேடரான். நன்றாயிருக்கே, அடா பையா! அப்பா கிப்பா என்னு இங்கே வார்த்தெ சொல்ல படாது, தெரியுமா.

**தேவதாசன்** — (பயந்து நடுங்கி) இல்லெ இல்லெ அம்மா.

**சந்திரமதி** — அப்பா. இனி அப்பாவைக் கேட்காதே. அம்மணீ, இச்சிறுவன் என்றும் தந்தையை விட்டுப் பிரியாதவன். கோபிக்கவேண்டாம். இரண்டொரு தினங்களில் தானே மறந்துவிடுவான்.

**காலகண்ட ஐயர்**— அதென்னே சந்தி. ஏதோ பையலாச்சே என்று செத்தெ மொட்டின்று, அதுக்குள்ளே நீ சிபார்சுக்கு வந்து-விட்டாயே. அடிமைபட்ட பயலுக்கு சிபார்சு என்ன. தாய் எது? தந்தை யேது? இனி அப்படி யெல்லாம் தாறுமாறாக வார்த்தெ சொல்லாதே. அவளுக்கு தடுத்து வார்த்தெ சொல்லாம லன்றோ நீங்கள் நடந்துகொள்ள வேணும்.

**சந்திரமதி** — சுவாமீ! அப்படியே நடந்துகொள்கின்றோம். அம்மா-ளுடைய வார்த்தையை அணுவளவுந் தட்டி நடக்கமாட்-டோம், மன்னிக்கவேண்டும். அம்மணீ! அடியாள் செய்ய வேண்டிய பணிவிடைகளைக் கட்டளையிட்டால் செய்யச் சித்தமாயிருக்கின்றேன்.

**காலகண்டி** — அடி சந்தீ! பிராமணா ஆத்திலே என்ன வேலெ கடக்கபோறது. போதுவிடிய ஜாமத்துக்கு எழுந்து வாசலெ பெருக்கி சாணமிட்டு கோலமிட வேணும். பிம்மாலே மாட்டு தொழுவத்தே பெருக்கி சுத்தம் பண்ணவேணும். அந்த சாணத்தை சேர்ந்து பெசைஞ்சு முட்ட தட்டவேணும். அந்த மாடு கன்னுக்கு வேணமட்டும் கொடத்தை யெடுத்து ஜலம் கொட்டணும். கொஞ்ச நெல்லெடுத்து அமுதரி தீட்-டணும். பசுக்களண்டெ குந்திண்டு அந்த பாலெ கறக்க வேணும். கொட்ணபோதும் கரியாமுது தோட்ட மிருக்கு, அதுக்கு ஒன்னூட்டொருநா செத்தெ தண்ணி கொட்டணும். யாராறு பாலுக்கு மோருக்கு வருவா. அவாளுக்கும் கொஞ்சம் அளந்து கொட்டணும். ஒஞ்சபோது கொஞ்சம் புல்லறுத்திண்டு வந்து கன்னுக்கு போடவேணும். மத்த போதுக்கெல்லாம் உண்டானதெ தின்னுவிட்டு ஓமாயெ போல உக்காந்திண்டு இருக்கிறதான் வேலெ. சூத்திரா ஆத்தெபோல ஒரு கழனி கட்டுக்குப் போக வேணுமா!

களை பிடுங்கவேண்டுமோ! ஆத்துலே பொழுதுக்கும் உழைச்சிண்டு கடக்கவேணுமா! ஒன்னுமில்லையே.

**சந்திரமதி** — அம்மணீ! எதிருந்தாலும் சற்றும் வஞ்சகமின்றிச் செய்யக் காத்திருக்கின்றேன். ஒருபோதும் சோம்பி யிருக்க மனங்கொள்ளேன்.

**காலகண்ட ஐயர்** — அடி சேஷு! ஆமாண்டி, சந்திக்கு வேண்டிய வேலைகளைச் சொல்லி யாச்சு. அந்தப் பயல் செய்யவேண்டிய வேலைகளைச் சொல்லி யாச்சோ?

**காலகண்டி** — அந்தப் பயலுக்குத்தான் என்னவேலை கடக்கிறது. அந்த மாடு கன்னுகளை ஒட்டிண்டு போய் காலாற மேய்ச்சுகொண்டு வந்து கட்டவேணும். இன்னும் நம் ஆத்திலே என்ன கடக்கிறது. நம்ம ஆத்திலேயும் குழந்தெ குட்டி இல்லை யன்னோ. உண்டானதெ தின்னுண்டு கடக்கிறா.

**சந்திரமதி** — அம்மணீ. இவனோ மிகச் சிறுவன். அவனைத் தாங்களன்றி மற்று யார் ஆதரிக்கப் போகின்றார்கள். நீங்கள் தான் தாயுந் தந்தையும்.

**காலகண்டி** — நல்லது சந்தி, இந்த கொஞ்சர வார்த்தெ நாளைக்காகட்டும். நீ இந்த திருவலெகெ எடுத்திண்டு, அந்த முத்தத்தெ நண்ணா பெருக்கித் தள்ளி, தண்ணி தெளிச்சி கோல மிட்டுவா.

**சந்திரமதி**—இதோ செய்கின்றேன் அம்மணி (துடைப்பத்தை எடுத்துப் பெருக்கிக்கொண்டே தன்னுள் எண்ணமிடுகின்றாள்.) ஆ! தெய்வமே! இதுவும் நின் திருவிளையாடலா! எல்லா நூல்களும், எல்லா மதஸ்தர்களும் உடன்பாடாகக் கொண்டிருப்பது சத்தியம் ஒன்றே. அதனையே யாங்கள் தோன்றாத் துணையாகக் கொண்டிருக்கின்றோம். இப்படிப்பட்ட யாங்கள் ஆணோர் இடமும் பெண்ணோர் இடமும் பிரிந்து வருந்துவதற்கு முற்பிறவியில் என்ன தீவினை யிழைத்தோமோ அறியோம். அந்தோ தெய்வமே, இத் துடைப்பத்தைக் கையிற் பற்றி இவ் வீதியைப் பெருக்கவும் எனக்கு விதியிருந்த தன்றே. இளமை முதல் துன்பம் என்பது அணுத்துணையும் அறியாத யான், இப்போது அடிமைப்படவும் காலம் நேர்ந்ததே? பெண்கள் பிறந்த வீட்டில் எவ்வளவு செல்வ மிருப்பினும் சோம்பி இருந்து, உடலை உழைக்காமல் இருத்தல் கூடாது. சற்று நேரத்தில் என் இடையும் நோகிறது. என்பும் உளைக்கிறது. என்ன செய்வது, நோகிறதென்றால் அடிமைகொண்டோர் ஒப்புவார்களா. என்ன செய்யலாம், முதலில் இரண்டொரு நாள் இவ்வாறுதான் வருத்தமாக இருக்கும். பின்பு

பழகிவிடும். துடைப்பம் பிடித்த பிடியில் வருத்துகின்றது. ஆ, காசிநாதா! இத்தகைய துன்பம் பகைவர்க்கும் நேரிடலாகாது. ஆ பரமேசா.

**காலகண்டி** — அடி சந்தி, ஆச்சோ, அந்த முத்தத்தெ பெருக்கித் தள்ள ஒரு ஜாம நேரமா? இப்படி வேலெ செய்தாக்கே எல்லா வேலையும் சீக்கிரந்தாம் முடியும். நானன்னோ ஒரு க்ஷணத்தில் பெருக்கித் தள்ளுவேம்.

**சந்திரமதி** — அம்மணீ! இன்றுதான் புதிதாக வேலை செய்கின்றேன். இன்னும் இரண்டொரு தினங்களில் பழகிவிடுவேன். அதுவரையில் சற்று மன்னித்துக் கொள்ளவேண்டும்.

**காலகண்டி** — மொதலெடுக்கச்சே நீ இப்படி சேசாயானு எங்க ஆத்துக்காரர் ஓம்மெ இருப்பாரோ. இது நன்னாயில்லெ. அந்த பயலுக்கு சொன்னு அந்த பயல் செரியவன் என்று. எங்களுக்கு திரவியம் எவாளானு ஓம்மெ கொட்டிக் கொடுத்தாளோ. வேலெ சேசா நன்னு செய்யணும். இல்லாவிட்டாக்கே வாங்கின பொன்னெ திரும்பக் கொடுத்துப் போடணும். அதென்னமோ போ, இனிமே உங்க இஷ்டம், உங்களெ அடிமெ கொண்டவர் இஷ்டம். நேக் கென்ன.

**சந்திரமதி** — அம்மணீ! கோபிக்க வேண்டாம். மற்று முண்டான வேலைகளைச் சொன்னால், செய்யத் சித்தமா யிருக்கின்றேன் அம்மணீ.

**காலகண்டி** — ஆனு சரிதான். அந்த தொழுவத்துக்கு போய் நன்னு விளக்கித் தள்ளி, சாணத்தை சீரா தெரட்டி, நன்னு பெசஞ்சு முட்டெ தட்டு. ஜாக்கிரதெ, அது நம்ம ஆத்துக் கன்னு. அசலாருக்கு வெலெக்கிப் போடவேணும். சாணத்தெ சுண்டாக்கா பிராமாணமா தெரட்டி ஜல்லடெ பிராமாணமா தட்டு. தரையிலேயே தட்டிவை. உலர்ந்து போனுக்கே ஒடையாம எடுத்துக்கொள்ளலாம்.

**சந்திரமதி** — அம்மணீ! ஆகாத காரியத்தைச் செய்யச் சொன்னால் அடியாள் எப்படிச் செய்வது?

**காலகண்டி** — என்னடி ஆகாதகாரியம் சொல்லினெம். அதுக்கனு அடிமைப்பட்டவா தொழுவத்தெ பெருக்க வாண்டாமா? முட்டைத் தட்ட வாண்டாமா? வேலேக்காரி யன்னு எத்தெச் சொன்னாலும் பதில் வார்த்தெ சொல்லாம செய்யா. இதென்னெ சனியனு போச்சு. அந்த பட்டுக்கடப்பாம பிராமணனுக்கும் வேணும். பதைக்கப் பதைக்க நூறு லட்சம் பொன்னைத் தாரை வார்த்து, இந்த பொணத்தெ

இழுத்திண்டு வந்தாச்சு. என் அடி வயத்தெ பத்திண்டு எரியதே.

**காலகண்ட ஐயர்** — என்னடி சேஷி ஓரெம்மெ வைரெ. என்ன சங்கதி. ஒனக்கு நல்லதுதானெடி செய்தேo. ஏண்டி ஓம்மெ கூச்ச போட்டிண்டு வைரா.

**காலகண்டி** — ஆ, ஆ, நேக்கு ஒத்தாசைக்கு வாங்கிவந்தீரே, கேளும் அவள் வார்த்தெ சொல்றதெ. தொழுவத்தெ பெருக்கி முட்டெ தட்டடி யென்னு, ஆகாத காரியத்தெ சொன்னு எப்படி செய்யறதென்னு சொல்றளே. அதென்னென்னு நீர்தான் கேளும்.

**காலகண்ட ஐயர்** — அடீ சந்தி!

**சந்திரமதி** — ஏன் சுவாமீ!

**காலகண்ட ஐயர்** — அதென்ன அப்படி வார்த்தெ சொன்னது? அதுக்கென்னு வேலெக்காரியானு தொழுவத்தெ பெருக்கித் தள்ள வாண்டாமோ. சாணந் தொட்டி முட்டெ தட்ட வாண்டாமோ. இதெல்லா செய்ரதா வன்னே பத்திரமும் எழுதியிருக்கு. எழுதும்போது இப்படியெல்லாம் சொன்னதில்லெ என்னுவது சொல்லிவிடேo. நேக்கு திரவியம் போனாலும் போகட்டும்.

**சந்திரமதி** — அம்மணீ! சுவாமீ! அடியாள்மீது கோபிக்கவேண்டாம். அடியாள் தொழுவம் பெருக்கவாவது முட்டை தட்டவாவது மறுக்கவில்லை. அம்மாள் சுண்டக்காய் பிரமாணம் சாணந் திரட்டி ஜல்லடை யளவாகத் தட்டும்படி கட்டளையிட்டார்கள். அது ஆகாத காரிய மாயிற்றே, அதனை எப்படிச் செய்வது என்று கருதிக் கேட்டேன் சுவாமீ. மற்றொன்றும் மறுக்கவில்லை.

**காலகண்ட ஐயர்** — ஆ, ஆ, ஆ, நன்னு இருக்கு. நன்னு இருக்கு. அவள் சொன்னதும், நீ அர்த்தம் பண்ணதும். கொஞ்சமா எடுத்துக்கொள் என்னு வார்த்தெ சொல்லாமெ கச்சக்காப் பிரமாணம் என்னு. இது நீ கேட்டதில்லெயோ. மனுஷ்யா கொஞ்சமா வேணுமென்னு கச்சக்காயளவெ போடு, சுண்டக்காயளவெ போடு, எலுமிச்சங்காயளவெ போடு என்பாளே, அது ஒனக்கு தெரியாதோ. ஐயோ பயித்தியமே, லோகமே தெரியாதவள்.

**சந்திரமதி** — சுவாமீ! இவ் வழக்கச் சொற்களை அடியேன் கேட்டிருக்கின்றேன். ஆயினும் ஜல்லடையளவு தட்டுவதற்கு பலாக்காயளவு எடுத்தாலும் பற்றாது. அதற்குப் பனங்கா-

யளவு என்றாலும் ஒருவாறு கூடும். இதனைவிட்டு சுண்டைக்காயளவு என்றால் பலாக்காய்க்கும் சுண்டைக்கும் எவ்வளவு வித்தியாச மிருக்கின்றது, பாருங்கள் சுவாமீ.

**காலகண்ட ஐயர்** — சந்தீ, சேஷியின் வழக்கம் ஒனக்குத் தெரியாது. அவள் கடூரமாமட்டும் வார்த்தெ சொல்லுவள், வஞ்சனை யில்லாமெ வயிற்றுக்குப் போடுவள். கணக்கு வழக்கு தெரியாது. ஓரம்மெ கூச்செ போட்டு வாயாடி என்னு பேரெடுத்துக் கொண்டாள். நீ போய் தொழுவத்தெ பெருக்கி சாணத்தெ தெரட்டி செருசா வுருட்டி முட்டெ தட்டு, போ.

**சந்திரமதி** — அப்படியே செய்கிறேன் சுவாமீ. அம்மணி போகிறேன்.

**காலகண்டி** — அதென்னமோ. நீ போவையோ, இருப்பையோ. இப்படி சேசா வேலைக்காரிக்கு அச்சம் மனசிலே கொஞ்சமாவது இருக்குமோ. இது ஆகிற சம்சாரமாணு லன்னு அஞ்சு மூனும் அடுக்கா வரபோரது.

(சந்திரமதி தொழுவம் பெருக்கச் செல்கின்றாள். காலகண்டனும் காலகண்டியும் தனித்துப் பேசிக்கொள்கின்றனர்.)

நண்ப! இச் சந்திரமதியை நாம் எவ்வாறு வருத்தினும் அவள் உறுதிநிலை மாறுபவளாகக் காணவில்லை. சொல்லளவுக்கும் சிறிதும் பிசகாதவாறு நடக்கின்றாள். சத்தியத்தின் மீது மனவுறுதி யுடையார் செய்கையைக் கண்டீரோ! இதற்கென்ன செய்வது. முனிவர் முரட்டாட்டமாய் மொழிந்த வார்த்தை இப்போது எவ்வளவு சிரமத்திற்கு இடமாக்கிவிட்டது பாரும். மற்றவர்க்கிருக்கும் துன்பம் ஒருவாறு இருக்க, நம்முனிவர்க்கு உண்டாயிருக்குந் துன்பத்திற்கோ அளவில்லை. குரங்கு விளையாட்டுத்தனமாய் வாட்காரன் கடாவிய ஆப்பைப் பிடுங்கிக் கால் நசுங்கி இறந்துபட்ட கதையாகக் காண்கின்றது. என்னமோ எனக் கொன்றுந் தோன்றவில்லை.

**காலகண்ட ஐயர்** — நீ சொல்வது உண்மைதான். இருந்தாலும் மனச்சோர்வு படலாகாது. "முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்." "தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலி தரும்" என்பதை யுன்னி உழைக்க வேண்டும். உலக வாழ்வைத் துறந்து, துறவறம் பூண்டு தவஞ்செய்திருந்த நாம், குருநாதர் கட்டளைக்கு உட்பட்டு இல்லறத்தார்போல் புருஷன் பெண்சாதியாக வந்திருக்கின்றோம். தவத்துறை படிந்த நமக்கு இது அழகாமா? "அழகலாதன செயேல்" என்பதை யறிந்திருந்தும், குருநாதர்

வாக்கை நிறைவேற்ற வெண்ணி இவ் வேடம் பூண்டோம். இதனை எவ்வாறாயினும் சாதித்தே தீரவேண்டும். அரிச்சந்திரன் வாயிற் பொய் காணாவிட்டாலும், சந்திரமதி வாயிலாயினும் ஒரு பொய் கண்டுவிட்டால் வெற்றிக்கொடி நாட்டிவிடலாம்.

**காலகண்டி** — சந்திரமதியின் வாயில் பொய் கண்டால் அதெப்படி வெற்றி கொண்டாற்போ லாகும்?

**காலகண்ட ஐயர்** — இதனை யறியாயா இதுவரையில்; புருட னியற்றிய தீவினை மனைவியை யணுகாது. ஆயின், மனைவி யியற்றிய தீவினை புருடனை யணுகும்.

**காலகண்டி** — அதெப்படி, ஒருவர் வினை மற்றவரை எப்படிப் பற்றும்?

**காலகண்ட ஐயர்** — அது சாஸ்திரவிதி, அதற்கு நியாயமும் உண்டு. சீடன் இயற்றும் பாவம் குருவைப் பற்றும். குடிக ளியற்றும் பாவம் கொற்றவனைப் பற்றும். கொற்றவன் இயற்றும் பாவம் புரோகிதன் அல்லது அமைச்சனைப் பற்றும். அதுபோல மனைவி யியற்றும் பாவம் புருடனைப் பற்றும்.

**காலகண்டி** — எக்காரணத்தினால் ஒருவருடைய பாவம் மற்றவரைப் பற்றுகின்றது?

**காலகண்ட ஐயர்** — மேலே கூறப்பட்டவர்களில் குருபதேசப்படி சீடனும், கொற்றவன் ஆஞ்ஞைப்படி குடிகளும், புரோகிதன் அல்லது அமைச்சனது உரைப்படி கொற்றவரும் நடந்து கொள்கின்றனர். அதுபோல் புருடனது அநுமதியேபோல் பாரியை நடந்துகொள்கின்றாள். அதனால் செய்வோரது கருமம் நடத்துவோரை யடைகின்றது. இதுவே அதனது உள்ளுறையான விஷயம்.

**காலகண்டி** — அப்படியாயின் செய்வோரது நல்வினையும் நடத்துவோரை யடையுமன்றோ?

**காலகண்ட ஐயர்** — நல்வினை அடையாது. தீவினைமட்டு மடையும்.

**காலகண்டி** — அதற்கு நியாயமென்ன?

**காலகண்ட ஐயர்** — தம்மை நாடினவரை நல்வழிப் படுத்துதல் நல்லோர் கடமை. அதனாலேயே சிறியோர் பெரியோரை யடுப்பது. பெரியோர் தம்மை நல்வழியில் நடத்தும்பொருட்டே சிறியோர் அவர்களை யடைந்து தொண்டு முதலிய புரிவது. அதனால், நல்வினை செய்வாருக்கே உரியது. தீவினையோ செய்வாரை நடத்துவோருக்குச் சரிபாதி

சேர்ந்துவிடும். இம்முறையினால் மனைவி செய்யும் தீவினையில் பாதி புருடனை யடையுமாதலின் சந்திரமதி சிறிது பிழைத்து நடப்பினும் நாம் வெற்றி பெற்ற தாகும்.

**காலகண்டி** — சரி, சரி, இதுவும் ஒரு பேராதரவே. ஆயினும், இச் சந்திரமதியைத்தான் எவ்வாறு பிழைத்து நடக்கச் செய்வது? யானோ காலமுழுவதுங் காட்டிற் கழித்துவிட்டேன். உலகியல் ஒன்றுந் தெரியாது. நீராவது சிறிது காலத்திற்கு முன்பு வந்து சேர்ந்தீர். உலக வாழ்வில் இருந்தீர். இல்லாவிடில் இக் காரியத்திற்கு உம்மை அனுப்புவாரா முனிவர். ஏதோ சொல்லும் உம்முடைய தந்திரங்களை. நெடுநேரமாகிறது அவளைப் போய் வருத்தவேண்டும்.

**காலகண்ட ஐயர்** — ஆ. அதுதான் கூடாது. ஒருவரை அதிகமாக வருத்தப்படாது. வருத்தத்தில் தேறிவிட்டால் மறுபடியும் அவ் வருத்தம் அவர்களுக்கு இன்பமாய் முடியும். முதலிற் சிறைப்பட்டவனுக்கு வருத்த மிகுதியுமுண்டாம். பலகால் சிறைப்பட்டவனுக்கு அது முதலில் இருந்ததுபோல் வருத்தமாகப் புலப்படாமல், ஒரு வகையில் உவப்பாகவும் இருக்கும். மானிடர்க்கு இன்ப துன்பங்கள் மாறி மாறி வரச் செய்வதும் வினையின் வன்மையாகும். அதனால் நீ, அச் சந்திரமதியை ஒருபோது வருத்தியும், மற்றொருபோது அன்பால் திருத்தியும் வேலை வாங்குவதேபோல் காட்டவேண்டும். அதனால், நீ இப்போது போய் அவள் செய்கையைக் கண்டு பரிதாபப் படுபவள்போல் நடித்துக்கொண் டிரு. யான் வந்து தோட்டத்திற்குத் தண்ணீர் விடும்படி சொல்கிறேன். அவள் கையோ இப்பொழுதே கன்றிவிட்டது. இனிக் கயிற்றைப் பற்றித் தண்ணீர் தூக்க கஷ்டப்படுவள். அப்போது, நீ அருகிருந்து பரிதாபப்பட்டு, இந்த வேலை இன்று செய்ய வேண்டா, நாளை செய், ஐயர் கேட்டால் செய்தாயிற்று என்று கூறலாம் என்று சொல். செய்யச் சத்தி யற்றுப் பெரும்பாலும் இதற்கு உடன்படுவாள். அது ஒன்றே நமக்குச் சாலும். இதெல்லாம் நீ அவளோடு பேசும் வன்மையிலும், காட்டும் இரக்கத்திலும் இருக்கின்றது, போ, பத்திரம்.

(காலகண்டி போகின்றாள்.)

**சந்திரமதி** — (தொழுவத்தைப் பெருக்கிக்கொண்டே) ஆ தெய்வமே! இந்த நாற்றத்தை எவ்வாறு சகிப்பது. சண்பகம், மனோரஞ்சிதம் முதலிய மலர்களின் கடுமையான வாசனையைப் பொறாமல் வருந்திய எனக்கு இந்தத் துர்நாற்றத்தில் உழன்று வேலை செய்யவைத்த என் விதியை என்னவென்று நோவேன்.

மாதவியின் கொடியைப் பற்றி வளைக்கப் பொறாத இக் கைகள் இவ் வைக்கோலை வாரி யெடுக்கவும் காலம் நேர்ந்ததே, ஆ, காசிநாதா! தலையைச் சுற்றுகின்றது. இடுப்பு உளைக்கின்றது. கைகள் கன்றிச் சிவப்பேறுகின்றது. அந்தோ, நம்பினோரை இவ்வாறும் பரீக்ஷிக்கலாகுமா (சாணத்தை எடுத்துக்கொண்டே) ஐயோ பரமேசா! இச் சாணத்தை எவ்வாறு கையாற் றொடுவேன். சாந்தை உருட்டவும் தளர்ச்சியடைந்த கரங்கள் சாணத்தையோ உருட்டுவது. வாணியைத் தொழுத கைகள் இச்சாணியையோ தொடுவது. இருக்கட்டும், யாது செய்தாலென்ன. சாந்தை உருட்டினு லென்ன, சாணத்தை உருட்டினு லென்ன, சத்தியத்தைமட்டும் உருட்டிவிடலாகாது.

(சாணமுருட்டித் தட்டுகிறாள்.)

**காலகண்டி** — அடீ சந்திரமதி! முட்டெ யெல்லாந் தட்டியாச்சோ? வருத்தமாயிருந்தா சொல்லெ௦. நானுவது கொஞ்சம் உருட்டி போட்ரே௦. பெண்ணென்னு பேயுமன்னே இரங்கும். நேக்கு கல் மனசன்னு. நேக்கு கோபம் வந்தாமாத்ரம் செத்தெ எரிஞ்சி விழுவெ௦. மத்தபடி நேக்கு மனுஷ்யாளெ கண்டா மெத்த பிரியந்தான். பாவம், நல்ல சம்பத்திலே இருந்தவளன்னே, இந்த வேலெயெல்லாம் சேஞ்சறியா. திருடனெ புடிச்சு ராஜமுழி முழியென்னு என்ன செய்வன்.

(சற்று தூர உட்காருகின்றாள்.)

**சந்திரமதி** — அம்மணீ! இதோ செய்து முடிக்கின்றேன். தொழுவ முழுதும் பெருக்கியாயிற்று. வைக்கோலைச் சேர்த்து ஒரு புறத்தே ஒதுக்கி வைத்து சாணங்களை யெல்லாம் திரட்டிக்கொண்டுவந்தேன். பிறகு நன்றாய் மிதித்து உருண்டையாகத் திரட்டி முட்டை தட்டுகின்றேன். அதுவும் முக்காற் பங்கு முடிந்துவிட்டது. இன்னும் தயைசெய்து ஒரு நாழிகை பொறுத்துக்கொண்டால், மற்றவைகளையும் தட்டிவிடுகின்றேன். அடியாள் இருக்கிறபோது தங்களுக்கேன் சிரமம், அம்மணீ.

**காலகண்ட ஐயர்** — அடீ, சேஷீ! என்னடி அவளோடு சமானமா குந்திண்டு வார்த்தெ சொல்லிண்டிருக்கிறு. என்னடி ஒனக்கு கொஞ்சமூவது வேலெ நடக்கணுமென்னு எண்ணமில்லெ. அடீ சந்தி!

**சந்திரமதி** — சுவாமீ!

**காலகண்ட ஐயர்** — என்ன செய்திண்டிருக்கிரா பொழுதுக்கும். ஒரு நாளெல்லாம் முட்டெ தட்டிண்டிருக்கிறுயே.

**சந்திரமதி** — இதோ முடிந்துவிட்டது. இன்னும் இரண்டுமட்டும் தட்டவேண்டும் சுவாமீ.

**காலகண்ட ஐயர்** — இரண்டா, சரி அதெ தட்டிப்போட்டு சீக்கிரமா அந்த கொடத்தெ எடுத்திண்டு ஒரு பத்துகொடங் ஜலம் எடுத்து அந்த செடிகளுக்குக் கொட்டு. ஜலம் இல்லாமெ வாடிப் போரது. அந்தப் பயல் எங்கே? உன் பிள்ளெ.

**சந்திரமதி** — தெருவில் இருந்தான் சுவாமி. இதோ எழுந்து செடிகளுக்குத் தண்ணீர் வார்க்கின்றேன்.

**காலகண்ட ஐயர்** — அந்த பயல் ஓரம்மே ஆடிண்டு கிடக்கிறதே. அதுக்கு ஏதாவது வேலெ வைக்கப்படாதா? ஓரம்மே சாதத்தெ கொட்ரத்துக்கா இவாளெ வெலேக்குக் கொண்டது?

**காலகண்டி** — அதென்ன உமக்கு இப்படிக் கல்லா போச்சு மனசு. சந்தி எத்தனெ வேலெதான் செய்வள்? அவள் சாப்பிட வாண்டாமா, அந்தப் பையன்தான் என்ன செய்யக் கடக்கிறது? ஆடிண்டுதான் கிடக்கட்டுமே. உமக்குத்தான் ஒருத்தர் ஓரம்மெ இருந்தா மனம் சகிக்காதே. இத்தனே நாள் சேஷியைப் பார்த்து பார்த்து பேசுவீர். இப்போ இவா அகப்பட்டிண்டாளே, இன்னும் எப்படி ஓரம்மெ இருப்பீர்.

**காலகண்ட ஐயர்** — சந்தி பிம்மாலே சாப்பிடலாம். முன்னுக்கே செடிகளுக்கு ஜலம் விடட்டும். வீணு வாடிப்போரது.

(சொல்லிவிட்டுப் போகிறான்.)

**காலகண்டி** — (மெதுவாக) அடீ சந்திரமதி! அவர் கடக்கிறார். நீ எழுந்து கைகாலெ அலம்பிண்டு சாப்பிடு, பிம்மாலெ செடிக்கு ஜலம் கொட்டு. அதுக்கு இப்போது முழுகிப்போகலெ. அதென்ன காய் கொடுக்கிறதா கனி கொடுக்கிறதா. ஓரம்மெ காய்க்கும் காய்க்குமென்று பார்க்கிறார் பிராமணர். நீ போடி, கை கால் அலம்பிண்டு வா.

**சந்திரமதி** — அம்மணீ! ஐயர் சொன்ன வார்த்தையைத் தட்டி நடப்பது கூடாது. அவர் செய்யச் சொன்னதை முன்பு செய்ய வேண்டும். பிறகு சாப்பிடலாம். அவரும் பின்பு சாப்பிடும்படி கட்டளேயிட்டார். அவர் சொல்லியதுபோலவே செடிகளும் வாடி யிருக்கின்றன. ஆதலால், செடிகளுக்கு ஜலம் விட்டபிறகு சாப்பிடுகின்றேன். குழந்தைக்குமட்டும் கொஞ்சம் உணவு அளித்துவிடுங்க ளம்மணி. அதற்குள் யானும் வந்துவிடுகின்றேன்.

**காலகண்டி** — அடி சந்தீ, அவர் அப்படித்தான் ஒன்னுக்கு மேலே ஒன்னு சொல்லிண்டே யிருப்பார். மற்றவா போஜ-

ணம் பண்ண வேணுமென்று அவருக்குத் தோணுது. அதோ சாதம் போட்டுவைச்சிருக்கேன். அது வைச்சு ஒரு ஜாமமாச்சு. போய் சாப்பிட்டு வா. பிம்மாலே ஜலம் விடலாம்.

**சந்திரமதி** — அம்மணீ, வேண்டாம். இன்னும் சிறிது போழ்தில் என்ன கெட்டுப்போகிறது. ஐயர் ஆஞ்ஞைப்படியே செடிகளுக்கு சலம் விட்டுவிட்டு வந்துவிடுகிறேன். தாங்கள் அன்போடு சொல்வதை மறுப்பதாக எண்ணவேண்டாம். அம்மணி ஐயர் உத்தரவைக் கடக்கலாகாது.

**காலகண்டி** — அப்படியானுக்கே ஒன் இஷ்டம்போல செய். இது நல்லத்துக்குக் காலமன்னு. தேகத்தில் கொஞ்சம் பலம் இருக்கிறாப்போல் இருக்கு.

(சந்திரமதி குடத்தை எடுத்துத் தாம்பில் பூட்டித் தண்ணீர் சேந்துகின்றாள். இழுக்க முடியாமல் தத்தளித்துத் தள்ளாடிச் சாய்கிறாள். அப்போது காலகண்டி ஓடிப்போய் சொல்கிறாள்.)

அடீ, சந்தி! ஒனக்கு கொஞ்சமும் புத்தி யில்லடி. நான் சொன்னுக்கே கேட்டாயாடி. பாவம் இழுக்கமாட்டாமே விழறாயே. இது என்ன தோஷம். வாண்டாம் வாடி. வந்து சாப்பிடு.

**சந்திரமதி** — அம்மணீ! இதோ வந்துவிடுகின்றேன். கை நோகிறது மெய்யே. மற்றும் இரண்டுமுறை இழுத்தால் மாத்துப் போகும். எடுத்த வேலையை முடித்துவிட்டு வருகிறேன்.

**காலகண்டி** — அடீ சந்தீ! ஒனக்கென்னடீ பிடிவாதம்? வாண்டாம், வந்து சாப்பிடு. "அன்ன மயம் பிராண மயம்" என்பாளே நீ கேட்டதில்லேயோ. சாத மில்லாவிட்டாக்கே என்ன செய்ய முடியும்; எப்படியும் ஒன் இஷ்டம்போல ஒரு கொடமாவது இழுத்தாச்சு. இன்ன மென்ன? ஐயர் கேட்டாலும், ஆமாம் விட்டாச்சுன்னு போச்சு. வா போவோம். பையனும் பசியோடே அழுதிண்டிருப்பன். அடீ வாடி, நேக்கும் கால் நோகுது.

**சந்திரமதி** — அம்மணீ! உயிரை விட்டாலும் உண்மை விடலாகாது. இச்செடிகளுக்கெல்லாம் ஜலம் விடும்படி கட்டளையிட்டார். இப்போது ஒரு குடம் விட்டுவிட்டு முழுதும் விட்டேன் என்று உரைக்கலாகுமா? அது பொய்யன்றோ? பொய் சொல்லி புவியில் வாழலாகாது. இதோ அதி சீக்கிரத்தில் செடிகளுக்கு ஜலம் விட்டு வருகின்றேன். மன்னித்துக்கொள்ளும் அம்மணீ.

**காலகண்டி**—நீ கெட்டே, ஒன்னே லக்ஷியம் பண்ணிண்டு சொன்னேனே நாஒ, அது புத்திக்கு கொறச்சல். நீ எப்படியாவதுபோ.

(மிடுக்கோடு திரும்பிப் போய் காலகண்டனைச் சந்திக்கின்றான்.)

**காலகண்ட ஐயர்** — ஏதேனும் பலித்ததோ?

**காலகண்டி** — பலிக்கிறதாவது, அவள் மனம் சலிக்கிறதாவது. பெண்ணு அவள் தேவாம்சம். பொய்யென்று அவளிடத்துச் சொல்லி வெல்லுவார் யார்? அவர்களை ஏமாற்ற முனிவராலு மாகாது, முனிவர் மனனம் செய்யும் முழு முதற் கடவுளாலு மாகாது. உயிரையும் ஒரு பொருளாக லட்சியம் செய்யவில்லை யென்றால் மற்றெதனைக் கருதுவாள் அவள். ஏதோ நீர்தான் ஒரு காரியத்தில் முயன்று பாரும், பார்ப்போம்.

**காலகண்ட ஐயர்** — யான் இது விஷயமாய் முயலக் கூடாது. ஆண்பாலார் பிறர் மனைவியை யண்டிப் பேசுதல் தீது. அன்றியும் தனித்து இத வார்த்தைகள் சொல்லுதல் அதனினுந் தீது. பெண்களோடு பெண்கள் அடுத்து உரைப்பதே நேரிது. ஆதலின், நீயே இதன்பொருட்டு முயலுதல் வேண்டும். நமது காரியங்களில் பிழைத்து நடக்கத் தூண்டினால், நமது எண்ணம் கைகூடுவதாகக் காணப்படவில்லை. பிறர் பொருட்டு ஏதேனும் சிறிய காரியத்தில் பிழைத்து நடக்க முயன்றால் ஒத்து நடப்பாள் என்று நம்புகின்றேன். இனி அவ்வாறு செய், பார்ப்போம்.

**காலகண்டி** — அதன்பொருட்டுத்தான் நாம் செய்யத்தக்கது யாது?

**காலகண்ட ஐயர்** — இப்போது அஸ்தமித்துவிட்டது. பாலைக் கறந்து சிறிது தண்ணீர் கலந்து விற்கச் செய். கேட்போருக்கு அது இப்போதுதான் கறந்தபால் எனச் சொல்லும்படி தூண்டு. இவ்வாறு சொல்வது எவர்க்கும் வழக்கமே. அதற்கும் உடம்படாவிடின் பசுவின் வெண்ணெயைப் பூனை தின்றுவிட்டதாகப் பாவனை காட்டி, எருமை வெண்ணெயை பசும் வெண்ணெயென்று சொல்லச் சொல்.' வழக்கமேபோல் மந்திரியார் வீட்டினின்றும் பசும் வெண்ணெய் வாங்கிவரச் சொன்னதாக ஒருவனை யனுப்புகின்றேன். அப்போது பசும் வெண்ணெய் இல்லை யென்றால், நம் பிழைப்பிற்கே இடர் உண்டாகுமென்று வருத்தப்பட்டு, அவளை வசப்படுத்தி சொல்லச் செய். இது மிக்க எளிமையான வழி. இதனில் அவளுக்கும் மயக்கந் தோற்றாது.

**காலகண்டி** — ஆம், ஆம், இது ஏற்ற வழியே. நமக்குப் பிழைத்து நடப்பதென்றால் பின்னிடுவாள். நமக்கு நன்மையை நாடி ஒரு சிறு காரியத்திற் பிழைத்து நடக்க விரும்பி உடன்படுவாள். அப்படியே செய்கின்றேன்.

**காலகண்டி** — சந்தி! முத்தம் பெருக்கி யாச்சோ.

**சந்திரமதி** — ஆயிற்று அம்மணி, கோலமும் இட்டாயிற்று.

**காலகண்டி** — சந்தோஷம், இப்போ என்ன செய்யப் போறு?

**சந்திரமதி** — அம்மணீ! நேற்று செய்ததேபோல் மாட்டுத் தொழுவம் விளக்கி, சாண முருட்டி வரட்டி தட்டப் போகின்றேன்.

**காலகண்டி** — அது கடக்கட்டும், பிம்மாலே செய்வெ. வாடிக்கைக்கார் பாலுக்கு வருவா. பசும் பாலைக் கறந்து அப்புறத்தே வை. அந்த எருமைப் பாலெ சீக்கிரமா கறந்திண்டு வா. நம்ம ஆத்திலே இன்னைக்கி பசும்பால் மெத்த செலவிருக்கு. அந்த எருமைப் பாலைக் கறந்து துளிபோதும் ஜலம் விட்டு வைச்சிண்டு இரு. வாடிக்கைக்கார் வருவா, பசும் பால் வேண்டுமென்னு கேழ்ப்பா, அவாளுக்கெல்லாம் அந்த எருமைப் பாலெ அளந்துவிடு.

**சந்திரமதி** — அம்மணீ! பாலைக் கறந்து அதிசீக்கிரத்தில் கொண்டு வருகின்றேன். தாங்கள் சொல்லியபடி எருமைப் பாலில் ஜலமுங் கலக்கின்றேன். ஆனால், கேட்பவருக்கு அதனைத் தண்ணீர் கலவாத பாலென்றுவது, பசும்பா லென்றுவது எப்படி யுரைப்பது? அது பொய்யுரைத்துப் பிறரை வஞ்சிப்பதாகுமே, யம்மணீ!

**காலகண்டி** — சந்தி, லோகத்துலே இது சஹஜம். எல்லாரும் இப்படித்தான் செய்வா. அது தோஷ மன்னு. சொன்னுப் போல செய்யேம.

**சந்திரமதி** — அம்மணீ! தடுத்துரைக்கின்றே னென்று கோபிக்க வேண்டா. நியாயமல்லாத காரியத்தை எவ்வாறு செய்வது? உலகத்தார் செய்வது உண்மைதான். உலகத்தில் பலர் செய்வது பாப காரியங்களே. நன்மையைக் கடைப்பிடித்து நடப்பவர் சிலரே. ஒரு படி பாலில் காற்படி தண்ணீர் சேர்ப்பதனுல் என்ன வரும். அதன்பொருட்டு உண்மையை யிழந்து போகலாமோ. அன்றி நோயாளிகள், விருத்தர், பாலர் முதலியோர்க்குப் பாலே நல்லுணவாக இருக்கின்றது. அதனுல் பலரும் பசும் பாலை நாடுவார்கள். சொற்ப பிரயோசனத்தைக் கருதிப் பலரை சுகவீன ராக்குவதும், நோயாளிகளாக்கும் பெரும் பாவமே யாகுமன்றே. ஆதலின், அவ்வகைய தொழிலை மனத்தில் நினையாதிருப்பதே உத்தமம் அம்மணி. இதற்கு அடியாள் எவ்வாற்றுனும் உடம்படுதல் இயலாது. பாலர்க்குப் பால் கொடுத்தலே பலவகைய அறங்களிலும் மேலாகச் சொல்லுவர் மேலோர். பொருள் பெற்றுக்கொண்டும் அதனை இவ்வாறு மாற்றிக் கொடுப்பது கொடுமையினுங் கொடுமையாகும் அம்மணி. இனி இவ்வகையில் தாங்-

22

கள் தலையிடாமலிருக்கத் தமது பாதங்களில் விழுந்து வேண்டுகின்றேன்.

**காலகண்டி** — சரி, சரி. ஆனுக்கே உன் இஷ்டம்போலவே செய். நீ லோக விவகாரங்களை அறியாதவளா இருக்கிறு.

**காலகண்ட ஐயர்** — அடீ, சேஷி இதோ மந்திரியார் ஆத்திலிருந்து ஆள் வந்திருக்கிறு பார்.

**காலகண்டி** — ஆரது.

**ஆள்காரன்** — ஏம்மா, ஐயா வூட்லே பசும் வெண்ணெ வாடிக்கைபோல வாங்காரச் சொன்னுங்கோ. அவ்சரமாO சீக்கிரங் குடுங்கேO.

(காலகண்டி வெண்ணெய் எடுத்துவரப் போகிறவள் போய், வெறுங் கலயத்தை எடுத்துவந்து மெதுவாய்.)

**காலகண்டி** — என்ன செய்வண்டி யம்மா. துளிபோதுகூட காணலெயே! அடி, அடீ சந்தீ.

**சந்திரமதி** — அம்மணீ! இதோ வந்துவிட்டேன்.

(ஓடிவருகிறாள்.)

**காலகண்டி** — அடீ சத்துகாட்டாதே. எண்டீ இதிலே வெண்ணெ வச்சேனே பார்த்தியோ.

**சந்திரமதி** — அம்மணீ நான் பார்க்கவில்லையே.

**காலகண்டி** — முண்டே ஆத்துப்பூனெ திருடிண்டு பூட்டுதே! என்ன செய்வேண்டி. மந்திரியார் ஆத்துக்காச்சே. துளிபோதுகூடவே காணலெயெ. இல்லெயென்னு சம்சாரத்துக்கே நாசமுண்டாமே. இப்போ நீ ஒரு ஸஹாயஞ் செய்யவேணும். அந்த எருமை வெண்ணெ இருக்கன்னே அதே எடுத்திண்டு போய் பசும் வெண்ணெதான் என்று சொல்லிக் கொடுத்துவிடவேணும். அவ்வளவு பெரிய மனசு பண்ணவேணும். ஐயர் காதிலேகூட படப்படாது. போ, போ காத்திண்டிருக்கா.

**ஆள்காரன்** — என்னும்மா நேரமாவுது, அம்மாமார் கோவிச்சிக்கிவாங்கோ.

**காலகண்டி** — இதோ கொண்டுவர்ரு (சந்திரமதியை நோக்கி) போடீ, இதோ இந்தா எடுத்திண்டு போ.

**சந்திரமதி** — அம்மணீ! என் மனமார ஒன்றை மற்றொன்ருக மாற்றியுரைக்க வியலாது. மனச்சாட்சியை வஞ்சித்தல் மாண்பன்று. நம்மீது குற்றமில்லை. தற்செயலாய் நேர்ந்த ஆபத்துக்கு நாம் செய்வது யாது. இது யார்க்கும் உண்டானதே.

உண்மை யுரைத்தலே நலம். எருமை வெண்ணெயைப் பசும் வெண்ணெ யென்றும் கொடுத்தல் வஞ்சமும் மோசமும் ஆம். அவர்கள் அதனை ஔடதத்திற்கென்று கொண்டுபோதலுங் கூடும். தங்கள் குடும்பமே அவர்களை நம்பியிருப்பதாய்ச் சொல்லுகின்றீர்கள். அப்படிப்பட்டவர்களுக்கு இவ்வகைய நம்பிக்கைத் துரோகம் புரியாமல் உள்ளதை யுரைத்துவிட்டால் வேண்டுமானால் கொண்டுபோகட்டும். இல்லையானால் வேறெங்கேனும் வாங்கிக்கொள்ளட்டும் அம்மணி.

**காலகண்டி** — அடீ சந்தி! நேக்கே புத்திசொல்ல வந்துவிட்டாயன்னோ. நன்னாயிருக்கு. நீ போடி இப்படிக்கெல்லாம் பார்த்தன்னோ ஆணொரு தேசமும் பெண்ணொரு தேசமுமா அழுரது. என்னடீ, லோகத்திலே தந்தரம் இல்லாவிட்டாக்கே எப்படி யாகும். போ, போ, உன்னெ வெச்சிண்டு வேலெ வாங்கினால் போலதான். உன்னை யேன் நோகணும். அந்தப் பயித்தியக்கார பிராமண்னெ நோகணும். போடி, போய் அந்த அரிசியெ செத்தெ தீட்டு.

**சந்திரமதி** — இதோ தீட்டுகின்றேன், அம்மணி.

**காலகண்ட ஐயர்** — என்னடீ அது பொழுதுக்கும் கூச்செ போட்டிண்டு இருக்கிறு?

**காலகண்டி** — கூச்செ போட்டா, காரியமாதான் கூச்சபோட்ரேன்.

**காலகண்ட ஐயர்** — என்ன காரியம் அது?

**காலகண்டி** — அந்த பயல் ஓம்மே மூக்கப் பிடிக்க தின்னுபோட்டு அக்ராரத்தே சுத்திண்டு வாரதே, அதுக்கு ஏதானு வேலை யிடப்படாதோ?

**காலகண்ட ஐயர்** — நேத்திக்கே ஒனக்கு சொன்னே னில்லியோ. அப்போ நீதான் சிபார்சுக்கு வந்தா. உனக் கென்னடி க்ஷணத்துக்கு க்ஷணம் குணம் பேதப்பட்றது.

**காலகண்டி** — நேத்திக்கித்தான் வேலெ யில்லை. ஓம்மே இருந்தது. நாளைக்கி வருஷப்பிரவேசம் மாசப்பிரவேச மாச்சே ரெண்டு மாவலெ தருப்பெகூட வேண்டாமோ? இத்தெகூட சேஷிதான் சொல்லணுமாக்கும்.

**காலகண்ட ஐயர்** — அது அறியாதது ஆச்சே, தனியா காட்டுக்கு போகுமாடி?

**காலகண்டி** — ஏன் அசலாத்து பிள்ளைக போகலியோ. அவாகூட கூட்டி யனுப்பக் கூடாதோ. ஓம்மெ கட்டிக்கொண்டதும் போதும்; உம்மோடு அழரதும் போதும்.

**காலகண்ட ஐயர்** — *அப்படிச் சொல்லண்டி, ஏண்டி அதற்கு ஓரம்மே கத்தரா? அந்தப் பயலெ இப்படி அழைச்சிண்டு வா.*

**காலகண்டி** — *அது தாயார் வயத்துலேபோய் பூந்துண்டு இருக்கு; நான் அழைக்கல்லே, நீரே அழைச்சுக்கோம்.*

**காலகண்ட ஐயர்** — *அடீ சந்தீ, அடீ சந்தீண்ணோ.*

**சந்திரமதி** — *சுவாமீ! இதோ வந்துவிட்டேன்.*

**காலகண்ட ஐயர்** — *அடீ அந்தப் பயல் எங்கடீ?*

**சந்திரமதி** — *இதோ இருக்கின்றான் சுவாமி.*

**காலகண்ட ஐயர்** — *அடா பயலே! எங்கடா போனு?*

**தேவதாசன்** — *எங்கம்மாளிடத்தில் இருந்தேன் சுவாமீ.*

**காலகண்ட ஐயர்** — *சந்தீ! இப் பயல் சாப்பிட்டாச்சோ?*

**சந்திரமதி** — *சுவாமீ இன்னும் இல்லே.*

**காலகண்ட ஐயர்** — *அடீ சேஷி, சேஷி, சேஷிண்ணோ.*

**காலகண்டி** — *ஏ அழைக்கிறீர்?*

**காலகண்ட ஐயர்** — *அடீ இந்தப் பயலுக்கு சாதம் போட்டாச்சோ?*

**காலகண்டி** — *அதோ அந்த கல்லுச்சட்டிலே கொட்டி வைச்சிருக்கே. சாதமில்லே, கொஞ்சம் மாவுசாதந்தானிருக்கு. அந்த மூண்டாவீட்டு பூனெ வந்து எல்லாந் தின்னுட்டு போச்சு. ரெண்டுபேருக்கும் ரெண்டு விளாங்காயத்தனெ உருட்டி வைச்சிருக்கே. அந்த மோர் கலயத்திலே நன்னு அரைப்படி ஜலம் விட்டுக் கழுவி விட்டுண்டு ரெண்டுபேரையும் சாப்பிடச் சொல்லும். நேக்குத் தலே வலிக்கிறது, படுத்திண்டு இருக்கே.*

**காலகண்ட ஐயர்** — *அடீ சந்தீ! சேஷி சொன்னதைக் கேட்டயோ. போய் அதைச் சாப்பிடு. இந்தப் பயலெ சீக்கிரமா யனுப்பு.*

**சந்திரமதி** — *ஆ, ஆ, அப்படியே அனுப்புகின்றேன் சுவாமி.*

**காலகண்டி** — *அடீ சந்தீ! அந்த அமுதரியெ தீட்டியாச்சோ? துல்லியமா தீட்ணயோ?*

**சந்திரமதி** — *இன்னும் இரண்டொரு மூச்சுப்போட்டால் துலக்கமாகிவிடும் அம்மணி. இதோ தீட்டி விடுகின்றேன். (போய் தீட்டுகிறாள், தனியே) அந்தோ காசிநாதா! என்ன செய்வேன்! எனது மன்னவரது வலக்கையைப் பற்றிய கைகளால் உலக்கையைப் பற்றி இவ்வரிசியைத் தீட்டுகின்றேன். கைகளில் கொப்புளங்கள் எழுகின்றன. உதிரம் கசிகின்றது. கால்*

கடுக்கின்றது. மார்பு விரிந்து போவதேபோல் நோகின்றது. என்ன செய்வேன்.

(கண்ணீர் விடுகின்றாள்.)

**தேவதாசன்** — அம்மா, அம்மா.

**சந்திரமதி** — என்னடா கண்மணீ.

**தேவதாசன்** — ஏன் அம்மா சாப்பிடாமல் அழுகிறாய்? அப்பா எப்போது வருவார்? வந்ததே நீ அரிசி குற்றிக்கொண்டே அழுதாய் என்று சொல்கிறேன்.

**சந்திரமதி** — அப்பா இப்போது வரமாட்டார். எப்போதாவது வருவார். வருந்தாதே, நான் இனி அழவில்லையடா கண்மணீ.

**தேவதாசன்** — பின்னே வா அம்மா. நேற்றெல்லாம் சும்மாவிருந்து பொழுதுசாயக் கொஞ்சம் பழையது சாப்பிட்டோம். இராத்திரி சாப்பிட்டது எனக்கு ஞாபகமில்லை. வாம்மா பசிக்கிறது.

**சந்திரமதி** — இதோ வந்துவிட்டேனடா கண்மணி. அரிசியும் குற்றியாயிற்று. போவோம் வா.

(அரிசியை வைத்துவிட்டுச் சாப்பிடுகின்றனர்.)

**தேவ்தாசன்** — அம்மா! பழையது எங்கே?

**சந்திரமதி** — பழையது இல்லை. இன்று நாம் இதைச் சாப்பிடுவோம்.

**தேவதாசன்** — ஊஹூம், எனக்கு வேண்டாம். இதைப் பார்க்கவும் சகிக்கவில்லை யம்மா. தொட்டால் கையில் ஒட்டுகிறதே, அசிங்கமா யிருக்கிறது. கொஞ்சம் பலகாரமாவது வாங்கிக் கொடம்மா.

**சந்திரமதி** — (*தனியே*) ஐயோ என் விதியே, கால கதியே! இவனுக்கு என்ன சொல்வது! அறியா ப்ராயம், இவன் உணவு கொள்வதற்கு எத்தனை வேடிக்கை, எத்தனை ஆட்டம், எத்தனை தாதியர் சூழ்ந்து கெஞ்சுவர். அந்தக் காலமெல்லாம் ஒழிந்து ஒரு நாளுக்கு ஒரு வேளை யுணவு கிட்டுவதும் அருமையாய்விட்டது. இக் காலத்தில் அது வேண்டாம், இது வேண்டாம் என்கிறானே. என்ன செய்வேன். அந்தோ, அரசர், புரோகிதர், குழந்தைகள், மருகர் முதலாயினார் உண்டு இல்லை என்பதை உணர மாட்டார்கள் என்கிறார்களே. அது நிஜமாகவன்றோ இருக்கின்றது. இதனுக்கு என்ன செய்வேன் (*மகனை நோக்கி*) அடா என் கண்மணீ! இன்று இதைச் சாப்பிடு. பிறகு பார்க்கலாம், இன்று கிடைத்தது இது. நாளைக்கு நல்லது கிடைத்தாலும் கிடைக்கும். (*கூழைக் கரைக்கின்றாள்.*) ஐயோ பரமேசுவரா! இதைக் கரைக்க எனக்கே சகிக்கவில்லையே. இதனை

எப்படி உண்பது. அதுவோ பற்றும் பற்றுமயிருக்கின்றது. நமது ஊழுக்கும் இந்தக் கூழுக்கும் சரியாகத்தான் இருக்கின்றது. நமது அரண்மனையிலிருந்த பசுக்களுக்கும் இத்தகைய உணவு அளித்ததில்லையே. பாலுக்குச் சர்க்கரையும் வேண்டாமென்று வெறுத்த காலம் போய், கூழுக்குப் போட உப்பும் இல்லையே யென்று வருந்துங் காலம் நேர்ந்ததே. இது என்ன பாவமோ அறியேனே.

(தேவதாசனுக்கு உண்பிக்கின்றாள்.)

**தேவதாசன்** — எனக்கு வேண்டாம்மா, புளிக்கிறதே, உப்பும் காணேமே. சப்பென்றிருக்கிறதே. பதார்த்தமாவது கேளம்மா.

**சந்திரமதி** — அடா என் கண்மணீ! அழாதை. மனம்பிடித்துக் குடித்துவிடு. இன்றையதினத்துக்கு இதைச் சாப்பிடு. நாளைக்குப் பார்க்கலாம். (**கண்ணீர் விடுகின்றாள். மார்பைத் தடவிக் கொடுக்கிறாள்.**) இதோ பார் நான் குடிக்கிறேன். நீ குடி பார்ப்போம்.

(குடிப்பிக்கின்றாள். தானும் குடிக்கின்றாள்.)

**காலகண்ட ஐயர்** — அடீ சந்தீ! சாப்பிட்டாச்சோ? பையல் சாப்பிட்டானே?

**சந்திரமதி** — ஆம் சுவாமி, சாப்பிட்டாயிற்று. பையனும் சாப்பிட்டாயிற்று.

**காலகண்ட ஐயர்** — அவனை இப்படி அழைச்சிண்டு வா?

**சந்திரமதி** — இதோ வந்தோம் சுவாமீ.

**காலகண்ட ஐயர்** — சந்தீ நாளைய தினம் வருஷப் பிரவேசம், மாசப் பிரவேச மன்னே.

**சந்திரமதி** — இருக்கலாம் சுவாமீ.

**காலகண்ட ஐயர்** — நாளக்கி மாவிலெ, தருப்பெ, சமுத்து, காரெ, மின்னெ, பொரண்டெ இதுகளெல்லாங் கொஞ்ச கொஞ்சம் வேணு மன்னே. வேப்பம் பூவுங் கொஞ்சம் வேணும். அதுக்கு யாரும் போரவா ளில்லெ. இந்தப் பயலே அனுப்பி இந்த சமீபத்துலே இருக்கும் வனத்தி லிருந்து கொண்டுவாச் சொல்ல உத்தேசிக்கின்றேன்.

**சந்திரமதி** — சுவாமீ இவன் சிறுவன். காட்டில் தனியே செல்லப் பயப்படுவன். உத்தரவானல் அடியாள் சென்று கொண்டு வருகின்றேன்.

**காலகண்ட ஐயர்** — அது கூடாது. நீ போகக்கூடாது. ஆத்திலே உள்ள வேலெகளே யார் செய்வா. சேஷி காதிலே கேட்டால், சீறி விழுவள். ஏன் இந்தப் பயலுக்கென்ன. அசலாத்துப் பசகளெல்லாம் போகின்ருளே. அடிமெ பட்ட பயல் போறத்துக்கென்ன. நேக்கொன்னுந் தோணல்லயே. அவாள்ளாம் சொந்த ஆத்துக்காரர், ஆள், அம்பு உடையவா, அவா பசங்களே போராளே, இவனுக்கு மாத்ரம் என்ன அச்சம். கூடாது கூடாது போகத்தான் வேண்டும். அடிமைப்பட்ட பயலுக்கு அனுசரணை யென்ன. நீ போய் அப்புறத்தே நில், சமீபத்தி லிருந்தாலும் அவன் கெட்டுப்போவன்.

## ஏழாங் களம்.



**இடம்:** காலகண்டன் வசிக்கும் வீதி.

**காலம்:** காலே.

**பாத்திரங்கள்:** பிராமணப் பிள்ளைகள், தேவதாசன், காலகண்டன்.

**சேஷன்** — நீர் வர்லேயோங்காணும். நாளைக்கு வருஷப்பிரவேச மாச்சுதே.

**காலகண்ட ஐயர்** — அடா சேஷா, கிட்டு, சீமாச்சு, வெங்கு, நீங்களெல்லாம் சேர்ந்திண்டு எங்கடா போறீள்?

**சேஷன்** — காட்டுக்குப் போருேம். உமக்கு சமுத்து, மாவிலே, தருப்பை இதெல்லாம் வேண்டாமோ?

**காலகண்ட ஐயர்** — ஆமாம், வேண்டும்.

**கிட்டு** — அப்படியானுக்கே நீர் வாரீரோ? உம்முடைய ஆம்பிடையா வர்ராளோ?

**காலகண்ட ஐயர்** — ஆம்பிடையா எப்படி வருவள். அவளுக்குத் தலே வலி.

**கிட்டு** — பின்னே நீர் வாருமே.

**காலகண்ட ஐயர்** — ஆம்பிடையாளுக்கு தலேவலி யானுக்கே ஆத்துக்காரனுக்கும் தலேவலி யிராதோ. நேக்கு வரச் சரிப்படாது. இதோ ஒரு பயல் இருக்கான். அவனே அழைச்சிண்டு போய், நீங்கள் கொண்டு வர்ராப்போலே அவனையும் பறிக்கச் சொல்லி அழைத்து வாருங்கள். ரொம்ப செறியவன். பத்திரமாய் பார்த்துக்கொள்ளுங்கள். (பையனைப் பார்த்து) அடா பையா! நீ இவாளோடே ஆடாமெ அசையாமெ

போய் அவா என்னென்ன கொண்டுவர்ராளோ அதெல்லாம் நீயும் கொண்டுவரணும். இல்லா போனுக்கே நன்னு அடிப்பேம. சாதம் போட வேண்டாமெம்பேம.

**தேவதாசன்** — அப்படியேபோய் வேண்டியவைகளை அறுத்துக் கட்டிக் கொண்டுவருகின்றேன் சுவாமீ. (தாயாரிடம் போகின்றான்.) அம்மா! ஐயர் காட்டிற்குப் போகச் சொன்னார். நான் அந்தப் பிராமணப் பிள்ளைகளோடு போய் வருகிறேன், அம்மா.

**சந்திரமதி** — அடா என் கண்மணீ! என்ன செய்வேன், உன்னை விட்டு எப்படி இருப்பேன். காட்டில் போய் நீ எதையாவது கண்டு கலங்கினால், உன்னைத் தேற்றுவார் யார். ஐயோ என் உடலம் பதறுகின்றதே! என்ன செய்வேன்.

**தேவதாசன்** — அம்மா அழாதே. காட்டில் எனக்கு ஒன்றும் பயம் இராது. நாம் ஊரைவிட்டு வரும்போது எத்தனை காடுகளில் நுழைந்து வந்தோம். அப்படித்தானே இருக்கும். உனக்குக்கூட நல்ல நல்ல பழங்கள் பறித்து வருகின்றேன் அம்மா.

**சந்திரமதி** — அடா என் கண்மணீ! என்ன அறிவடா உனக்கு. என் கண்ணே! உன்னை எப்படிக் காட்டிற்கு அனுப்புவேனடா. அப்பா தேவதாசா, என்ன செய்வது. ஒருவருக்கு அடிமைப்பட்ட பிறகு அவர்கள் சொன்னபடி செய்ய வேண்டும். நீ பத்திரமாய்ப் போய் வா. குளம் குட்டைகளண்டைப் போகாதே. புற்று புதர்களில் நுழையாதே. பழம் வேண்டுமென்று மரங்களின்மீது ஏறாதே. ஐயோ தெய்வமே! என்ன செய்வேன்! எப்படி யனுப்புவேன்.

**தேவதாசன்** — அம்மா அழவேண்டாம். சொன்னபடியே செய்கிறேன். பத்திரமாய்ப் போய் வருகின்றேன்.

**சந்திரமதி** — (அசலாத்துப் பிள்ளைகளைப் பார்த்து) இதோ இச்சிறுவன் உங்களோடு வருகின்றான். அவனைப் பத்திரமாய் அழைத்துக் கொண்டுபோய், ஐயர் சொன்னவைகளைச் சேகரித்துக் கொடுத்து அழைத்து வாருங்கள். உங்களுக்கு அநேக நமஸ்காரம் செய்கின்றேன். சற்று தயவு செய்யுங்கள்.

**சேஷன்** — இவனென்ன, பிராமண பிள்ளை யன்றோ?

**சந்திரமதி** — அன்று, நாங்கள் இந்தப் பிராமணருக்கு அடிமைப் பட்டிருப்பவர்கள்.

**கிருஷ்ணசாமி** — அப்படியானுக்கே சரிதான். அடா சேஷ! நீதான் எங்களுக்கு ஒசந்தவன். நீதான் இந்த பிள்ளையை பார்த்துக்கொள்ளணும்.

**சேஷன்** — அப்படியே யாகட்டும், போம்மா.

**சந்திரமதி** — சுவாமீ! தங்கள் ஆதரவில்தான் அனுப்புகின்றேன். நீங்கள் வரும்வரையில் என் உயிர் இங்கு இராது. என்னுயிரையே உங்களோடு அனுப்புகின்றேன். (மகனைப் பார்த்து) அப்பா கண்மணீ! பத்திரமாய்ப் போய் வருவாயடா.

**சேஷன்** — ஆகட்டும் இதற்கென்ன. நாங்கள் இத்தெனைபேர் போகவில்லையா. ஒன்னும் பயமில்லே போம்மா. (போகிறார்கள்).

**காலகண்டி** — அடீ சந்தி, அடி சந்தி, அடீ சந்தி! எங்கடீ போனே.

**சந்திரமதி** — இதோ வந்துவிட்டேன் அம்மணி. பிள்ளையைக் காட்டிற்குக் கூட்டி யனுப்பிவிட்டு வருகின்றேன், அம்மணீ.

**காலகண்டி** — அவனெ காட்டுக்கனுப்ப நீ என்ன கூட்டி யனுப்ராதூண்ணொ. அவனுக்குத் தெரியாதோ, போரவா எல்லாம் பிள்ளேக ளன்னோ. உன் பிள்ளெதான் அதிசயமா பொறந்தவனோ. ஆத்துலே அது அது அங்கங்கே அப்படி யப்படியே விழுந்து கடக்கிறதெ. நீ உலாவிண்டு வர்ராயே. இது என்ன அநியாயமா இருக்கே. சாணத்தெ உருட்டி முட்டெ தட்டினுயா? செடிகளுக்கு ஜலங் கொட்டினையா? , போது போரதே.

**சந்திரமதி** — அம்மணீ! இதோ போய் செய்துவிடுகின்றேன். அறியாதவன். அதனுல் புத்தி சொல்லி யனுப்பப் போனேன், அம்மணீ.

**காலகண்டி** — நீ என்ன புத்தி சொல்ரதுண்ணோ. இத்தனெ ஆத்துப பிள்ளேக போராளே, அவர்களுக்கு தெரியாதா அவனெ அழைச்சிண்டு வா. போ, போ, போய் முட்டெ தட்டு.

(போய் வேலைசெய்துகொண்டே தன்னுள் எண்ணுகின்றாள்.)

## எட்டாங் களம்



**இடம்:** அரணியத்தின் ஒரு புறம்.

**காலம்:** முற்பகல்.

**பாத்திரங்கள்:** சுசீலன், விவேகன், கருணைகரன்.

**சுசீலன்** — விவேக! நமது ஆசிரியர் அரிச்சந்திரன் விஷயமாய் வஞ்சினஞ்செய்த நாள்முதலாக நிஷ்டை முதலிய அனைத்தும் கைவிட்டார். நமக்கும் உபதேசம் என்பது ஒன்றும் காணேம். என்ன செய்வது, நமது வாணுள் வீணுளாகவோ தவத்திற் புகுந்தது!

**விவேகன்** — சுசீல! நாம் என்ன செய்வது. நம்முடைய தீவினை-யின் பயன் இவ்வாறு இருக்கின்றது. நல்லொழுக்கத்தை நாடி குருவை யடுத்தோம். அவர் புல்லொழுக்கத்திற் புகு-விட்டால் என்ன செய்யலாம். இது ஒன்றை எண்ணிப் பார். ஓர் உயிரை வஞ்சித்து விஷமூட்டி வருத்தினால் அதனால் வரும் பழியும் பாவமும் சிறிதாகுமோ. இத் தவக்குறைக்கு என்ன செய்யலாம், யாரோடு சொல்லலாம். ஆனாலும், நமது முனிவர்க்கு இவ்வளவு அடமும் வன்-னெஞ்சும் இருத்தல் ஏற்றதல்ல.

**சுசீலன்** — ஆம், ஆம், ஏற்றதல்ல வென்று அவருக்குச் சொல்-பவர் யார்? நமக்குள் நாம் சொல்லிக்கொள்ளலாம். வேறு என்ன செய்வது.

**விவேகன்** — சுசீல! சற்று இரு, அதோ வருபவர் யார், பார், நமது நண்பன்போற் காண்கின்றது.

**சுசீலன்** — ஆம், நமது நண்பன்தான், கண்ணுவர் சீஷன், கரு-ணாகரன்.

**விவேகன்** — ஆ, ஆ, வரட்டும், வரட்டும். நல்ல வேளைக்கு எதிர்ப்பட்டான். உற்றதைச் சொல்ல ஒருவரும் இல்லை யென்று இப்போது எண்ணினேமே. வன் நமது கருணாகரன் இருக்க நமக்கென்ன குறை.

வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும்
கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு
அசாஅத்தா னுற்ற வருத்தம் உசாஅத்தன்
கேளிரைக் காணக் கெடும்

என்றும்,

பளகறு நேசன் ஒருவனைப் பெற்றால்
பருந்தனப் பொதிபெற்றாற் போன்மென்
றுளமிகத் தெளிந்தோர் உரைக்குநன் மாற்றம்
உண்மையாம் பொய்மையா காதே

என்றும் கூறியபடி

இவனினும் நமக்கு உற்ற நண்பர் யார். வரட்டும் சம்பா-ஷிப்போம்.

(கருணாகரன் எதிர்ப்படுகின்றான்.)

**சுசீலன்** — கருணாகர! எது இங்கு எதிர்ப்பட்டது? நெடுநா ளா-யிற்றே கண்டு.

**கருணாகரன்** — ஆம், உங்கள் இருவரையும் ஒருங்கே கண்டது எனக்குப் பெரு மகிழ்வை யுண்டாக்குகின்றது. நெடு நாளாகக் காணவிடினும் சதா என் மனத்தின்கண் குடியிருக்-

கிறீர்கள். அதனால், காணாமையும் நட்பினர் மனத்தில் ஓர் இன்பத்தை யுண்டாக்குகின்றது.

**விவேகன்** — அதற்கென்ன தடை,

புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்

என்னும் மெய்யுரை பொய்ப்பாமா? இருக்கட்டும், சித்திகள் எல்லாம் எவ்வாறு இருக்கின்றன? சொல்லும்.

**கருணாகரன்** — ஆ, ஆ, அதற்கென்ன குறை. ஜபதபாதி அநுஷ்டானங்களெல்லாம் செவ்வனே நிறைவேற்றி, ஆசிரியர் அருளால் சகல சித்திகளையும் முறையே அடைந்து வருகின்றேன்.

**சுசீலன்** — வருவதற்குத் தடை யென்ன? கண்ணுவரை யடுத்த கருணாகரருக்கு எதுதான் அரிது. நம்மைப்போல் தவக்குறை எவருக்கு நேரும்?

**கருணாகரன்** — அதென்ன அப்படிச் சொல்வது! உங்களுக்காவது தவக்குறையாவது. மகத்தான ராஜரிஷியின் சீடர்களான உங்களுக்கு என்ன குறை? விவேக! அதென்ன அவ்வாறு நொந்துகொள்வது. உங்களது முகக்குறியும் மாறுபட்டிருக்கின்றதே, அதென்ன? யான் அதனை அறியப்படாதோ?

**விவேகன்** — கருணாகர! எங்களுக்கு உயிர்த்தோழனாகிய நீ அறியப் படாததும் ஒன்று உண்டோ. ஒருபோதும் இராது. விசுவாமித்திர முனிவர்க்குச் சீடராகி, யாவும் நன்மையே யடைந்து வந்தோம். இப்போது சிறிது நாட்களாக ஒருவாறு இன்னல் படுகின்றோம்.

**கருணாகரன்** — ஆ, அப்படியா! அதென்ன?

அகவல்

**விவேகன்** — செஞ்சடை வசிட்டனைத் தீயாய் மறுத்து
வஞ்சினங் கூறிய வார்த்தைகாரணமாய்
நங்குருக் கோசிகர் நவிலரிச் சந்திரற்
கிங்குறத் துயர்பல இழைக்கின் றனரே
இன்று அத்,
தேவதா சப்பெயர்ச் சிறுவன் றன்னையும்
காவலன் காசிமன் காதலன் றன்னையும்
பற்றிய விஷத்தால் படுகொலை செய்கென
உற்றபற் பலவாம் உபாயமும் ஓதி
அனுப்பினர் அவர்தம் ஆணைக் கடங்கித்
துணிப்புறு செய்கையைச் செய்யவுந் துணிந்தோம்
நந்தமா சிரியர் நாடுமிச் செயலெலாம்
சந்திர சூரியர் சரித்திடுங் காறும்

இந்தநாள் வரையில் இனிதுணா ரப்படா
அந்தமில் லாத அநேகபா ஷைகளில்
இந்தநாள் வரையில் இனிதுணா ரப்படா
அந்தமில் லாத அநேகமா னுடரால்
இந்தநாள் வரையில் இனிதுணா ரப்படா
அந்தநாட் டகத்தில் அநந்தநா டகமாய்
நடிக்கவும் படுமால் நம்முருக் கொண்டு
அடிக்கடி பல்லோர் அவணடை குவரே

அக்கா லத்தெலாம் அவ்விடத் திருப்போர்
இக்கா ரியத்தின் இன்னலைப் பேசி
பலபட இழித்துப் பகர்ந்திடும் நிலையில்
நிலைபட நின்றேம் நீணிலத் திடையே.

**கருணாகரன்** — நண்பர்காள்! மானுடர் மேற்கொள்ள வேண்டிய இல்லறம் துறவறம் ஆகிய இரண்டறங்களில் இல்லறமே சிலவாற்றால் சிறப்புடையது. அது எவ்வாறெனின்—

ஓதுபிர மச்சரியம் ஒழிந்தவா னப்பிரத்தம் உயர்சந் நியாசம்
நீதிநிலை பெறுகாரு கபத்தியமா மாச்சிரம நெறிகள் நான்கிற்
கோதிலா மூவர்நெறிப் படர்கொடிக்குக் கொள்கொம்பாங் கொள்கை யாலே
மேதினியில் யாவருக்கும் வியன்காரு கபத்தியமே விசேட மாமால்

என்பர் பெரியோர். அன்றி,

முனமாக வைகறைப் போதெழுந்து சவுசாதி முதன்முடித்து வாசப்
புனலாடிச் சபதபங்கள் முயன்றுகட வுட்பூசை புரிந்து முப்பால்
அனலோம்பி ஐவகைவேள் வியுமியற்றிக் கிளைஞருடன் அடுத்தோர் தம்மைத்
தினமோம்பி நுகர்ந்துகலை பயின்றிருத்தல் இல்லறத்தோர் செய்கை யாமால்

என்னும் விதிப்படி, சற்றும் வழுவாது இல்லறம் நடாத்திய மன்னனுக்கு இத்தகைய இன்னல் விளைப்பது சற்றும் அடாது. இதனில் நீங்கள் ஈடுபடுவது தீவினையைத் தேடிக்கொள்வதேயாகும். நாம் மானிடம் பெற்றதற்கு நல்லாசிரியரை யடுத்து, நல்லொழுக்கம் பயின்று, நற்கதியை நாடுதல் வேண்டும். ஒருவற்கு இளமையே எதனையும் அடைதற்கு ஏற்ற பருவமாம். அதனை தீயவழியில் ஒழிப்பது அறியாமையாகும்.

அகவல்

மண்ணினில் மானுடர் மருவும் வாழ்க்கையாய்
எண்ணிய தாகும் இருங்கடற் பரப்பில்
நல்வினை யாக நாடிய ஓர்அலை
மெல்லவே ஒருகால் மேவிடு மதனை
உருமீன் வரவிற் குற்றவண் நிற்கும்

குருகின் தன்மை குலவிடப் பற்றி
ஏறின் அவ்வலை இகத்திலெந் நாளும்
வீறிய பயனெலா மேவிடச் செயுமால்

இன்றேல்—

தீவினை யலையிற் சிக்கி வறுமையா
மேவிய எக்கரில் விழுந்திடர்ப் பட்டு
வாழ்நா ளெல்லாம் வறிதிற் கழித்து
தாழ்வே யடைவர் சஞ்சலத் தானே

என்றபடி, ஒருவனுக்குற்ற நல்வினை ஒரே காலத்தில் நேரும். அதனை அவன் கைப்பற்றி முயல்வானாயின் தன் வாழ்நாள் முழுவதும் இன்பமடைவன். அந் நல்வினையைக் கைவிட்டுச் சோம்பி யிருப்பானாயின், பின்னர் தன் வாழ்நாள் முழுதும் துன்பமடைந்து துயர முறுவன். ஆதலின், நீங்கள் இவ்வகைய தீய ஒழுக்கத்தைக் கைப்பற்றாது விலகின் நன்மை யடையலாகும். யான் விரித்துரைப்பது எதற்கு, நீங்களே உய்த்துணருங்கள். முனிவர் காத்திருப்பார், செல்கின்றேன், வந்தனம்.

(செல்கின்றான்.)

**சுசீலன்** — விவேக! கருணாகரன் கூறியவற்றை நன்கு உணர்ந்தனையோ. அந்தோ! நாம் எவ்வளவு தீவினைக்கு ஆளாகின்றோம். என்ன செய்வது, முனிவர் கட்டளையை மறுத்துவிட்டு வாளா போய்விடுவோமா?

**விவேகன்** — சுசீல! அவ்வாறு செய்வது சரியன்று. மறுப்பதானால் சொல்லியபோதே மறுத்துவிடல் வேண்டும். மேலும் ஆசிரியர் இட்ட கட்டளையை மறுத்தல் ஒண்ணாது. கட்டளைப்படி செய்துவிடவேண்டும். அதனால் வரும் இன்ப துன்பங்கள் ஆசிரியரையே யடையும் எய்பவன் எய்தால் அம்பென்ன செய்யும். நாம் அம்புகள், எய்பவர் நமது ஆசிரியர். இது எவரும் உணர்ந்தபடியே. ஆனால், நாம் இத்தகைய காரியங்களில் ஈடுபடாதிருத்தல் சிறப்பே. ஒப்புக்கொண்ட பின் என்ன செய்வது. ஆசிரியர் ஆஞ்ஞையை அணுவளவும் அதிக்கிரமித்தால், உடனே பிடிசாபம் எனச் சபித்துவிடுவர். இக் கட்டளையை நிறைவேற்றிப் பின்பு நாம் கருதியபடி இக் காரியங்களுக்கெல்லாம் சற்று ஒதுங்கி நிற்போம்.

**சுசீலன்** — ஆனாற் சரி. இச் செய்கையால் வரும் இன்ப துன்பங்கள் ஆசிரியருக்கே யாவதாயின் நமக்குப் பயமில்லை. நீ முடிவிற் கூறியபடியே இக் காரியத்தைமட்டும் செய்து முடித்துப் பிறகு விலகி நிற்போம், சரி, செல்வோம்.

(செல்கின்றனர்.)



# அங்கம்—IV

## முதற் களம்

**இடம்:** காசி நகரத்துப் பிராமண வீதி.

**காலம்:** காலை.

**பாத்திரங்கள்:** பிராமணப் பிள்ளைகள், தேவதாசன்.

**கிருஷ்ணசாமி** — அடா சேஷா! அவா தாயும் பிள்ளையும் யாரென்னு விசாரிச்செயோ?

**சேஷன்** — விசாரிப்பதென்னடா, அவர்தான் சொன்னாரே.

**கிருஷ்ணசாமி** — யாராம் இவா?

**சேஷன்** — காலகண்டையர் ஆத்திலே வேலைசெய்ய வந்திருக்கிறவாளாம். செவிட்டுப் பொணண்டா நீ. அவர் சொன்னது நோக்கு கேழ்க்கல்லையோ.

**சீனிவாசன்** — இத்தனை யோசனை என்னடா இதற்கு; அந்தப் பயலெதான் கேழ்ப்பமே. இதனாலே பிசகு என்ன?

**சேஷன்** — (தேவதாசனை நோக்கி) அடா, உன் பேர் என்ன?

**தேவதாசன்** — சுவாமீ! என் பெயர் தேவதாசன்.

**சேஷன்** — தேவதாசனா, நன்னாதான் இருக்கு பெயர். நீங்கள் யார்? எங்கிருந்தவா? கொஞ்சம் விவரமா சொல்லு.

**தேவதாசன்** — சுவாமீ! என் தந்தை அயோத்தியாபுரியை யாண்டிருந்த அரிச்சந்திர மகாராஜன்.

**சீனிவாசன்** — அடா டா டா அவாளா இவா? நன்னா யிருக்கு, பிம்மாலே சொல்லு. ஏன் இப்படி வந்தீர்கள்?

**தேவதாசன்** — சுவாமீ! எங்கள் அரசாட்சியை எனது தந்தையார் விசுவாமித்திர முனிவர்க்குத் தானமாக்கினர்.

**கிருஷ்ணசாமி** — அடா சேஷா! முன்னமே சொன்னேனன்னோ; முகத்தெ பார்க்கச்சே தெரியல்லேயா. அடிமைப்பட்டாலும் அரசருடைய முகச்சாயை மாறுமோ!

**சீனிவாசன்** — அது கடக்கட்டுண்டா, ஓரம்மெ குறுக்கே குறுக்கே வார்த்தெ சொல்லவாண்டாம், பாபம் அவன் சங்கதியைக் கேழ்ப்போம். ஒன்னொன்னு கேட்டாலன்னோ அவன் ஸந்தேகமில்லாமே சொல்லுவன்.

**சேஷன்** — "அரசாட்சி போனாலென்ன, நீங்கள் ஏன் இங்கு வரவேணும்?"

**தேவதாசன்** — சுவாமீ! என் தகப்பனார் அந்த முனிவருக்குக் கடன் கொடுக்கவேண்டியிருந்தது. அதைத் தீர்க்கும் பொருட்டு இந்த நகரத்தை யடைந்து, என் தாயும் நானும் ஐயர் வீட்டில் வேலை செய்வதாகச் சம்மதித்து, அவரிடத்தில் தொகையைப் பெற்று, முனிவருக்குக் கொடுத்துக் கடனைத் தீர்த்தோம்.

**கிருஷ்ணசாமி** — அது கடக்கட்டும், ஒன்னுடைய தோப்பனார் முனிவர்க்கு ஏன் கடன்பட்டார்?

**தேவதாசன்** — அது என் தாயாரைக் கேட்டால்தான் நன்றாய்த் தெரியவரும், சுவாமீ.

**சேஷன்** — இருக்கட்டும், ஐயோ பாபம், அரசரா இருந்தவா அடிமைப்பட்டிருக்கிறு; அடா கிருஷ்ணசாமி! இவனை ஜாக்கிரதையா அழைச்சிண்டு போயி, அவா தாயண்டை சேர்க்கவேணும்.

**கிருஷ்ணசாமி** — அவன் தாயார்தான் நம்மிடத்தே சொன்னாளே, நாமும் ஒப்புக்கொண்டமே; அதை நாம் காப்பாத்த வேண்டாமா?

**சேஷன்** — அடா சீனிவாசா, கிருஷ்ணசாமி இங்கிட்டு வாருங்கடா. காடு சமீபிச்சுவிட்டது. அவா அவா வேண்டியதே தேடிக் கட்டிக்கொள்ளுங்கள். அடா கிருஷ்ணசாமி! இந்த பயலே அழைச்சிண்டுபோய் அவனுக்கு வேண்டிய தருப்பெ, சமுத்து இவைகளைக் காட்டு, அவன் சேகரிச்சிண்டு வந்து சேருவன்.

## இரண்டாங் களம்



இடம்: காசியை யடுத்த ஓர் அரணியம்.

காலம்: பிற்பகல்.

பாத்திரங்கள்: தேவதாசன், பிராமணப் பிள்ளைகள், எல்லாம் வல்ல சித்தர்.

**கிருஷ்ணசாமி** — அடா தேவதாசா!

**தேவதாசன்** — சுவாமீ.

**கிருஷ்ணசாமி** — இங்குவா, இதுதான் தருப்பெ. இதைப் போல வேறே புல்லும் முளேச்சிருக்கும்; இதெப் பார் நன்னு.

**தேவதாசன்** — ஆம் சாமி, நன்ருய்ப் பார்த்துக்கொண்டேன்.

**கிருஷ்ணசாமி** — இப்படி சுத்திப் பார்; தருப்பெ யிருக்கும்; அறுத்து கொண்டுவந்து சேர்.

**தேவதாசன்** — சுவாமீ! இன்னும் என்னென்ன வேண்டும்?

**கிருஷ்ணசாமி** — சமுத்து வேணும், மாயிலே வேணும், காரை மின்னே பொண்டை வேணும். அதெல்லாம் நாங்கள் கொஞ்சங் கொஞ்சந் தருகிருேம். நீ சமுத்து பொறுக்கிக்கொள்; இது-தான் அதிகமாய் வேணும்.

**தேவதாசன்** — சுவாமீ! முன்பு சமுத்து பொறுக்கிச் சேர்க்கிறேன். சமுத்துக்கு என்னென்ன விறகுகள் பயன்படும். எதுவா-னுலும் சரிதானே.

**கிருஷ்ணசாமி** — அடடா அப்படி உதவாது; அத்தி, அரசு, ஆல், இத்தி, கருங்காலி, நாயுருவி, முருக்கு, மா, வன்னி ஆகிய இந்த ஒன்பது வகை விறகுகள்தான் உதவும். ஜாக்கிரதை, வேறு சேர்த்தாக்கே குணமில்லே. சமுத்து சேர்த்ததும், அதோ தெரிகிறதே தருப்பெ அதைப் பிடித்து அறுத்துக்-கொள். நான் போய் நேக்கு வேணதை சேர்த்துக்கொண்டு வாறேன். அவாளெல்லாம் முன்னமே போய்விட்டா; தேச கால மாச்சு.

**தேவதாசன்** — அப்படியே செய்கிறேன் சுவாமி. மறந்தாற்போல் என்னே விட்டுப் போய்விடப் போகிறீர்கள்.

**கிருஷ்ணசாமி** — அட பயித்தியமே! அப்படியும் செய்வோமா. அதற்கா இவ்வளவு பிரயாசப்பட்றது.

**தேவதாசன்** — நல்லது சுவாமி, போய்வாருங்கள். (தனியே) நான் சமுத்துச் சேர்க்கிறேன். சமுத்து மிகவும் முக்கியமானது

என்கிறார்கள். அதை அதிகமாய்ச் சேர்க்கவேண்டும்போல் காண்கின்றது. வேறு விறகுகள் சேர்ந்தாலும் பயன்படா-தென்கிறார்கள். வெகு பத்திரமாய்ப் பார்த்துச் சேர்க்க வேண்டும்.

(எல்லாம் வல்ல சித்தர் வருகிறார்.)

**எல்லாம் வல்ல சித்தர்** — பிள்ளாய்! நீ யார்?

**தேவதாசன்** — (வணங்கி) சுவாமீ! அடியேன் ஒரு பிராமணருடைய அடிமைப் பையல்.

**எல்லாம் வல்ல சித்தர்** — ஆ, ஆ, என்ன நயம். என்ன அமைதி: பிள்ளாய்! இப்போது இங்கு என்ன செய்கின்றாய்?

**தேவதாசன்** — சுவாமீ! அடியேன் பிராமணருக்காகச் சமுத்து தேடுகின்றேன்.

**எல்லாம் வல்ல சித்தர்** — இன்னும் என்ன தேடவேண்டும்?

**தேவதாசன்** — சுவாமீ! தருப்பையும் தேடவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — தருப்பையா, பொழுது போகின்றதே; இன்னும் எப்போது தருப்பை அறுப்பது?

**தேவதாசன்** — சுவாமீ! இனிமேல்தான் அறுக்கவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — நீ நல்ல குணவானாக இருக்கின்றாய்; பொழுது போய் தருப்பை யறுக்கக்கூடாது. முன்பு அதனை அறுத்துக்கொள். இப்போது நீ சேகரித்துள்ள சமிதை ஒரு வாரத்திற்குப் போதும். எம்மோடு வருவாய். நாம் வேண்டியமட்டும் தருப்பை அறுத்துத் தருகின்றோம்.

**தேவதாசன்** — சுவாமீ தங்களுக்கேன் அவ்வளவு சிரமம்! தயை செய்து அதைக் காட்டினால், அடியேன் அறுத்துக்கொள்-கின்றேன்.

**எல்லாம் வல்ல சித்தர்** — ஆனால் சரி, இப்படியே வருவாய். இந்த தருப்பை செழிப்பாய் வளர்ந்திருக்கின்றது. அந்த மேட்டின் மேல் ஊன்றிக் காலை வைத்து தருப்பையைப் பற்றி இழு; வேண்டியமட்டும் சேகரித்துக்கொள்.

**தேவதாசன்** — (காலை வைத்து ஊன்றி இழுத்துக்கொண்டே) ஐயை யோ சுவாமீ! காலில் முள் ஏறிவிட்டதே! ஐயையோ! ஆ, அம்மா!

**எல்லாம் வல்ல சித்தர்** — குழந்தாய் அழாதே; இதோ நாம் அதை எடுத்துவிடுகின்றோம். பயப்படாதே. (பரிந்து ஓடிக் காலைப் பற்றிக்கொண்டு) பிள்ளாய் பதறாதே, அழாதே. பக்குவமாய் முள்ளை எடுத்து விடுகின்றோம். (அதிகமாக செருகுகின்றான்.)

**தேவதாசன்** — ஐயையோ உயிர் போய்விடுகிறாப்போல் நோகின்றதே! என்ன செய்வேன்! ஆ, ஆ, அம்மா! இரத்தம் வடிகிறதே!

**எல்லாம் வல்ல சித்தர்** — அழாதே, இரத்தம் நின்றுவிடவும் நோகாமலிருக்கவும் மருந்து இடுகின்றோம். (தன் பையிலிருந்து மருந்தை எடுத்து, முள் தைத்தவிடத்தில் வைத்து விஷமூட்டுகின்றான்) குழந்தாய்! சற்று படுத்துக்கொள். (இடத்திவிட்டு ஓடிப்போகின்றான்.)

**தேவதாசன்** — ஐயையோ மார்பை யடைக்கின்றதே! ஓ ஐயமாரே! என்ன செய்வேன்! உயிர் போகிறதே! ஓ அம்மா! அம்மா! ஆ, ஆ, ஆ, ஆ.—

**சேஷன்** — அடா கிருஷ்ணசாமி! என்னடா அது அழுகுரல் கேட்கிறது! அந்தப் பயல் எங்கடா?

**கிருஷ்ணசாமி** — இங்கிருந்தானே இப்போ, காணேமே; அடா தேவதாசா, தேவதாசா, அடா தேவதாசா! சேஷா, காணேமே அவனை.

**சேஷன்** — அடா சீனிவாசா! அந்தப் பயல் இருக்கிறானோ அங்கே?

**சீனிவாசன்** — அவன் இங்கில்லையே.

**சேஷன்** — ஐயோ, பாருங்கடா, அவன் குரல்போலிருக்கு.

**கிருஷ்ணசாமி** — அடா சேஷா! ஐயையோ, ஐயையோ! இதோ விழுந்து கிடக்கிறாண்டா! ஐயையோ ஓடி வாங்களடா! வாயில் நுரைக்கிறதே. மூச்சு பேச்சு ஒன்னுங் காணலெயே.

(கூச்சலிட்டு ஓடி ஒன்று சேர்கின்றனர்; புரட்டிப் பார்க்கிறார்கள். ஒன்றும் அசையவில்லை.)

**சேஷன்**—என்னடா கிருஷ்ணசாமி! அவனை ஏண்டா அப்புறத்தே விட்டா?

**கிருஷ்ணசாமி** — இப்போதான் அப்படி போனான்; இதற்குள் இந்த கதிவரும் என்னு யாருக்குடா தெரியும்!

**சேஷன்** — என்னடா சம்பவிச்சிருக்கும்.

**கிருஷ்ணசாமி** — (இவர்களது இரைச்சலைக் கேட்டு பாம்பொன்று புதரிலிருந்து புற்றில் நுழைகின்றது) அடா சேஷா! பார்த்தையோ! பார்த்தையோ சர்ப்பத்தை! புத்துக்குள் நுழையறது. இது தாண்டா தீண்டியிருக்கும்! ஆகா, நல்ல விடைப் பாம்பு; படத்தெ பார்த்தாயோ! விஷம் தலைக்கு ஏறிவிட்டது. கண்ணும் நீலம் பூத்துவிட்டது. இனி பிரயோசனமில்லை. போய் அவா தாய்க்குச் சொல்வோம்; போதும் போரது.

**சேஷன்** — ஒங்களுக்கு என்னடா, அவள் என்னிடத்தி லன்ஞே ஒப்பிச்சா. என்னெ கேட்டாக்கே நான் என்னடா சொல்றது! ஐயோ பாபம், இந்த சங்கதி கேட்டாக்கே, அவள் உயிர் விட்டுவிடுவாள் போலிருக்கே. அவன் கதி அதுவாஞக்கே நாம் என்னடா செய்றது. போவோம் வாருங்கள்.

**கிருஷ்ணசாமி** — ஐயோ பாபம், அவள் அப்பொழுதே அஞ்சிஞள் அனுப்புவதற்கு. அச்சம் அபாயமாகவே முடிந்தூட்டது. ஏக புத்ரன்போ லிருக்கு; என்ன காலம்! என்ன தோஷம்! ஒரு க்ஷணப்போதில் ஆபத்து வந்துவிட்டதே.

**சீனிவாசன்** — அடா கிருஷ்ணசாமி! நமக்கும் இப்படித்தானே வரும்? அவாளவாளுக்கு பிரம்மா எவ்வளவு காலம் அளந்து போட்டாஞே, அவ்வளவு காலந்தானே ஜீவித்திருக்கலாம்.

**சேஷன்** — இந்த வாசாஞானம் அசலாருக்கு கஷ்டம் நேர்ந்தாக்கே நமக்கு உண்டாரது. அந்த கஷ்டம் நமக்கே உண்டாஞக்கே, நமக்கும் துக்கமாகதானே இருக்கும். ஐயோ, பாபம்! அவன் தாயார் என்னென்ன எண்ணுவள். இந்த சங்கதியெ எப்படி வாயெ திறந்து வார்த்தெ சொல்ரது.

**கிருஷ்ணசாமி** — நாம் என்னடா செய்யலாம் அதற்கு. சம்பவிச்சதெ சொல்லியன்ஞே ஆகணும். நாம் போனதே கேட்பள். நடந்ததை சவிஸ்தாரமா சொல்லிப்போடுவோம். அழுதா என்ன, அடித்துக்கொண்டா என்ன; ஒன்னும் பிரயோசனமில்லெ. போவோம் வாருங்கள், அஸ்தமான மாறது. இன்னும் சந்தியாவந்தனமும் ஆகல்லெடா. எங்க ஐயா கோபிச்சுக்குவர்.

(போகின்றார்கள்.)

## மூன்றாங் களம்



**இடம்:** காலகண்டையர் வீடும், வீதியும்.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** காலகண்டன், காலகண்டி, சந்திரமதி, பிராமணப் பிள்ளைகள்.

[சந்திரமதி வேலை செய்துகொண்டே எண்ணமிடுகின்றாள்.]

**சந்திரமதி** — (தனியே) ஆ தெய்வமே! என்ன சோதனை எங்களுக்கு! சிறுவன் என்ன செய்வான். வீட்டிலுள்ள அறையிற் புகவும் அஞ்சியோடுவான்; காட்டிலுள்ள சிறைகளில் எவ்வாறு செல்லுவான். எட்டு வயது இன்னமும் நிரம்ப

வில்லையே. அவன் என்னென்று தேடுவான். தருப்பை, மாவிலை, சமிதை முதலிய பொருள்களை இன்னவென அவன் அறியானே. சேர்ந்து சென்ற பிராமணப்பிள்ளைகள் இவைகளைக் காட்டிச் சேகரித்துக் கொடுப்பரோ! அவ்வளவும் செய்யமாட்டார்களா. நாமும் சொல்லியிருக்கின்றேமே. காசிநாதா! என் அருமைப் புதல்வன் சுகமே வந்து வீடு சேர அருள்புரியவேண்டும்.

**காலகண்டி** — அடி சந்தீ! என்னடி செய்ரா? வேலெயெல்லாம் சேஞ்சாச்சோ? ஓரம்மெ கழப்பிண்டு கடக்கிறயே. முட்டை தட்டியாச்சோ? செடிகளுக்கு ஜலங் கொட்டியாச்சோ? போது போரதே. ஒதயம் மொதல் அஸ்தமானம் வரையிலே என்ன செய்தாப்போலெ? அந்த பயெ போனது மொதல் ஒருவாக்கே இருக்கிறயே, அதென்ன.

**சந்திரமதி** — அம்மணீ! முட்டை தட்டியாயிற்று. செடிகளுக்குத் தண்ணீர் வார்க்கின்றேன். இன்னும் இரண்டே செடிகள் இருக்கின்றன அம்மணி. சீக்கிரத்தில் ஊற்றி விடுகின்றேன்.

**காலகண்டி** — அது கடக்கட்டும், வீதிக்கி போறதும் வாரதுமா இருக்கிறயே அதென்ன?

**சந்திரமதி** — அம்மணீ! குழந்தை வருகின்றானோ என்று அறியும்படி போய்ப் பார்த்தேன்; மற்றொன்றுமில்லை யம்மணீ.

**காலகண்டி** — வாரவனுக்கு வழி தெரியாதோ. போனவா வரும் போதன்னே கூட வருவன். நீ வேலெயெ விட்டு விட்டு அடிக்கடி முத்தத்திலே ஏன் போற?

**சந்திரமதி** — அம்மணீ! பொழுது சாய்ந்து அந்திநேரமாகின்றது. போனவர் இன்னும் வரக்காணோம். இருளினால் குழந்தை பயந்து நடுங்குவான். அம்மணீ! தாங்கள் தயவு செய்து ஒரு அரை நாழிகை மன்னித்துக்கொண்டால் இவ்வீதியின் கோடிவரையில் போய்ப் பார்த்துவருகின்றேன்.

**காலகண்டி** — அதென்னமோ, புதுமையா யிருக்கு. இதெல்லா நேக்குத் தெரியாது. நீயுண்டு, உங்களை வாங்கிவந்த பிராமணர் உண்டு. போது போச்சு, முத்தத்திலே ஜலந்தெளிக்க வேணும், கோலமிடவேணும்.

**சந்திரமதி** — அம்மணி! அந்த வேலைகளைச் செய்துவிட்டே போகின்றேன். அதற்குத்தான் தங்கள் உத்தரவை வேண்டுகின்றேன்.

**காலகண்டி** — அந்த வேலெகளெ செய்துபோட்டு ஓரம்மெதானே குந்திண்டு இருக்கப்போற. பிம்மாலே போய் பாரோ

வேணுமானுக்கே. அத்தெனை போதுக்கெல்லாம் அவன் வந்துவிடமாட்டானே?

**சந்திரமதி** — வந்துவிட்டால் போகவில்லையம்மணீ. வராவிட்டால் மாத்திரம் போக விடை தரவேண்டும்.

**காலகண்டி** — அப்படித்தான் சேஞ்சுக்கோடி. பிடை, என்னேரமும் ரச்சையாபோச்சு.

**சந்திரமதி** — (வேலை செய்துகொண்டே) ஐயோ இன்னும் குழந்தையைக் காணேமே. மரத்தின் மேலேறித் தவறி விழுந்தானே! துட்ட மிருகங்களைக் கண்டு பயந்து விழுந்துவிட்டானே! குளம் குட்டைகளில் கால் இடறி விழுந்துவிட்டானே! ஏதேனும் விஷப்பூச்சி தீண்டிற்றே! ஒன்றுந் தெரியவில்லையே! கூட்டிச் சென்ற பிராமணப் பிள்ளைகளும் வரக் காணேமே. ஏதேனும் துன்பம் நேர்ந்தால் எவரேனும் ஓடி வந்து சொல்லியிருக்கமாட்டாரா. ஒருகால் சுமையைத் தூக்கமாட்டாமல் வழியில் இறக்கி இறக்கி வைத்து வருந்திக்கொண்டிருக்கின்றனே! இந்த வேலைகளை விரைவில் முடித்துவிட்டால், எதிரில் சென்று தலைச்சுமையைச் சற்று தாங்கிக்கொள்ளலாம். (காலகண்டியை யணுகி) அம்மணீ! வேலைகளை முடித்துவிட்டேன், போய் சீக்கிரத்தில் வந்துவிடுகின்றேன்.

**காலகண்டி** — அடீ சந்தி! இப்போது மாத்ரம் இத்தனை சீக்கிரமா செய்துபோட்டாயே, மகனைத் தேடிண்டு போரத்துக்குத்தானே.

**சந்திரமதி** — அம்மணீ! ஒருபோதும் வஞ்சகமாய் வேலைசெய்ய மாட்டேன். மனம் தடுமாறுகின்றது, உத்தரவளித்தால் சீக்கிரத்தில் போய்வருகின்றேன்.

**காலகண்டி** — போடீ போ, சீக்கிரம் வா. வேலைகள் விழுந்துகிடக்கிறது.

**சந்திரமதி** — வந்துவிடுகிறேன்; அம்மணி! எனக்கென்ன அங்கே வேலை. (போகின்றாள், தனியே) விளக்கு வைக்கும் சமயமும் ஆகிவிட்டதே, இன்னும் காணேமே. அதோ தெருக்கோடியில் யாரோ பிள்ளைகள் வருகின்றார்கள். தலையில் இலை முதலியவைகளையும் தூக்கிக்கொண்டு வருகின்றார்கள். இவர்களோடுதானே நமது செல்வனும் வருவான். விரைந்து போவோம். (விரைந்து போய் அசலாத்துப் பிள்ளைகளைக் கண்டு) சுவாமீ! என் குமாரன் எங்கே? ஐயோ, உங்களோடு காணேமே!

**சேஷன்** — நாங்கள் என்ன சொல்ரது.

**சந்திரமதி** — ஐயா! என்ன நேர்ந்தது? ஐயோ மகனே! என்ன செய்வேன். சுவாமி என்ன சங்கதி? சற்று சொல்லுங்கள்.

**கிருஷ்ணசாமி** — அம்மா! அழாமெ கேளும் சொல்ரதெ. நாங்கள் காட்டுக்குப் போனோம். உன் குமாரனும் எங்களோடே இருந்தான். பிம்மாலே சமுத்து பொறுக்கச் சொன்னோம். பொறுக்கிண்டு இருந்தான். செத்தநாழிக்கெல்லாம் அபாயகரமான ஒரு இரைச்செ கேட்டது. ஓடிப் பார்த்தோம். தரையிலே விழுந்து கிடந்தான் உன் மகன். அங்கு மிங்கும் சுத்திப் பார்த்தோம். அவன் கிட்டக்கே ஒரு நாக சர்ப்பம் புத்தில் நுழைந்தது. உடனே புரட்டிப் பார்த்தோம். விஷம் தலைக்கி ஏறிண்டது. பிராணன் போய்விட்டது. என்ன செய்வது. துஷ்ட மிருகங்கள் தொட்டிழுக்காமே தழைகளை ஒடிச்சுபோட்டு மூடிவிட்டு வந்தோம்.

**சந்திரமதி** — ஐயோ ஐயோ, மகனே மகனே! இனி என்ன செய்வேண்டா (விழுகின்றாள். எழுந்து மார்பகத்தில் அறைந்து கொண்டு) அடா என் கண்ணே! கண்மணீ! இனி நான் இந்த மண்ணிலிருந்து என்ன பலன். ஐயையோ, அழுவாரற்று அநாத பிணமாகக் கிடக்குமே. அடா என் செல்வமே, (முகத்தைக் கையால் மூடி யழுதுகொண்டு) சுவாமி! என் மகன் எந்த இடத்தில் இறந்து கிடக்கின்றான்? சற்று தயை செய்து சொன்னால் போய் பார்த்து எடுத்து அடக்கஞ் செய்வேன். ஐயோ, ஐயோ, மகனே இந்தக் கதியைக் காணவா நான் பெண் ஜனன மெடுத்தேன்! ஐயோ என் பிராணநாதரும் இல்லையே! திக்கற்ற பிணமாகிவிட்டதே!

**சேஷன்** — அம்மா, அழுதாக்கே என்ன பிரயோசனம். ஒன்னு மில்லெ. இனி நடக்கவேண்டியதே பார்க்கவேணும். இந்த வழியே நெடுக போனாக்கே, நாலு நாழி தூரத்திலே ஒரு பிரம்மாண்டமான ஆலமர மிருக்கு. அந்த இடத்தண்டே தான் கிடக்கிறது பிணம். இன்னும் நாங்களும் போய் ஸ்நானம் பண்ணவேணும். போது போனாக்கே, பிணத்தெ நரி வந்து இழுத்திண்டு போகும். சீக்கிரம் போய் பார்த்து அடக்கம் செய்.

**சீனிவாசன்** — அவன் விதி அவ்வளவு, இல்லாவிட்டாக்கே சமுத்து மாத்திரம் பொறுக்கடா, தருப்பை முதலானதுகளை நாங்கள் தருகிறோம் என்னாக்கே, அவனே தருப்பை கொய்யப் போவானோ. அவனுடைய விதி அப்படி யிருந்தது, என்ன செய்யலாம். போம்மா, சீக்கிரம் போய் பார்.

**சந்திரமதி** — ஐயோ! நான் பாவி போகப்படாதா, என் விதியே, என்ன செய்வேன்.

(அழுதுகொண்டே போய் வீட்டில் நுழைகின்றாள்.)

**காலகண்டி** — அடீ சந்தி, நீ போய் எத்தனெ நேரமாச்சு? என்னடி செய்தா இத்தேசகாலம்?

**சந்திரமதி** — அம்மணீ! அ ஆ, அம்மணீ! ஆ, அம்மணீ!

**காலகண்டி** — என்னடி, என்னடி, என்னடி சங்கதி? என்னடி நேர்ந்தது?

**சந்திரமதி** — அம்மணீ, என்ன சொல்வேன்!

**காலகண்டி** — ஒன்னுஞ் சொல்லாமெ, என்ன சொல்வேனென்னு, என்னடி தெரியாது, குட்டிச் சுவராயிருக்கெ.

**சந்திரமதி** — அம்மணீ, என் மகன்—

**காலகண்டி** — என்னடி அவனுக்கு? போது போனுலென்ன. காட்டுக்குப் போனவன் வரான்.

**சந்திரமதி** — எங்கே வருவான். அம்மணீ! என் மகன் பாம்பு கடித்துக் காட்டில் இறந்துவிட்டானும், அம்மணீ என்ன செய்வேன்.

(விழுகின்றாள், அழுகின்றாள்.)

**காலகண்டி** — அடப்பாபி, மோசஞ் செய்துவிட்டானே, அம்மா. வயத்தெ பத்திண்டு எரியறதே, போட்ட பொன்னெல்லா தண்டமாச்சே, இனி என்ன கடக்கு, அந்தப் பட்டுகெடப்பாO பிராமணனுக்கு வேணும். அவன் குடுமியறுக்க, நாO வாயெ கட்டி, வயத்தே கட்டி, சாணி வித்து, முட்டெ வித்து, மோர் வித்து சேர்த்ததெ எல்லாம் கொட்டிக் கொடுத்து, கொண்டு வந்தாச்சு. இப்போ அத்தனைக்கும் நஷ்டம் வந்தாச்சு. அந்த பிராமணனுக்குச் சொல்லுவோம். பிராமணு, பிராமணு, பிராமணு இப்படி வாருமே, இப்படி வாருமே.

(காலகண்டன் வருகிறான்.)

**காலகண்டன்** — (ஓடி வருகிறான்) ஏண்டி அப்படி கத்திரா? என்னடி முழுகிப்போச்சு.

**காலகண்டி** — எல்லாந்தான் முழுகிப் போச்சே இன்னும் என்ன கடக்கிறது.

**காலகண்டன்** — என்னடி முழுகிப் போச்சு குட்டிச் சுவரே, இன்னதென்னு வார்த்தெ சொல்லண்டி.

**காலகண்டி** — இந்த கொள்ளேயெ கேளும், எனக்கு வயத்தெ பத்திண்டு எரியாது, நீர் சேச அனியாயத்தெ பாரும்.

**காலகண்டன்** — சந்தீ, சந்தீ, அடி சந்தி!

**சந்திரமதி** — சுவாமீ இ இ இ இ.

**காலகண்டன்** — ஏண்டி அழரா? என்னடி சங்கதி? சேஷி அடிச்சாளோ, வைதாளோ?

**சந்திரமதி** — சுவாமி! அதெல்லாம் ஒன்றுமில்லே, என் மகனே சுவாமி இ இ இ.

**காலகண்டன்** — என்னடி உன் மகனுக்கு, போனவன் வருகிறுன். மற்றவா வரும்போதுதானே வரவேணும்.

**சந்திரமதி** — சுவாமி! அவர்கள் வந்துவிட்டார்கள். என் புத்திரன் பாம்பு கடித்து இறந்து கிடக்கின்றுனுமே ஏ, ஏ ஏ. ஐயோ, ஐயையோ, என்ன செய்வேன் காசிநாதா!

**காலகண்டன்** — அப்படியா, அப்படியா போச்சு, போச்சுதா நான் கொட்டிக் கொடுத்த பொன்னெல்லாம். அடி சந்தீ! நீ ஏன் வருத்தப் படரா? நாங்களன்னோ அழணும், வருத்தப் படவேணும். எங்களுக்கன்னோ நஷ்டம். எங்களுடைய பொருளன்னோ போச்சு வீணு. நோக்கென்ன நீ ஏன் அழரா? ஐயையோ என்ன நஷ்டம்! அந்த பயல் இருந்ததனுலன்னோ அவ்வளவு தொகை கொட்டிக் கொடுத்தது.

**சந்திரமதி** — சுவாமீ! அம்மணீ! என் குமாரன் இறந்து திக்கற்ற பிணமாகக் கிடக்கின்றுன். அவன் இறந்து விட்டதனுல் தங்கள் பொருளுக்கு நஷ்டம் வந்ததாக எண்ணவேண்டாம். எனது எலும்பு நோக உழைக்கப் பின்னிடமாட்டேன். சுவாமீ! அம்மணீ! தங்கள் பாதங்களில் நமஸ்கரிக்கின்றேன்.

**காலகண்டன்** — அடி சந்தீ! இப்போது என்னடி செய்யவேணுமென்கிறு?

**சந்திரமதி** — சுவாமீ! என் அருமைப் புதல்வன் அகதியான பிணமாகக் கிடக்கின்றுன். தயவு செய்து உத்தரவளித்தால், போய் தேடி எடுத்து, அடக்கஞ் செய்து வருகின்றேன், சுவாமி.

**காலகண்டன்** — அடாடா, நன்னுயிருக்கே, நன்னுயிருக்கே நாயம், அடிமைப்பட்ட அன்னேக்கே உன் புத்திரன் என்பது போச்சு. அவன் இறந்துவிட்டாக்கே எங்களுக்கன்னோ அந்த நஷ்டம். 'செத்தவன் தலே வடக்கே யிருந்தா லென்ன, தெற்கே இருந்தா லென்ன' என்னு சொல்லுவா வார்த்தெ, போனவன் போனுன், இருக்கிறவா செம்மையா இருக்கவேணும். இத்

தனை காலத்துக்கெல்லாம் எந்த நரியோ, நாயோ இழுத்திண்டு போயிருக்கும். நீ என்னத்துக்காக போவது, வீண் பேச்சு. இந்த அர்த்த ராத்திரியிலே காட்டிலே போனுக்கே உன்னை ஏதேனும் கொன்னுபோட்டா எங்கள் பொன்னுக்கு என்ன வழி? கூடாது, அடி யெடுத்தும் அப்புறம் வைக்கப்படாது. போ, போ, போய் வேலையே செய்திண்டிரு.

**காலகண்டி** — நீர் பயித்தியக்கார பிராமண ரன்னோ, அது அப்படி யன்னு, இதிலே ஏதோ சமுசய மிருக்குன்னு.

**காலகண்டன்** — ஊதென்னடி அது? நேக்குத் தோனவில்லையே.

**காலகண்டி** — அந்த பயலை அங்கெங்கேயோ மறைஞ்சிண்டு இருக்க சொல்லிப்போட்டு இவளும், போய்விடப் பார்க்கிருப்போல காண்றது.

**காலகண்டன்** — ஓகோ, ஆமாண்டி, இருக்கலாம். நன்னு சொன்னடி யுக்தி. ஏண்டி சந்தி. அப்படித்தானோ?

**சந்திரமதி** — சுவாமீ! தாங்கள் இவ்வாறு நினைக்க யான் என்ன பாவம் செய்தேனோ அறியேன். இப்படியும் ஒருவர் வஞ்சிக்க எண்ணங் கொள்வார்களா! உடன் சென்ற பிராமணப் பிள்ளைக ளன்றோ இதனைக் கூறினார்கள். வேண்டுமானால் விசாரித்துப் பாருங்கள். இதின்பொருட்டு இம்மைக்கும் மறுமைக்கும் ஆதரவான என் அருமை மைந்தன் இறந்துவிட்டானென்று சொல்லவும் எனது நாவெழுமா. சுவாமீ தயவு செய்து அநுமதி யளித்தால், போய் இந்த இரவிலேயே அடக்கஞ் செய்துவிட்டு, கூடிய சீக்கிரத்தில் திரும்பி வந்து, தங்கள் பணிவிடைகளைத் தடையின்றிச் செய்கின்றேன், சுவாமி!

**காலகண்டன்** — அடீ கேட்டியோடி? அவள் சொன்னதெ.

**காலகண்டி** — கேட்டேன், திருடினவா திருடினே னென்பாளோ? செய்தவா செய்தேன் என்பாளோ? நீர்தான் கேளும், நான் போறேன்.

**காலகண்டன்** — அடி, என்னடீ போய்விட்டா. (பின்னே போகின்றான். ரகசியமாய்ப் பேசிக்கொள்கின்றனர்.) இதுதான் சமயம். நமது கக்ஷி ஜயிக்கும். இப்போது ஏதேனும் தந்திரம் செய்து ஒருவகையால் ஒரு சிறு பொய்யாவது வருவிக்க வேண்டும்.

**காலகண்டி** — ஐயோ, பெண்பாவம் பெண்தோஷம் என்பார்கள். இந்தத் துக்கத்தில் ஏன்ன செய்து பொய் வருவிப்பது.

**காலகண்டன்** — இந்த துக்கத்தில்தான் எவ்வளவும் பொய் புரட்டுகளைச் சொல்லத் துணிவாள். இப்போது அருமை மகன் அருமை மகன் என்று அழுகிறுளே. அதென்ன அருமை யென்று கேட்டு அதை ஆதியோடந்தமாய் ஒன்றும் விடாமல் சொல்லும்படி கேள். போகும் நோக்கத்திஞல் விஷயங்களை ஒன்று இரண்டாகச் சுருக்கிச் சொல்லிவிடுவாள். விவரமாய்க் கேட்டதற்கு அப்படியே சொல்லுவதாய் ஒப்புக்கொண்டு சுருக்கமாய்ச் சொல்லுவதும் ஒருவகையில் பொய் தானே. அதுவே போதும். நாம் வென்றதாகக் கொடி பிடித்துவிடலாம். இதுவே நல்ல யோசனை, போய் பக்குவமாய்க் கேள்.

(திரும்பி வருகிறுன்.)

**காலகண்டி** — *சந்தீ, அது கடக்கட்டும், அந்த அடிமைப்பட்ட பயலுக்கு நீயேன் அத்தெனெ அவஸ்தெ படுகிறு?*

**சந்திரமதி** — *அம்மணீ! அவன் அடிமைப்பட்டவனுயினும், எனது புத்திரன் என்னும் உரிமை என்னைவிட்டு எவ்வாறு அகலும். அம்மைந்தனைப் பெற யாங்கள் செய்த தவமும், பட்ட கஷ்டமும் எவ்வாறு மனத்தைவிட்டு நீங்கும். 'ஐயோ, அம்மணீ! 'புத்திர சோகம் நிரந்தரம்' என்பது தாங்கள் அறியாததல்லவே.*

**காலகண்டி** — *அடி சந்தீ! அந்தப் பயலெ அருந்தவப் புதல்வன் என்னு சொன்னியே, புதல்வனுக்குத் தவமென்ன, தானமென்ன? கஷ்டமென்ன, நஷ்டமென்ன? புதுமையாவன்னே இருக்கு. எதோ, செத்தெ அதையெல்லாம் ஆதியோடந்தமா ஒன்னும் விடாமெ சொல்லு கேட்போம். உன் அருமையும் பெருமையும் சவிஸ்தாரமா சொன்னுத்தானே தெரியும். சொல்லிவிட்டு வேணுமானு போபோம.*

**சந்திரமதி** —

அகவல்

*மந்திர வேதியர் வாழ்கன் ஞேசிச்*
*சந்திர தயன்புரி தவத்தினில் தோன்றி*
*சீர்மிகும் அயோத்திச் செல்வமன் னவரை*
*பேர்மிகும் மணத்தில் பெட்புடன் வரித்து*
*மலரும் மணமும் மணியும் ஒளியும்*
*விலகா வாறே விரும்பிவாழ் நாளில்*
*புத்திரப் பேறு பொருந்தா மையினல்*
*சத்தியப் புலவோர் சாற்றிய வாறே*
*கண்ணில் லாத காயமும் மதிசால்*
*அண்ணல் மந்திரி யில்லா வாசும்*

மெய்ப்புல வோர்கள் மேவாச் சபையும்
ஒப்பும் அருளிலா வுள்ளமும் போல
மக்களில் லாத மனையும் பாழென
மிக்கவும் வருந்தி விதிமுறை யாக
அன்ன தானமும் அரும்கோ தானமும்
சொன்ன தானமும் சொல்பல தானமும்
வத்திர தானமும் வந்தவர்க் களித்து
சத்திரம் சோலை தடாக மமைத்து
இன்னும் பலவா யியன்றநல் லறங்கள்
மன்னும் படிக்கு மகிழ்வுடன் புரிந்தும்
ஒருபொழு துணவோ டுறங்கியும் நிலத்தில்
இருகையும் முதுகில் இணைத்துக் கட்டித்
தரையில் உணவைத் தாவியே யுண்டும்
விரைவில் வேள்வி விருப்புட னாற்றியும்
அவற்றின் பயனாய் அரியஇம் மகவை
வயிறு வாய்க்கப் பெற்றனன் மகிழ்ந்தே

அதன் பின்—

மெச்சியே யென்றும் விருப்புட னருந்தும்
இச்சையாம் உணவில் இட்டமும் ஒழிய
விருப்புறும் பொருள்மேல் வெறுப்புண் டாக
வெறுப்புறும் பொருள்மேல் விருப்புண் டாக
தரைக்கண் படுத்துத் தலையெடா நிலையை
உரைப்பன் தயவாய் உவப்புடன் கேளும்
முதல்மா தத்தில் முதிர்ந்தது தேகம்
அதனால் சிறிதே அசதிதோன் றியது
இரண்டா மாதம் எழிலெலாம் குன்றப்
பறந்த சோகத்தால் பட்டேன் பலநாள்
மூன்றா மாதம் முகமும் வெளுத்து
சான்றநற் புளிப்பில் சார்ந்ததென் மனமும்
நான்கா மாதம் நலிந்த மசக்கையால்
மாங்காய் முதலிய வாய்கொள விரும்பி
தலை தூக்கிடவும் சாத்திய மின்றி
நிலையாய் வாந்தியும் நேர்ந்திடக் கண்டேன்
ஐந்தா மாதம் அங்கம் முழுவதும்
விந்தையாய்ப் பொன்போல் விளங்கிடக் கண்டேன்
ஆறா மாதம் அரோக முற்றிடவே

கூறுநன் மூலிகை கொண்டேன் முறையாய்
ஏழா மாதம் என்தாய் வீட்டார்
தாழா தன்புடன் தாங்கு மாமன்மார்
பூமுடிப் போமெனப் புகன்று தம்முடன்
பூவும் பழமும் புளிமுதற் சுவைகள்

கலந்த அன்னமும் கனிவுடன் கொணர்ந்தே
மலர்ந்த முகத்தொடும் வழங்கிய பின்பு
ஆடை அணிகளால் அலங்கரித் தன்று
கூட விருந்து குலவி மகிழ்ந்தனர்
எட்டா மாதம் இயைந்த சீமந்தம்

திட்டமாய்ச் செய்யத் திகழ்பந்த ரிட்டு
வாத்திய வோசை மங்களம் காட்ட
பாத்திய முள்ளோர் பலருடன் வந்து
முதுகுநீர் குத்தி முன்னிய மாதர்
விதமாய் மற்ற விழவும் செய்தனர்

ஒன்பதா மாதம் உற்றதோர் கொடிதாந்
துன்பமோ சொல்லித் தொலையா தம்ம
இருக்கவும் எழவும் இடம்பெயர்ந் திடவும்
பெருத்த தேகத்தால் பெரிதும் வாடினேன்
பத்தா மாதம் பயந்ததென் மனமும்

இத்தா ரணியோர் இரண்டாம் பிறப்பிது
என்றே கூறும் இயல்பினை யுணர்ந்து
அந்தோ மிகவும் அச்சமே யடைந்து
வருந்தி முந்நூறு வந்தநாள் தன்னில்
பொருந்த வீன்றனன் புண்ணியப் புதல்வனை

பின்னரும் அந்தப் பிள்ளையை யணுகி
என்னருங் கண்போல் ஈயெறும் பணுகா
தெந்தக் கணமும் இமையாது பார்த்து
வந்த வதன்நோய் வாய்த்த என்னையாய்
எண்ணி யதற்கு ஏற்றநன் மருந்தை

நண்ணிய விருப்புடன் நானருந் தினனே
பின்புஎங் குலகுரு வசிட்டப் பெரியோர்
அன்புடன் போந்தே ஆசீர் வதித்துத்
தேவதாசப் பெயர் திகழ வழைத்தனர்
ஆவலா யதையே யாமும் கொண்டோம்

இந்நாள் மட்டும் என்னை யகன்றிலான்
சின்னஞ் சிறியன் தீவினை வசத்தால்

அரணியஞ் சென்றே அரவின்வாய்ப் பட்டு
மரண மடைந்த மைந்தனை யடக்கஞ்
செய்து வரவே சித்த மிரங்கி
எய்திட விடையெனக் கீந்தருள் வீரே.

**காலகண்டி** — அப்படியா அது ஆனுக்கே சரி, நீ நாலு கொடஞ் சலந்தூக்கி அந்த தொட்டியிலே கொட்டிவிட்டு போ, கன்னுக்குட்டி அர்த்த ராத்திரியில் அலையபோரது.

**சந்திரமதி** — அப்படியே செய்து விட்டுப் போகின்றே னம்மா.

(போகிறாள்.)

(காலகண்டனும் காலகண்டியும் பேசிக்கொள்கின்றனர்.)

**காலகண்டி** — ஐயா, பாபம் என்ன சோதனை யிது. அவள் தண்ணீர் எடுத்தல் முதலிய காரியங்களைச் செய்கையில் என் மனம் பதறுகின்றது. "குன்றத்தனை இருநிதியைப் படைத்தோர் அன்றைப்பகலே அழியினும் அழிவர்" என்பதே போல் அவளைச் சில நாட்களுக்குமுன் அரசியாகப் பார்த்த நாமே இப்போது அடிமையாகப் பார்க்கின்றோம். அப்படியிருந்தும் இப்படியும் அவளை வருத்தலாகுமா, புத்திரனைப் பெறுவதால் உண்டாகும் அருமைகளை ஆதியோடந்தமாய்க் கேட்டும் அவள் இப்படிப்பட்ட துக்கத்தில் சற்றும் பிசகாமல் பின்னிடாமல் எள்ளளவும் விடாமல் சொல்லி வந்தாளே, ஐயோ, அதைக் கேட்டால் கல்லான நெஞ்சமும் கரைந்து உருகுமே, என்ன துக்கம். மனிதரால் சகிக்கக் கூடியதா, இனி இதனினும் என்ன சோதனை வேண்டும். முனிவர் மொழி முன்னுக்கு வருவதாகத் தோற்றவில்லை. அவர் ஒரு புறமிருக்கட்டும், நீங்கள் எல்லோரும் வசிஷ்ட முனிவர் சிஷியர்களோடு வாதிட்டு வந்தீர்களே உங்கள் சபதந்தான் என்னுவது. "தம் பொருளென்ப தம் மக்கள்" என்று பெரியோர் கூறுவார். அத்தகை புத்திரன் போனபோதும் உறுதிநிலை சற்றும் மாறவில்லையே, ஐயோ நான் பெண்ணுகப் பிறந்தும் கன்னெஞ்சங்கொண்டு கண்டவாறெல்லாம் பேசிவிட்டேன். எனக்குத்தான் என்ன கதி கிடைக்கும், எல்லாம் இந்த முனிவரால்தானே, நன்மையை நாடிவந்து துன்மையையா தேடிக்கொள்வது!

**காலகண்டன்** — அப்படியல்ல, நீ எண்ணுவது சரிதான். மேலோர் தம்மையும் வினையிழுத்தலைக்கும் என்பது பிசகுமா? நாமோ காரியத்திற் பிரவேசித்து விட்டோம். இனி மனச்சோர்வு படலாகாது. இப்போதுதான் அவர்கள் என்ன தப்பித்துக் கொண்டாற்போல். இதுதான் சமயம் அவளைப் பொய்-

பேசச் செய்வதற்கு. ஒரே தந்திரம் காரியம் சித்தியாய் விடுகின்றது பார்.

**காலகண்டி** — நீர் இப்படித்தான் சொல்கின்றீர் எதற்கும். எத்தனை சோதனைகள் ஆயின. அப்போதெல்லாம் இப்படித் தானே சொன்னீர். போகட்டும் அவள் வருகிற சமய மாயிற்று சீக்கிரம் சொல்லும் உம்முடைய யுக்தியை.

**காலகண்டன்** — போவதற்கு என்னைக் கேட்பாள். நான் சில வேலைகள் சொல்லி அவற்றைச் செய்த பிறகு 'போ என்கின்றேன். செய்துவிட்டுப் போகின்றேன் என்பாள். நான் மறைந்துவிடுகின்றேன். உடனே நீ போய் இதவார்த்தை சொல்லி, நீ போய்விடு. அவர் கேட்டால் செய்தாயிற்று என்று சொல்லி விடுகின்றேன், என்று கூறு. அதற்கு அவள் உடனே உடன்பட்டுப் போய்விடுவாள். சமயம் அப்படி யிருக்கின்றது. புத்திரசோகம் புத்தியை மாற்றிவிடும். ஆகையால் இதை உடனே செய். எல்லாம் ஒருக்ஷணத்தில் முடிந்து விடும்.

**காலகண்டி** — ஆமாம், ஆமாம். நல்ல சந்தர்ப்பம், நல்ல யுக்தி, சமயோசித புத்தியே சாலச் சிறந்தது. அப்படியே செய்கின்றேன்.

**சந்திரமதி** — அம்மணீ! தண்ணீர் தொட்டியில் ஊற்றியாயிற்று.

**காலகண்டி** — ஆனுக்கே சரி. போய்வா. பத்திரம் காட்டில் பயப்படப் போரா.

**சந்திரமதி** — சுவாமீ, தாங்களும் உத்தரவு தரவேண்டும்.

**காலகண்டன்** — நீயாச்சு, அம்மாளாச்சு, அம்மணி அம்மணி யின்னு அவளெ வசப்படுத்திண்டேட்டா. இன்னும் நானென்ன என் உத்தரவென்ன.

**சந்திரமதி** — சுவாமீ! அவ்வாறு சொன்னால் என்ன செய்வது. நீங்கள் இருவரும் தாயும் தந்தையும்போ லிருக்க ஒருவரை விட்டு ஒருவரை விசேடப்படுத்த எவ்வாறாகும் சுவாமீ. அவ்வாறு எண்ணங் கொள்ளாமல் தயை செய்து விடை தரவேண்டும் சுவாமி.

**காலகண்டன்** — நேக்கு அதெல்லாந் தெரியாது. வேஷ்டிகளெல்லாம் ஈரமாய் கிடக்குறது. நாளய உதயத்துக்கு மடிவேணும், இதோ இந்த ஆறு வேட்டிகளெ நண்ணு துவைச்சு கொடியில் உலர்த்திவிட்டுப்போ.

**சந்திரமதி** — தேவரீரது கட்டளைப்படியே செய்துவிட்டுப் போகின்றேன் சுவாமீ.

**காலகண்டன்** — நல்லது, நான் கொஞ்ச காரியமா வெளியே போய் வாரேன். நான் வர செத்தெ காலதாமச மாகும். நீ அந்த வேலெயெ செய்துபோட்டு போகலாம். சீக்கிரம் ஆத்துக்கு வந்து சேரு.

**சந்திரமதி** — ஆ, ஆ. அப்படியே செய்கின்றேன் சுவாமீ.

(சந்திரமதி துணி துவைக்கப் போகிறாள்.)

**..லகண்டி** — அடீ சந்தி, எங்கிருக்கிறு, என்ன செய்ரா, வேஷ்டியா தொவைக்கப்போரா.

**சந்திரமதி** — ஆம் அம்மணி.

**காலகண்டி** — இங்கு வாடி. பயித்தியக்காரி. நீயும் ஒரு பெண்ணு பிறந்தயே இந்தாடி.

**சந்திரமதி** — ஏன் அம்மணி இதோ வந்தனன்.

**காலகண்டி** — புருஷாளுக் கெல்லாம் கல்மனசடீ. பெத்த மனம் பித்து என்றுளே. அது அவாளுக்கு இல்லெயா. பாவம் நீ பிள்ளையைப் பறிகொடுத்து அழுதிண்டு கிடக்கிறு. இப்போது துணி யெப்படி துவைப்பா. சும்மா பிழிஞ்சு கொடியில் போட்டு விட்டு போ. அவர் வெளியிலே போய் விட்டார். பிம்மாலே கேட்டாருக்கே ஆமாம் துவைச்சு காயப் போட்டே னென்னே. நானும் அப்படியே சொல்லிப் போடுறேன் நீ போடீ.

**சந்திரமதி** — அம்மணீ, எது எவ்வாறுயினும் ஐயர் சொல்லை மீறி நடப்பது தகாது. அதினும் செய்யாமலே செய்தேன் என்பது அசத்தியம். புத்திரன் போனுலும் பொய் புகலலாகாது. அடிமை கொண்டோர் சொல்லை அணுவளவும் கடந்து நடத்தலாகுமோ அம்மணி. வேஷ்டிகளைத் துவைத்துப் போட்டு விட்டே போகின்றேன் அம்மணி.

**காலகண்டி** — ஆனுக்கே ஒன் இஷ்டம், நேக்கு மனசு தாளல்லே. மலடியானுலும் ஒருவருக்கு துன்பம் வந்தாக்கே பார்க்கப் புடிக்காது நேக்கு. குழந்தையை பெற்றவளா யிருந்தும் ஒனக்கு மனசு மரமா இருக்கு. நீ என்ன பெண்ணோ, பேயோ, போ, போ.

**சந்திரமதி** — அம்மா கோபம் வேண்டாம்.

(சந்திரமதி துணி துவைத்துக்கொண்டே)

அப்பா, கண்மணி. அநாத பிணமாகவா கிடக்கின்றாய். என் விதியே. இதுவும் உன் திருவிளையாடலா. என்ன செய்வேன் (வேஷ்டிகளைத் துவைத்துக் கொண்டுவந்து உலரப்

போட்டு) அம்மணி! வேஷ்டிகளைத் துவைத்து உலரப்போட்டு விட்டேன். இனி போக விடைதாரும் அம்மணி.

**காலகண்டி** — விடைதான் தந்தாச்சுதே. போய்வா. பத்திரமாய்ப் போ, சீக்கிரம் ஆத்துக்கு வந்து சேரு.

**சந்திரமதி** — அப்படியே அம்மணி.

(போகிறாள்.)

(காலகண்டன் திரும்பி வீடு வருகின்றான்.)

**காலகண்டன்** — ஏதேனும் நமது காரியம் பலித்ததோ.

**காலகண்டி** — ஆ, ஆ, அதற்கென்ன நமது காரியம் நன்றாய்ப் பழுத்தது.

**காலகண்டன்** — பலித்ததா, பலித்ததா!

**காலகண்டி** — பழுத்தது பழுத்தது என்றேன்.

**காலகண்டன்** — பழுத்ததா அடடா என்ன சங்கதி.

**காலகண்டி** — உம்முடைய யுக்திகள் ஒன்றும் அவளிடம் செல்லாது செல்லாது, நான் எவ்வளவோ நயமாய்ச் சொல்லியும் அவள் அணுவளவும் அசையவில்லையே. கடைசியில் வேஷ்டிகளை நன்றாய்த் தோய்த்து உலரப்போட்டு விட்டுத்தான் போனாள், அவள் உண்மையை ஒருபோதும் மறப்பவளாகக் காணவில்லை, இனி ஒருபோதும் அவளை ஏமாற்ற ஒருவராலு முடியாது, போய் முனிவர்க்குச் சொல்லி விடும், ஏன் அவர் வீணாக மனோராஜ்யம் செய்கிறார்.

**காலகண்டன்** — அடடா முடிவில் அப்படியா முடிந்துவிட்டது. என்ன செய்வது பார்ப்போம், முனிவர் இன்னும் ஏதேனும் வழி தேடுவார்.

**காலகண்டி** — ஆ, ஆ, அந்த முனிவர்க்கு இப்படிப்பட்ட துர்க்குணமும் உண்டாகலாமா, எல்லாம் ஒழித்தும் இப்பொறாமையும், பகையும், கோபமும் ஒழிந்தபாடாகக் காணவில்லையே, இது அநியாயம் அநியாயம், இப்படி துன்புறுத்துவது யாருக்கும் அடாது, முடிவில் இத் தீவினை யனைத்தினுக்கும் கடவுள் சந்நிதானத்தில் பதில் சொல்லவேண்டுமே, நாமுந்தானே உடன்பட்டிருக்கின்றோம், என்ன செய்வது வந்தாயிற்று — நடப்பது நடக்கட்டும், இனி இதனோடாவது நிறுத்திவிடுவது நலம்.

**காலகண்டன்** — இருக்கட்டும் பார்ப்போம் மற்றவைகளையும்.

## நான்காங் களம்.



**இடம்:** காசியம்பதியை யடுத்த காடு.

**காலம்:** இரவு.

**பாத்திரங்கள்:** சந்திரமதி, எல்லாம் வல்ல சித்தர், சோமசுந்தரம்.

[சந்திரமதி வருகின்றாள்.]

**சந்திரமதி** — ஐயோ இரவாகிவிட்டதே. என் கண்மணியை எங்கு கண்டு தேடுவேன். இதற்குள் என்ன கதியாயிற்றோ. காசிநாதா! நீயே துணை, எந்த மிருகங்கள் இழுத்துக்கொண்டு போய் விட்டனவோ. பட்சிகள் சூழ்ந்து கொத்திப் பிடுங்குகின்றனவோ, அடா கண்மணீ, இந்தப் பாவி அப்படிப்பட்ட காட்சியையுங் காண விதியிருக்குமோ. ஆ தெய்வமே, இப்படியும் சோதிக்கலாகுமா எங்களை, ஐயோ எந்த வழியைக் கண்டு ஏகுவேன். ஐயோ பரமேசா. இந்த விதியின் முடிவும் எனக்குத் தெரியாதே. என்ன செய்வேன், இவ்விருளில் வழிகாட்டவும் ஒருவரும் காணேமே, அடா என் கண்மணீ, உன் உடலைக் காணவும் கொடுத்து வைக்காத பாவியாய் விடுவேனே, ஓ காசிநாதா. உன் திருவுளச்செயல் யாதோ. ஐயோ, பகலா யிருந்தாலும் ஒருவாறு வழிகண்டு போகலாமே. நேரே எவ்வளவு தூரஞ் சென்றாலும் அப் பிள்ளைகள் சொல்லிய இடம் காணப்படவில்லையே. ஆ தெய்வமே, என் கண்மணியின் காயத்தையாவது காட்டக்கூடாதா. அந்த மாணம் இந்தப் பாவிக்குச் சம்பவிக்கலாகாதா? ஆ பரமேசா, கருணைக்கடலே, இச்சமயம் என்னைக் கைவிடாமல் காத்தருள வேண்டும், அடா என் கண்மணி, எங்கடா படுத்திருக்கின்றாய், ஏனென்று எழுந்துவர மாட்டாயா. வழிதெரியாமல் அலையும் பெண்ணை வாயெடுத்து அழைக்கமாட்டாயா. என்ன செய்வேன். ஆலமரத்தடியில் என்றார்களே, இவ்விருளில் ஒரு மரத்தையும் பகுத்தறிய முடியவில்லையே, ஐயோ மகனே, எந்த நரிக்கு இரையாகி விட்டாயோ, எந்தப் பருந்துக்கு விருந்தாகினையோ, ஆ, இதேதோ பறவைகள் பறந்து பறந்து வீழ்கின்றனவே, இதுதானோ இதுதானோ, (**அருகிற் செல்கின்றாள்.**) இதுதான் ஆலமரமாகக் காண்கின்றது, விழுதுகளும் கீழிறங்கி இருக்கின்றன, இம் மாத்தின் அடியில்தானோ என் கண்மணி இருப்பது. இது ஏதோ இலை குவிந்திருக்கின்றதே இதுவோ, (**இலையைத் தள்ளி பிணத்தைப் பார்த்து**) ஆ! என் கண்மணி மகனே, ஏ ஏ ஏ ஏ ஏ

(மேலே விழுகின்றாள். சற்றுப்பொறுத்து எழுந்து) அடா என் கண்ணே ஏ ஏ ஏ ஏ ஏ (விழுகிறாள். முகத்தோடு முகம்வைத்து) என் முத்தே, (முத்த மிடுகிறாள்) ஐயோ அடா கண்மணீ தூங்குகின்றாயோ, என்னை ஏனென்று கேளாயோ ஏறெடுத்துப் பார்க்காயா அம்மாவென்று அழையாயா அழாதே என்று சொல்லாயா என்ன செய்வேன். நீ நாட்டை ஆண்டு நன்மை புரிவாயென்று இறுமாந்திருந்தேனே. என் இறுமாப்பில் இடி விழும்படி காட்டில் மாண்டு கதியற்றுக்கிடக்கின்றாயே.

(எடுத்து மடியில் வைத்துக்கொண்டு கதறி யழுகின்றாள்.)

பனியா னனைந்து வெயிலா லுலர்ந்து பசியா லலைந்து முலவாய்
அனியாய வெங்க ணரவா லிறந்த வதிபாவ மென்கொ லறியேன்
தனியே கிடந்த விடநோய் செறிந்து தரைமீ துருண்ட மகனே
இனியாரை நம்பி யுயிர்வாழ்வ மென்ற னிறையோனும் யானு மவமே.

அடா என் செல்வமே! நாம் இந்தக் காசிநகரத்திற்கு வரும் வழியில் நீ பனியினால் நனைந்தும், வெயிலினால் உலர்ந்தும், பசியினால் வருந்தியும் சிறிதும் வாடாமல் இருந்தாயே. அப்போது இறந்துவிட்டிருந்தாலும், அடா கண்மணீ, அனைவரும் இருந்து அடக்கஞ் செய்திருப்போமே. ஐயோ இப்போது நீ தனியே வந்து அரவந்தீண்டி விஷந் தலைக்கேறி மாண்டாயே. அடா என் செல்வமே. அவ்வரவம் சீறித் தீண்டியபோது எப்படிப் பயந்தனையோ, எவ்வாறு அலறினையோ, என்னென்ன எண்ணினாயோ. எப்படித் துடித்தாயோ, ஐயோ என் கண்மணீ. நாங்கள் இனி யாரை நம்பி இந்தப் பூமியில் உயிர் வாழ்வோமடா கண்மணீ.

நிறையோசை பெற்ற பறையோசை யற்று நிரையாய் நிறைந்த கழுகின்
சிறையோசை யுற்ற செடியூ டிறக்க விதியா ரிழைத்த செயலோ
மறையோ னிரக்க வளநா டனைத்தும் வழுவா தளித்த வடிவேல்
இறையோ னளித்த மகனே யுனக்கு மிதுவோ விதித்த விதியே.

அடா என் ஆசைக் கண்ணே, நீ இருக்கவேண்டிய நிலையிலிருந்து இறந்திருந்தால் என்னென்ன சிறப்புக்கள் நடக்கும். அந்தப் பறையோசைகளெல்லாம் ஒழிந்து பறவைகளின் சிறையோசையை யடைந்தாய் என் செல்வமே. உனக்கு இக் கதிவரக் கருவிலேயே அமைத்துவிட்டானோ அப்பிரமன், ஆ, ஒரு சொல்லில் நாடு நகரங்கள் அனைத்தையும் முன்பின் பாராமல் முனிவர்க்குத் தாரை வார்த்த வள்ளலுடைய தவப் புதல்வனாகிய உனக்கும் இக் கதி நேரலாகுமா, ஆ, பரமேசா.

வானின் றிழிந்து சொரிகின்ற தாரை மழைபோல வீழ விழிநீர்
ஊனின்றி மேனி யுதிரங்கள் சிந்த வுயிரின்றி வெம்பு தழலின்
மேனின்று வெந்த தளிர்போ லுயங்கி விதியாரை நொந்து தனியே
யானின் றிரங்க வேனென்ப தில்லை யிதுவோவு னீதி மகனே.

அடா என் கண்மணி, யாரோ தேற்றுவாராற்று கண்ணீர் விட்டுக் கதறியழுகின்றேனே. தனியே யிருந்து தவித்து நெருப்பிற் காட்டிய மெழுகுபோல் உருகி உதிரம் பெருக ஏங்குகின்றேனே, இப் பாவியை ஏனென்றும் கேட்காதிருப்பதும் நீதியாகுமா, இப்படித் திரும்பிப் பார்த்து ஒரு சொல்லும் சொல்லாமலிருப்பதும் நியாயமா?

செங்கோ லறத்தின் முறையே செலுத்து திறலோ னெவர்க்கு முரவோன்
வெங்கோப யானை விறன்மன்ன னம்மை விடுவிக்க வெண்ணி வருநாள்
பங்கே ருகத்து மலர்போல் விளங்கு வதனு மகிழ்ந்த பரிவால்
எங்கே யெனுசை மகனென் றுரைக்கி லெதிரேது சொல்வன் மகனே.

அடா என் ஆணிமுத்தே, இந்தக் கதியைக் காணவோ நான் பெண்ணுகப் பிறந்தேன். ஐயோ உன் தந்தை தருமந் தவறுமல் செங்கோல் செலுத்தி யாவர்க்கும் அன்புடையவராக இருந்தவராயிற்றே, அப்பெருமானுடைய மைந்தனுகிய உனக்கும் இக் கதி நேருவது தருமமோ, அடா கண்மணி, அப் பெருமான் நம்மை மீட்டுக்கொண்டுபோக எண்ணி வரும்போது என் ஆசைக் குமாரன் எங்கே என்று கேட்டால் என்னென்று பதில் சொல்வேண்டா செல்வமே.

நல்லோர் வகுத்த முறையா மறங்க ளுலெட்டி லொன்று குறையேம்
இல்லோரை யற்ப மிகழே மிறுக்கு மிறையன்றி யேற வுகவேம்
சொல்லோ மறுத்து முரையோ முரைத்த துறவோர்கள் புத்தி கடவேம்
எல்லோர் தமக்கு மினிதே விளைப்ப மேதாக வந்த திதுவே.

ஐயோ, கண்மணி, பெரியோர்கள் வகுத்துச் சொன்ன தருமங்கள் முப்பத்திரண்டில் ஒன்றையும் குறைத்தோ மில்லையே. ஐயோ காசிநாதா, குடிகளிடத்திலும் முன்னிருந்தபடி ஆறிலொரு கடமையை யல்லது அணுவளவும் அதிகம் பெற ஆசித்தோமில்லையே, இல்லோரை இழித்துச் சொன்னோ மில்லையே, ஏற்றோர்க்கு இல்லை யென்றோ மில்லையே, மாதவர் கூறிய மந்திரோபதேசங்களை மறுத்தோ மில்லையே. இவ்வாறு எல்லார்க்கும் இனிதாகவே நடந்து வந்தோமே, இந்தக் கதி எக் காரணத்தினுல் நேர்ந்ததோ சற்றும் அறியேனே, என்ன செய்வேண்டா கண்மணி!

மறைநீதி யுற்ற புறநா டழித்து வருசேனை யாள்வ தறியேம்
அறைநீதி முற்று முணரா வமைச்சை யணிவாயில் வைத்து மறியேம்
குறையே யிழைத்து வினையே விளைத்த குடிவைத் திருந்து மறியேம்
இறையே தவத்தின் வினையே யெமக்கு மிதுவோ விதித்த விதியே.

ஐயோ, தெய்வமே, அநியாயமாய் அந்நிய நாடுகளைக் கொள்ளையிட்டு வரும் கொடிய படையைத் துணையாகக் கொண்டிருந்தறியோமே. அரசிய லறியாத அமைச்சரை அரண்மனையில் வைத்தாளவில்லையே. குற்றமே செய்தொழுகும் குடிகளை ஒருபோதும் கொண்டிருந்தறியோமே. இவ்வாறிருந்தும் ஆ, பரமேசுவரா, ஆ, தரும தேவதையே, யாங்கள் இப்படியும் வருந்தலாகுமா? அடா என் செல்வமே, சந்திரன் போன்ற முகமும் தாமரை போன்ற கைகளும் பொன் போன்ற தேகமும் புழுதியிற் கிடக்கக் கண்டும், இந்தப் பாவி இன்னும் உயிர்விடாமலிருக்கின்றேனே, என்னைப் போலும் கொடும் பாவிகள் உலகில் வேறு ஒருவரும் இருப்பரோ, அடா என் கண்மணி, என் மனம் பதறுகின்றதே, குடல் கொதித்து வயிறும் பற்றியெரிகின்றதே என்ன செய்வேன்.

என்னுய கன்றன் மணிமார்பி லேறி விளையாடு கின்ற வெழிலோய்
முன்னுய் விளைந்த கனன்மூழ்க வெம்மின் முதலே நடந்த மதலாய்
செந்நாய் திரண்டு செறிகா னிருந்து தெளியா திரங்கு மெனைநீ
அன்னுய் வருந்த லையெனுத துன்ற னறிவுக் கடாது மகனே.

அப்பா மகனே! எங்கள் மார்பிலும், தோளிலும், மடியிலும் ஏறியாடுங் கண்ணே! நரியும் நாயும் திரண்டு அலைகின்ற காட்டில் தேற்றுவா ரற்றுத் தவிக்கும் இந்தப் பாவியின் முகத்தைப் பார்த்து "அழாதே" என்று ஒரு சொல்லும் சொல்லமாட்டாயா?

மறவா ளெயிற்று மணிமா சுணத்தின் வலியா விறந் துளவுனே
டிறவா திருக்கு மதிபாவி தன்னை டுறவே தெனக் கருதியோ
திறவாய் சிவந்த கனிவா யுரைத்தல் செய்கிலாய் முகத்து விழியாய்
பிறவாத நித்த னடியே வழுத்து பெருமா னளித்த மகனே.

ஐயோ மகனே! உன் வாயைத் திறந்து ஒரு வார்த்தையும் சொல்லாம லிருக்கின்றாயே. இந்தப் பாவியின் முகத்திலும் விழியாமல் இருக்கின்றாய். அடா அருமைச் செல்வமே, நீ இறந்து கிடப்பதைக் கண்டும் கன்மனங்கொண்டு உயிரோடிருக்கின்றேனென்று என்மீது கோபமோ! ஐயோ அப்பா, ஏதாவது ஒரு வார்த்தையாவது வாய்திறந்து சொல்லமாட்டாயா?

பரவாதி கட்கு மிகவே விளைத்த படிபோ லுளத்தி லறமே
விரவாத துட்ட முனி கௌசிகற்கு வினையே மிழைத்த குறைபோல்
கரவே பிடித்து வறியே னளித்த கனிருவி செற்ற கடுவாய்
அரவே யுனக்கு முளதோ பகைக்க வறியே னிழைத்த வினையே.

ஐயோ மைந்தனைப் பறிகொடுத்து மாபாவியானேனே! ஐயையோ என் காதலர் வந்து பார்க்கும்போது மைந்தனைப் பறி-

கொடுத்தும் மரணமடையாமல் மகிழ்ந்திருக்கின்றாளே என்று கருதி என் முகத்தில் விழியாமற் போய்விடுவாரே, ஆ தெய்வமே, யான் அகதியானேனே. என்ன செய்வேன், ஆ காசிநாதா! இதுவும் உன் திருக்கூத்தா. இனி நடுராத்திரியாகின்றது. ஐயோ இந்த உடல் இருந்து எதற்கு! இப் புத்திரன் போனபிறகும் இப்பூமியில் வாழ்ந்திருப்பதா இம் மைந்தனோடே மாய்ந்து மடிவோமா; ஐயோ என் மணாளர் எங்கிருக்கின்றாரோ; இதைக் கேட்டால் என்னுவாரோ; ஐயோ! நான் அறவும் பாவியானேனே; ஓராதரவும் இல்லாத இந்த உயிர் இருந்து ஆவதென்ன; ஒருகணப்போதில் விட்டு விடலாகும்; ஆயின் இவ் வருமை மைந்தனுடைய உடலை எடுத்து அடக்கஞ் செய்வார் ஒருவரும் காணேம்; அன்றி விரைவில் வந்துவிடுவதாக வேதியருக்கு வாக்களித்து வந்திருக்கின்றோம். சுதன் போனாலும் சொல் தவறலாகாது; இனி, ஆ தெய்வமே! இத் தேகத்தை எடுத்துக் கொண்டுபோய் சுடலையில் அடக்கஞ் செய்துவிட்டு, சொன்னபடியே விரைவில் வேதியர் வீடு சேர்வதே உத்தமம். ஆ தெய்வமே! நீயே கதி; நீயே துணை. இந்த நடுராத்திரியில் எங்கென்று சுடலையை நாடுவேன். வழியுந் தெரியாதே. காலையிற் செய்வோம் என்று கருதுவதற்கும் விரைவில் வருவதாய் வாக்களித்துவிட்டு வந்திருக்கின்றோமே. என்ன செய்வது. ஆ! காசிநாதா! திக்கற்றார்க்குத் தெய்வமே கதி என்பதைப்போல் நெடுகப் போகின்றேன். தெய்வம் விட்டவழி யாகட்டும். மற்று என்ன செய்வது (தூக்கிக்கொண்டு போகின்றாள்.) அந்தோ! இந்த நள்ளிருளில் முன்பின் ஒன்றுந் தெரியவில்லையே; கொடிகளில் கூந்தல் சிக்கிக்கொள்கின்றது. வழியிலுள்ள முட்செடிகள் வஸ்திரத்தைக் கிழிக்கின்றன. என் செய்வேன். பட்சிகளும் மிருகங்களும் கண்ணுறங்கும் பாதி யிரவாகி விட்டது. மிருக பயம் ஒருவாறு நீங்கினும் பேய்பெள்ளங்களின் பயம் விட்டதாகக் காணவில்லையே, ஆ, பரமேசா.

**எல்லாம் வல்ல சித்தர்** — யார் அங்கே. தலிக்குரல் கேட்கின்றது. பெண்ணோ, பேயோ.

(சமீபிக்கின்றார்.)

**சந்திரமதி** — ஐயோ இதென்ன! யாரோ, இது! ஆண்குரலாக இருக்கின்றது. இனி யாது நேருமோ. ஆ பரமபதி! நீதான் கதி. தோன்றாத் துணையாக இருந்து காத்தருளவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — யாரது பதில் உரையாமல் இருப்பது.

**சந்திரமதி** — ஐயா! நான் அகதியான ஒரு பெண்.

**எல்லாம் வல்ல சித்தர்** — *பெண்பாலா! ஐயோ பாவம்! அழுகுரல் கேட்கின்றதே. என்ன, தனிக்குரலாகவும் இருக்கின்றது. யாது காரணம் அம்மா.*

**சந்திரமதி** — *ஐயா, என் குறைகள் சொல்லி முடிவதன்று. என்ன பாபம் செய்து இப்பெண்ணுருவெடுத்தேனோ அறியேன். ஆருத்துயரத்தில் அழுந்தி வருந்துகின்றேன். தாங்கள் யாரோ! சற்று விவரமாய்த் தயைசெய்தால் எனது வரலாற்றை பின்பு கூறுகின்றேன்.*

**எல்லாம் வல்ல சித்தர்** —

அகவல்

*அம்மநீ வருந்தேல் அறைகுவன் கேளாய்*
*இம்மா நிலத்தில் இன்பமும் துன்பமும்*
*மாறி மாறி வருவது வழக்கே*
*தேறின் அவையுநம் செய்கை யினுனே*
*மேவுகின் றனவென விளம்புவர் மேலோர்*
*தாவு மெவற்றையும் தன்னறி வதினுல்*
*நீக்கி இன்பத்தை நிலைபெறக் கொள்ளும்*
*பாக்கியத் தவரே பாரிலின் புறுவார்*
*அதனுல், பந்தமில் யாமும் பல்பொருள் இல்லம்*
*தந்தைதாய் சுற்றம் சார்ந்தநட் பின்னவை*
*நிலையல வென்று நினைத்துத் துறந்து*
*பலதல யாத்திரை பண்புடன் புரிந்தும்*
*தீர்த்தயாத் திரைபல சிறக்கச் செய்தும்*
*மூர்த்தமார் ஆலயம் முன்னி வணங்கியும்*
*இவையெலாம் பயனில என்னவே கண்டு*
*சுவையெலாம் வெறுத்துத் தோன்று காய்கனிகள்*
*கந்தமூ லங்களைக் கனிவுட னுண்டே*
*விந்த கிரியும் விளங்கிய இமயமும்*
*பொன்மா மலையும் வெள்ளியம் பொருப்பும்*
*கன்மந் தொலைக்கக் கருத்தொடு திரிந்தோம்*
*அப்பால் —*
*சந்தனப் பொதியை சார்ந்தவ னுறையும்*
*விந்த வெற்படக்கிய வீறுசால் முனிவன்*
*கொங்கணர் போகர் கோரக்கர் சட்டையர்*
*மங்கலில் மூலர் மச்சர் தன்வந்திரி*
*புகரில் தேரையர் புலிப்பாணி முதலாம்*
*நிகரில் சித்தர்கள் நிகழ்த்து நூலெல்லாம்*
*கற்றபின் சமாதி கைகூடி நின்று*

உற்ற சித்துக்களில் உள்ளங் கொண்டு
அணிமா பயின்றே அணுரூப மாகி
அணிமையுள் ளோர்க்கும் அறியா திருந்தேம்
மகிமா பயின்று மகத்துவ உருவை
வகித்துக் கண்டோர் மலைக்க விருந்தேம்
கரிமா பயின்று கனத்த திடமாய்
அரும்பலத் திற்கும் அசையா திருந்தேம்
லகிமா பயின்று லகுவா யிருந்து
துகில்பஞ் சென்னச் சொல்லக் கிடந்தேம்
பிராப்தி பயின்று பிரியமா யெண்ணும்
தராதலத் தெல்லாம் தங்கி யிருந்தேம்
பிராகா மியத்தைப் பிறங்கப் பயின்றபின்
நிராகரித் தேம்இந் நிலத்தா சையெலாம்
ஈசத் துவத்தை இன்புறப் பயின்று
நேசமா யெவற்றையும் நிறுத்தியாண் டனமே
வசித்துவ நிலையை வயங்கப் பயின்று
அசித்துச் சித்தெலாம் அருள்தன் வழியில்
வசமே யாக்கி மற்றுமிப் பூமியில்
இசைவாய்ச் செய்தவை இயம்பிடக் கேளாய்
தன்னுடல் விட்டுப் பிறவுடல் தன்னில்
பின்னிடப் புகுபர காயப் பிரவேசமும்
நீர்மேல் நடத்தல் நெருப்பினி லிருத்தல்
பாரில் மலைகளைப் பறித்தெறிந் திடுதல்
எண்ணிய காலே மின்னச் செய்தல்
இவைமுதற் பலவாய் இயம்பும் சித்துகள்
நவையிலா வழியினில் நாமறிந் தனமே
வாதஞ் செய்வதில் மனமது செல்ல
ஈதெலாம் விடுத்தே இந்தச் சித்தரும்
சதுர கிரியின் சார லடுத்து
விதமுறு நிலத்தின் மேலெலாந் தீட்சை
அன்புடன் செய்த அகோராத் திரமாய்
இன்புடன் காத்தே இயல் பூநீரை
பதமுற எடுத்து பக்குவப் படுத்தி
சதுரமாய் நல்ல ஜயநீ ராக்கி
முப்பூ முடித்து முன்னித் துதித்து
முப்புற மெரித்த முன்னவ னருளால்

பொன்னம் பலத்தை புலனுறக் கண்டனம்
இன்னம் பலவா இருக்கு மந்திரத்தை
ஓதா துணர்ந்தே உலகில் அரியதாய்
வேத முதலிய விண்ணவர் மயங்க
இறந்தோர் தமக்கெலாம் இன்னுயிர் கொடுத்து
புரந்திடுந் தொழிலே புதுமையென் றெண்ணி
அருந்தவம் பலவும் அன்புட னாற்றி
பரிந்தவப் பயனும் பண்புடன் பெற்றோம்
இந்தச்சித் தர்செயல் இவ்வள வினதோ
சந்தமாய் மனித சஞ்சார மில்லா
இக்கா னகத்தில் இருந்து பெருந்தவம்
எக்கால மும்புரிந் தெழில்சீ டர்க்கெலாம்
உண்மை நெறியை உபதே சித்து
நண்ணுமா னிடர்க்கு நலிவினை நீக்குவோம்
பெண்குரல் கேட்டே பெரிதும் வாடி
நண்ணினோம் மனதில் நாடிய துரைப்பாய்.

அம்மா அச்சப்படவேண்டாம்! நாம் இவ் வனத்தில் வசிக்கும் ஒரு சித்த புருஷர். எம்மை எல்லாம் வல்ல சித்தர் என்று கூறுவர். பெண்பாலின் அழுகுரல் கேட்டுப் பரிந்து வந்தோம். சிறிதும் அச்சமில்லாமல் உம்முடைய வரலாற்றை விவரமாய்ச் சொல்லும். அழாமற் சொல்லும். இறைவர் ஒன்றும் குறைசெய்ய மாட்டார்.

**சந்திரமதி** — சுவாமீ! இவ் விருளில் தெய்வமே தேவரீரை இங்குக் கூட்டுவித்தாற்போற் காண்கின்றது. சுவாமீ! என் வரலாற்றை என்னென்று கூறுவேன். ஐயோ, காசிநாதா!

**எல்லாம் வல்ல சித்தர்** — அம்மா! அவ்வாறெல்லாம் அஞ்சவேண்டாம். அழவும் வேண்டாம். பிறர் வருந்தக் கண்டால் எமது மனம் சகியாது. யாம் கேட்பது உமக்கு வருத்தத்தை விளைப்பதாயின் பேசாமற் செல்கின்றோம்.

**சந்திரமதி** — சுவாமீ! அச்ச மொன்று மில்லை. துக்க மிகுதியால் சொல்ல நா எழவில்லை. ஆயினும் ஒருவாறு கூறுகின்றேன். மனங்கொண்டு கேட்டருளவேண்டும், சுவாமீ!

**எல்லாம் வல்ல சித்தர்** — ஆ! ஆ! அப்படியே கேட்கின்றோம். விசனமற்றுப் பொறுமையோடு சொல் அம்மா! நீ எவ்வளவு சொல்லினும் பொறுமையுடன் கேட்கின்றோம். பிறகு எம்மால் செய்யக்கூடியது ஏதேனும் உண்டோ என்று யோசிக்கின்றோம். ஒன்றும் விடாமற் சொல்லம்மா.

சந்திரமதி —

அகவல்

அலைகடல் சூழும் நிலவுல குக்கோர்
அணியென விளங்கும் தணிவிலாப் புகழ்சால்
அரியகன் ஞேசிக் குரியநல் வேந்தன்
அரனடித் துணையைப் பரவிய தவத்தால்
அன்னவன் புதல்வியாய் மண்ணிடை யுதித்தபின்
அருமையில் வளர்ந்தே யுரியநற் பருவம்
அடையஎன் தந்தை மிடையுமன் னர்க்கெலாம்
அன்புற வோலையில் நன்மணங் குறித்தே
அனுப்பிட வந்தனர் தனிப்படை வேந்தர்
அரசிளங் குமரர் வரிசையில் தேரின்
அழகும் இளமையும் பழகுநற் குணமும்
அறிவும் பொறையும் விரியுநூ லுணர்வும்
அத்திர வித்தையும் மெய்த்திற மேன்மையும்
அமர்ந்தவோ ருருவென அமர்ந்தன ரவரே
அரிச்சந் திரப்பெயர் வரிச்சிலைப் பெருமான்
அடலுறும் அவர்க்கே உடன்மண மாலை
அணிந்தபின் அமலனைப் பணிந்தநற் பயனால்
அய்யஇப் புதல்வனை மெய்யுறப் பயந்தேன்;
அஞ்சொற் குதலையாம் செஞ்சொற் கேட்டே
அணைந்த அன்புடன் இணைந்து வளர்க்கும்
அத்தகை நாளில் மெய்த்தவக் கோசிகர்
அரசனை யணுகி அரசுதா வென்ன
அளித்தபின் அவர்க்கே களிப்புடன் மற்றும்
அணியும் பணியுந் துணியுந் தந்தனம்
அவையெலாம் பெற்றபின் நவையறு முனிவர்
அருமகம் முடிக்கமுன் தருவதாய்ச் சொன்ன
அத்தமாம் பத்துப் பத்துலட் சம்பொன்
அதனையீந் தப்பாற் பதமுறச் செல்கென
அஞ்சொடு முப்பத் தஞ்சுநாள் தவணையில்
அடைத்திடு வோமெனத் தடத்த வயோத்தியை
அகன்று தாகரும் புகன்றுபின் வரவும்
அடவியும் மலையும் கடவிய சுரமும்
அருவியுங் கடந்து வருபெரும் வழியில்
அந்தோ வெய்யிலில் வெந்து வருந்தியும்
அன்னமும் வேளைக் குண்ணவும் இன்றி

அடகும் கிழங்கும் தடவுகாய் கனியும்
அருந்தி யிளைத்து வருந்தியே வருநாள்
அன்னையும் தந்தையும் விண்ணுல கெய்தினர்
அன்றியென் மாமியும் குன்றிமாண் டனளென
அறையக் கேட்டே குறையினாற் கரைந்தோம்

அந்தணர் தரகர் நொந்த மனத்துடன்
அவ்வவ் விடத்திற் கவ்வையாய்க் காட்டும்
அல்லலை யெம்மாற் சொல்லவும் படுமோ
அதன்பின் னவர்க்கே இதம்பல கூறி
அன்பருக் கெளியன் இன்புறும் ஒளியன்

அருளுருக் கொண்டே மருவிய காசி
அம்பதி யடைந்தே உம்பர்நா யகனை
அகத்தினிற் றொழுது இகப்பய னடைந்தபின்
அந்தநற் றவர்க்குத் தந்திடும் பொருட்காய்
அலைந்தலைந் தெங்கும் உலைந்திடு மெல்லையில்

அங்ஙனோர் வேதியர் பொங்கமாய் வந்தே
அடிமைவேண் டும்மெனக் கடிது மொழிந்திட
அரசர் முற்பட்டனர் உரைசெய் வேதியரும்
அகத்திற் காமவள் இகத்தலில் பெண்ணே
அதனால் மனைவியை உதவவென் றுரைக்க

அவ்வுரைக் கிசைந்தே ஒவ்வுற வளித்தபின்
அவர்தரும் பொருளைத் தவமுனிக் களித்தனர்
அய்யகேள் இந்த வெய்யதோர் நிலையை
அருகி லிருந்த ஒருபுதல் வனுந்தன்
அஞ்சனக் கண்ணில் விஞ்சுநீர் பெருக

அழுதலும் வேதியர் பழுதுறப் பற்றி
அசுவமும் பசுவும் இசைவுற வாங்கின்
அதனதன் கன்றும் நிதமுடன் வருமெனும்
அடைவினைக் காட்டி நடைபெறக் கொண்டனர்
அந்தோ அந்தோ எந்தந் தீவினை

அகற்றவும் படுமோ செகத்தினி லெவர்க்கும்
அங்கிருந் திறைவரைச் சங்கையாற் றொழுது
அகலுங் காலை மகவும் யானும்
அம்பது பட்டே வெம்புமா னெனவும்
அப்பினை யகன்ற இப்பிமீ னெனவும்

அடியினை நோக்கித் துடிதுடித் தேங்கவும்
அண்மையி லிருந்த அண்ணலும் அமைச்சரும்

அறிவிழந் தொன்றும் அறியாது நிற்கவும்
அந்தகன் வந்தே தந்திடின் னுயிரெனும்
அப்பத மாக ஒப்பியந் தணரும்
அதிர்த்துக் கூவி விதிர்ப்புற இழுத்து
அப்புறத் தேகக் கப்பிய துயருடன்
அகதியாய் வேதியர் அகந்தனை யடைந்தோம்
அம்மையாம் அவர்மனை வெம்மையாக் காட்டும்
அடிமைத் தொழிலெலாம் விடியுமுன் முதலாய்
அருக்கன் சாய்ந்தபின் பெருக்கு ஈரைந்தாய்
அடர்நா ழிகைகள் படர்தரு மட்டும்
அரவமில் லாமல் திரமுடன் செய்தே
அட்ட கூழுண்டு மெட்டுற வருநாள்
அயலகப் பிள்ளைகள் நயமுடன் கூடி
அரணியத் தெய்தி வாமிகு தருப்பையும்
அக்கினி மூளத் தொக்கநல் விறகும்
அசையு மாவிலையும் இசைவுடன் கொணர
அணுகுதல் கண்டே எனுமறை யவரும்
அச்சிறு ரோடும் இச்சிறு வனையும்
அனுங்கச் சேர்த்தே யனுப்பின ரப்பால்
அற்றைநாள் மாலை உற்றபின் வந்தே
அழிவுக் காலம் வழிதனில் வந்து
அரவாய்ச் சிறுவனை யுறத்தீண் டிற்றென
அயலகச் சிறுவர் தயவொடும் மொழிந்தனர்
அதுகேட் டுயிரும் பதைபதைத் தேங்கி
அச்சத் துயரால் பிச்சது கொண்டே
அக்கணம் வேதியர் பக்கலில் எய்தி
அவதியைப் புகன்றே சவமடக் கஞ்செய
அனுமதி பெற்றபின் மனைநைந் தோடி
அடிதொறும் செடிதொறும் படிமிசைத் தேடி
அங்கொர் ஆலின்கீழ் தங்குறக் கண்டே
அநாதையா யழுதே மனுதியு மொடுங்கி
அங்கையி லேந்தி பொங்குமிவ் விருளில்
அடுத்த ஈமத்தில் படுத்திடப் புகுந்தேன்
அம்பல வாணனை நம்புமின் னருளால்
அமலநின் னடியாங் கமல பாதத்தை
அஞ்சலி செய்தே தஞ்சமென் றடைந்தேன்

அருளுரு வான தெருளுநன் முனிவ
அருளுவை யருளுவை சிறுவனின் னுயிரே.

(சோமசுந்தரன் வருகிறான்.)

**சோமசுந்தரன்** — அம்மா! துக்கப்படவேண்டாம். துக்கத்தினால் சொல்வது ஒன்றும் தோன்றவில்லை. யானும் முடிவில்தான் வந்தேன். அமைதியாய்ச் சொல்லுங்கள். குருநாதர் தக்கது செய்வார். அதற்காகவே தமது வருத்தத்தைக் கேட்டதும் நிஷ்டைகூடி ஜெபிக்கின்றார். அழவேண்டாம், சொல்லுங்கள் தங்கள் வரலாற்றை.

**சந்திரமதி** — சுவாமீ! யான் கன்னோசி நாட்டுக் காவலராகிய சந்திரதய மன்னவரது மகள்.

**சோமசுந்தரன்** — ஆ, ஆ, அப்படியா! அடாடா! இது என்ன பரிதாபம்! என்ன பரிதாபம்! பிறகு சொல்லம்மணி.

**சந்திரமதி** — அவர் நெடுங்காலம் புத்திரப்பேறில்லாமல், அருந்தவம் புரிந்து, அடியாளைப் பெற்றனராம். பின்பு என் தாய் தந்தையர் அருமையாக வளர்க்க வளர்ந்து கன்னிகைப் பருவத்தை யடைந்தேன். அது கண்ட என் தந்தை எனக்குச் சுயம்வரமென்று பல தேசத்து ராசகுமாரருக்கு மணவோலை யனுப்பினர். குறித்த அத்தினத்தில் அரசிளங்குமரர் பலர் கன்னோசிமா நகரத்தில் திருமண மண்டபத்தை யடைந்து வீற்றிருந்தனர். பின்பு, எனது தோழியர் புண்ணியநதி தீர்த்தத்தினால் மங்கலஸ்நானஞ் செய்வித்து, ஆடையணிகளால் அலங்கரித்து, திருமண மண்டபத்திற்கு அழைத்துச் சென்றனர். அவ்விடத்தில் தெய்வத்தின் திருவருளாலும், தேவரீரை யொத்த பெரியோருடைய ஆசீர்வாதப் பயனாலும், அயோத்திமா நகரை யரசு புரிந்துவந்த அரிச்சந்திர மகிபருக்கு மணமாலை சூட்டினேன்.

**சோமசுந்தரன்** — ஆ, ஆ, அரிச்சந்திர மன்னவருடைய மனைவியா! ஆ, ஆ, பிறந்த விடமும் புகுந்த விடமும் மிக மேன்மையாகவே இருக்கின்றனவே. பிறகு,

**சந்திரமதி** — பிறகு மலரும் மணமும்போல ஒருமனப்பட்டு இருவரும் மகிழ்வுடன் வாழ்ந்திருந்தோம். பின்பு, அரிய தவம் பல புரிந்து ஒரு ஆண் மகவை யடைந்தோம். ஐயோ தெய்வமே. என்ன செய்வேன்!

**சோமசுந்தரன்** — அம்மா, வருந்தாதை. ஒன்றும் குறை நேரிடாது. மற்றவற்றையும் சொல்லும் அம்மா.

**சந்திரமதி** — சுவாமீ, இவ்வாறு இன்புற்று வாழு நாட்களில் ஒருநாள் விசுவாமித்திர முனிவர் ராஜசபா மண்டபத்திற்கு வந்து, அரசர்க்கு ஆசீர்வாதம் கூறியபின், அரிய யாகம் ஒன்று முடிப்பதற்கு நூறு லட்சம் பொன் வேண்டினர். மன்னவர் அம்முனிவர் கேட்டவாறே அப் பொருள் முழுதும் உதவ வுடன்பட்டனர். ஆயினும் அம்முனிவர் அதை அப்போது பெற்றுக்கொள்ளாமல் வேண்டும்போது பெற்றுக்கொள்வதாகச் சொல்லிச் சென்றனராம். சில நாட்களின் பின்பு குடிகள் முறைப்பாட்டிற்கு இரங்கி, வேந்தர் வேட்டையாடக் காட்டிற் சென்றார். அங்கு நெடுநேரம் வேட்டையாடிக் களைத்து, அரசர் ஒரு மரத்தின் நீழலில் தங்கினர். அப்போது இரண்டு பெண்கள் வந்து அரசர்முன் இன்னிசையாகப் பாடினராம். அது கேட்டு மனமகிழ்ந்த மன்னவர் ஒரு மணிமாலை யளித்தனர். அதை அப் பெண்கள் மறுத்து வேண்டாம் என்றனர். பின்பு அரசர் "உங்களுக்கு வேண்டுவன யாவை?" என்றனர். அவர்கள் தம்மை மணக்கும்படி வேண்டினர்.

**சோமசுந்தரன்** — அடா, அடா, என்ன துணிவு, பெண்பால்களா ஆண்பாலை வேண்டினர். என்ன காலம்!

**சந்திரமதி** — ஆம் சுவாமீ. அப்போது மன்னவர் அப் பெண்களுக்கு ஏற்றவாறு இன்சொல் கூறி, புத்தி புகட்டி மறுத்துவந்தனர். அது கேட்டுத் திரும்பிச் செல்லுகையில் மன்னவர் உடன்படாமைக்கு மனம் வருந்தி அவரைப் பலவாறு வைததைக் கேட்ட நமது பாங்கன் ஒருவன் அவர்களைத் தண்டித்தனன்.

**சோமசுந்தரன்** — அதிருக்கட்டும். இவ் வார்த்தைகள் உனது மணாளன் சொல்ல நீர் கேட்டதுதானே. நேரிற் கண்டதல்லவே.

**சந்திரமதி** — கேட்டவையே யன்றி அடியாள் நேரிற் கண்டவை யல்ல சுவாமீ. ஆயினும் அவர் வாசகத்தில் தேவரீருக்கு எள்ளளவும் ஐயுறவு வேண்டுவதில்லை, மற்றும் நடந்தவற்றை தயைகூர்ந்து கேட்டருளினால் இதன் உண்மை விளங்கும் சுவாமீ.

**சோமசுந்தரன்** — ஆனால் சரி, சரி, மற்றதும் சொல்லும். உலகத்தில் பெண்பால்கள் ஆண்பாலாரை வலிந்து கேளார். அவ்வாறு கேட்பினும் புருடர் அவர்களது வேண்டுகோளுக்கு உடன்படாமற் போகார். இது முற்றும் மாறாக வன்றோ இருக்கின்றது! ஆனால் மணாளர் தன்மை உமது மனமறியும். யாம் என்னறிவோம். பிறகு சொல்லும்.

**சந்திரமதி** — சுவாமீ! அடியாள் சொல்வதில் சற்றும் ஐயம் வேண்டாம். உண்மைக்கு மாறுனதை ஒருபோதும் உரையோம். சுவாமீ.

**சோமசுந்தரன்** — ஆனுல் சரி. இனி யாம் ஒன்றும் ஐயமுற்றுக் கேட்கமாட்டோம். மற்றும் சொல்லும்.

**சந்திரமதி** — சுவாமீ! பாங்கன் அப்பெண்களைத் தண்டித்த சங்கதியை அரசர் உணர்ந்து அவனுக்கு நற்புத்தி யுரைத்துக்கொண்டிருந்தனர். அப்போது விசுவாமித்திர முனிவர் கடுங்கோபத்துடன் வந்து மன்னர்மீது சீற்றங்கொண்டனர்.

**சோமசுந்தரன்** — ஏன்? காரணம் ஒன்று மில்லாமலா?

**சந்திரமதி** — காரண மில்லாம லன்று சுவாமீ! முன் இசை பாடிய பெண்கள் அவரால் வளர்க்கப்பட்டவர்களாம். அவர்களைப் பாங்கன் அரசரது ஏவலினுல் தண்டித்தான் என்று கருதி வந்து கோபித்தனர். அப்போது அரசர் அம் முனிவரை வணங்கி மன்னிக்க வேண்டினர். முனிவர் செல்வச் செருக்காலன்றே இத்தீங்குகள் புரிந்தாய் என்றினர். அதற்கு அரசர் "சுவாமீ, இவ் வரசை ஒரு சிறை என்று எண்ணியிருக்கின்றேனே யல்லது, சீர் என்று எண்ணினேன் அல்லன்" என்றனர். அதுகேட்ட முனிவர், சிறையெனக் கருதுவது உண்மையாயின், அதை யெமக்குக் கொடுத்து விடலாமே என்றனர். "அந்த பூபாரத்தை மகரிஷியாகிய தாங்கள் தாங்கிக்கொள்வதானுல் மனக்களிப்புடன் கொடுத்து விடுகின்றேன்" என்று அரசை அம் முனிவர்க்கு உரிமையாக்கித் தத்தம் செய்து விட்டனர். இவ்வளவும் எனது மணுளர் கூற அறிந்தேன்.

**சோமசுந்தரன்** — முனிவரா மனமார அரசு வேண்டுமென்றுர்? அதுவும் ஒரு சொல்லளவில், நன்றுயிருக்கிறது. பிறகு,

**சந்திரமதி** — பிறகு, யாங்கள் வானப்பிரஸ்த நிலையை யடைய காட்டிற்குப் புறப்பட்டோம். அப்போது முனிவர் வனத்தில் தவம் புரிவாருக்கு ஆடையணிகள் எதற்கு என்றுர். உடனே எங்கள் மீதிருந்த ஆடை யணிகளைக் கழற்றி அம் முனிவருக்குக் கொடுத்துவிட்டு அப்பெருமான் அருளிய இளஞாயிற்றின் நிறம்வாய்ந்த வஸ்திரத்தை உடுத்துக்கொண்டு காட்டிற்குப் புறப்பட்டோம். உடனே முனிவர் அரசரைக் கூப்பிட்டு, "முன்பு எனக்கு யாகஞ்செய்யக் கொடுத்த பொருள் எங்கே?" என்று கேட்டார். அப்போது அரசர், "சுவாமீ அது ராசாங்கத்துப் பொருட்சாலையிலேயே இருக்கின்றது" என்றுர். "அரசைத் தத்தஞ்செய்தபோது அவ்-

விஷயத்தைக் குறிப்பிடாமையின் அவையனைத்தும் எம்மதே யாகிவிட்டது. முன்பு வாக்குக் கொடுத்தபடி பொன் முழுதும் கொடுக்கின்றாயோ? இல்லையோ?" என்று கேட்டார். சொன்னமொழியை மறுத்தல் கூடாமையால், அவ்வாறே நாற்பது தினங்களில் கொடுத்துவிட ஒப்புக்கொண்டோம்.

**சோமசுந்தரன்** — அடடா இதேது முனிவர் சங்கதி முழுமோசமாக விருக்கின்றதே.

**சந்திரமதி** — சுவாமீ, மோச மொன்றுமில்லை. முறைப்படியே நாம் சொல்லியதைக் கொடுத்துத்தானே தீரவேண்டும்.

**சோமசுந்தரன்** — நன்றாயிருக்கிறதே. நீங்களென்ன அப் பொருளை வேறாகவா எடுத்து வைத்தீர்கள். ஒன்றுமில்லையே. பொருட்சாலையில்தானே இருந்தது. இதற்கென்ன தொடர் வழக்கு.

**சந்திரமதி** — அரசை யளித்தபோது அப் பொருளைப்பற்றிக் குறிப்பிக்க வேண்டுமென்பது உண்மைதானே. அவ்வாறு குறிப்பியாதபடியால் அப் பொருளைக் கொடுக்க நேர்ந்தது சுவாமீ.

**சோமசுந்தரன்** — நீங்களே அவ்வாறு நினைத்தால், முனிவர் பெறுவதற் கென்ன தடை. ஐயோ, என்ன விதி. பின்பு,

**சந்திரமதி** — சுவாமீ, அப் பொருளைப் பெறும்படி எங்களோடு நட்சத்திரேசர் என்பவர் ஒருவரை யனுப்பினர். ஆக நாங்கள் நால்வரும் நகரத்தை விட்டுப் புறப்பட்டோம். அப்போது நகரமாந்தர்கள் கூக்குரலிட்டு வருந்தினர். அதுகண்ட முனிவர் இனி ஒருகணமும் அங்கிருக்கப்படாதென்றும், மறுபடி அந் நகருக்கு யாங்கள் வருதல் கூடாதென்றும் கூறினர். அவ்வாறே உடன்பட்டு வந்துவிட்டோம். இரண்டு நாட்களுக்குப் பிறகு சத்தியகீர்த்தி என்னும் மந்திரியும் அரசரைப் பிரிந்திருக்க மனம்பொறாமல் வந்து எங்களோடு கலந்துகொண்டனர். பின்பு நாங்கள் ஐவரும் பெருங் கஷ்டப்பட்டு அன்னபானாதிகளின்றி கந்தமூலாதிகளை யருந்திக்கொண்டே கால்நடையாய்க் காசிமாநகரத்தை யடைந்தோம். அங்கு பலவகையில் முயன்றும் கைகூடாமல் வருந்திக்கொண்டு ஒரு சத்திரத்தில் தங்கி யிருந்தோம். எங்கள் வருத்தங்களைக் கண்ட நட்சத்திரேசர் வெளியே சென்று முயன்று ஒரு அந்தணரை அழைத்து வந்தனர். அவ் வந்தணர் ஒரு பெண்ணடிமை வேண்டுமென்று, என்னையும் என் மைந்தனையும் அடிமைகொண்டு முனிவர்க்குச் சேரவேண்டிய பொன் முழுவதையும் அளித்துவிட்டனர். பின்னர், என் மணாளர் முதல் ஒருவரும் யாங்கள் அடிமைப்பட்ட வீட்டண்டை வருதல் கூடாதென்று, அவ் வந்தணர் மறுத்து-

விட்டனர். அதுகேட்டு எம் மன்னர் மனங் கசிந்து மந்திரி-யோடும் எங்கோ சென்றுவிட்டனர். யானும் என் மைந்த-னும் மறையவர் வீட்டை யணுகி, வேலைகள் பலவும் செய்து, இட்டதை யுண்டிருந்தோம். ஐயோ தெய்வமே!

(சற்று நிறுத்தி யழுகின்றாள்.)

**சோமசுந்தரன்** — பிறகுதான் ஏதோ நடந்திருக்கின்றாற்போல் காண்கின்றது. வருந்தாமல் மற்றவற்றையும் சொல்லம்மா.

**சந்திரமதி** — சுவாமீ! என்னென்று சொல்வேன். இன்று காலையில் அந்தணர், நாளை வரும் வருஷப்பிறப்புக்காக, தருப்பை சமிதை முதலியவற்றைத் தேடிக் கொண்டுவரும்படி மற்ற பிராமணப் பிள்ளைகளுடன் என் மைந்தனையும் அனுப்பினர். சுவாமீ என்ன சொல்வேன். என் அருமை மைந்தன் தருப்பை கொய்யும்போது அரவந் தீண்டி யிறந்தான் என்று சேர்ந்து-போயிருந்த பிராமணப் பிள்ளைகள் வந்து சொல்லினர். ஐயோ சுவாமீ! இதோ பிணமாகக் கிடக்கின்றான் அவன். என்ன செய்வேன். என் மணாளர் எங்குச் சென்றாரோ அறியேனே, திக்கற்ற இப் பிணத்தை அடக்கஞ் செய்யச் சுடலையைத் தேடிச் செல்கின்றேன். சுடலை எங்கிருக்கின்றதோ அதை-யும் அறியேன். இந்த நள்ளிருளில் இக் காசி நாதரே தேவ-ரீரைத் துணையாக்குவித்தாரோ, யாதோ அறியேன். சுவாமீ, என்ன செய்வேன்.

**சோமசுந்தரன்** — ஐயோ, என்ன துக்கம். இப்படியும் துன்பங்கள் தொடர்ந்து வருமோ! எல்லாம் அனுபவித்துத்தான் தீர-வேண்டும். இருக்கட்டும் ஏதோ நற்காலத்திற்குத்தான் நமது கண்ணில் பட்டீர்கள். விஷந் தீண்டியது என்பது உண்மை-தானோ.

**சந்திரமதி** — சுவாமீ! யான் அதை நேரிற் காணவில்லை. அந்தணர் பிள்ளைகள் கூறவே அறிவேன்.

**எல்லாம் வல்ல சித்தர்** — (கண்விழித்து) எதனால் மரணம் சம்பவித்-திருந்தாலும் இருக்கட்டும். யாம் முன்பு கூறியவாறே அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் அஷ்டமாசித்திகளும், பரகாயப்பிரவேசம் முதலிய அற்புதங்களும் பயின்று, முடி-வில் ஜீவகாருண்யம் மிகுந்து, இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் மகத்துவ மகிமையால் எல்லாம் வல்ல சித்தர் என்னும் சிறப்-புப் பெயரும் பெற்றிருக்கிறோம். அதிருக்கட்டும், இப்-போது உடலில் உயிர்ப்பே இல்லையோ? உடலிற் சூடு மில்லையோ?

**சந்திரமதி** — சுவாமீ, உயிர்ப்பேது. வெறுங் கட்டையாகவே இருக்கின்றது. உடலிற் சூடும் இல்லை. ஐயோ சுவாமீ. தாங்கள் தான் அருட்கண் வைக்கவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — விஷமானால் எதுவாயினும் நீக்கிவிடலாகும். அதிலும் அர்த்த ராத்திரி யாகவில்லை. எல்லாம் ஒடுங்கினும் தனஞ்சயன் என்னும் வாயுமாத்திரம் விரைவிற் பிரியாது. பார்க்கலாம், கடவுள் செயல். இருக்கட்டும். மற்றொரு விஷயம் சொல்லவேண்டும்.

**சந்திரமதி** — சுவாமீ, திக்கற்றார்க்குத் தெய்வமே கதியென்பது உண்மையாகக் கண்டேன். இப் புதல்வனை உயிர்ப்பிப்பது தேவரீர் கடமை. அருளே உருவாக வந்துள்ள தேவரீருக்கு யான் என்ன செய்ய வல்லேன்.

**எல்லாம் வல்ல சித்தர்** — அது இருக்கட்டும், ஏதோ தெய்வத் திருவருளை முன்னிட்டு முடித்து விடுகின்றோம் அஞ்சவேண்டாம். இப் பிள்ளையை உயிர்ப்பித்த பிறகு, நீங்கள் இருவரும் எம்மிடம் இருந்து தொண்டு புரியவேண்டும். இதற்கு இஷ்டமானால், உடனே செய்கின்றோம்.

**சந்திரமதி** — சுவாமீ! என்ன செய்வேன். முன்பே எமது வரலாறு முழுதும் உரைத்தேன். மனம்புரிந்து அனைத்தும் கேட்டருளினீர்கள். இப்போது எவ்வாறு தங்களுக்குத் தொண்டு புரிவது. தேவரீரது அடிகளை இரவும் பகலும் மனனம் செய்துகொண் டிருப்போம். தாங்கள் எமக்கு ஒரு தெய்வம். எங்கள் அடிமைத்தன்மை நீங்கியபின்பு தங்கள் அடிகளுக்கே குடி முழுதும் அடிமைபூண்டு தங்கிக் கிடக்கின்றோம். இதனினும் யாங்கள் பெறும்பேறு யாது. சுவாமீ திருவுளங்கொண்டு இப் பாலனை உயிர்ப்பிக்க வேண்டும். இனித் தங்கள் பாதங்களே கதி.

(விழுந்து வணங்குகின்றாள்.)

**எல்லாம் வல்ல சித்தர்** — அம்மா, இதெல்லாம் ஒன்றும் வேண்டாம். இப் பிள்ளையை உயிர்ப்பிக்கத் தடையில்லை. நீங்கள் இருவரும் எமக்குத் தொண்டு செய்யவேண்டும்.

**சந்திரமதி** — சுவாமீ, தேவரீர் அறியாதது ஒன்றுமில்லை. எமது அடிமைத்தன்மை நீங்கினாலன்றி எமக்குச் சுதந்தர மில்லை. என்ன செய்வோம். எனது மணாளர் எம்மை மீட்கும் நாள்முதல் தமது அடிகளுக்கே அடிமைபூண்டு ஒழுகுவோம். சுவாமீ சற்றுக் கடைக்கண் பார்க்கவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — நீங்கள் இப்போது போகாவிட்டால் அவ் வந்தணர் என்ன செய்யப் போகின்றார். மைந்தனோடு தாயும்

இறந்துவிட்டாள் என்றே எண்ணுவார். ஆகையால், நீங்கள் இங்கே இருந்துவிடலாமே.

**சந்திரமதி** — சுவாமீ, யாருக்கு எதை மறைப்பினும் இறைவனுக்கு எதையும் மறைத்தல் கூடாது. அவரோ தலைக்குமேல் நின்று சாட்சியாக விளங்குகின்றார். மனிதர்க்குப் பயப்படாது ஒழியினும், தெய்வத்திற்கு பயப்படா தொழிவ தெப்படி! சுவாமீ. யான் விரைவில் வந்துவிடுவதாய்ச் சொல்லி விடை பெற்று வந்திருக்கின்றேன். ஆதலால், விரைவில் கிருபை செய்யவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — அப்படியாயின் இயலாது. எமது குருநாதர் கட்டளை அப்படி. அதனை கடத்தல் முடியாது. நமக்குத் தொண்டு செய்வதானால் உடனே உயிர்ப்பிக்கின்றோம்.

**சந்திரமதி** — சுவாமீ, அதனைமட்டும் மன்னித்து அருள்புரியவேண்டும். இனித் தங்கள் பாதமே கதி. (விழுந்து காலைப் பிடித்துக்கொள்கின்றாள்.) — சுவாமீ, தெய்வமே முன்னின்று தங்களை யனுப்பியிருக்க, தாங்கள் எவ்வாறு மவுனமாயிருக்கக் கூடும். சுவாமீ கிருபைகூர்ந்து அருள் புரியவேண்டும். தேவரீரது பாதங்களே எங்களுக்குப் புகலிடம். இப் பாதங்களை ஒரு கணமும் மறவோம். சுவாமீ, இந்த மைந்தன் முகத்தைப் பார்த் தருள்செய்யவேண்டும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — அம்மா, நீ சொல்வதைக் கேட்கவும், செய்வதைப் பார்க்கவும் எமது மனம் கரைந்துபோகின்றது. ஆனால் ஒன்று சொல்கின்றோம். யாரேனும் இறந்தவன் எவ்வாறு உயிர்பெற்றான் என்றால், "அவன் இறக்கவில்லை, மூர்ச்சையாயிருந்தான், நான் போய் எடுத்து அணைத்துத் தண்ணீர் குடிப்பித்தேன். மூர்ச்சை தீர்ந்து எழுந்துகொண்டான்" என்று சொல்லிவிடு.

**சந்திரமதி** — சுவாமீ, இப்படியும் சொல்லலாகுமா. தெய்வந்தான் பொறுக்குமா. அவ்வாறு சொல்லின் பொய்யாக வன்றோ முடியும். அன்றி செய்நன்றி கொன்றதாகிய குற்றமும் சம்பவிக்குமே, சுவாமீ. அவ்வாறு எப்படி சொல்லலாகும், சுவாமீ. என்ன செய்வேன். ஐயோ காசிநாதா, கடைக்கண் பார்த்தருளாயா.

**எல்லாம் வல்ல சித்தர்** — அம்மா, இதெல்லாம் வீண்பேச்சு. இறந்தவனை உயிர்ப்பித்தல் எவர்க்கும் அரிது. அது எனது குருநாதர் கடாக்ஷத்தினால் எமக்குக் கிடைத்திருக்கின்றது. அது ஒருவரும் அறியக்கூடாது. ஒருவ ரறிந்தால் உலக மறியும். ஒருவருக்கும் தெரியப்படாது என்பதற்கே எமக்குத் தொண்டு

செய்துகொண் டிருக்கவேண்டும் என்றோம். அது கூடாமை என்கிறாய், அதனால் இவ் விஷயத்தைச் சற்று மாற்றி உலகத்தார் கேட்கும்போது உரைக்கும்படி சொல்கின்றோம். அதற்கும் நீ உடன்படுவதாகக் காணோம். இனி உங்கள் கதிபோலாகட்டும், யாம் போகின்றோம்.

(விரைந்து போகின்றார்.)

**சந்திரமதி** — (பின் தொடர்ந்து) சுவாமீ, சுவாமீ! தயை செய்யவேண்டும். கிருபை செய்யவேண்டும். அடியாள் ஆருமற்றவள். தமது பாதங்களில் விழுந்து வேண்டுகின்றேன். சுவாமி, கடைக்கண் பார்த்தருளும்.

**எல்லாம் வல்ல சித்தர்** — முடியாது, முடியாது. எம்மால் ஒன்றும் ஆகாது. யாம் போகின்றோம். இல்லாவிடில் யாம் முன்னே கூறியபடி இரண்டில் ஒன்று ஏற்படவேண்டும்.

(சிறிது தூரத்தில் நிற்கின்றார்.)

**சந்திரமதி** — சுவாமீ! "ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப் படும்" ஆதலால், நாங்கள் பழிபாவங்களுக்குப் பாத்திரராகாமல், எதைச் செய்யக் கட்டளையிடினும் செய்யச் சித்தமாயிருக்கின்றோம். தம்மையொத்த மகரிஷிகள் விலக்கிய கருமங்களை எவ்வாறு செய்வது. கிருபைகூர்ந்து இப் புதல்வனை உயிர்ப்பித்தல் வேண்டும். நமஸ்கரிக்கின்றேன்.

(விழுகின்றாள்.)

**எல்லாம் வல்ல சித்தர்** — எமது குருநாதர் கட்டளையை யாம் மீறிச் செய்தல் கூடாது. செய்யினும் அது பலியாது. என்ன செய்யலாம் "ஆவாரை யாரே யழிப்பர் அதுவன்றிச் சாவாரை யாரே தவிர்ப்பவர்." இனி யாம் ஒன்றும் செய்ய இயலாது, செல்கின்றோம்.

(விரைந்து போகின்றார்.)

**சந்திரமதி** — சுவாமீ, சுவாமீ, மன்னிக்கவேண்டும். திக்கற்றுத் தவிக்கின்றேன். சுடலையைக் காட்டுவாரையும் காணாமல் தவிக்கின்றேன், சுவாமீ.

**எல்லாம் வல்ல சித்தர்** — நீ நின்றவிடத்திலிருந்து நேர்முகமாக நோக்கினால், சிறிது தூரத்தில் தீப்பற்றி எரிவது தோன்றும். அதுவே சுடலை, போகலாம்.

(விரைந்து சென்று மறைந்துவிடுகின்றார்.)

**சந்திரமதி** — (தனியே) ஐயோ தெய்வமே! காசிநாதா! இவ்வாறும் தீவினை எய்துமா! நமது துக்கத்திற்கு உவமையும் உண்டோ, 'பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்' என்பதற்கு

நாமன்றோ திருஷ்டாந்தமாயிருக்கின்றோம். ஐயோ தெய்வமே, கைக்கெட்டியதும் வாய்க்கெட்டாமற் போயிற்றே. நமது வினை இவ்வாறிருந்தது, என்செய்வோம். முதலில் கொண்டதேபோல சுடலையை நண்ணித் தகனஞ்செய்து விரைவில் வேதியரது வீட்டை யடைவோம். அப்பா மகனே, வரவுர கனமாகத் தோன்றுகின்றாயே. காலிலோ முள்ளுந் தைக்கின்றது. ஐயோ உன்னைத் தாங்கிச் செல்லவும் கூடவில்லையே. என்ன செய்வேன். தீப்பற்றி எரிவதும் சமீபத்தில் தான் தோற்றுகின்றது. ஆ தெய்வமே, என் மணாளர் எங்கிருக்கின்றாரோ. பிள்ளையைத் தகனம் செய்யவும் இல்லாமற் போயினாரே. அந்தோ பரமேசா. இதுவும் உன் திருவிளையாடலா.

## ஐந்தாங் களம்



**இடம்:** அரண்மனைத் தோட்டம்.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** பரமாநந்தன், விசுவநாதன் (காசிமன்னன் புத்திரன்.)

[பரமாநந்தன் விசுவநாதனது ஆசிரியர் உருக்கொண்டு அரண்மனைத் தோட்டத்தை யடைகின்றான்.]

**விசுவநாதன்** — ஐயா! என்னைத் தேடிக்கொண்டா இங்கு வந்துவிட்டீர்கள்? என்னோடு துணையாக வந்த சம்பிரதியை முன்பு வித்யாமண்டபத்திற்கு அனுப்பி, யாவும் சித்தப்படுத்தச் சொன்னேன். சற்று இருங்கள், போகலாம்.

**பரமாநந்தன்** — விசுவநாத! யான் இன்று சற்று முன்பு செல்லவேண்டும். இன்று விசுவநாதர் ஆலயத்தில் மஹாபிஷேகம் நடக்கின்றது. ஆடல், பாடல் முதலிய வேடிக்கைகள் மிகுதியும் உண்டென்று மனிதர் திரளாகச் செல்கின்றார்கள். அதனால், யான் சீக்கிரம் பாடத்தை முடித்துவிட்டுச் செல்ல உன்னை இங்கே தேடிக்கொண்டு வந்தேன். விரைந்து வருவாய்.

**விசுவநாதன்** — ஐயா! ஆலயத்தில் அவ்வளவு விசேஷமா இன்று! ஆனால், யானும் தங்களோடு வருகின்றேன். இன்று பாடம் வேண்டா.

**பரமாநந்தன்** — விசுவநாத! நீ வருவதென்றால் இப்போது முடியாது. நான் சீக்கிரம செல்லவேண்டும்.

**விசுவநாதன்** — ஐயா! ஏன் அவ்வாறு சொல்கின்றீர்கள்? நானும் ஒரு நொடிப்போதில் வந்துவிடுகின்றேன்.

**பரமானந்தன்** — அதெப்படி முடியும்? நீ வருவதென்றால், தாய் தந்தையர் அநுமதி பெற்றுக்கொண்டு, ராஜ சின்னங்களுடன் வரவேண்டும். அதுவரையில் அபிஷேகம் நிற்காது. முன்பு சென்றால்தான் அபிஷேகத்தைக் கண்குளிரக் கண்டு மகிழலாம்.

**விசுவநாதன்** — ஐயா! அதெல்லாம் ஒன்றுமில்லை. இத் தோட்டத்தில் உலாவி வருவதாக முன்னமே என் பெற்றோரிடம் அநுமதி பெற்றுக்கொண்டேன். அதனால், தங்களுடன் வரத் தடையில்லை. ஆலயம் சமீபத்தில் இருப்பதனால் நடந்தே வருகின்றேன்.

**பரமானந்தன்** — ஆனால் சரி, புறப்படு போவோம். நீ பாதசாரியாய் வீதியில் வருவது ஏற்றதல்ல. அரண்மனைப் புறத்திலிருக்கும் கொடிவழியே ஒருவரும் அறியாமல் போய் வந்துவிடுவோம்.

**விசுவநாதன்** — ஆஹா! அப்படியே செய்வோம். யாருக்கும் தெரியாமற் போய் வந்துவிடுவதே நலம்.

(போகின்றனர்.)

**பரமானந்தன்** — விச்வநாதா! ஒதுங்கி தேய்ந்த வழியே வருவாய். இது மிகவும் சிறு வழி.

**விசுவநாதன்** — அப்படியே வருகின்றேன். ஐயா! இன்னும் எவ்வளவு தூரம் இருக்கும்?

**பரமானந்தன்** — இதோ சமீபந்தான். அதோ ஒரு தோப்புத் தெரிகின்றதே அதைக் கடந்தால் ஆலயந்தான்.

**விசுவநாதன்** — அப்படியா, நெடுந்தூரமாக இருக்கிறதே. வீதி வழியாய்ச்சென்றால் சமீபத்தில் இருப்பதாகக் காண்கின்றதே.

**பரமானந்தன்** — வீதிவழியாய்ச் சென்றால் இன்னும் வெகுதூரமிருக்கும். நீ வண்டியில் போய் வருவதனால் சமீபத்தில் இருப்பதாகத் தோன்றும். மற்றப்படி இந்த வழிதான் சமீபமானது.

**விசுவநாதன்** — ஐயா! அப்படியும் இருக்கலாம். இதுதான் நான் முதல் முறை இவ்வளவு தூரம் நடப்பது. காலும் சற்று நோகின்றது. நாக்கும் வறட்சி யடைகின்றது. இங்கு ஏதேனும் குளம் உண்டானால், கொஞ்சம் தண்ணீர் அருந்தலாம். தாகம் அதிகமாக இருக்கிறது.

**பரமானந்தன்** — அப்படியா! இதோ ஒரு குளம் காண்கிறது. இங்கு நில், தண்ணீர் கொண்டு வருகின்றேன்.

(போய் தண்ணீர் முகந்து அதில் மூர்ச்சிக்கச்செய்யும் விஷத்தைக் கலந்து கொண்டுவந்து கொடுக்கிறான்.)

**விசுவநாதன்** — (*ஆவலோடு தண்ணீரைக் குடித்துக்கொண்டே*) ஐயா! இது சிறிது கசக்கின்றது.

**பரமாநந்தன்** — ஆமாம், நான் வரும் வழியில் வயித்தியர் வீட்டுக்குச் சென்று, இந்தச் சிறு பாத்திரத்தில் மருந்து வாங்கிச் சாப்பிட்டேன். அந்த மருந்து சிறிது பாத்திரத்தில் தங்கியிருக்கும். அதனால் குற்றமில்லை. தேகத்திற்கு சவுக்கியமானதுதான் வேண்டியமட்டும் குடி.

(*விசுவநாதன் மற்றும் சிறிது குடிக்கின்றான்.*)

**விசுவநாதன்** — (*சிறிது சென்று*) ஐயா! எனக்குத் தலை சுற்றுகின்றது. மயக்கமாக இருக்கின்றது. இனி நடக்க என்னால் முடியாது. ஓர் அடி எடுத்து வைக்கவும் என்னால் ஆகாது.

**பரமாநந்தன்** — குளிர்ந்த சலம் சாப்பிட்டு உனக்கு வழக்கமில்லை. அதனால், சிறிது இங்கே படு; மயக்கந் தீர்ந்த பிறகு எழுந்து போவோம்.

(*விசுவநாதன் படுத்து உணர்வற்றுக் கிடக்கிறான். பரமாநந்தன் விசுவநாதனது ஆடைகளையும் அணிகளையும் கழற்றிச் செம்பட்டு வஸ்திரத்தை உடுத்தியபின் பிரேதம்போலிருக்கும் விசுவநாதனைத் தூக்கிக்கொண்டு மறைகின்றான்.*)

## ஆறாங் களம்



**இடம்:** சுடலை.

**காலம்:** நள்ளிரவு.

**பாத்திரங்கள்:** சந்திரமதி, அரிச்சந்திரன், வீரன்.

**சந்திரமதி** — (*தனியே*) ஆ பரமேசா. இதுதான் சுடலைபோல் தோன்றுகின்றது. பிணங்களைக் கொளுத்தும் இடமும் இதுவாகவே காண்கின்றது. ஆ தெய்வமே! என்ன கதி இது! என் அருமைப் புதல்வனை அடக்கஞ் செய்யவும் கதியற்றிருக்கின்றேனே. அடக்கஞ் செய்வதென்றால் உடலை மண்ணின் கீழ் புதைக்க வேண்டும். இல்லாவிடில் எரியிட்டுக் கொளுத்த வேண்டும். இவ்விரு வகைக்கும் நமக்கு வழியில்லை. துக்க மிகுதியால் ஒன்றும் தோன்றாமல் வந்துவிட்டோம். ஐயனைக் கேட்டிருந்தால் அடக்கஞ் செய்வதற்கான உதவியை ஒருகால் செய்திருந்தாலும் இருக்கலாம். இனி இதை எண்ணுவதிற் பயனில்லை. மண்ணின் கீழிட முடியாது. ஒருவாறு எரியிலிடுதல் கூடும். இதோ இத்தனை பிணங்கள் கொளுத்தப்பட்டிருக்கின்றன. இவற்றைச் சுற்றிப் பார்த்-

தால், எரிந்து குறைந்த கட்டைகளும், எரிமுட்டைகளும் ஏதேனும் சில கிடைக்கலாம். ஐயோ கிடைக்கக் கூடிய அவ்விறகிலேயே இவ்வுடல் நன்றாய் எரிபடுமோ, படாதோ அறியேனே! ஆ, ஆ, என்ன காலம்! இருக்கும் நிலையிலிருந்து இறந்திருந்தால், ஆ தெய்வமே, சந்தனம், அகில், தேவதாரு முதலிய கட்டைகளும், மற்றும் வாசனைத் திரவியங்களும் குவிந்துவிடுமல்லவா? ஆ, பரமேசுவரா? இத் தேகத்தை உனது காவலில் வைக்கின்றேன். தெய்வமே! திக்கற்ற ஏழைக்கு நீயே கதி. (விறகுகளைப் பொறுக்கிச் சேர்த்து அடுக்கிய பிறகு) ஐயோ, ஐயோ! எவ்வளவு அருமையாக வளர்த்த வுடல்? மஞ்சத்தில் இலவம் பஞ்சு மெத்தையில் படுக்கவும் பொருத மெல்லிய தேகம் இப்போது எதன்மீது படுக்கின்றது. இந்தக் கட்டை கட்டையோடே கலக்கின்றதே. (கட்டை மீது பிணத்தை வைக்கின்றாள்.) ஆ காசிநாதா! இதென்ன வாழ்வு. முடிவில் கட்டையில் இடும் வாழ்வுதானே. ஆ, இனி நான் என்ன செய்வேன்! தீ மூட்டிக் கொளுத்த வேண்டும். ஐயோ, ஐயோ, யான் கட்டையில் தீ மூட்டுமுன் என் கட்டையில் தீ மூண்டு எரிகின்றதே. அடா, என் அருமைத் தேவதாசா! கண்மணீ! என்னைத் தனியே விட்டுப் போகின்றாயா! ஐயோ உன் தந்தையாரும் இல்லையே. முடிவில் முகத்தில் விழிப்பதற்கும் இல்லாமற் போயினரே. (புருஷனை நினைத்து ஆகாயத்தை நோக்கி) ஆ என் உயிர்போன்ற உத்தம! இதோ உமது அருமை மைந்தனைத் தகனஞ் செய்யக் கொள்ளி வைக்கின்றேன்.

(கொள்ளி வைக்கின்றாள்.)

**அரிச்சந்திரன்** — வீர, அப்பா, வீர!

**வீரன்** — ஏ௦ யண்ணு, தூக்கத்துலே எயுப்புரே.

**அரிச்சந்திரன்** — வீர எழுந்திரு. சுடலையில் ஏதோ தனிக்குரல் கேட்கிறது. தீயும் மூண்டு எரிகின்றது. எழுந்து போய்ச் சுற்றிப்பார்.

**வீரன்** — இதின்னுடா, எயவா போச்சி பாராத்திலேகூட (எழுந்து போகின்றான். சுற்றிப் பார்க்கையில் சந்திரமதியை யணுகி) த்ரோ யப்பா, இது இன்னுடா எண்ணேக்கு௦ பாக்காத சங்கிதி. யாரோ பொம்ளுட்டி யாட்டங் கீது. யார்ராது நிக்கிறது?

**சந்திரமதி** — ஐயா! நான் ஒரு பெண்பிள்ளை.

**வீரன்** — பொம்ளுட்டியா – பேயா – பிசாசியா?

**சந்திரமதி** — ஐயா, நான் பேயுமல்ல, பிசாசுமல்ல. ஒரு பெண் பிள்ளைதான்.

**வீரன்** — பொம்புளெயா. இங்கே யாரு வந்தெ, இந்த் பாராத்ரிலே.

**சந்திரமதி** — இறந்துபோன என் மகனைத் தகனஞ்செய்ய இங்கு வந்தேன் ஐயா.

**வீரன்** — இன்னடா பெயவா கீது. ஒரகூட வந்தவங்க அல்லாரு எங்கே?

**சந்திரமதி** — என்னோடு ஒருவரும் வரவில்லை. யான் திக்கில்லாதவள். என் மகன் இறந்துவிட்டான், அவனைத் தகனஞ் செய்யத் தனியே வந்தேன் ஐயா.

**வீரன்** — ஒரே பொம்னட்டி மாத்தமா வந்தே. மாண்டவனெ எப்படி தூய்க்காந்தெ.

**சந்திரமதி** — நானே தோள்மேல் தூக்கிக்கொண்டு வந்தேன்.

**வீரன்** — நீ சொல்ரது நம்பர சங்கதியா காணமே. என்னமோ சூது கீராப்பலெ கீதே. செரியா செல்லம்மெ. எங்களுக்கு மாமூலுஞ் சேர்லெ. ஒண்டிமா வந்து கீரே. என்ன சங்கதி. நாங்க தூங்கினு கீரப்போ வந்தியே, அது இன்னு, செத்த நண்ணு செல்லு.

**சந்திரமதி** — நான் ஒருவர் வீட்டில் அடிமைப்பட்டிருப்பவள். என் மகன் காட்டில் தனியே இறந்துவிட்டான். அந்தப் பிணத்தைத் தேடி எடுக்க இரவாகிவிட்டது. எனக்கோ சுடலை இங்கிருக்கிற இடம் தெரியாது. ஒரு பெரியவர் வழி காட்டினார். அப்படியே பிணத்தைத் தோள்மீது தூக்கிக்கொண்டு வந்து இங்கு இறக்கினேன். பிறகு, பல பக்கங்களிலும் ஆராய்ந்து எடுத்த கட்டைகளை அடுக்கி, அதன் மேல் மகனை வைத்துத் தீ மூட்டினேன். இதற்குள் நீர் வந்தீர் ஐயா!

**வீரன்** — த்ரோ யப்பா, நல்லா கீதே நாயம். ஏ யம்மா, இன்னு இப்படி செல்ரியே. நாங்க ராவா பவலா சொடலெயெ காத்துக்குனு இங்கெ உயுந்து கடக்கிறமே, எங்களுக்குஞ் செல்லாதே, கட்டணமுங் குடுக்காதெ பொணெத்தெ தூக்கினு சொடலெ வுள்ளெ வந்துட்டே. வெரவு கிரவெல்லாம் இங்கியெ சேத்துக்கினே. அதெல்லா கடக்கட்டும், எங்க கட்டணத்தெ போடு மின்னெ. ஏ யம்மா, நீங்க பேசர்தெ பாத்தா குடியானவங்க ளாட்டங்கீதே, இப்படிகூட ஷேயலாமா.

**சந்திரமதி** — ஐயா யான் முன்னமே ஒருவருக்கு அடிமை யென்று சொன்னேன். மகனைச் சுடவும் கட்டையில்லாமல் மற்றப் பிணங்கள் வெந்து மிகுந்த கட்டைகளைத் தேடிச் சேர்த்தேன். உங்களுக்குக் கட்டணம் எங்கிருந்து செலுத்துவேன்!

**வீரன்** — இந்தச் சங்கதில்லாo எங்களுக்கு ஏo. எங்க எஜமாo எங்களுக்கு சென்ன பெரகாரம் காப்பணம், மொயந்துண்டு, வாக்கரிசி சேர்ணம். அத்தெ இப்டி போட்டுட்டு நீ எப்டி-யாஞு சேஞ்சிகோ, நாங்களே கிட்ட இருந்து சுட்டுடோராo.

**சந்திரமதி** — ஐயா, நீர் கேட்கிறபடி பணம் முதலியவைகளைக் கொடுக்கும் சக்தி எனக்கிருந்தால், இந்த நடுராத்திரியில் தனியாகப் பிணத்தைத் தோள்மேல் சுமந்துகொண்டு வரு-வேனோ. மற்றப் பிணங்கள் சுட்டு மிகுந்த கொள்ளிக் கட்டைகளைப் பொறுக்கிச் சேர்த்து அதனுல் சுடுவேனு. இதுகளைக் கவனித்து என் மகனைத் தகனம் செய்ய உத்-தரவு கொடுக்கவேண்டும். மேலும், இவ்வூர் வழக்கத்தை யான் அறிந்தவளும் அல்ல, ஐயா.

**வீரன்** — இன்னுடா சனியனு கீது. ஒண்ணுமில்லாத சுட்டுட-ணுமாமே வயம்மே, இதெல்லா ஆணுபேச்சி. நாo சென் னத்தெ குடுத்தா குடு, இல்லாக்காட்டி பொணத்தெ எடுத்-துக்குனு, அப்பாலே போ. அப்ரம் நாo சும்மா இக்க மாட்டெo.

**சந்திரமதி** — ஐயா, என்னிடத்தில் ஒன்று மில்லை. இந்தப் பிணத்தை எடுத்துக்கொண்டு எங்கே செல்வேன். தயவு செய்து தகனஞ்செய்ய உத்தரவு கொடுக்கவேண்டும்.

**வீரன்** — எடுத்துக்குனு போம்மேண்ணுக்கா உத்துருவு கொடுண்ரே. போம்மெ போ, இந்தா ஊம் புள்ளெ, எடுத்துக்குனு போ, அப்பாலே போ.

(உதைத்துத் தள்ளிவிட்டுப் போகின்றான்.)

**சந்திரமதி** — (பிணத்தை விரைந்து ஓடிப் பற்றிக்கொண்டு) ஐயோ, ஐயோ, மகனே இந்தக் கதியையும் என் கண்ணுற் பார்க்க என்ன பாவஞ் செய்தேனே! ஐயோ தெய்வமே, ஐயோ தெய்-வமே! இந்தப் பொன்னுன உடலை வெட்டியான் உதைக்-கவும் ஆயிற்றே! இதைக் கண்டும் என் உயிர் உடலி-லிருக்கின்றதே. என்னைப்போல் பாவியும் உலகில் உண்டா! அடா என் கண்மணீ!

(அழுகின்றாள்.)

**வீரன்** — (அரிச்சந்திரனை அணுகி) ஒ யண்ணு!

**அரிச்சந்திரன்** — அப்பா வீர, என்ன சங்கதி.

**வீரன்** — இன்னு யண்ணு! எயவா போச்சி, ஒரு ஜானுண்டு பொம்-பளெ, மகெo செத்துப் பூட்டானு, அவனெ தோள்மேலே தூக்கினு ஒண்டிமா வந்து, அங்கெ கடந்த கட்டைங்களெ அடிக்கி, கொள்ளி வெச்சிகினு கீரா யண்ணு. நாo போயி நம்ப-

ளுக்கு சேரவேண்டியத்தெ கேட்டாக்கா இல்லெண்ணாயண்ணு, எத்தினிவாட்டி சென்னெம், கேக்லெ. கடிசிலெ அந்த பொணத்தெ எட்டி காலாலே தள்ளிப்பூட்டு வந்தூடேம் யண்ணு. இனிமே செத்தெ நீதா யண்ணு போவுணும். அந்த வொலத்தினி மன்சி என்னென்னமோ பேசராண்ணுக்கா.

**அரிச்சந்திரன்** — வீர! கட்டளையைச் செலுத்தாமலா சுடுகின்றார்? நீ கேட்டு இல்லை யென்றதற்குப் பிணத்தை உதைத்தா தள்ளினை! ஐயோ கடவுளே! என்ன பரிதாபம்! வீர! பணத்தை அவமதிக்கினும் பிணத்தை அவமதிக்க ஒண்ணாது. உயிரோடு கூடிய உடலைவிட, உயிரை நீங்கிய உடலை மிகவும் கனம்பண்ணவேண்டும். நீ உதைத்ததைக் கேட்டு மிகவும் வருந்துகின்றேன். அப்ப வீர! இனி யப்படிச் செய்யாதை. போய் பார்ப்போம். (*தனியே*) என்ன இது! இந்த நள்ளிருளில் தனியாக எந்தப் பெண்பால் சுடலைக்கு வரக்கூடும். ஆச்சரியமாகக் காண்கின்றது. பார்ப்போம் நெருங்கிக் கேட்போம். (*சந்திரமதியைச் சமீபிக்கின்றான்*) அம்மா நீ யார்?

**சந்திரமதி** — ஐயா! நான் ஓர் பெண்பிள்ளை, ஒரு பிராமணர் வீட்டில் அடிமை வேலை செய்பவள்.

**அரிச்சந்திரன்** — என்ன, அடிமை வேலையா? எந்தப் பிராமணர் வீட்டில்?

**சந்திரமதி** — இவ்வூர் அக்கிராரத்தில் காலகண்ட ஐயர் என்பவர் ஒருவர் இருக்கின்றார். அவர் வீட்டில் அடிமையாக இருப்பவள்.

**அரிச்சந்திரன்** — (*ஐயோ பரமேசுவரா*) இந்த நடுராத்திரியில் இங்கு வந்தது யாது காரணம்?

**சந்திரமதி** — ஐயா, எனக்கு ஒரு மைந்தன் உண்டு. அவனை அந்தப் பிராமணர் சமிதை முதலியவற்றைக் கொய்து வரும்படி மற்றப் பிராமணப் பிள்ளைகளோடு இன்று காட்டிற்கு அனுப்பினார். சாயங்காலம் அப் பிராமணப் பிள்ளைகள் திரும்பி வந்து என் மைந்தன் அரவு கடித்து இறந்துவிட்டதாகச் சொன்னார்கள்.

**அரிச்சந்திரன்** — ஐயோ, ஐயோ, காசிநாதா!

**சந்திரமதி** — பிறகு, என்னை அடிமை கொண்டவர்களிடம் விடை பெற்றுக்கொண்டு, காட்டில் நெடுநேரந் தேடி, முடிவில் பிணத்தைக் கண்டெடுத்து, தகனஞ்செய்ய இங்குக் கொண்டு வந்தேன் ஐயா.

**அரிச்சந்திரன்** — அடா செல்வத் தேவதாசா! நீயோ அரவு கடித்து மாண்டாய்.

(பிணத்தின்மேல் விழுந்தழுகின்றான்.)

**சந்திரமதி** — ஐயோ என் பிராணநாத!

(அவளும் விழுந்து அழுகின்றாள்.)

**அரிச்சந்திரன்** — ஆ, என் கண்ணே! தேவதாசா! அப்பா என்னை விட்டு எப்படிப் பிரிந்தாயடா கண்மணீ! ஆ தெய்வமே! என்ன செய்வேன்! அடா கண்மணீ! உன்னை அந்தணர்க்கு அடிமையாக்கிப் பிரிந்தேனென்று என்னை வெறுத்து அந்தரத்திற் பிரிந்து சென்றாயோ! அடா என் செல்வமே! அரவு கடித்தோ இறந்தனை! ஐயோ அவ் வரவு சீறிக் கடிக்கும்போது, அடா கண்மணீ! என்னென்ன நினைத்தாயோ? எவ்வாறு ஏங்கினையோ! ஐயோ இவ் விளமையிலேயே காடு மலைகளில் அலைந்து திரிந்து, காய் கனிகளை யருந்தி, அடிமைப்பட்டு முடிவில் இறந்தும் பட்டனை. அடா கண்மணீ! எனக்கு மைந்தனாகப் பிறந்து அடைந்த வாழ்வு இதுதானோ! அடிமைகொண்ட அந்தணர் உன் கையைப்பற்றி யிழுத்தகாலத்தில் கன்மனங்கொண்டிருந்த இப் பாவியினிடத்தில் உறவேன் என்று கருதி உயிர் விட்டனையோ! நாடு நகரங்களைத் துறந்து, உணவுக்கும் உடைக்குமே வழியில்லாத இவன் எவ்வாறு நம்மை மீட்கப் போகின்றான் என்று எண்ணி உயிர்விட்டனையோ! ஐயோ என் கண்மணீ! தேவதாச உன்னைப் பறி கொடுத்து, எப்படி உயிர்வாழ்வது! ஐயோ, ஐயோ, இனி எனக்கென்ன வாழ்வுண்டு. சேயோடு தான் பெற்ற செல்வம் போம் -- இனி யான் இருந்தென்ன, இறந்தென்ன!

**சந்திரமதி** — ஆ, என் பிராணநாத! தாங்கள் யாவும் அறிவீர்கள். தாங்களே இவ்வாறு மனங் கவன்றால் தங்களைத் தேற்றுவார் யாவர்? கடல் கொதிப்படைந்துவிட்டால், அதை மற்றெந்த நீரால் ஆற்றுவது. பிராணநாதா! இவ் வாழ்வோ நிலையற்றது. பிறப்பதும் இறப்பதும் இவ் வுடலுக்கு இயற்கை. இதுகண்டு வருந்துவது எதற்கு. ஆவாரை யாரே யழிப்பர்? சாவாரை யாரே தவிர்ப்பர்? இவ்வாறு தாங்கள் வருந்தவேண்டா. சென்றதை யுன்னிக் கன்றுவது நன்றல்ல. வருந்தவேண்டாம்.

(கண்ணைத் துடைக்கின்றாள்.)

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! இன்னும் நமக்கு என்ன வாழ்விருக்கின்றது! ஐயோ.

**சந்திரமதி** — பிராணநாத! வாழ்வில்லையென்பது மெய்யே. என்ன செய்வது! அவரவர் வினையின்படி அவரவர் வருவர்—போவர். உற்று உணரின் உறவினர் யாவர். மனைவி மக்களாதியோர்

உடலுக்கான உறவினர். உயிர்க்கு உற்ற வுறவாவது உண்மை யொன்றே. அதனை அழிக்காது வாழ்வதே நம்முடைய கடமை என்பது தாங்கள் பல முறையும் உரைப்பதன்றோ. தாங்கள் இக் கோலம்பூண்டு இங்கிருப்பானேன்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! யானோ நட்சத்திரேசர்க்குச் செலுத்த வேண்டிய தரகின்பொருட்டு இச் சுடலையின் எஜமானராகிய தோட்டிக்கு அடிமைப்பட் டிருக்கின்றேன்.

**சந்திரமதி** — ஐயோ ஆ, ஜகதீசா, இதுவும் ஒரு கதியா! (மேலே சாய்கின்றாள்.) ஐயோ விதியே! நடு நாட்டுக் காவலராயிருந்த தேவரீர், சுடுகாட்டுக் காவலராகவும் விதியாயிற்றே. ஆ, காசிநாதா!

(கண்ணீர் விடுகின்றாள்.)

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! இதுவரையில் எனக்குத் தேறுதல் கூறிய நீ, இப்போது வருந்துவது எதற்கு? என் எஜமானர் ஒரு சவத்திற்குக் கால்பணமும் முழந்துண்டும் கொள்ளியாடையும் பெற்று, அவற்றைத் தனக்கு அனுப்பவும், வாய்க்கரிசியை யானடையவும் கட்டளை யிட்டிருக்கின்றனர். ஆகையால், வாய்க்கரிசி யில்லாதொழியினும் காற்பணமும் முழந்துண்டும் வேண்டும், அவையின்றிச் சவத்தைத் தகனஞ் செய்தல் ஆகாது. ஆகையால், பெண்மணீ! நீ விரைந்து வேதியரிடஞ் சென்று காற்பணமும் முழந்துண்டமும் பெற்றுக்கொண்டு விரைவில் வருவாய்.

**சந்திரமதி** — பிராணநாதா! அவ்வாறே சென்று பெற்று வருகின்றேன். விடியற்கால மாகின்றது. இப்பொழுதே போய் வருகிறேன்.

**அரிச்சந்திரன்** — சற்று இருளென்றும் பாராமல் சென்று விரைந்து வருவாய்.

**வீரன்** — ஏ, யண்ணு! இது நம்ப கொயந்தையா! யண்ணு.

**அரிச்சந்திரன்** — ஆம் அப்பா, நமது குழந்தைதான்.

**வீரன்** — ஐயோ பாவம்! இந்தம்மா உங்க ஊட்டுக்காரியா யண்ணு.

**அரிச்சந்திரன்** — ஆம் அப்பா.

**வீரன்** — அப்டிண்ணுக்கா, அந்தம்மாளெ இப்பொ எங்கே அனப்புரே?

**அரிச்சந்திரன்** — காற்பணமும், முழந்துண்டும் வாங்கிவர அனுப்புகின்றேன்.

**வீரன்** — தா, யண்ணு! உனுக்கு பயித்தியங் கியித்தியம் புடிச்சிபோச்சா இன்னு. நம்ப கொயந்தே, அதுக்குகூட பணமும்

துண்டா! யம்மா, நீ சும்மாயிரு யம்மா. இந்த யண்ணெ எதுக்கும் இப்படித்தான். ஐயோ யப்பா, நாங்கூட காலாலெ தள்ளீட்டெண!

**அரிச்சந்திரன்** — அப்பா, வீர! அப்படிச் செய்வது சரியன்று. நமது பிள்ளையாணு லென்ன. கட்டளையை மீறி நடத்தல் ஒண்ணுது. அவ்வாறு செய்வது மோசமாகும். கூடாது கூடாது. பெண்மணீ செல்வாய்.

(செல்கின்றுள்.)

**வீரன்** — இந்தா யம்மா! அந்த யண்ணெ எத்தெயுங் கேக்றதில்லெ. நீ சும்மாயிரு. நா சேய்றென் எல்லாம், வா யம்மா.

**சந்திரமதி** — ஐயா! வேண்டாம் வேண்டாம். நியாய விரோதமாய் ஒன்றுஞ் செய்யலாகாது. கட்டளைப்படி கொடுத்தே தீர வேண்டும், தடுக்க வேண்டாம். நான் கூடிய சீக்கிரத்தில் வந்து விடுகின்றேன். என் கண்மணியைப் பத்திரமாய்ப் பார்த்துக்கொள், ஏதேனும் கிட்ட வரப்போகிறது.

(போகிறுள். வீரனும் தொடர்ந்து போய் சிறிது தூரத்தில்)

**வீரன்** — (தாழ்ந்த குரலாய்) ஓ யம்மா! இந்தா யம்மா! உன்னெதா யம்மா!

**சந்திரமதி** — (திரும்பிப் பார்த்து) ஏன், ஐயா.

**வீரன்** — யம்மா மின்னெவந்த பொணத்துக்கு வந்திசே காபணமும் மொயந்துண்டு: அது யாங்கிட்ட கீது. கொண்ணுந்து குடுக்கிறென். அத்தெ கொண்ணும் போயி குடுத்து, ஐயன்கிட்டெ வாய்ங்காந் தெண்ணிடு யம்மா. திக்கத்த பொணமாட்ட போட்டுட்டு போவாதெ யம்மா. இங்கதா நில்லு. போயி கொண்ணுரெ.

**சந்திரமதி** — அய்யா? அதெல்லாம் வேண்டாம். முன்பு வந்திருப்பது, உங்கள் எஜமானருக்குச் சேரவேண்டுவதாகும். அதை நீர் எடுப்பதும் திருட்டாகும். நான் வாங்கிக் கொடுப்பதும் திருட்டோடு பொய்யுமாகும். ஆதலால் அது வேண்டாம். யான் சென்று என்னை அடிமையாகக் கொண்ட ஐயரிடம் அவைகளைப் பெற்றுக்கொண்டு சீக்கிரம் வருகின்றேன். உனது மன இரக்கத்திற்காக நான் நன்றி பாராட்டுகின்றேன். நீ தயவு செய்து பிரேதத்தை யாதொன்றும் அணுகாதபடி பார்த்திருப்பதோடு, எனது மணளர் கண்ணீர் விட்டுக் கலங்காமலும் பார்த்துக்கொள்ளும். ஏற்றவாறு தைரியஞ் சொல்லும். நான் போய் சீக்கிரம் வந்துவிடுகின்றேன்.

(போகின்றுள்.)

**வீரன்** — ஆறு ஊட இஸ்டம். நா இன்னு செய்வெம.' போய்வா யம்மா.

(சந்திரமதி வருகின்றாள்; வழியில் ஒரு பிணம் காலில் தட்டுப்படக் கண்டு.)

**சந்திரமதி** — இதென்ன தட்டுப்படுகின்றது! (உட்கார்ந்து பார்க்கிறாள்.) ஆ! மகனே, இதென்ன மாயம்! இப்போது உன்னை அந்தச் சுடலையில் வைத்துவிட்டு வந்தேனே! ஏதேனும் மிருகம் கவ்விக்கொண்டு வந்து போட்டதோ! ஆ தெய்வமே, பிணமாகியும் இவனுக்கு இந்தக் கதியா! தோட்டியில் காலால் உதைப்பட்டது மன்றி, மிருகங்கள் சின்னபின்னப் படுத்தித் தின்னவும் கொண்டுவந்து விட்டனவே! ஆ காசிநாதா, இதுவும் உன்னருளா!

(அழுகின்றாள்.)

## ஏழாங் களம்



**இடம்:** காசி நகரத்தின் வீதிகள்.

**காலம்:** பின் மாலை.

**பாத்திரங்கள்:** காவற்காரர், முத்துவீரன் செட்டி, வேலாயுதாசாரி, சந்திரமதி.

**காவற்காரர் தலைவன்** — ரஞ்சிட்சிங்! இன்று பொழுது சாய நாலு நாழிகை முதல் நமது மகாராஜா அவர்களுடைய அருமைக் குமாரன் காணப்பட வில்லையாம். வயது சுமார் எட்டு இருக்கலாமாம். ஆகையால், காவற்காரரைப் பல பக்கங்களிலும் அனுப்பித் தேடச்செய். என்ன, ஆபத்தாக இருக்கிறது! மகாராஜா பிள்ளையே காணாமற் போனால், மற்றென்ன கதி. ஓடு, ஓடு, ஜாக்கிரதை. கண்டு பிடிக்கா விட்டால், நமது கதி அதோகதி தான். ஞாபக மிருக்கட்டும்.

**ரஞ்சிட்சிங்** — இதோ போகிறோம் எஜமானே. ஐயா இதைவிட எங்களுக்கு என்ன வேலை. அரை நாழிகையில் கண்டு பிடித்துவிடுகிறோம் பாருங்கள். (போகிறான்.) ஏ ரம்பால்சிங் இங்கே வா, கடுக வா. நமது மகாராஜா பிள்ளை இன்றைக்கு நாலு நாழிகை பொழுதுக்கு எங்கேயோ காணோமாம். அரை நாழிகையில் கண்டு பிடிக்கவேண்டும். இல்லாவிட்டால் தலை போய்விடும். என்னடா அப்பா, நமது தலைக்கே தாம்பூலம் வந்துவிட்டதே. மகாராஜா குழந்தை எங்கே போய்விடும்! மாயமா யிருக்கிறதே.

**ரம்பால்சிங்** — அதெல்லாம் பேசி இப்பொழுது என்ன காரியம்.

**ரஞ்சிட்சிங்** — எங்கே போவது, குளங் குட்டையிலே விழுந்து விட்டதோ. இல்லாவிட்டால் எந்தத் தெருவிலே வழி தப்பிப் போய்விட்டதோ, ஒன்றும் தெரியவில்லை.

**ரம்பால்சிங்** — டே ரஞ்சிட்சிங்! அரண்மனை யண்டை குளம் குட்டையும் காணோம். தெருவில் போனால் இந்நேரம் யாராவது தூக்கிக்கொண்டு வந்து இருப்பார்களே. எனக்கு என்னமோ கலவரமாய் இருக்கிறது. நகைக்கு ஆசைப்பட்டு, குழந்தை ஏமாந்து இருக்கப் பார்த்து, யாரோ எடுத்துக்கொண்டு போயிருக்கவேண்டும்.

**ரஞ்சிட்சிங்** — அப்படியானால் எங்கடா போய் தேடுவது.

**ரம்பால்சிங்** — இந்தச் சங்கதிகளெல்லாம் கள்ளுக்கடை சூதாடும் இடம் முதலிய இடங்களில் புலம் பிடித்தால் தெரியும். கள்ளுக்கடை யண்டை போகலாம் வா.

(கள்ளுக்கடையுள் நுழைகிறார்கள். இவர்கள் பின்னால் ஒரு சீஷன் செட்டி வேடம் பூண்டு கடைக்குள் நுழைகின்றான். மூவரும் உட்காருகின்றார்கள்.)

**ரஞ்சிட்சிங்** — ஐயோ பாவம், சின்ன பையன் ஏழெட்டு வயது இருக்கும். மகாராஜாவுக்கு ஒரே குழந்தை.

**முத்துவீரன் செட்டி** — என்னையா, மகாராஜா குழந்தைக்கு?

**ரஞ்சிட்சிங்** — சாயங்காலம் முதல் குழந்தையைக் காணோமையா.

**முத்துவீரன் செட்டி** — எட்டுவயதா! இன்று நாலு நாழிகைப் பொழுதுக்கு ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு ஒரு பெண்பிள்ளை தட்டார வீதி வழியாய்ப் போய்க்கொண் டிருந்தாள். குழந்தை ராஜ வடிவாய் மிகவும் அழகா யிருந்தது. உடல் நிறைய ஆபரணங்கள் பூண்டிருந்தது. ஒரு சமயம் அதுவாகத்தான் இருக்கலாமோ என்னமோ.

**ரம்பால்சிங்** — பெண்பிள்ளையா இட்டுக்கொண்டு போனாள்? தட்டாரத் தெருவுக்கா போனது.

**முத்துவீரன் செட்டி** — ஆமாம், ஆமாம்.

**ரம்பால்சிங்** — ஐயா, நீங்கள் எங்கே இருக்கிறது?

**முத்துவீரன் செட்டி** — நான் இச் சத்திரத்தில் இறங்கி இருக்கிறேன்.

**ரம்பால்சிங்** — எத்தனைநாள் இங்கே இருப்பீர்கள்?

**முத்துவீரன் செட்டி** — இன்னும் இரண்டு மூன்று நாள் இருப்பேன். கொஞ்சம் காசிப்பட்டு வாங்க வந்திருக்கிறேன். அதை வாங்கிக்கொண்டுதான் போகவேண்டும்.

**ரம்பால்சிங்** — அப்படியா, உங்கள் பேர் என்ன ஐயா?

**முத்துவீரன் செட்டி** — என் பெயர் க. ம. ப. முத்துவீரன் செட்டி.

**ரம்பால்சிங்** — சரி, சரி, க. ம. ப. முத்துவீரன் செட்டியா, சரி.

(காவற்காரர் தட்டார வீதி வழியாய்ப் போகிறார்கள். தட்டார உருவத்தோடு ஒரு சிடன் ஒரு திண்ணையில் உட்கார்ந்திருக்கிறான்.)

**ரம்பால்சிங்** — ஐயா, பத்தரே! எவ்வளவு நேரமாய் இங்கே உட்கார்ந்து இருக்கிறீர்கள்?

**வேலாயுதாசாரி** — நான் ஒரு ஜாம நேரமாய் இருக்கிறேன்.

**ரம்பால்சிங்** — சுமார் நாலு நாழி பொழுதுக்கு யாராவது ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு போகப் பார்த்தீரா?

**வேலாயுதாசாரி** — குழந்தையா?

**ரம்பால்சிங்** — ஆமாம்.

**வேலாயுதாசாரி** — என்ன வயது இருக்கும் குழந்தைக்கு?

**ரம்பால்சிங்** — ஏழெட்டு வயது இருக்கும்.

**வேலாயுதாசாரி** — ஆமாம் பார்த்தேன், ஒரு பெண் பிள்ளை இங்கே தான் ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு வந்தாள்.

**ரம்பால்சிங்** — ஆஹா, சரிதான், அவர்கள் எங்கே?

**வேலாயுதாசாரி** — அந்தம்மாள் இங்கே வந்தாள். சில நகைகளைக் கொடுத்து அவற்றை எல்லாம் அழித்து வேறே செய்யவேண்டும் என்றும் சொன்னாள்.

**ரம்பால்சிங்** — என்னென்ன நகைகள்?

**வேலாயுதாசாரி** — குழந்தை நகைகள். அழைத்துக்கொண்டு வந்தாளே அந்தக் குழந்தை யுடையதுதான்போ லிருக்கிறது. கல் வேறே பொன் வேறே பேர்த்து வைக்கும்படி சொன்னாள். அப்படியே கொஞ்சம் செய்தேன், கொஞ்சம் செய்யவில்லை. பொழுதாயிற்றென்று சும்மா வைத்துவிட்டேன்.

**ரம்பால்சிங்** — அந்தம்மாளும் குழந்தையும் எங்கே போனார்கள்?

**வேலாயுதாசாரி** — இப்படித்தான் நேரே போனார்கள்.

**ரம்பால்சிங்** — சரிதான் இருக்கட்டும். அந்த நகைகள் எங்கே?

**வேலாயுதாசாரி** — அது ஏன் உங்களுக்கு, ஒருவர் கொடுத்ததை மற்றொருவருக்குக் காட்டவும் கூடாது; கொடுக்கவும் கூடாது.

**ரம்பால்சிங்** — காட்டக் கூடாது, கொடுக்கக் கூடாது, திருட்டுச் சொத்தை வாங்கி இருக்கிருயே, காட்டமாட்டேனென்று கதை பேசுகிருயே. காட்டாமற்போனுல் வீட்டைச் சோதனை போடுவோம். பத்திரம் நாங்கள் யாரென்று தெரியாதா?

**வேலாயுதாசாரி** — ஐயையோ! இதென்ன ஆபத்தாக இருக்கிறது. எனக்கென்ன, இதோ கொண்டுவந்து விடுகிறேன். சோதனை கீதனை போடவேண்டாம். நானென்னமோ கவுரமாய் காலந் தள்ளி வருகிறவன்.

(நகைகளை எடுத்து வந்து காட்டுகிருன்.)

**ரம்பால்சிங்** — சரி, சரி, இதுதான், இவ்வளவு உயர்ந்த நகை வேறே யேது. கல்லைக்கூட பேர்த்துவிட்டாயே. ஐயா பத்தரே! எங்களோடு கொஞ்சம் வாருங்கள். இதை எவ்வளவுக்கு வாங்கினீர்கள்?

**வேலாயுதாசாரி** — ஐயா, காவற்காரரே நான் வாங்கவில்லை' அழித்து வேலை செய்யக் கொடுத்தாள். சரிதானென்று வாங்கிக்கொண்டேன். மற்ருென்றுந் தெரியாது. என்னை ஏனையா யிழுக்கிறீர்கள்?

**ரம்பால்சிங்** — உன்னை ஒன்றும் இழுக்கவில்லை வாரும். சங்கதியை மாத்திரம் உள்ளதை உள்ளபடியே சொல்லிவிடும். உம்மைச் சாட்சியாகப் போடுகிருேம். என்னமாவது ஒளித்தாலோ அப்புறம் ஊம் ———— தெரிந்துகொள்.

**வேலாயுதாசாரி** — ஐயா, பெரிய மனசு பண்ணவேண்டும். நான் ஏதாவது ஊம்————பார்த்துக்கொள்ளுகிறேன்.

**ரம்பால்சிங்** — அதெல்லாம் ஒன்றும் மாளாது. பார்க்கிறது உதவாது. இது மகாராஜா வீட்டுச் சங்கதி. அத்தோடு கழுத்தே போய்விடும்.

**வேலாயுதாசாரி** — ஐயா, ஐயா, நான் என்ன செய்வேன். வேலைசெய்கிறவன், யார் கொடுத்தாலும் செய்யவேண்டியவன். அந்த மனிஷி கொடுத்தாள்; நான் வாங்கி வைத்தேன். மற்ற பாவம் ஒன்றும் அறியமாட்டேன் ஐயா.

**ரம்பால்சிங்** — இப்போது நீ தப்பித்துக்கொள்ள வேண்டுமானுல் அந்த மனிஷியைக் காட்டிவிடு. இல்லாமற்போனுல் நீயே அகப்பட்டுக்கொள்வாய்.

**வேலாயுதாசாரி** — நான் எங்கே இருந்து காட்டுவேன். அந்தப் பாவி எங்கே போனுளோ, எனக்கென்ன தெரியும் ஐயா.

**ரம்பால்சிங்** — உன்னிடம் முன் பின் கொண்டுவந்து கொடுக்காமலா இப்பொழுது கொண்டுவந்து கொடுத்தாள்? இதென்ன

அல்ப சொல்ப நகையா? முன் பின் தெரியாமல் எப்படிக் கொண்டுவந்து கொடுப்பாள். சொல்லும் பார்க்கலாம். யாரையா நம்புவார்கள் நீ சொல்வதை! வா, வா எழுந்து.

**வேலாயுதாசாரி** — ஐயோ இதுவும் விதியா. (எழுகின்றான். மூவரும் போகிறார்கள்.)

**ரம்பால்சிங்** — ஐயா பத்தரே! எப்படியையா போனார்கள் சொல்லித் தொலையையா. திரிந்து திரிந்து போதுமென்று போச்சுது.

**வேலாயுதாசாரி** — ஐயா உள்ளபடி எனக்குத் தெரியாது. இப்படித்தான் நேரே போனாற்போல் இருக்கிறது.

**ரஞ்சிட்சிங்** — ஏது நீதான் அகப்பட்டுக்கொள்வாய் போல இருக்கிறது. சொல்லிவிட்டால் நீ தப்பித்துக்கொள்வாய். வீணாக ஏன் தேடுவது. இருக்கிற விடத்தைச் சொல்லிவிடு.

**வேலாயுதாசாரி** — கேட்டவர்கள் உடனே நகைகளை எடுத்துக் கொடுத்துவிட வில்லையா. போனவிடந் தெரிந்தால் சொல்லி விட மாட்டேனா. இராத்திரி பதினைந்து நாழியும் ஆகிறதே. ஐயா என்னை விட்டுவிடுங்கள், மத்தியானம் சாப்பிட்டது.

**ரஞ்சிட்சிங்** — தலைக்குத் தீம்பு வந்திருக்கிறது. அதைப் பார்க்காமல், பசிக்கிறது பசிக்கிறது என்கிறீரே. அப்படிக் கஷ்டமாயிருந்தால் இருக்கிற விடத்தைச் சொல்லிவிடு.

**வேலாயுதாசாரி** — ஐயா, மறுபடியும் இதைத்தானே கேட்கிறீர்கள். நான் எந்த விடத்தைக் கண்டு சொல்லுவேன். நகையை வாங்கின பாவந்தான் எனக்குத் தெரியும். மற்றது ஒன்றுந் தெரியாது. என்னை இப்படி இழுத்தடிக்கிறீர்களே எத்தனை இடந் தேடுவது. நாளைக்குத் தேடலாகாதா, இரவில் என்ன செய்வது.

**ரம்பால்சிங்** — நீ இருக்கிற இடத்தைக் காட்டிவிட்டால், இத்தனை இடத்தில் தேட வேண்டிய தில்லையே. நீ சொல்வதிலேயே சந்தேகம் இருக்கிறதே. நாளைக்குத் தேடினால் அதற்குள்ளே ஆளை மறைத்துவிடப் பார்க்கிறாயோ?

**வேலாயுதாசாரி** — ஐயையோ, வாயைத் திறந்தால் குற்றமாக இருக்கிறதே. உங்களிஷ்டம்போல் தேடுங்கள், எனக் கென்ன. பசியினால் நடக்கமாட்டாமல் அப்படிச் சொன்னேன். மற்றொன்றுமில்லை. ஐயா, பழி எப்படி எப்படி வருகிறது பாரும். ஐயோ விதியே, பாவி நான் ஏன் அந்த நகைகளை வாங்கவேண்டும். வாங்கினேனே இருக்கிற இடத்தையாவது கேட்டேனா! நாளைக்கு வருகிறேன் என்று சொல்லவே சரிதான் என்று இருந்துவிட்டேன்.

**ரஞ்சிட்சிங்** — பலமான நகைகள் உம்மிடம் அகப்பட்டுக்கொண்டதே; நீர் ஏன் பேர் ஊரைக் கேட்பீர். வந்ததே போதுமென்று பார்த்துக்கொண்டிடீர்.

**வேலாயுதாசாரி** — எப்படியாவது சொல்லுங்கள், நீங்கள் என்ன சொன்னாலும் ஏற்கும். அதிகாரம் உங்கள் கையிலிருக்கிறது. ஐயோ தெய்வமே! பொழுதும் விடிகின்றதே.

**ரம்பால்சிங்** — டே ரஞ்சிட்! சும்மா இரு, சும்மா இரு, குரலைக் காட்டாதே. என்னமோ சந்தடி கேட்கிறது. யாரோ உட்கார்ந்துகொண்டு இருக்கிறதுபோல் காண்கிறது. அதோ பார், உற்றுப் பார்.

**ரஞ்சிட்சிங்** — ஆமாம், ஆமாம், பத்திரம், பின்னாலே உட்கார்ந்து மறைந்து வா. நான் முன்னாலே இருக்கிறேன். வேலாயுதாசாரி! இப்படிதான் நில்லும்.

(ரம்பால்சிங் பின்னால் வந்து சந்திரமதியைப் பிடித்துக்கொள்கின்றான்.)

**ரம்பால்சிங்** — டே ரஞ்சிட்சிங், ஓடிவா ஓடிவா!

(ரஞ்சிட்சிங் ஓடி வருகின்றான்.)

**சந்திரமதி** — ஐய்யயோ, யாரோ என்னைப் பற்றித் தீண்டுகிறார்களே. ஆ, மகனே! என்ன செய்வேனடா கண்மணி!

**ரம்பால்சிங்** — டே யப்பா, கொலைக்காரி அகப்பட்டாள். மகாராஜா மகன்தான்.

(காவற்காரர் இருவரும் இருபுறத்தில் நிற்கின்றனர்.)

**சந்திரமதி** — ஐயா என்னை ஏன் பிடிக்கின்றீர்கள்?

**ரஞ்சிட்சிங்** — என்ன ஒழுங்குடா பேச்சு. ஏன் பிடிக்கிறீர்கள் என்று கேட்கிறாய் பாவி. எங்கள் மகாராஜா பிள்ளையைக் கொன்ற கொடும்பாவி. வா இங்கே.

**சந்திரமதி** — ஐயோ காசிநாதா! கொலைக்காரி யென்றும் பெயர் வந்துவிட்டதே. ஐயா யான் ஒன்றும் அறியேன். இறந்த என் மகனைக் கையில் வைத்திருக்கின்றேன்.

**ரம்பால்சிங்** — உன் மகனா, உற்றுப் பார். நல்ல ஜித்துக்காரி, மகாராஜா பிள்ளையை உன் பிள்ளை யென்று சொல்கிறாய்! நட, நட.

**சந்திரமதி** — ஐயோ ஐயோ இதென்ன மாயம். என் பிள்ளையைப் போல் இருந்ததே! இது வேறு பிள்ளையா யிருக்கிறதே! என் விதியே இது என்ன காலம்!

**ரஞ்சிட்சிங்** — சரி, சரி, முன்னே என் பிள்ளை என்றாய். பின்னே என் பிள்ளையைப்போல இருக்கிறது என்றாய். இதிலேயே

தெரிந்துபோச்சு உன் சங்கதி. நட நட, வீண் பேச்சு ஏன். ஐயோ ரம்பால், குழந்தைமேலே இருந்த உடுப்பையும் காணோமே.

**ரம்பால்சிங்** — ஆமாண்டா. அதைக் கண்டு பிடிக்கவேண்டும். (சந்திரமதியைப் பார்த்து) இந்த குழந்தைமேலே இருந்த உடுப்புகள் எங்கே?

**சந்திரமதி** — ஐயா, நான் ஒன்றும் அறியேனே. என் மகனென்று எடுத்தேன் ஐயா.

**ரம்பால்சிங்** — ஊர் பிள்ளையை உன் பிள்ளை யென்று சொன்னால் யார் ஒப்புவார்கள்?

**சந்திரமதி** — ஐயா என் மகன் நேற்று மாலை பாம்பு கடித்து இறந்துவிட்டான். அவனைத் தகனம் செய்யச் சுடலைக்குக் கொண்டுபோனேன். அங்கே காற்பணமும் முழந்துண்டமும் செலுத்தவேண்டும் என்றார்கள். அந்தப் பிணத்தை அங்கேயே வைத்துவிட்டுப், பணமும் துண்டமும் பெற்று வருவதற்கு வந்துகொண்டு இருந்தேன். வழியில் இந்தப் பிணம் தட்டுப்பட்டது. அது என் பிள்ளைதானோ வென்று எடுத்து அழுதுகொண் டிருக்கிறேன். ஐயா, நான் மற்றொன்றும் அறியேன், தீர விசாரியுங்கள்.

**ரஞ்சிட்சிங்** — விசாரிக்கிறதாவது, ஒரு நிமிஷத்தில் கதையைச் சோடித்துவிட்டாயே. பெண்பிள்ளையானாலும் கெட்டிக்காரி. கொலை செய்துவிட்டோமே என்று மனம் அஞ்சுகிறதா பார். பாலகனென்றும் பார்க்கக்கூடாதா. போகட்டும், உடுப்பு எங்கே.

**சந்திரமதி** — ஆ, காசிநாதா! இது என்ன விதி! ஐயோ நான் ஒன்றும் அறியேன் ஐயா!

**ரம்பால்சிங்** — திருடிக்கு தெய்வமும் உண்டா. உடுப்பு வைத்த இடத்தைச் சொல்கிறாயா இல்லையா. நகையை வைத்த இடம் முன்னமே தெரிந்துவிட்டது. ஐயா பத்தரே இந்த மனிஷி உமக்குத் தெரியுமா? பாரும்.

**வேலாயுதாசாரி** — தெரியும், இந்தம்மாள் நேற்று இந்தக் குழந்தையோடு என் வீட்டுக்கு வந்து, சில நகைகளைக் கொடுத்து அவைகளை அழித்து வேறே செய்ய வேண்டும் என்றாள். இவ்வளவுதான் எனக்குத் தெரியும்.

**ரம்பால்சிங்** — என்ன சொல்கிறாய் இதற்கு. இப்பொழுதாவது சொல் உடுப்பு இருக்கிற இடத்தை.

சந்திரமதி — ஐயா, நான் ஒன்றும் அறியேன். தீர யோசியுங்கள், நன்றாய் விசாரியுங்கள்.

காவற்காரர் — யோசிக்கிறதும் விசாரிக்கிறதும் எதற்கு? குற்றம் கையும் மெய்யுமாக அகப்பட்டு இருக்கிறதே? இன்னும் என்ன விசாரிக்கிறது. உடைகளை எங்கே வைத்தாய்?

சந்நியாசி — ஐயா, நீங்கள் யார்? என்ன, ஒரு பெண்பாலைப் பிடித்து மிரட்டுகின்றீர்கள்? பாவம்.

காவற்காரர் — சுவாமீ, இந்த மனிஷி எங்கள் மகாராஜா குழந்தையைக் கொன்று விட்டு, உடைகளை எங்கேயோ மறைத்துவிட்டாள். நகைகள் மாத்திரம் அகப்பட்டுக்கொண்டன.

சந்நியாசி — ஆ, ஆ, என்ன பாதகம்! சிசுக் கொலை, மகா பாதகமாயிற்றே. எழுமையும் நரகத்திற் சேர்க்குமே! ஐயோ, ஒரு பெண்பால் குழந்தையைக் கொலை செய்தது அநியாயம் அநியாயம். இப்படி அனுப்பும். நாம் விசாரிக்கிறோம்.

(சந்திரமதியை நோக்கி) அம்மா இப்படி வாரும். (சிறிது அப்பால் சென்று சந்நியாசி சந்திரமதியை விசாரிப்பதுபோல் பாவனை காட்டுகிறார்.)

சந்நியாசி — அப்பா சேவகர்களே! உடைகளை ஏதோ இங்குப் புதைத்து வைத்திருப்பதாகச் சொல்கின்றாள் அந்தம்மாள். தேடிப் பாருங்கள்.

காவற்காரர் — (தேடிப் பார்த்து தோண்டி எடுக்கிறார்கள்.) ஆ, ஆ, அகப்பட்டுக்கொண்டது. போதும் போதும். எல்லாம் சரியாய் அகப்பட்டுக்கொண்டன. வாருங்கள் போவோம் நடம்மே நட.

சந்திரமதி — ஆ, பரமேசா! காலும் உளைக்கிறது. இடையும் முறிகின்றது. இப்பெரும் பழிக்காளாக நான் என்ன பாவஞ் செய்தேனோ. ஒன்றின்மே லொன்றாய் துன்பங்கள் இவ்வாறும் வருமா! இதன்மேல் இன்னும் என்ன துன்பம் வருமோ நிரபராதியாகிய என்னை இப்படிப் பழிபாவங்களுக்கு ஆளாக்குகின்றார்களே. தெய்வமே நீயே சாட்சி. யான் ஒன்றும் அறியேன்.

(காவலர் தம் தலைவனை யடைகின்றனர்.)

ரஞ்சிட்சிங் — இதோ கையும் மெய்யுமாகப் பிடித்துக்கொண்டு வந்து விட்டோம். இனிமேல் எங்கள் மேலே பழியில்லை, எஜமானே.

தலைவன் — அடாடா, கொலையா நடந்துவிட்டது. இருக்கட்டும். என்ன சங்கதி? எப்படி விசாரித்து அறிந்தீர்கள்? அதைச் சொல்லுங்கள் முன்பு.

ரம்பால்சிங் — ஐயா, குழந்தை காணமற் போகவே, எங்களுக்கு ஐயுறவு பட்டது. கொலை முதலிய பெருங் குற்றங்கள்

நடந்தால் அதன் புலம் கள்ளுக்கடை, சூதாடும் இடம் இங்கெல்லாம் வெளியாவது வழக்கம் என்பது தங்களுக்கும் தெரியுமே. அப்படி பார்த்துக்கொண்டு ஒரு கள்ளுக்கடைக்குள் நுழைந்தோம். ஒரு ஆள் இன்னொரு ஆளினிடம் பேசிக்கொண்டு இருந்தான். இந்த சங்கதியை, அப்படி புலம்பிடித்தோம்.

**தலைவன்** — அந்த ஆள் என்னவென்று பேசிக்கொண்டிருந்தான்? ஒருவன் பேசிய விஷயங்களை நீங்கள் சொல்லும்போது, அவன் எப்படி எந்தச் சொல்லைச் சொன்னானோ அந்தச் சொல்லை அப்படியே சொல்லவேண்டும் என்பது உங்களுக்குத் தெரியுமல்லவா?

**ரம்பால்சிங்** — ஆமாம், தெரியும் ஐயா. அப்படியே சொல்கிறோம். ஒரு ஆளிடம் இன்னொரு ஆள் இன்று பொழுது சாய நாலு நாழிகைக்கு ஒரு பெண்பிள்ளை ஒரு பையனை அழைத்துக்கொண்டு தட்டாரத் தெருவிலே மேலண்டை வாடையில் மூன்றாம் வீட்டில் நுழைந்தாள். குழந்தை எப்படி இருந்தது தெரியுமா! ராஜா குழந்தையோ என்னமோ, உச்சிமுதல் உள்ளங்கால்வரைக்கும் நகைகள் பூண்டிருந்தது என்று சொன்னானையா.

**தலைவன்** — அந்த ஆள் எங்கிருப்பது? என்ன வேலை?

**ரஞ்சிட்சிங்** — அந்தக் கள்ளுக்கடைக்கு பக்கத்தில் இருக்கிறதே சத்திரம் அதில் இறங்கி இருக்கிறாராம். பட்டு வியாபாரமாம். இன்னம் இரண்டு மூன்றுநாள் இங்கே இருப்பாராம்.

**தலைவன்** — அது இருக்கட்டும், பிறகு என்ன செய்தீர்கள்?

**ரஞ்சிட்சிங்** — பிறகு போனோம். அந்த ஆள் அடையாளஞ் சொன்னானே அந்த வீட்டுத் திண்ணைமேலே ஒரு பத்தர் உட்கார்ந்துகொண்டு இருந்தார். அவரைக் கேட்டோம். ஆமாம் ஒரு பெண்பிள்ளை குழந்தையை யிட்டுக்கொண்டு வந்தாள், நகைகளை எல்லாம் கழற்றிக் கொடுத்து, இவற்றை யெல்லாம் அழித்து வேறே செய்யும். கல் வேறு பொன் வேறு எடுத்து வையும். நாளைக்கு வருகிறேன் என்று போனாள் என்று சொன்னார். அப்புறம் நகைகளை வாங்கிப் பார்த்தோம். நம்ம ராஜா பிள்ளையுடையதுதான் என்று தெரிந்தோம். அப்புறம் இராத்திரி எல்லாந் தேடித்தேடி பார்த்தோம். கடைசியில் கோழி கூவுகிற சமயம் இருக்கும், அந்தக் கால்வாயண்டை இந்தக் குழந்தையைக் கொன்று மடிமேலே வைத்துக்கொண்டிருந்தாள். கையும் மெய்யுமாய்ப் பிடித்துக்கொண்டோம். உடைகள் மாற்றப்பட்டிருந்தன.

பிறகு, உடைகள் எங்கே யென்று கேட்டோம். ஒரு இடத்தில் புதைத்து வைத்ததாகச் சொல்லி எடுத்துக் கொடுத்தாள். அப்படியே உங்களிடம் அழைத்துவந்தோம்.

**தலைவன்** — அந்தம்மாள் குழந்தையின் உடுப்பைத் தானே புதைத்து வைத்ததாகச் சொல்லி அதைத் தானே எடுத்துக் கொடுத்தது உண்மைதானா?

**ரஞ்சிட்சிங்** — அப்படித்தான் வைத்துக்கொள்ள வேண்டும் எஜமானே.

**தலைவன்** — பின்னை, உண்மையாய் நடந்ததுதான் என்ன?

**ரஞ்சிட்சிங்** — (மெதுவாய்) மற்றப்படி சொன்னதெல்லாம் நிஜந்தான். உடுப்பை மறைத்ததாகத் தானே சொல்லவும் இல்லை. எடுத்துக் கொடுக்கவுமில்லை. அங்கே ஒரு சந்நியாசி வந்தார். வழியிலே அவர் அந்த மனுஷியைக் கூப்பிட்டுக் கேட்டு அந்தம்மாள் சொன்னாளென்று சொன்னார். அவ்வளவுதான் அதைக் கொஞ்சம் சரிப்படுத்திக்கொள்ளவேண்டும். இல்லாமற்போனால் வழக்கு எப்படி முன்னுக்கு வரும்.

**தலைவன்** — காவற்காரர்களே, நீங்கள் எண்ணுவது முற்றும் பிசகு. குற்றவாளியைப் பிடித்துப் பொய்ச் சாட்சியம் தயார்செய்து அவனைத் தண்டித்து வைப்பது நம்முடைய வேலையல்ல. நாட்டுக்கு நன்மையுண்டாக நாம் பார்க்கவேண்டும். கறந்த பால் கறந்ததுபோல் குற்றவாளிகளின் குணகுணங்களைத் தக்க வழியில் உணர்ந்து, உண்மையாய் நியாயாதிபதிக்குமுன் காட்டவேண்டும். அதை நியாயாதிபதி உணர்ந்து தீர்ப்புச் செய்வார். குற்றவாளியாக ஏற்பட்டவன் தண்டிக்கப்பட்டால்தான் நமக்கு உயர்வு என்று எண்ணுதல் கூடாது. அவ்வாறு எண்ணினால் அநேக பொய் வழக்குகளை காவலாளிகளே உண்டாக்க மார்க்கமுண்டாகும். அது மகா பாதகம். இராசாங்கத்தார் நம்மை நியமித்ததும் அதற்கல்ல. காவற்காரன் எப்போதும் சத்தியவானாக இருந்து உள்ளதை உள்ளவாறே உரைப்பவனாக இருக்கவேண்டும். குற்றவாளி தான் ஒப்புக்கொண்டு எடுத்துக் கொடாத சங்கதியைத் தானே ஒப்புக்கொண்டு எடுத்துக் கொடுத்தாள் என்று எப்படிச் சொல்லலாகும். உள்ளபடி சொல்லியிருந்தால் சொல்லலாம். நாமே இப்படிச் செய்தால் வேலியே பயிரை மேய்வதாகவன்றோ முடியும். மேலும் நியாயாதிபதி நம்முடைய சாட்சியங்களையே பெரிய ஆதாரமாகக்கொண்டு வழக்கை விசாரிப்பதனால், நாம் எவ்வளவு உண்மையுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்பதை யோசித்துப் பாருங்கள். நம்-

முடைய சொல்லளவில் இருக்கிறது குற்றவாளியின் உயிர். அதனால் நம்முடைய தொழில் மிகவும் பொறுப்புள்ளதாகும். அந்தக் குற்றவாளியே நேராகத் தன் வாய்மொழியாய்ச் சொல்வதானால் அதை எடுத்துக்கொள்ளலாம். இல்லாவிட்டால் எப்படி?

**ரம்பால்சிங்** — ஆகா அதற்கென்ன. ஒரு நொடிப்போதில் வரவழைத்து விடுகின்றோம் தங்கள் உத்தரவானால். கொஞ்சம் மாத்து காட்டணும். வந்துவிடுகிறது எல்லாம்.

**தலைவன்** — ஆஹா, காவற்காரர்களே. ஒப்புக்கொள்ளச் செய்வதென்றால் இன்னதென்று உங்களுக்குத் தெரியவில்லை. நீங்கள் சொல்வதைப் பார்த்தால் நீங்கள் செய்வதே அதிக அக்கிரமமாக இருக்கிறது. அக்கிரமத்தை அடக்கி நாட்டுக்கு நன்மை செய்ய நம்மை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இனி, நாமே அக்கிரமம் செய்தால் தெய்வம் நம்மை என்ன பாடு படுத்தாது. அதிகாரம் கையிலிருக்கிறதென்று அக்கிரமம் செய்யலாகுமா. குற்றவாளியை வருத்தி ஒப்புக்கொள்ளச் செய்யலாகாது. அதற்குண்டான விதிகளைச் சொல்கிறேன் கவனமாய்க் கேளுங்கள். ஒரு குற்றவாளி தன் குற்றத்தைத் தானே ஒப்புக்கொள்ளச் செய்வதில், காவல் உத்தியோகஸ்தர்கள் அக் குற்றவாளிக்கு எவ்வகைய துன்பமாவது தந்திரமாவது செய்தல் கூடாது. இவ்வகையான அக்கிரம வழிகளால் குற்றவாளி தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளச் செய்வதனால், குற்றங்களை ஆராய்ந்தறிந்து கண்டு பிடிக்கும் யுக்தி, சாமர்த்தியம், கவுரவ வுழைப்பு முதலிய நற்குணங்கள் ஊர்க் காவற்காரரிடம் சிறிதும் இல்லையென்பது நன்கு வெளிப்படும். அன்றி, மேற்கண்டவாறு நியாயமற்ற வழிகளால் ஒருவன் தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளச் செய்வதென்றால் அதனை எப்படிப்பட்ட முழுமூடனும் செய்துவிடலாகும். இதற்கு அதிகாரிகளும் உத்தியோகஸ்தர்களும் உண்டாயிருப்பது அநாவசியமாகும். காவ லுத்தியோகஸ்தர்கள் குற்றவாளியின் தொழில்களை நன்றாய் விசாரித்து அறிந்து, தக்க கேள்விகளால் குற்றவாளி எவ்வகையிலும் தப்பித்துக்கொள்வதற்கு இடமில்லாம விருப்பது கண்டு, அவனே ஒப்புக்கொள்ளச் சொல்வதே காவலதிகாரிகளுக்கு உண்டாயிருக்கவேண்டிய முக்கிய திறமையாகும்.

**ரஞ்சிட்சிங்** — குற்றவாளி தானே குற்றத்தை ஒப்புக்கொண்டால் என்ன செய்வது?

**தலைவன்** — ஆம் அப்படிக் கேள். அதுவன்றோ புத்திசாலித்தனம். குற்றவாளி தானே தன் குற்றத்தை ஒப்புக்கொண்டாலும், அவ் வாதாரம் ஒன்றினால்மட்டும் அவனைத் தண்டிக்க வழி தேடப்படாது. குற்றவாளி ஒப்புக்கொண்ட குற்றங்களை ஸ்தாபிக்க அதற்குச் சம்பந்தப்பட்ட வேறே ஆதாரவுகள் இருந்தாலொழிய அவன் ஒப்புக்கொண்டதை காவலதிகாரி-கள் அவனைத் தண்டிக்கும் முறையில் உபயோகிக்கலாகாது. ஆகையால், நீங்கள் இப்போது சொன்னது முற்றும் நியாய விரோதமான விஷயம். அன்றி நமது உத்தியோகத்திற்கும் மாறான தொழிலைச் செய்வதாகும்.

**ரஞ்சிட்சிங்** — சாட்சிகளெல்லாம் சரியாகவே இருக்கிறது எஜ-மானே.

**தலைவன்** — ஆனால் சரிதான். குற்றவாளி குழந்தையை ஒப்புக்-கொண்டதாகவாவது, குழந்தையின் உடுப்பைப் புதைத்த-தாகவாவது, எடுத்துக் கொடுப்பதாகவாவது ஒப்புக்கொண்-டாளா?

**ரம்பால்சிங்** — குற்றவாளி எங்கேயாவது ஒப்புவாளா எஜமானே.

**தலைவன்** — அதைத்தான் கேட்டேன். இனி என்னிடம் நடந்த படியே சொல்ல வேண்டும். ஒரு எழுத்தும் பிசகலாகாது. இருக்கட்டும். நீங்கள் சொன்ன சாட்சியங்களை யெல்லாம் கொண்டுவாருங்கள்.

**ரம்பால்சிங்** — எல்லாம் இதோ வந்து இருக்கிறார்கள் எஜமானே.

**தலைவன்** — முதல் சாட்சியம் யார்?

**ரம்பால்சிங்** — முத்துவீரன் செட்டி. ஐயா செட்டியாரே, எஜமான் கூப்பிடுகிறார் போய் தெரிந்ததைச் சொல்லுங்கள். எல்லாம் நினைவாகச் சொல்லுங்கள்.

**தலைவன்** — அதென்னடா அது, ஏதோ குறிப்புச் சொல்லியனுப்பு-கிறாய். ஏதேனும் பாடம் ஓதி யிருக்கிறாயோ?

**ரம்பால்சிங்** — அதெல்லாம் ஒன்றுமில்லை எஜமானே அவரையே கேளுங்கள்.

**தலைவன்** — ஐயா உமது பேர் என்ன. உமக்கு இங்கு என்ன வேலை?

**முத்துவீரன் செட்டி** — ஐயா என் பேர் முத்துவீரன் செட்டி. பட்டு வியாபாரமாய் இங்கு வந்தது.

**தலைவன்** — இந்தம்மாளை எப்போதாவது பார்த்ததுண்டா?

**முத்துவீரன் செட்டி** — இந்தம்மாள் நேற்று மாலையிலே ஒரு பிள்ளையை அழைத்துக்கொண்டு தட்டார வீதியில் அந்த ஐயா பத்தர் வீட்டுக்குப் போகும்போது பார்த்தேன்.

**தலைவன்** — சரி, சரி. அந்தப் பத்தர் எங்கே? ஐயா பத்தரே இங்கு வாரும் உமக்கு என்ன தெரியும் இது விஷயமாய்? ஒளியாமல் சொல்லும்.

**பத்தர்** — ஐயா நேற்று பொழுதுசாய நாலுநாழி இருக்கும். அப்போது இந்தம்மாள் ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு வந்தாள். சில நகைகளை என்னிடம் கொடுத்து, அவைகளை அழித்து வேறே செய்ய வேண்டும் என்றும், அதற்காக கல் வேறே பொன் வேறே பிரித்து வை. நாளைக்கு நான் வருகிறேன் என்றும் சொல்லிவிட்டுக் குழந்தையை அழைத்துக் கொண்டு போய்விட்டாள். இதுதான் நான் அறிவேன் காவலாளிகள் வந்து கேட்டார்கள். நடந்ததைச் சொல்லி நகையையும் கொடுத்துவிட்டேன்.

**தலைவன்** — சரி, நல்லதாயிற்று. நகைகள் எங்கே?

**ரஞ்சிட்சிங்** — இதோ இருக்கிறது எஜமானே.

(கொடுக்கிறான்.)

**தலைவன்** — கற்களைக்கூடப் பேர்த்தாயிற்று? என்ன அவசரம்! இருக்கட்டும், மூன்றாவது சாட்சியம் யார்?

**ரம்பால்சிங்** — இதோ இந்தச் சாமியார் ஒருவர் எஜமானே.

**தலைவன்** — சுவாமிகளே, வாருங்கள். தாங்கள் இது விஷயத்தில் என்ன அறிவீர்கள்?

**சந்நியாசி** — ஐயா யாம் பிராதக் காலத்தில் ஜபம் முடிப்பதற்காக வந்துகொண்டிருந்தோம். அப்போது இவர்கள் இப் பெண்பாலை வருத்திக் கேட்டுக்கொண்டிருந்தனர். அது யாதென விசாரித்தோம். அதன்மேல் உடைகள் காணோம் என்றார்கள். யாம் பிறகு அப் பெண்பாலை அழைத்து உண்மையைக் கேட்டோம். அப்போது அவ் வுடுப்புக்களை அங்கு மண்ணின்கீழ் மறைத்து வைத்ததாய் சொல்லியது. உடனே காவலர்க்குச் சொல்லினோம். அவர்கள் அங்குத் தோண்டிப் பார்க்க உடைகள் அகப்பட்டன. எடுத்து வந்தார்கள்.

**ரஞ்சிட்சிங்** — எஜமானே, இந்தக் கூட்டத்திலே இன்னொருவர்கூட நேற்றுச் சாயங்காலம் பார்த்ததாய்ச் சொல்லுகிறார்.

**தலைவன்** — அது யார்? அவரை இங்குக் கூப்பிடு. (வருகிறான்.) ஐயா நீர் யார்?

**பட்டு வியாபாரி** — ஐயா நான் ஒரு பட்டு வியாபாரி. தெருத் தெருவாய் பட்டு விற்கிறவன்.

**தலைவன்** — அப்படியா, இந்தம்மாளை உமக்கு எப்படித் தெரியும்?

**பட்டு வியாபாரி** — நேற்றுச் சாயங்காலம் என்னிடம் இரண்டு கஜம் பட்டு விலைக்கு வாங்கினார்கள்.

**தலைவன்** — அந்தப் பட்டில் மீதி உம்மிடம் இருக்கிறதா?

**பட்டு வியாபாரி** — ஆ, ஆ இருக்கிறது. அந்தம்மாளுக்கு முதல் முதல் இரண்டு கஜம் விற்றேன். மீதி அப்படியே இருக்கிறது. இதோ பாருங்கள்.

(எடுத்துக் காட்டுகிறான்.)

**தலைவன்** — இது மொத்தம் எத்தனை கஜம் பட்டு? ஒரு துண்டு எத்தனை கஜம் இருக்கும்?

**பட்டு வியாபாரி** — பன்னிரண்டு கஜம் இருந்தது. இரண்டு கஜம் இந்தம்மாளுக்குக் கொடுத்தேன். மற்ற மீதி பத்து கஜம் அப்படியே இருக்கிறது.

**தலைவன்** — இந்தப் பட்டும், குழந்தைமீது இருக்கும் பட்டும் ஒன்றுதானா? பார்.

**ரஞ்சிட்சிங்** — இரண்டும் ஒன்றுதான். சந்தேகமா அதற்கு?

**தலைவன்** — சரி, இவர்களெல்லாம் நியாயஸ்தலத்துக்குப் பன்னிரண்டு நாழிக்கெல்லாம் வந்து சேரட்டும்.

**சாட்சிகள்** — நாங்கள் தொழிலாளிகள், எங்கள் பிழைப்புக் கெட்டுவிடுமே.

**தலைவன்** — இன்றைக்கே முடிந்துவிடும் மகாராஜாவின் வழக்கு. தடையில்லாமல் வந்து சேருங்கள். சுவாமிகளே, தாங்களும் தயவு செய்யவேண்டும்.

**சந்நியாசி** — நமக்கென்ன இந்தச் சிரமம். யார் வாழ்ந்தா லென்ன? யார் கெட்டா லென்ன?

**தலைவன்** — சுவாமீ! தாங்கள் அவ்வாறு நினைக்கலாமா? உலகத்தில் நீதி நடைபெற வேண்டும் என்று நீங்கள் கருத வேண்டாமா? மகரிஷிகளெல்லாம் சாஸ்திரங்கள் பல இயற்றி யருளியதும் இதற்காகவன்றோ? தயை செய்ய வேண்டும்.

**சந்நியாசி** — ஆனால் சரி, அப்படியே வருகிறது.

(அனைவரும் போகின்றனர். காவலர் தலைவன் குற்றங்களை எழுதி யனுப்புகின்றான்.)

## எட்டாங் களம்



**இடம்:** நியாயஸ்தலத்திலுள்ள குற்றவாளியின் நியாயவாதியின் உத்தியோகசாலையும், கைதிகளை வைக்கும் அறையும்.

**காலம்:** முற்பகல்.

**பாத்திரங்கள்:** குற்றவாளியின் நியாயவாதி, சந்திரமதி, பாஸ்கரன், காவலன்.

[பாஸ்கரன் குற்றவாளியின் நியாயவாதியை அவ்வருடைய உத்தியோகசாலையில் சந்திக்கிறான்.]

**பாஸ்கரன்** — (நியாயவாதியை அணுகி) ஐயா நேற்று நடந்த கொலை விஷயமாய் குற்றவாளி பட்சம் வாதிக்குமாறு இராசாங்கத்தார் தங்களை நியமித்திருப்பதாகக் கேள்விப்படுகின்றேன். அது உண்மைதானே.

**எதிரியின் நியாயவாதி** — ஆம், உண்மைதான். என்ன சங்கதி?

**பாஸ்கரன்** — மற்றொன்றுமில்லை. அந்தம்மாள் ஒன்றும் அறியாதவள். இந்த ஊர்க்காவலாளிகள் வீணாக இந்தம்மாள்மீது இக் குற்றத்தைக் கற்பித்துவிட்டார்கள். தாங்கள் தயைசெய்து சற்று சிரமம் எடுத்துக்கொண்டு எப்படியாவது விடுதலை செய்விக்க முயலவேண்டும். அதற்கு வேண்டிய சாட்சிகளும் உண்டு. நானே அழைத்து வருகிறேன். நீங்கள்மட்டும் சற்று முயற்சி எடுக்கவேண்டும்.

**எதிரியின் நியாயவாதி** — ஆமாம், அதென்ன சுலபத்தில் ஆகிற வழக்காகவா இருக்கிறது. குற்றவாளி மகாராசாவின் பிள்ளையைக் கொலைசெய்திருக்கிறாள். சாட்சியங்களெல்லாம் சரியாய் ஏற்பட்டிருக்கும்போது நாம் என்ன செய்யலாம். இராசாங்கத்தார் நியமித்தாலென்ன. ஏதாவது வாரிக்கொடுக்கப்போகிறார்களா. அதற்கென்று ஏதோ ஒரு கட்டணம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள்; அதைத்தான் கொடுக்கப்போகிறார்கள். அதற்கேன் தலையை உடைத்துக்கொள்ளவேண்டும். வேறு வழக்கைக் கவனித்தாலும் பிரயோசன முண்டு. எனக்கு அதிக வேலை யிருக்கிறது. வேறு ஏதாவது உண்டானால் சொல்லும்.

**பாஸ்கரன்** — ஐயா! பொருளுக்காகத் தாங்கள் சிறிதும் யோசிக்கவேண்டாம். எவ்வளவு வேண்டுமானாலும் தருகிறோம். இன்று மற்ற வழக்குகளைக் கவனியாமல் இதையே கவனித்து விடுதலைக்கு வழிதேடவேண்டும்.

**எதிரியின் நியாயவாதி** — ஆமாம், நீர் என்ன கொடுக்கப் போகிறீர்! பார்த்தால் நல்லவராகக் காண்கிறீர். இருக்கட்டும், உம்முடைய வழக்கு விஷயமாய் ஆயிரம் பொன் கொடுக்க முடியுமோ, பாரும் ஒரு க்ஷணத்தில் விடுதலைக்கு வழிதேடி விடுகின்றேன். நியாயாதிபதியும் எனக்கு வேண்டியவர், நெருங்கிய பந்து. இல்லாவிட்டால் இத்தனை நியாயவாதிகள் இருக்க இந்த வழக்கை எனக்கேன் கொடுக்கவேண்டும். இதனாலேயே தெரிந்துகொள்ளும்.

**பாஸ்கரன்** — சரிதான், அவர்கள் பக்கத்தில் சாட்சிகள் பலமாயிருக்கின்றனவே, அதற்கு என்ன செய்வது.

**எதிரியின் நியாயவாதி** — உமக்கென்ன அதெல்லாம். நான் ஒரே விஷயம் சொல்கிறேன். அதன்படிக் குற்றவாளி நடந்துகொள்ளவேண்டும். நியாயாதிபதி விரோதியானாலும் நமக்குப் பயமில்லை. சாட்சியம் இருக்கிறதோ இல்லையோ அவசியமில்லை. அவர்கள் பிள்ளையைக் காணோம் என்னும் சமய முதல் விடியற்காலம் வரையில் இந்தம்மாள் இந்தக் குற்றம் நடந்த இடத்திற்கு நெடுந்தூரமான வேறொரு ஸ்தலத்தில் இருந்ததாக மாத்திரம் ரூபித்துவிடவேண்டும். இவ்வளவே நமக்கு வேண்டியது.

**பாஸ்கரன்** — சரிதான் ஐயா, இதே விஷயத்தை அந்தம்மாளைச் சொல்லச் செய்து, விடுதலையாக்கி விடவேண்டும். இதோ பெற்றுக்கொள்ளுங்கள் ஆயிரம் பொன்னையும், தாங்கள் சொல்லியபடியே கொடுத்துவிட்டேன். வழக்கு அனுகூலமானால் இன்னமும் சந்தோஷப்படுத்துவேன்.

**எதிரியின் நியாயவாதி** — சரி, வாரும் போவோம். அந்தம்மாளைப் பார்த்துப் பேசுவோம்.

(நியாயஸ்தலத்தில் கைதிகளை வைக்கும் அறைக்குப் போகிறார்கள்.)

(காவலனை நோக்கி) அந்தக் குற்றவாளியோடு பேசுவதற்கு நியாயாதிபதியிடம் உத்தரவு பெற்றிருக்கிறோம். இந்த வழக்குக்காக கைதி தரப்பில் இராசாங்கத்தார் நம்மை நியமித்திருப்பது உனக்குத் தெரியும் அல்லவா?

**காவலன்** — தெரியும் ஐயா, அப்படியே பேசிக்கொள்ளலாம்.

**எதிரியின் நியாயவாதி** — (சந்திரமதியைப் பார்த்து) அம்மா! உன்மீது ஏற்பட்டுள்ள குற்றத்தின் பொருட்டு உனக்காக வாதிக்கும்படி என்னை இராசாங்கத்தார் நியமித்திருக்கிறார்கள். ஏதேனும் சொல்லவேண்டியிருந்தால் என்னிடம் சொல்லலாம். அந்த விஷயங்களையெல்லாம் நான் எடுத்து நியாயாதி-

பதி முன்னிலையில் வாதித்து நீ குற்றமற்றவள் என்பதை நிரூபித்து உன்னை விடுதலை செய்விக்கிறேன். உள்ளதைச் சொல்லு.

**சந்திரமதி** — ஐயா நான் ஒன்றும் அறியேன். என்மீது பொய்யாக இக் குற்றம் சாட்டியிருக்கின்றார்கள்.

**எதிரியின் நியாயவாதி** — ஆமாம், நீ பிடிபட்ட அந்த இடத்திற்கு வரக் காரணமென்ன?

**சந்திரமதி** — நானும் என் குமாரனும் இவ் வூரிலுள்ள காலகண்ட ஐயருக்கு அடிமைப்பட்டு வேலை செய்துகொண்டிருந்தோம். நேற்றுக் காலை என் புத்திரனை ஐயர் சமித்தை முதலியவற்றைக் கொண்டுவரும்படி காட்டிற்கு அனுப்பினார். அவன் மற்றப் பிள்ளைகளோடு சேர்ந்துபோய் காட்டில் பாம்பு கடித்து இறந்துவிட்டான். அதைக் கேள்விப்பட்டு ஐயரிடம் விடை பெற்றுக்கொண்டு காட்டிற்குப் போய் பிணத்தைத் தேடி எடுத்து அர்த்தராத்திரியில் சுடலைக்குக் கொண்டுபோனேன். அங்கிருப்பவர்கள் பிணத்தைச் சுடுவதானால் காற்பணமும் முழந்துண்டும் கொடுக்கவேண்டும் என்றார்கள். அவைகள் என்னிடத்தில் இல்லாமையால் என்னை அடிமைகொண்ட ஐயரிடம் வாங்கிவரப் புறப்பட்டு வந்தேன். வழியில் ஒரு குழந்தை தட்டுப்பட்டது. அதனை எடுத்துப் பார்த்தால் உயிர்துறந்த பிணமாயிருந்தது. என் புத்திரனைத்தான் ஏதோ மிருகம் கொண்டுவந்து போட்டதென்று எண்ணிக் கையில் எடுத்துப புலம்பிக்கொண்டிருந்தேன். இதற்குள் காவலாளிகள் வந்து என்னைப் பிடித்துக்கொண்டார்கள். இதுதான் உண்மை. மற்றும் ஏதேதோ பல விஷயங்களை அவர்கள் சொல்கிறார்கள். அவற்றில் எனக்கு ஒன்றும் தெரியாது ஐயா.

**எதிரியின் நியாயவாதி** — ஓ, சரி, சரி, இவ்வழக்கைத் தள்ளிவிடும்படி செய்வது ஒரு க்ஷணம். அதாவது அவர்கள் சொல்லுகிற காலத்தில் நீ குற்றம் நடந்த இடத்தில் இருந்ததாக ஏற்படவில்லை. ஆனால் நீ ஐயர் வீட்டிலிருந்து புறப்பட்டது எப்போது?

**சந்திரமதி** — விளக்கு வைக்க ஒரு நாழிகை யிருக்கலாம்.

**எதிரியின் நியாயவாதி** — சுடலைக்கு வரும்போது எவ்வளவு நேரம் இருக்கும்?

**சந்திரமதி** — அர்த்தராத்திரிக்கு மேலே இருக்கும்.

**எதிரியின் நியாயவாதி** — இடையில் அவ்வளவு நேரம் என்ன செய்தாய்?

**சந்திரமதி** — *பிணத்தைத் தேடவும் சுடலைக்கு வழியை நாடவும் அவ்வளவு நேரமாயிற்று ஐயா!*

**எதிரியின் நியாயவாதி** — *இருக்கட்டும் சுடலையில் இருந்தவர் யாரார்?*

**சந்திரமதி** — *என் மணாளரும் மற்றொரு தோட்டியும் இருந்தார்கள்.*

**எதிரியின் நியாயவாதி** — *உன் மணாளர் அங்கிருக்க, நீ ஏன் பணத்திற்கும் துணிக்கும் இங்கு வந்தாய்?*

**சந்திரமதி** — *ஐயா! அவர் அவ் வூர்ச் சுடலையைக் காக்கும் வீரவாகு என்பவருக்கு அடிமையாகி இருக்கின்றார். அதனால் அவருக்கு உரிய பொருள் ஒன்றும் இல்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *ஓ, சரி, சரி, மிகவும் நல்லதாயிற்று. இதில் ஒரு விஷயம் சந்தேகத்திற்கு இடமுண்டாக்குகிறது. நீ ஐயர் வீட்டிலிருந்து விளக்குவைத்து ஒரு நாழிகைக்கெல்லாம் புறப்பட்டு, அர்த்த ராத்திரிக்குமேல் சுடலைக்கு வந்தேன் என்றால், இவ்வளவு நேரம் என்ன செய்தாய் என்று சந்தேகம் ஏற்படும்.*

**பாஸ்கரன்** — *ஆமாம், அதற்காக இந்தம்மாள் காலத்தைச் சிறிது மாற்றிச் சொல்லிவிட்டால் இவ்விதச் சந்தேகத்திற்கு இடமிராது. அதாவது ஐயர் வீட்டிலிருந்து புறப்பட்டு பிணத்தை எடுத்துக்கொண்டு நேரே சுடுகாட்டுக்கு ஏழெட்டு நாழிகைக் கெல்லாம் வந்துவிட்டதாய்ச் சொல்லவேண்டும். சுடலையிலிருப்பவர்களும் அப்படியே சொல்லிவிட்டால் மற்றப்படி யார் என்ன சொன்னாலும் நமக்குப் பயமில்லை. தெரிகிறதா அம்மா ஒரே விஷயந்தான்.*

**சந்திரமதி** — *ஐயா! நடந்ததை நடந்தவாறு சொல்லலாமே யன்றி மாற்றி யுரைக்க மனம் வராது. உண்மையைச் சொன்னாலென்ன. சுடலையிலுள்ள என் மணாளரும் அவ்வாறு மாற்றிச் சொல்லமாட்டார் ஐயா.*

**பாஸ்கரன்** — *அடாடா இதென்ன பயித்தியமா யிருக்கிறதே! உன்னை யார் மாற்றிச் சொல்லச்சொன்னார். இரண்டு நாழிகை பின் என்பதை முன் என்பதாகச் சொல்லச் சொல்கிறோம். இதற்கென்ன? இவ்வளவும் இல்லாவிட்டால் எவ்வாறு வழக்கு ஜெயிக்கும்.*

**சந்திரமதி** — *ஐயா வழக்கு ஜெயித்தாலும் ஜெயிக்காவிட்டாலும் உண்மைக்கு விரோதமாய் சொல்லுதல் கூடாது.*

**எதிரியின் நியாயவாதி** — அடாடா, இதென்ன முழுப் பயித்தியமா யிருக்கிறதே. அம்மா சொல்வதைக் கேள். இப்போது அவர்கள் சொல்வது முற்றும் பொய் என்று உனது மனதுக்கே தெரியும் அல்லவா. முற்றும் பொய் பேசுகிறவர்களிடத்தில் ஒரு சிறு விஷயத்தைச் சற்று மாற்றி யுரைப்பதனு லென்ன. "பொய்யருக்குப் பொய் யுரைத்தால் வெற்றியாகும்" என்று சாஸ்திரமும் இருக்கிறது. ஆகையால் இதில் ஒன்றும் குற்றமில்லை, இதைமாத்திரம் சொல். ஒரே சங்கதியில் முழு விவகாரமும் அடிபட்டுப்போகிறது.

**பாஸ்கரன்** — அதெல்லாம் நான் சுடலையில் இருப்பவர்களைச் சரிப்படுத்திவிடுகின்றேன். நீமாத்திரம் இப்போது இவர் சொன்ன மாதிரியாக சொல்லிவிடு.

**எதிரியின் நியாயவாதி** — மற்றென்ன, உன்னுடைய மணாளரும் ஒப்புக்கொள்கின்றாராம். உனக்கென்ன?

**சந்திரமதி** — ஐயா இதெல்லாம் வீண் முயற்சி. மெய்க்கு மாறாக ஒன்றும் சொல்ல முடியாது. அதனால் யாது வரினும் வரட்டும். பொய் சொல்லி புவியில் வாழலாமா?

**எதிரியின் நியாயவாதி** — ஆ ஆ, வெகு நன்றாயிருக்கிறது! இப்படிப்பட்ட கட்சிக்காரர் இருந்தால் நியாயவாதிகள் நன்றாய் ஜயமடையலாம். பேரும் எடுக்கலாம். வரும்படியும் உண்டாகும். இப்படிப்பட்ட பிடிவாதக்காரி இக்கொலையைத் துணிந்து செய்திருப்பினும் இருக்கலாம். இனி நம்மால் முடியாது. (திரும்பிவிடுகின்றான் பாஸ்கரனைப் பார்த்து.) என்ன ஐயா நீர் சொன்னது. இந்தப் பெண்பிள்ளை இவ்வளவு மூர்க்கமும் பிடிவாதமும் கொண்டால் என்ன செய்வது.

**பாஸ்கரன்** — இந்தம்மாள் இருக்கட்டும் முடிவில் அந்தச் சுடலையிலிருக்கிறவரையாவது கொண்டு சரிப்படுத்தி விடவேண்டும். அவரையும் இங்கு அழைத்துவந்தால் இந்தம்மாள் அவரையும் சொல்லவிடமாட்டாள். அவரும் பெண்பேச்சை மீறி நடப்பவரல்ல. நான் காலகண்ட ஐயர் அவர் மனைவி இவர்களைக்கொண்டு இந்த விஷயத்தை ரூபித்து விடுகின்றேன். அதற்காக நீர் அஞ்சவேண்டாம்.

**எதிரியின் நியாயவாதி** — அதற்கென்ன பார்ப்போம். நம்மால் ஆனவரையில் முயன்று பார்க்கிறோம். அஞ்சவேண்டாம். எத்தனையோ வழக்குகளை ஒன்றுமில்லாமல் செய்துவிட்டோம். இதென்ன அற்பம். நீர்மாத்திரம் எதற்கும் பொருளைச் சித்தமாய் வைத்திரும் அல்லது மொத்தமாய் ஒரு ஐந்நூறு வராகன் நமது லிகிதரிடம் கொடுத்துவைத்தால் அனுகூலமாயிருக்கும் உமக்கும் தொந்தரவில்லை.

**பாஸ்கரன்** — அதற்கென்ன, பொருளுக்காக எண்ணவேண்டாம். நான் வேண்டியமட்டும் வைத்துக்கொண்டு உமது அருகிலேயே இருக்கின்றேன்.

**எதிரியின் நியாயவாதி** — ஆனால் சரி, நியாயாதிபதி வரும் வேளையாயிற்று. நாம் நியாயஸ்தலத்திற்குப் போவோம்.

(போகின்றனர்.)

## ஒன்பதாங் களம்



**இடம்:** நியாயஸ்தலம்.

**காலம்:** முற்பகல்.

**பாத்திரங்கள்:** நியாயாதிபதி, நாட்டாண்மைத் தலைவர், ஊர்க்காவலர் தலைவர், நியாயவாதிகள், சந்திரமதி, பாஸ்கரன், ராஜாங்க லிகிதர், காவலர் முதலாயினோர்.

[நாட்டாண்மைத் தலைவர் முன்னும், நியாயாதிபதி இடையிலும், ஊர்க்காவலர் தலைவர் பின்னுமாக வந்து தத்தமக்குரிய ஆதனத்தின்கண் அமர்கின்றனர். காவலர் குற்றவாளியை நியாயாதிபதியின் முன்னிலையில் நிறுத்துகின்றனர்.]

**ராஜாங்க லிகிதர்** — (எழுந்து குற்றவாளியை நோக்கி) சந்திரமதி என்னும் பெயரையுடைய நீ குரோதிஹூ மாசிமீ 26உ மாலைமுதல் மறுநாள் விடியற்காலத்திற்குள் காசிமா நகரத்தின் மன்னவருடைய அருமைத் திருப்புதல்வரைக் களவாடிக்கொண்டு போய் கொலைசெய்ததாக உன்மீது குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தில் நீ குற்றவாளியா? அல்லவா?

**சந்திரமதி** — ஐயா, யான் ஒரு பாவமும் அறியேன். யான் குற்றவாளி யன்று.

**ராஜாங்க லிகிதர்** — (குற்றவாளியை நோக்கி) கொலைக்குற்றம் சாட்டப்பட்டிருக்கும் உன்னைப் பரிசீலனம் செய்யும்பொருட்டு இப்போது மத்தியஸ்தர்கள் தெரிந்தெடுக்கப்படுவார்கள். அவர்கள் தங்களுக்கு நியமிக்கப்பட்டிருக்கும் இருக்கையில் அமருமுன் உன் தரப்பிலும் ராஜாங்கத் தரப்பிலும் காரணமின்றி எவ்வெட்டு மத்தியஸ்தர்களையும் தகுந்த காரணங் காட்டி மற்றும் பல மத்தியஸ்தர்களையும் ஆட்சேபிக்கலாம். (மத்தியஸ்தர்கள் பெயர்களைச் சீட்டில் எழுதிக் குலுக்கி ஒவ்வொன்றாய் எடுத்துப் படித்துக் கூப்பிடுகின்றார்.) நீலகண்ட சாஸ்திரியார்.

**நீலகண்ட சாஸ்திரியார்** — இதோ இருக்கிறேன் ஐயா.

**ராஜாங்க லிகிதர்** — (குற்றவாளியை நோக்கி) இவர் மத்தியஸ்தராக இருப்பது உனக்குச் சம்மதந்தானே? சம்மதமில்லாவிட்டால் சொல்லலாம்.

**எதிரியின் நியாயவாதி** — (குற்றவாளியின் அபிப்பிராயத்தைக் கொண்டு) ஆகா, சம்மதந்தான்.

**ராஜாங்க லிகிதர்** — இரண்டாவது கிருஷ்ணநாத தத்தர்.

**கிருஷ்ணநாத தத்தர்** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — மூன்றாவது லக்ஷ்மீநாத பிரசாத்.

**லக்ஷ்மீநாத பிரசாத்** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — நான்காவது குமார சர்மா.

**குமார சர்மா** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — ஐந்தாவது மகாதேவ் மேதா.

**மகாதேவ் மேதா** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — ஆறாவது கோபிநாத டாகர்.

**கோபிநாத டாகர்** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — ஏழாவது முனிலால் சிங்.

**முனிலால் சிங்** — இதோ இருக்கிறேன், ஐயா.

**ராஜாங்க லிகிதர்** — எட்டாவது மோஹனராய்.

**மோஹனராய்** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — ஒன்பதாவது பண்டரிநாத் சடர்ஜி.

**பண்டரிநாத் சடர்ஜி** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — ஐயன்மீர்! நீங்கள் இப்போது ஒன்பதின்மர் மத்தியஸ்தர்களாக ஏற்பட்டிருக்கின்றீர்கள். உங்களில் எவரையேனும் நீங்களே தலைவராக நியமித்துக்கொண்டு, இந்த விசாரணை நிகழுங் காலத்தில் ஏதேனும் சந்தேகம் நேரிட்டால், அதை அத் தலைவர் மூலமாகக் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டும்.

**மத்தியஸ்தர்** — ஐயா! யாங்கள் அனைவரும் ஒருமித்து நீலகண்ட சாஸ்திரியாரைத் தலைவராக நியமிக்கின்றோம்.

**ராஜாங்க லிகிதர்** — ஐயன்மீர்! இவ் விசாரணையில் நிகழும் விஷயங்களை நன்கு ஆராய்ந்து, சிறிதும் பட்சபாதமின்றி தீர்ப்புச் சொல்ல உங்களில் ஒவ்வொருவரும் நியாயஸ்தலம் அறியப் பிரமாணம் செய்துகொள்ளவேண்டும். அதன் முறையை

யான் கூறுகின்றேன். அதுபோல் உங்களில் ஒவ்வொருவரும் சொல்லவேண்டும்.

**மத்தியஸ்தர்** — ஆகா, அப்படியே செய்துகொள்கின்றோம் ஐயா.

(ராஜாங்க விகிதர் சொல்ல மத்தியஸ்தரில் ஒவ்வொருவரும் அவ்வாறே சொல்கின்றனர்.)

**நீலகண்ட சாஸ்திரியார்** — சர்வ ஜீவ தயாபரரும், சர்வ சக்தியுள்ளவருமாகிய பரமபதியின் சந்நிதானத்தில், நீலகண்ட சாஸ்திரியாகிய யான், காசி தேசாதிபதி யவர்கட்கும் இந்த நியாய ஸ்தலத்தில் நிற்கும் இந்த எதிரிக்கும் மத்தியஸ்தனுக விருந்து இவ் விசாரணை முற்றும் மனப்பூர்வமாய் நன்கு ஆராய்ந்து சாட்சியத்தின் பிரகாரம் உண்மையான முடிவைச் சொல்லத் தெய்வ பயத்தோடும் உடன்படுகின்றேன்.

(இவ்வாறே மற்றைய எண்மரும் கூறுகின்றனர்.)

**ராஜாங்க நியாயவாதி** — (எழுந்து மத்தியஸ்தரை நோக்கி) ஐயன்மீர்! இதோ நிற்கும் சந்திரமதி என்னும் பெண்பால் நேற்று மாலை முதல் இன்று விடியற்காலத்திற்குள், நமது ராஜாங்கச் சட்டத்திற்கு விரோதமாய், சிசுக்கொலை செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிருள். அவ் விசாரணை உங்களுக்கு முன்பாகச் சாட்சிகளைக்கொண்டு நடத்தப்படும். இவ் விசாரணைக்கு ஏற்பட்டுள்ள சாட்சிகள் எழுவர். அவர்களில் முதல் சாட்சி, கொலை செய்யப்பட்ட பிள்ளை நேற்று மாலை இருபத்தைந்து நாழிகை வரையில் சுகமாய் அரண்மனையில் இருந்ததாகவும், இரண்டாம் சாட்சி, எதிரி கொலை செய்யப்பட்ட பிள்ளையைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு போனதாகவும், மூன்றும் சாட்சி, எதிரி அப் பிள்ளையின் மீதிருந்த நகைகளைக் கழற்றித் தன்னிடம் ஒப்பித்ததாகவும், நான்காம் சாட்சி, எதிரி பிள்ளையின் உடுப்புகளைக் களைந்து ஓரிடத்தில் புதைத்து வைத்ததாகத் தன்னிடம் சொன்னதாகவும், அதைப் புதைத்த விடத்திலிருந்து எடுக்கப் பார்த்ததாகவும், ஐந்தாம் சாட்சி, பிரேதமான அப் பிள்ளையின்மீது முடிவில் மூடியிருந்த வஸ்திரத்தைத் தன்னிடம் எதிரி விலைக்கு வாங்கினதாகவும், ஆறும் ஏழாம் சாட்சிகள், எதிரி கொலை செய்யப்பட்ட பிள்ளையைக் கையில் ஏந்திப் போய்க்கொண் டிருந்ததாகவும் சொல்லுவார்கள். இனி, இதனைக் கேட்டு முடிவில் குற்றவாளியின் தரப்பில் நியாயம் வாதிக்கப்படுவதையும், அதன்மேல் ராஜாங்கத்தின் தரப்பில் எடுத்துச் சொல்லப்படும் நியாயங்களையும், அதன்மேல் நியாயாதிபதியவர்கள் கூறும் நியாயங்களையும் நன்ருய் ஆராய்ந்து அறிந்து பட்சபாத மின்றித் தீர்ப்புச் சொல்லவேண்டும்.

(அமர்கிறர்.)

**ராஜாங்க லிகிதர்** — முதல் சாட்சி லால்மோஹன் பிரசாத்.

**நியாயஸ்தலக் காவலன்** — சாட்சி லால்மோஹன் பிரசாத், சாட்சி லால்மோஹன் பிரசாத்.

**லால்மோஹன் பிரசாத்** — இதோ இருக்கிறேன், ஐயா!

**நியாயஸ்தலக் காவலன்** — இங்கே வாருங்கள். இந்தக் கூட்டில் ஏறுங்கள்.

(ஏறுகிறான்.)

**ராஜாங்க லிகிதர்** — (நான் சொல்லுகிறபடி சொல்லும்.) சர்வ சக்தியுள்ள சாமி முன்பாக நான் சொல்லுவது எல்லாம் நிஜம், நிஜம் முழுமையும், நிஜந்தவிர வேறொன்றுமில்லை.

(லால்மோஹன் பிரசாத் கூடவே சொல்கிறான்.)

## தற்சாட்சி விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — உம்முடைய வேலை என்ன?

**லால்மோஹன் பிரசாத்** — நான் மகாராஜாவின் அரண்மனையில் உள்ள வேலைகளைக் கவனித்து வரும் அரண்மனை நிர்வாகி.

**ராஜாங்க நியாயவாதி** — இந்த வழக்கு விஷயமாய் உமக்கு என்ன தெரியும்?

**லால்மோஹன் பிரசாத்** — நேற்று மாலை சுமார் இருபத்தைந்து நாழிகை வரையில் மகாராஜாவின் இளவரசர் சுகத்துடன் அரண்மனையிலிருந்தார். சற்று நேரத்திற்கெல்லாம் காணப்படவில்லை. உடனே அரண்மனை முழுவதும் தேடினோம். காணப்படவில்லை. பிறகு, ஊர்க்காவல் அதிகாரிகளுக்குத் தெரிவித்தோம். அவர்கள் இன்று காலையில் இளவரசருடைய பிரேதத்தையும், அவர் அணிந்திருந்த ஆடையாபரணங்களையும், இதோ இப்பொழுது எதிரியாக நிற்கும் இப் பெண்பாலையும் அரண்மனைக்குக் கொண்டுவந்து பிரேத விசாரணை செய்தார்கள். இவ்வளவே நான் அறிந்தது.

**ராஜாங்க நியாயவாதி** — அந்த ஆடையாபரணங்கள் இப்போது எங்கே இருக்கின்றன?

**லால்மோஹன் பிரசாத்** — இதோ ராஜாங்க லிகிதர் மேசையின் மேல் இருப்பவைகள்தான் அந்த ஆடையாபரணங்கள்.

**ராஜாங்க நியாயவாதி** — சரி. (அமர்கின்றார்.)

**எதிரியின் நியாயவாதி** — எதிர் விமரிசை ஒன்றுமில்லை.

**ராஜாங்க நியாயவாதி** — இரண்டாம் சாட்சி, முத்துவீரன் செட்டி.

**நியாஸ்தலக் காவலன்** — சாட்சி, முத்துவீரன் செட்டி இ இ இ, சாட்சி முத்துவீரன் செட்டி இ இ இ.

**முத்துவீரன் செட்டி** — *ஐயா, இதோ இருக்கிறேன்.*

**நியாயஸ்தலக் காவலன்** — *இப்படி வாரும், சாட்சிக் கூட்டின் மேல் ஏறும்.*

(ஏறுகிறான்.)

**ராஜாங்க லிகிதர்**—(*நான் சொல்வதுபோல் சொல்லும்.*) *சர்வ சக்தி யுள்ள சாமிக்கு முன்பாக நான் சொல்லுவதெல்லாம் நிஜம், நிஜம் முழுமையும், நிஜந்தவிர வேறல்ல.*

## தற்சாட்சி விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — *உமக்கு என்ன வேலை?*

**முத்துவீரன் செட்டி** — *நான் வியாபாரஞ் செய்கிறது.*

**ராஜாங்க நியாயவாதி** — *இந்தம்மாளை எப்பொழுதாவது பார்த்திருக்கிறீரா?*

**முத்துவீரன் செட்டி** — *ஆம் பார்த்திருக்கிறேன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *எப்போது? எங்கு பார்த்திருக்கிறீர்?*

**முத்துவீரன் செட்டி** — *ஐயா நேற்று மாலை இந்தம்மாள் ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு தட்டார வீதியில் ஒரு பத்தர் வீட்டுக்குள் நுழையப் பார்த்தேன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *இதற்குமுன் எப்பொழுதாவது பார்த்திருக்கிறீரா?*

**முத்துவீரன் செட்டி** — *பார்த்ததில்லை.*

**ராஜாங்க நியாயவாதி** — *நீ பார்த்த குழந்தைக்கு என்ன வயது இருக்கலாம்?*

**முத்துவீரன் செட்டி** — *ஏழெட்டு வயது இருக்கலாம்.*

**ராஜாங்க நியாயவாதி** — *அந்தக் குழந்தை என்ன உடை தரித்துக்கொண்டிருந்தது?*

**முத்துவீரன் செட்டி** — *இள ஞாயிற்றின் நிறம் வாய்ந்த பட்டு உடை தரித்துக்கொண்டிருந்தது.*

**ராஜாங்க நியாயவாதி** — *இன்னும் அந்தக் குழந்தையி னிடத்தில் என்ன கவனித்தீர்?*

**முத்துவீரன்செட்டி** — *விலையுயர்ந்த ஆபரணங்கள் அணிந்துகொண்டிருந்தது.*

**ராஜாங்க நியாயவாதி** — *பிறகு, அந்தக் குழந்தையை எங்கே கண்டீர்?*

**முத்துவீரன் செட்டி** — *பின்பு, ஊர்க்காவலாளிகள் பிரேத விசாரணை செய்யும்போது முன்கண்ட அந்தக் குழந்தை பிரேதமாக இருக்கக் கண்டேன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *சரி, சரி.*

(அமர்கிறார்.)

## எதிர் விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — *நீர் இந்த ஊரில் வசிப்பவரா?*

**முத்துவீரன் செட்டி** — *இல்லை, நான் இருப்பது கீாளிகட்டம்.*

**எதிரியின் நியாயவாதி** — *நீர் எப்போது இங்கு வந்தீர்?*

**முத்துவீரன் செட்டி** — *நான் வந்து மூன்று நாள் ஆகிறது.*

**எதிரியின் நியாயவாதி** — *நேற்று இந்தம்மாளைக் கண்டபோது முன்னும் பின்னும் போனவர்கள் இன்னாரென்று குறிப்பிட உம்மால் கூடுமா?*

**முத்துவீரன் செட்டி** — *கூடாது, ஐயா.*

**எதிரியின் நியாயவாதி** — *இந்தம்மாளைமட்டும் கவனித்து ஞாபகத்தில் வைத்திருந்ததற்குக் காரணமென்ன?*

**முத்துவீரன் செட்டி** — *குழந்தை அழகாயிருந்ததனாலும், விலையுயர்ந்த ஆடையாபரணங்களை யணிந்திருந்ததனாலும் அந்தக் குழந்தையைப் பார்க்கும் நிமித்தம் அந்தம்மாளையும் கவனிக்க நேர்ந்தது.*

**எதிரியின் நியாயவாதி** — *சரி, அந்தம்மாள் அப்போது என்ன உடை உடுத்திக்கொண்டிருந்தாள்?*

**முத்துவீரன் செட்டி** — *இப்போது உடுத்திக்கொண்டிருக்கும் இளஞாயிற்றின் நிறம் வாய்ந்த வஸ்திரமே அப்போதும் உடுத்திக்கொண்டிருந்தாள்.*

**எதிரியின் நியாயவாதி** — *அந்தம்மாள் மீது ஆபரணங்கள் ஏதேனும் இருந்தனவா?*

**முத்துவீரன் செட்டி** — *ஒன்றுமில்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *அந்தம்மாளோடு அக் குழந்தை போகும்போது உமக்குச் சந்தேகம் தோன்றவில்லையா?*

**முத்துவீரன் செட்டி** — *இல்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *தாயார் இவ்வளவு ஈனஸ்திதியில் இருக்கக் குழந்தை அவ்வளவு விலையுயர்ந்த ஆடை ஆபரணங்களை அணிந்திருக்கப் பார்த்தால் சந்தேகம் தோன்றாதா?*

**முத்துவீரன் செட்டி** — அந்தம்மாளை அக்குழந்தையின் தாயாக நினைத்திருந்தால் தோன்றும். நான் அக்குழந்தையின் தாதியாக நினைத்தேன்.

**எதிரியின் நியாயவாதி** — முடிவில் இவர்களை எங்கே கண்டீர்?

**முத்துவீரன் செட்டி** — ஒரு பத்தர் வீட்டில் நுழையக் கண்டேன்.

**எதிரியின் நியாயவாதி** — இந்தச் சங்கதியை நீர் வேறு யாரிடத்திலாவது பிரஸ்தாபித்ததுண்டா?

**முத்துவீரன் செட்டி** — ஆம் பிரஸ்தாபித்ததுண்டு.

**எதிரியின் நியாயவாதி** — யாரோடு எதற்காகப் பிரஸ்தாபித்தீர்?

**முத்துவீரன் செட்டி** — இவ்வூர் காளி கோயிலுக் கருகில் யாத்திரிகர் ஒருவர் என்னோடு பேசிக்கொண்டிருக்கும்போது, ஒரு ஸ்திரீ நேற்று இரவு அந்தக் காளி கோயிலுக்கு வந்ததாயும், இளவரசனாக வரவேண்டிய தன்னுடைய குமாரன் இறந்துவிட்டதாயும், அவனுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்தால் மற்றொரு இளவரசுக்குரிய குழந்தையைப் பலிகொடுப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டதாயும், அவற்றை அங்கு அண்டையில் படுத்திருந்த அந்த யாத்திரிகர் கேட்டுக்கொண்டிருந்ததாயும், என்னோடு சொன்னார். அதன்மேல் நானும் இப்படி இருவர் வழியே போவதைக் கண்டதாய் அவருடன் சொல்ல நேர்ந்தது.

**எதிரியின் நியாயவாதி** — அந்த யாத்திரிகரை நீர் இப்போது காட்டக்கூடுமா?

**முத்துவீரன் செட்டி** — ஆ, ஆ, காட்டக்கூடும். அவர் அந்தக் கோயிலண்டையே சிலநாட்கள் வரையில் இருப்பதாய்ச் சொன்னார்.

**எதிரியின் நியாயவாதி** — சரி போதும் (பாஸ்கரனைப் பார்த்து) என்ன ஐயா இது?

**பாஸ்கரன்** — அதெல்லாம் ஒன்றுமில்லை ஐயா. இந்தச் சாட்சி சொன்னது முற்றும் பொய். நாம் அந்த யாத்திரிகரை நமது பக்கத்தில் சாட்சியாக வருவித்துக் கேட்கவேண்டும். இது ஒன்றிலேயே இந்தம்மாள் விடுதலையாகிவிடுவள். தடையில்லை.

**எதிரியின் நியாயவாதி** — எல்லாம் பார்ப்போம்.

**ராஜாங்க நியாயவாதி** — மறு விமரிசை இல்லை.

**எதிரியின் நியாயவாதி** — சரி போம். (அமர்கிறார்.)

**ராஜாங்க லிகிதர்** — *மூன்றும் சாட்சி வேலாயுதாசாரி.*

**நியாயஸ்தலக் காவலன்** — *சாட்சி வேலாயுதாசாரீ இ இ. சாட்சி வேலாயுதாசாரீ இ இ.*

**வேலாயுதாசாரி** — *இதோ இருக்கிறேன்.* (ஓடி வருகிறான்.)

**நியாயஸ்தலக் காவலன்** — *இந்தச் சாட்சிக் கூட்டின்மேல் ஏறும்.*

**ராஜாங்க லிகிதர்** — (நான் சொல்லுகிறபடி சொல்லும்.) *சர்வ சக்தியுள்ள சாமி முன்பாக நான் சொல்வது எல்லாம் நிஜம், நிஜம் முழுமையும், நிஜந்தவிர வேறொன்றுமில்லை.*

## தற்சாட்சி விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — *இந்த வழக்கைப்பற்றி உமக்கு என்ன தெரியும்?*

**வேலாயுதாசாரி** — *இந்தம்மாள் நேற்று மாலை ஒரு குழந்தையை அழைத்துக்கொண்டு வந்து அதன்மேலிருந்த நகைகளைக் கழற்றி என்னிடம் கொடுத்தாள்.*

**ராஜாங்க நியாயவாதி** — *என்ன சொல்லி நகைகளைக் கொடுத்தாள்?*

**வேலாயுதாசாரி** — *இந்த நகைகளை அழித்து வேறே செய்யவேண்டும் என்று கொடுத்தாள்.*

**ராஜாங்க நியாயவாதி** — *பிறகு என்ன சங்கதி?*

**வேலாயுதாசாரி** — *பிறகு அந்தம்மாள் பிள்ளையை அழைத்துக்கொண்டு போய்விட்டாள். பிறகு ஊர்க்காவற்காரர் வந்து என்னைக் கேட்டார்கள். நடந்ததைச் சொன்னேன். நகைகளைக் கேட்டார்கள் எடுத்துக் கொடுத்துவிட்டேன். சில நகைகளில் கல்களைப் பேர்த்துவிட்டிருந்தேன். அவற்றையும் கொடுத்துவிட்டேன். பிறகு, அவர்கள் போன வழியைக் கேட்டார்கள். வழி காட்டினேன். எங்கே போனார்கள் என்று கேட்டார்கள்? எனக்குத் தெரியாதென்றேன். பின்பு என்னையும் அழைத்துக்கொண்டுபோய் இரவெல்லாம் அங்கங்கே தேடினார்கள். அகப்படவில்லை. கடைசியில் ஊருக்கு வடக்கில் ஒரு கொடிவழி போகிறது. அங்கே இந்தம்மாள் பிரேதமான அந்தக் குழந்தையைக் கையிலேந்திக்கொண்டிருந்தாள். உடனே காவலர் மெதுவாகப் போய் பிடித்துக்கொண்டார்கள்.*

**ராஜாங்க நியாயவாதி** — *பிறகு என்ன நடந்தது?*

**வேலாயுதாசாரி** — *பிறகு காவலாளிகள் குழந்தைமீது இருந்த உடைகள் எங்கே என்று கேட்டுக்கொண்டிருந்தார்கள்,*

*அந்தம்மாள் தனக்கு ஒன்றும் தெரியாதென்று சொன்னாள். பிறகு அந்த வழியாய் யாரோ ஒரு சந்நியாசி வந்தார். அவர் அந்தம்மாளைக் கேட்டபோது அவ்வுடைகளை அங்கே மறைத்து வைத்திருப்பதாகச் சொன்னாள். உடனே சொன்னவிடத்தில் சோதித்துப் பார்த்தார்கள். அங்கு உடைகளெல்லாம் இருந்தன.*

**ராஜாங்க நியாயவாதி** — *அந்த உடைகள் இப்பொழுது எங்கிருக்கின்றன?*

**வேலாயுதாசாரி** — *அந்த உடைகள் இப்போது இங்கே ராஜாங்க விகிதர் மேஜையின்மீது இருக்கும் உடைகள்தான்.*

**ராஜாங்க நியாயவாதி** — *குழந்தையை உமது வீட்டண்டை பார்த்ததுதவிர, இன்னும் எங்கே பார்த்தீர்?*

**வேலாயுதாசாரி** — *இந்த அம்மாள் கையில் பிணமாக வைத்திருக்கப் பார்த்தேன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *மறுபடியும் எங்கேயாவது பார்த்தீரா?*

**வேலாயுதாசாரி** — *ஆம், ஊர்க்காவலாளிகள் பிரேத விசாரணை செய்யும்போது பார்த்தேன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *சரி.*

(அமர்கிறார்.)

## எதிர் விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — *உம்முடைய தொழில் என்ன?*

**வேலாயுதாசாரி** — *நான் ஒரு பெரிய வியாபாரி. லட்சக் கணக்கான பொன் விலைமதிப்புள்ள ரத்தினங்களையும் நகைகளையும் கொண்டு, பெரிய நகரங்களிற் சென்று, பிரபுக்களிடத்திலும் அரசர்களிடத்திலும் வியாபாரம் செய்வதுண்டு. ஆபரணங்களை விலைக்கு விற்பதும், பழைய ஆபரணங்களைப் புதிய ஆபரணங்களுக்கு மாற்றிக்கொள்வதும் என்னுடைய வியாபாரம்.*

**எதிரியின் நியாயவாதி** — *நீர் இந்த வூரில் எவ்வளவு காலமா யிருக்கிறீர்?*

**வேலாயுதாசாரி** — *எல்லாம் சொற்ப காலமாகத்தான் இருக்கிறேன்.*

**எதிரியின் நியாயவாதி** — *சொற்ப காலமென்றால் மாதக்கணக்கா? நாள் கணக்கா?*

**வேலாயுதாசாரி** — *நாள் கணக்காகத்தான் இருக்கும்.*

**எதிரியின் நியாயவாதி** — *எத்தனை நாளாக இங்கு இருக்கிறீர்?*

**வேலாயுதாசாரி** — *ஒரு வாரமாக இருக்கிறேன் ஐயா.*

**எதிரியின் நியாயவாதி** — இந்தம்மாளை இதற்குமுன் நீர் பார்த்ததுண்டா?

**வேலாயுதாசாரி** — வந்த சில தினங்களில் பலர் என்னிடம் வரு வதும் போவதுமாக இருக்கிறார்கள். இந்தம்மாளும் வந் திருக்கலாம். நான் கவனிக்க வில்லை. நேற்றுத்தான் கவ னித்தேன்.

**எதிரியின் நியாயவாதி** — இந்த அம்மாளுடைய அந்தஸ்து இவ்வளவென்பது உமக்குத் தெரியுமா?

**வேலாயுதாசாரி** — தெரியாது.

**எதிரியின் நியாயவாதி** — தெரியாதபோது அந்தம்மாள் கொடுத்த விலையுயர்ந்த நகைகளை எப்படிப் பெறலாம்? இந்த நகைகள் எது, யாருடையது என்றாவது கேட்டீரா?

**வேலாயுதாசாரி** — யான் பெருத்த வியாபாரி; நான் செல்லும் நகரங்களில் என்னுடைய வியாபாரத்தை விரைவில் முடித்துக்கொண்டு மற்றொரு நகரத்திற்குப் போகிறவன் ஆகையாலும், சில தினங்களில் என்னிடம் வியாபாரம் செய்யப் பிரபுக்களும் மற்றவர்களும் திரளாய் வருவதனாலும் ஒவ்வொருவரோடும் பல விஷயங்கள் பேச அவகாச மிராது. அதனால். இந்தம்மாள் கொண்டுவந்தபோதும் யான் ஒன்றும் கேட்கவில்லை.

**எதிரியின் நியாயவாதி** — நீர் பெருத்த வியாபாரி என்கிறீரே, உம்மிடம் சுமார் எத்தனை ஆயிரம் பொன் விலைமதிப்புள்ள ஆபரணங்கள் உண்டு?

**வேலாயுதாசாரி** — தற்காலம் சுமார் ஐந்து லட்சம் பொன் விலை பெறக்கூடிய ரத்தினுபரணங்கள் என்னிடம் உண்டு.

**எதிரியின் நியாயவாதி** — நல்லது, இந்தம்மாள் குழந்தையின் உடுப்புக்களை புதைத்து வைத்திருப்பதாக சந்நியாசியிடம் சொன்னதாகச் சொன்னீரே, அப்படிச் சொல்லும்போது நீர் உமது காதாரக் கேட்டீரா?

**வேலாயுதாசாரி** — அந்தம்மாள் சொல்ல நான் கேட்கவில்லை. அந்தம்மாள் சொன்னதாக சந்நியாசி சொல்ல எனது காதினுல் கேட்டேன்.

**எதிரியின் நியாயவாதி** — சரி அந்தம்மாள் சொல்ல நீர் கேட்கவில்லை. உடுப்புக்களை அந்தம்மாளே புதைத்த இடத்திலிருந்து எடுத்ததுண்டா?

**வேலாயுதாசாரி** — அந்தம்மாள் தானே எடுக்கவில்லை. ஆனால், அந்தம்மாள் குறிப்பிட்ட இடத்திலிருந்து காவற்காரர்கள் எடுத்தார்கள்.

**எதிரியின் நியாயவாதி** — சரி.

(அமர்கிறார்.

**மறு விமரிசை.**

**ராஜாங்க நியாயவாதி** — உடுப்புக்களைப் புதைத்து வைத்திருப்பதாக அந்தம்மாள் சொல்லும்போது நீர் கேட்கவில்லையா?

**வேலாயுதாசாரி** — இல்லை.

**ராஜாங்க நியாயவாதி** — அந்தம்மாள் சொன்னதாக சந்நியாசி சொன்னபோதும், உடுப்புக்களைக் காவலாளிகள் எடுத்தபோதும் அந்தம்மாள் என்ன சொன்னாள்?

**வேலாயுதாசாரி** — ஒன்றுஞ் சொல்லாமல் மவுனமாயிருந்தாள்.

**ராஜாங்க நியாயவாதி** — சரி.

(அமர்கிறார்.)

**ராஜாங்க லிகிதர்** — நான்காவது சாட்சி பரமாநந்த யோகி.

**நியாயஸ்தலக் காவலன்** — சாட்சி பரமாநந்தயோகி இ இ இ. சாட்சி பரமாநந்த யோகி இ இ இ.

**பரமாநந்தயோகி** — ஐயா இதோ இருக்கிறேன்.

**நியாயஸ்தலக் காவலன்** — சுவாமீ! இந்தச் சாட்சிக் கூட்டின்மேல் ஏறுங்கள்.

**பரமாநந்தயோகி** — கூடா இது, இந்தக் கூடு அந்தக் கூட்டின்மேல் ஏறவேண்டுமா! சரி, சரி.

**ராஜாங்க லிகிதர்** — ஐயா, யோகியாரே! நான் சொல்லுகிறபடி சொல்லவேண்டும்.

**பரமாநந்தயோகி** — நாம் நமக்குத் தெரிந்ததை யன்றோ சொல்ல வந்தோம். நீர் சொல்லுவதை யெப்படி நாம் சொல்லலாம்?

**ராஜாங்க லிகிதர்** — அதல்ல, தாங்கள் சொல்வதெல்லாம் உண்மை யென்பதைக் குறிக்கச் சத்தியம் செய்யவேண்டும். அது நியாயஸ்தலத்தின் ஒழுங்கு. யாரானாலும் செய்தே தீர வேண்டும்.

**பரமாநந்தயோகி** — சத்தியமா, ஆனால் அசத்தியமும் நம்மிடத்தில் உண்டென்பது அங்கே அபிப்பிராயப் படுகிறதோ.

**ராஜாங்க லிகிதர்** — அப்படியல்ல. நியாயஸ்தலத்தில் எல்லாருக்கும் ஒரே முறையாக வன்றோ நடத்தவேண்டும். பொய்

பேசுகிறவர்களும் இங்கு வருகின்றனரே. சொல்லுங்கள். சர்வ சக்தியுள்ள சாமி முன்பாக யான் சொல்வது எல்லாம் நிஜம், நிஜம் முழுவதும், நிஜந்தவிர வேறொன்றுமில்லை..

(யோகி கூடவே சொல்கிறான்.)

## தற்சாட்சி விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — தங்கள் நாமதேய மென்ன?

**பரமாநந்தயோகி** — இவனைப் பரமாநந்தயோகி என்பார்கள்.

**ராஜாங்க நியாயவாதி** — இந்த வழக்கு விஷயமாய் உமக்கு என்ன தெரியும்?

**பரமாநந்தயோகி** — இன்று பிராதக்காலத்தில் இவ் வூரின் வடதிசையில் இப் பெண்பாலைக் காவலர் பலர் சூழ நின்று ஏதோ வினவிக்கொண்டிருந்தனர். யாம் அவ் வழியாக வர நேர்ந்தது. அப்போது அவர்கள் நடுவில் இப் பெண்பாலைக் கண்டோம்.

**ராஜாங்க நியாயவாதி** — நீங்கள் அவ் விடம் வந்தபிறகு என்ன நடந்தது?

**பரமாநந்தயோகி** — யாம் வரும்போது காவலர் இந்தப் பெண்பாலை நோக்கி "கொலையுண்ட குழந்தை உன் கையிலிருக்கிறதே, இந்தக் குழந்தையின் உடைக ளெங்கே?" என்று கேட்டுக்கொண்டிருந்தனர். அதற்கு அப் பெண்பால் மௌனமாயிருந்தாள். அப்போது யாம் அப் பெண்பாலைத் தனியே அழைத்து, "கொலையோ கையும் மெய்யுமாக அகப்பட்டுக்கொண்டது. இன்னமும் மறைப்பது அடாது. உண்மையையுரைத்துவிடுவதே நலம்" என்றோம். அதன்மேல் அப் பெண்பிள்ளை தான் அவ் வுடைகளை ஓரிடத்தில் புதைத்து வைத்திருப்பதாகக் கூறினள். அதை யாம் காவலருக்கு வெளியிட்டோம். பிறகு, காவலர் அதனைப் பூமியினின்றும் தோண்டி எடுத்தனர்.

**ராஜாங்க நியாயவாதி** — காவலர் எந்தக் குழந்தையின் உடையைக் கேட்டார்கள் என்பதை நீர் அறிவீரா?

**பரமாநந்தயோகி** — ஆம், ஒரு குழந்தை பிணமாக அப் பெண்பாலின் கையில் இருந்தது. அக் குழந்தையின் உடையினையே கேட்டார்கள்.

**ராஜாங்க நியாயவாதி**—மறுபடியும் அப்பிணத்தை எங்கே கண்டீர்?

**பரமாநந்தயோகி** — ஊர்க்காவலர் பிரேத விசாரணை செய்தபோது மறுபடியும் கண்டோம்.

ராஜாங்க நியாயவாதி—அங்கு எடுத்த உடைகள் இப்போது எங்கே இருக்கின்றன?

பரமாநந்தயோகி — இதோ இந்த ராஜாங்க லிகிதர் மேஜையின்மேல் இருக்கின்றன.

ராஜாங்க நியாயவாதி — சரி.

(அமர்கிறார்.)

## எதிர் விமரிசை.

எதிரியின் நியாயவாதி — நீர் யோகீசுவரரா?

பரமாநந்தயோகி — ஆம், அப்படித்தான் சொல்வார்கள்.

எதிரியின் நியாயவாதி — நீர் எங்கே வசிப்பது?

பரமாநந்தயோகி — நமக்கு ஓர் இடமென்ப தில்லை.

எதிரியின் நியாயவாதி — நேற்று இரவு எங்குத் தங்கினீர்?

பரமாநந்தயோகி — இவ் வூரின் வடபாலிலுள்ள கோயிலில் தங்கினோம்.

எதிரியின் நியாயவாதி — லோக விவகாரங்கள் உமக்கு உண்டோ?

பரமாநந்தயோகி — அவற்றையெல்லாம் ஒழித்தே இந்த நிலையிலிருக்கின்றோம்.

எதிரியின் நியாயவாதி — இந்தம்மாளை நீர் கண்டதும் பேசியதும் உண்டா?

பரமாநந்தயோகி — உண்டு.

எதிரியின் நியாயவாதி — பற்றற்று விளங்கிய பரமயோகியாகிய நீர் இவ் விஷயத்தில் தலையிடுவானேன்?

பரமாநந்தயோகி — யோகியர்க்கு ஜீவகாருண்யம் வேண்டும். ஒரு ஜீவன் கொலை செய்யப்பட்டமையாலும், ஒரு பெண்பாலின் உயிர் பலர் நடுவில் அகப்பட்டு வருந்தினதனாலும் யாம் தலையிட்டோம். அன்றி, ராஜாங்கத்திற்கு ஞானியரும் உதவிபுரிதல் வேண்டும். "அனைவர்க்குந் தெய்வம் இலைமுகப் பைம்பூண் இறை" என்பது சாஸ்திரம்.

எதிரியின் நியாயவாதி — உடைகளைப் புதைத்ததாக இப் பெண்பால் கூறினாளென்று நீர் ஊர்க்காவலரிடத்து உரைத்தபொழுது இப் பெண்பால் என்ன சொன்னாள்?

பரமாநந்தயோகி — ஒன்றும் சொல்லவில்லை.

எதிரியின் நியாயவாதி — இருளில் அந்தப் பிணத்தை நீர் அவ்வளவு கவனிப்பானேன்?

**பரமாநந்தயோகி** — *ஜீவ காருண்யத்தினுல்தான் கவனித்தது.*

**ராஜாங்க நியாயவாதி** — *மறு விமரிசை இல்லே. ஐந்தாவது சாட்சி தன்ஞஜீராவ்.*

**நியாயஸ்தலக் காவலன்** — *சாட்சி தன்ஞஜீராவ், சாட்சி தன்ஞஜீராவ்.*

(வருகிருன்.)

**ராஜாங்க லிகிதர்** — *இந்தச் சாட்சிக் கூண்டில் ஏறும்.* (ஏறுகிருன்.) *நான் சொல்லுவதுபோல் சொல்லும். சர்வ சக்தியுள்ள சாமி முன்பாக நான் சொல்லுவது எல்லாம் நிஜம், நிஜம் முழுவதும், நிஜந்தவிர வேறில்லே.*

(கூடவே சொல்கின்றுன்.)

## தற்சாட்சி விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — *உமக்கு என்ன வேலே?*

**தன்ஞஜீராவ்** — *பட்டு வியாபாரம்.*

**ராஜாங்க நியாயவாதி** — *உம்முடைய கடை எங்கே?*

**தன்ஞஜீராவ்** — *எனக்குக் கடையில்லே. நான் ஒரு ஊரில் தங்கி வசிப்பவனல்ல. பட்டு வஸ்திரங்களேச் சிறு மூட்டையாகக் கட்டிக்கொண்டு ஊர் ஊராகச் சென்று வீதிதோறும் கூவி விற்பவன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *ஓ, சரி. இந்தம்மாளே எங்கேயாவது பார்த்ததுண்டா?*

**தன்ஞஜீராவ்** — *நேற்று இந்த ஊர் தெற்கு வீதியில் பார்த்தேன்.*

**ராஜாங்க நியாயவாதி** — *நேற்று இந்தம்மாளேப் பார்க்கும்போது எத்தனே நாழிகை யிருக்கலாம்?*

**தன்ஞஜீராவ்** — *நேற்று மாலே பொழுது சாய நாலேந்து நாழிகை இருக்கலாம்.*

**ராஜாங்க நியாயவாதி** — *இந்தம்மாளே நீர் ஏன் கவனிக்கவேண்டி வந்தது?*

**தன்ஞஜீராவ்** — *இந்தம்மாள் என்னிடம் நான்கு முழம் பட்டு வாங்கினுள். அதனுல் கவனிக்க வேண்டியதாயிற்று.*

**ராஜாங்க நியாயவாதி** — *விற்ற மாதிரியான பட்டு மீதி உம்மிடத்தில் இருக்கிறதா?*

**தன்ஞஜீராவ்** — *இல்லே, மீதியை ஊர்க்காவல் அதிகாரிகளிடம் ஒப்பித்தேன்.*

ராஜாங்க நியாயவாதி — அந்தத் துண்டில் எவ்வளவு விற்றீர்? எவ்வளவு மீதி யிருக்கிறது?

தன்ஞஜீராவ் — இந்தம்மாளுக்குத்தான் நான்கு முழங்கள் விற்றேன். மற்ற மீதி இருபது முழமும் அப்படியே இருந்தது.

ராஜாங்க நியாயவாதி — அம்மாதிரியான பட்டு இங்கிருக்கிறதா பாரும்.

தன்ஞஜீராவ் — ஆம், அதோ இருக்கிறது.

ராஜாங்க நியாயவாதி — (துண்டைக் காட்டி) இந்தத் துண்டுதானு நீர் விற்றது பாரும்.

தன்ஞஜீராவ் — (பார்த்து) ஆம், இந்தத் துண்டுதான்.

ராஜாங்க நியாயவாதி — இதுதானு உம்முடைய மீதித் துண்டு?

தன்ஞஜீராவ் — (வாங்கிப் பார்த்து) ஆம், இதுதான்.

ராஜாங்க நியாயவாதி — விற்ற இந்தத் துண்டை மறுபடியும் எங்கேயாவது பார்த்தீரா?

தன்ஞஜீராவ் — ஆம், பார்த்தேன்.

ராஜாங்க நியாயவாதி — எங்கே பார்த்தீர்?

தன்ஞஜீராவ் — ஊர்க்காவலாளிகள் பிரேத விசாரணை செய்தபோது அந்தப் பிரேதத்தின்மீது மூடப்பட்டிருக்கப் பார்த்தேன்.

ராஜாங்க நியாயவாதி — சரி.

(அமர்கிறார்.)

## எதிர் விமரிசை.

எதிரியின் நியாயவாதி — தெருத் தெருவாகத் துணி விற்பதுதானு உம்முடைய வேலை.

தன்ஞஜீராவ் — ஆமாம்.

எதிரியின் நியாயவாதி — இன்னும் யாராருக்கு இந்த ஊரில் பட்டு விற்றீர்?

தன்ஞஜீராவ் — இன்னும் அநேகருக்கு விற்றேன். அவர்கள் இன்னின்னுரென்று சொல்லத் தெரியாது.

எதிரியின் நியாயவாதி — நல்லது இந்தம்மாளைமாத்திரம் எப்படி ஞாபகத்தில் வைத்தீர்?

தன்ஞஜீராவ் — வாங்கினவர்கள் பேர்மாத்திரம் தெரியாது. பார்த்தால் இன்னின்னுரென்று குறிப்பிடத் தெரியும்.

**எதிரியின் நியாயவாதி** — (வேறு அம்மாதிரியான பட்டைக் காட்டி) இது நீர்விற்ற பட்டுத் துண்டுதானே?

**தன்ஞூஜீராவ்** — (சற்று உற்றுப்பார்த்து) அல்ல, இது நான் விற்ற-தல்ல, அதைப்போ லிருக்கிறது, அதல்ல.

**எதிரியின் நியாயவாதி** — இதற்குமுன் சாட்சியம் சொன்னவர்-களில் எவராது உமக்குத் தெரியுமா? உம்மிடம் பட்டு வாங்கினதுண்டா?

**தன்ஞூஜீராவ்** — ஒருவரும் தெரியாது. ஒருவரும் வாங்கினதில்லை.

**ராஜாங்க லிகிதர்** — ஆறுவது சாட்சி ஊர்க்காவல் ரஞ்சிட்சிங்.

**நியாயஸ்தலக் காவலன்** — ஊர்க்காவல் ரஞ்சிட்சிங், ஊர்க்காவல் ரஞ்சிட்சிங்.

(சாட்சிக் கூட்டில் ஏறுகிறான்.)

**ராஜாங்க லிகிதர்** — சொல்லு, சர்வ சக்தியுள்ள சாமி முன்பாக நான் சொல்லுவது எல்லாம் நிஜம், நிஜம் முழுவதும், நிஜந் தவிர வேறில்லை.

(கூடவே சொல்கிறான்.)

## தற்சாட்சி விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — உனக்கு என்ன வேலை?

**ரஞ்சிட்சிங்** — நான் இந்த ஊர்க்காவலாளிகளில் ஒருவன்.

**ராஜாங்க நியாயவாதி** — குழந்தை காணமற்போனது எப்போது? அது உனக்கு எப்படித் தெரியும்?

**ரஞ்சிட்சிங்** — நேற்றுச் சாயங்காலம் எங்கள் எஜமானர் சொல்லத் தெரியும்.

**ராஜாங்க நியாயவாதி** — உங்கள் எஜமான் என்ன உத்தரவு செய்-தார்?

**ரஞ்சிட்சிங்** — பல பேரைப் பல பக்கங்களில் போய் பார்த்துக் குழந்தையைக் கண்டுபிடிக்கச் சொன்னார்.

**ராஜாங்க நியாயவாதி** — உன்னோடு இன்னும் யாரார் வந்தார்கள்?

**ரஞ்சிட்சிங்** — ரம்பால்சிங் என்பவர் ஒருவர் மாத்திரம் வந்தார்.

**ராஜாங்க நியாயவாதி** — முதலில் என்ன செய்தீர்கள்?

**ரஞ்சிட்சிங்** — ஊர் முழுதும் தேடிப் பார்த்தோம்.

**ராஜாங்க நியாயவாதி** — பிறகு என்ன செய்தீர்கள்?

**ரஞ்சிட்சிங்** — எங்களுக்குக் கிடைத்த பத்தாவைக்கொண்டு ஒரு பத்தர் வீட்டுக்குப் போனோம். அங்கு, இந்தக் குற்றவாளி பிள்ளையை அழைத்துக்கொண்டு வந்து நகைகளைக் கழற்றிக் கொடுத்ததாய் தெரியவந்தது. அந்த நகைகளைப் பெற்றுக்கொண்டோம்.

**ராஜாங்க நியாயவாதி** — பிறகு என்ன நடந்தது?

**ரஞ்சிட்சிங்** — பிறகு, அந்த ஆசாரியையும் உடனே கூட்டிக்கொண்டு பல இடங்களில் தேடினோம். கடைசியில் வடக்குப் பக்கத்தில் போகும் பாதையில் இந்தம்மாள் பிள்ளையின் பிரேதத்தைக் கையிலேந்திப் புதைக்க யத்தனப்பட்டுக்கொண்டிருந்தாள். உடனே பிடித்துக்கொண்டோம்.

**ராஜாங்க நியாயவாதி** — அதன் பிறகு என்ன செய்தீர்கள்?

**ரஞ்சிட்சிங்** — இந்தக் குற்றவாளியை நாங்கள் குழந்தையின் உடுப்புக்கள் எங்கே என்று கேட்டோம், ஒன்றும் சொல்லவில்லை. அதன்பிறகு அங்கு ஒரு சந்நியாசி வந்து அந்தம்மாளைத் தனியே அழைத்துக் கேட்டார். அதன்மேல் அந்தம்மாள் தான் புதைத்து வைத்த இடத்தைக் காட்டினாள். உடைகள் அந்த இடத்திலேயே இருந்தன.

**ராஜாங்க நியாயவாதி** — பிறகு என்ன செய்தீர்கள்?

**ரஞ்சிட்சிங்** — பிறகு அந்தந்த சாக்ஷியங்களோடு இந்தக் குற்றவாளியையும் அழைத்துக்கொண்டு, பிரேதமான குழந்தை, நகை, உடுப்பு ஆகிய இவைகளையும் கொண்டுவந்து எங்கள் எஜமானரிடம் சேர்த்தோம். அவர் அரண்மனைக்குக் கொண்டுபோய் பிரேத விசாரணை செய்தார். அங்கு மகாராஜா முதலியவர்கள், பிரேதமாயிருப்பது ராஜகுமாரரே என்றும், நகையும் உடுப்பும் குழந்தை தரித்துக்கொண்டிருந்தவைகளே என்றும் சொன்னார்கள்.

**ராஜாங்க நியாயவாதி** — அந்த உடையும் ஆபரணங்களும் இப்போது எங்கே இருக்கின்றன?

**ரஞ்சிட்சிங்** — அவைகள் இதோ ராஜாங்கலிகிதர் மேஜையின்மீது இருப்பவைகளே.

**ராஜாங்க நியாயவாதி** — சரி. (அமர்கின்றார்.)

## எதிர் விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — காணமற்போனது மகாராஜாவினுடைய குழந்தை ஆகையால் அதைக் கண்டுபிடிக்கவேண்டும் என்னும் அபிப்பிராயம் உனக்கு அதிகம் உண்டு அல்லவா?

**ரஞ்சிட்சிங்** — *ஆமாம், உண்டு ஐயா.*

**எதிரியின் நியாயவாதி** — *மற்றவர்கள் குழந்தை போயிருந்தால் உழைப்பதைவிட இதற்குப் பதின்மடங்கு அதிகமாக உழைத்திருக்க வேண்டுமல்லவா?*

**ரஞ்சிட்சிங்** — *ஆமாம்.*

**எதிரியின் நியாயவாதி** — *அதற்குக் காரணம் என்ன?*

**ரஞ்சிட்சிங்** — *மகாராஜாவினுடைய குழந்தை ஆகையால் அப்படிப் பாடுபட வேண்டியதாயிருந்தது.*

**எதிரியின் நியாயவாதி** — *இதைக் கண்டுபிடித்தால் ராஜாங்கத்தில் நல்ல பேரும், மேலான உத்தியோகமும் கிடைக்கும் என்பது உறுதிதானே?*

**ரஞ்சிட்சிங்** — *அப்படி இல்லை ஐயா, எங்களுடைய வேலையை நாங்கள் சரிவரச் செய்யவேண்டியது. அதுவே எங்கள் எண்ணம்.*

**எதிரியின் நியாயவாதி** — *உங்களுடைய வேலை யென்ன?*

**ரஞ்சிட்சிங்** — *எங்களுடைய வேலை குற்றத்தைக் கண்டுபிடித்து உள்ளபடியே அதன் விவரத்தை நியாயாதிபதிக்குத் தெரிவிக்கவேண்டியது.*

**எதிரியின் நியாயவாதி** — *நீங்கள் கண்டுபிடித்த குற்றவாளி தண்டிக்கப்பட்டால்தானே நீங்கள் வெற்றி யடைந்ததாக எண்ணம்.*

**ரஞ்சிட்சிங்** — *அப்படியில்லை, நியாயம் வெளிப்பட்டால் போதும் என்பதே எங்கள் எண்ணம்.*

**எதிரியின் நியாயவாதி** — *நீயாக எண்ணிக்கொள்ளாவிட்டாலும் உங்கள் அதிகாரியாவது, இந்தக் குற்றத்தைக் கண்டுபிடித்தால் உயர்ந்த உத்தியோகம் தருவித்துக் கொடுப்பதாய்ச் சொல்லவில்லையா?*

**ரஞ்சிட்சிங்** — *அப்படி ஒன்றும் சொல்லவில்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *இருக்கட்டும், குற்றவாளியின் பக்கத்தில் ஏதாவது சாட்சியம் உண்டா என்பதை விசாரித்தாயா?*

**ரஞ்சிட்சிங்** — *இல்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *ஏன் விசாரிக்கவில்லை.*

**ரஞ்சிட்சிங்** — *சாட்சிகள் ஒருவருமில்லை. மேலும் குற்றம் கையும் மெய்யுமாக அகப்பட்டிருக்கிறது.*

**எதிரியின் நியாயவாதி** — *அந்தக் குழந்தையை இந்த எதிரி கொல்லும்போது நீ உன் கண்ணால் பார்த்தாயா?*

**ரஞ்சிட்சிங்** — *நான் பார்க்கவில்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *இந்த எதிரியை நீ பார்த்தபோது குழந்தை என்ன ஸ்திதியில் இருந்தது?*

**ரஞ்சிட்சிங்** — *இறந்து பிரேதமாக இருந்தது.*

**எதிரியின் நியாயவாதி** — *உடைகளைப் புதைத்ததாக எதிரி தானே சொன்னதுண்டா?*

**ரஞ்சிட்சிங்** — *எதிரி சொல்லவில்லை. எதிரி சந்நியாசியிடம் சொன்னதை அந்தச் சந்நியாசி சொன்னார்.*

**எதிரியின் நியாயவாதி** — *குற்றவாளியின் சாட்சியங்களை விசாரித்தறிந்திருந்தால் இப்போது ஏற்பட்டிருக்கும் விஷயங்களுக்கு மாறாகச் சில விஷயங்கள் ஏற்படும் அல்லவா?*

**ரஞ்சிட்சிங்** — *மாறாகவும் ஏற்படலாம், அநுகூலமாகவும் ஏற்படலாம்.*

**எதிரியின் நியாயவாதி** — *மாறாக ஏற்பட்டால் வழக்குக் கெட்டு விடுமே என்ற எண்ணத்தினாலல்லவா அவர்களை விசாரித்தறியவில்லை?*

**ரஞ்சிட்சிங்** — *வழக்குக் கெடுகிறதென்றும் நன்மையாகிறதென்றும் எங்களுக்கு எண்ணமில்லை; உண்மை வெளிப்படவேண்டும் என்பதே எங்கள் எண்ணம்.*

**எதிரியின் நியாயவாதி** — *அப்படியானால் குற்றவாளியின் சார்பிலுள்ள சாட்சியங்களை நீங்கள் ஏன் விசாரிக்கவில்லை?*

**ரஞ்சிட்சிங்** — *சாட்சியங்களிருப்பதாய் எங்களுக்குத் தெரியாது.*

**எதிரியின் நியாயவாதி** — *சாட்சி யிருப்பதாக எதிரி உங்களுக்குத் தெரியப்படுத்தவில்லையா?*

**ரஞ்சிட்சிங்** — *தெரியப்படுத்தவில்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *நீங்கள் எதிரியைப் பிடித்துக்கொண்டபோது எதிரி என்ன சொன்னாள்?*

**ரஞ்சிட்சிங்** — *'நான் ஒரு பாவமும் அறியேன்; எனக் கொன்றும் தெரியாது' என்றாள்.*

**ராஜாங்க நியாயவாதி** — *இந்தச் சாட்சியோடு மற்றொரு சாட்சியும் உண்டு. அந்தச் சாட்சியும் இதே சங்கதியைத் தெரிவிக்குமாதலால், நியாயாதிபதியவர்கட்கும் மத்தியஸ்தர்களுக்-*

கும் வீண் சிரமம் உண்டாகாதவாறு அந்தச் சாட்சியை விசாரியாமல் நிறுத்துகின்றேன். இஷ்டமானல் அந்தச் சாட்சியை எதிர் விமரிசை செய்யலாம்.

## எதிர் விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — *உன் பெயர் ரம்பால்சிங்கா?*

**ரம்பால்சிங்** — *ஆமாம்.*

**எதிரியின் நியாயவாதி** — *குழந்தை எதிரியோடு இருக்கக்கண்டது எப்போது?*

**ரம்பால்சிங்** — *எதிரியை நாங்கள் பிடித்துக்கொண்டபோது.*

**எதிரியின் நியாயவாதி** — *அப்போது உங்களோடு வேறு யாராவது இருந்தார்களா?*

**ரம்பால்சிங்** — *வேலாயுதாசாரி என்பவர் ஒருவர் இருந்தார்.*

**எதிரியின் நியாயவாதி** — *பிடித்துக்கொண்டபோது எதிரியை விசாரித்தீர்களா?*

**ரம்பால்சிங்** — *விசாரித்தோம்.*

**எதிரியின் நியாயவாதி** — *அதற்கு எதிரி என்ன சொன்னுள்?*

**ரம்பால்சிங்** — *"நான் ஒரு பாவமும் அறியேன்" என்பதையே அடிக்கடி சொன்னுள். மற்றென்றும் சொல்லவில்லை.*

**எதிரியின் நியாயவாதி** — *எதிரியோடு குழந்தை உயிருடன் இருந்ததையாவது, நகை முதலியவற்றை எதிரி கழற்றியதையாவது நீ நேரில் பார்க்கவில்லையே?*

**ரம்பால்சிங்** — *பார்க்கவில்லை, எல்லாம் சாட்சிகள் மூலமாய்த்தான் தெரியவந்தன.*

**எதிரியின் நியாயவாதி** — *எதிரியின் சாட்சிகளைத் தேடி என் வாக்கு மூலம் ஒன்றும் வாங்கவில்லை?*

**ரம்பால்சிங்** — *சாட்சிகள் இருப்பதாக எங்களுக்குத் தெரியாது.*

**எதிரியின் நியாயவாதி** — *நீங்கள் பிடித்ததுமுதல் எதிரி உங்களிடம் சொல்லியதுதான் என்ன?*

**ரம்பால்சிங்** — *"எனக்கொன்றும் தெரியாது, நான் குற்றவாளியல்ல" என்பதுதான்.*

**எதிரியின் நியாயவாதி** — *எதிரி குற்றவாளி என்பது ஏற்பட்டால் உங்களுக்கு அநுகூலந்தானே?*

**ரம்பால்சிங்** — எங்களுக்கு அநுகூலமும் இல்லை, பிரதிகூலமும் இல்லை.

**எதிரியின் நியாயவாதி** — ஆனால், உங்கள் கருத்துத்தான் என்ன?

**ரம்பால்சிங்** — உண்மை வெளிப்படவேண்டும் என்பதே எங்கள் கருத்து.

**எதிரியின் நியாயவாதி** — பட்டு வியாபாரியை எங்கிருந்து கண்டு-பிடித்தீர்கள்?

**ரம்பால்சிங்** — நாங்கள் கண்டுபிடிக்கவில்லை. அவரே வந்து சங்கதி சொன்னார்.

**எதிரியின் நியாயவாதி** — என்னவென்று சொன்னார்?

**ரம்பால்சிங்** — "நேற்று இந்தம்மாள் என்னிடம் நான்கு முழம் பட்டு வாங்கினாளே, இந்தம்மாளா இப்படிச் செய்துவிட்டாள்" என்றார்.

**எதிரியின் நியாயவாதி** — அப்போது அந்தப் பட்டுத் துண்டு எதிரில் இருந்ததா?

**ரம்பால்சிங்** — இல்லை.

**எதிரியின் நியாயவாதி** — பிறகு, என்ன செய்தீர்கள்?

**ரம்பால்சிங்** — பிறகு அந்தத் துண்டையும் அவரிடம் இருந்த துண்டையும் ஒப்பிட்டுப் பார்த்தோம். சரியாக இருந்தன. அதையும் வாங்கி வைத்துக்கொண்டோம்.

(அமர்கின்றார்.)

**எதிரியின் நியாயவாதி** — சரி.

**ராஜாங்க நியாயவாதி** — மறு விமரிசை யில்லை.

**எதிரியின் நியாயவாதி** — (மத்தியஸ்தரை நோக்கி) ஐயன்மீர்! இப்போது ராஜாங்க நியாயவாதியின் பக்கமாய் வந்த சாட்சிகள் சொல்லிய அமிசங்களில் முக்கியமாய் இரண்டு விஷயங்கள் கவனிக்கவேண்டி யிருக்கின்றன. அவ் விரண்டும் மேற்கண்ட சாட்சிகள் கூறிய விஷயங்களுக்கு ஒத்திருந்தால் குற்றம் ஸ்திரப்படும். மாறுபட்டால் இந்தச் சாட்சிகள் உரைத்தவை யனைத்தும் பொய்யாகும். அப்போது, குற்றம் எதிரியின்மீது ஏற்படாது. அவ் விரண்டு விஷயங்கள் என்னவென்றால், முதலாவது குழந்தை அரண்மனையினின்றும் காணாமற் போனபோது எதிரி இருந்தது எங்கே. இரண்டாவது, காளி கோயிலண்டை எதிரி பிரார்த்தனை செய்துகொண்டதுண்டா என்பனவாம். இவ் விரண்டே இக்குற்றத்திற்கு ஆதாரமா யுள்ளவை. எதிரியின் சார்பில் இவை அநுகூலப்பட்டால் இப்போது கூறிய சாட்சியங்கள் முற்றும்

பொய்யாகும். ஆகவே, காலத்தை நிர்ணயிக்க இரண்டு சாட்சிகளும், காளி கோயிலில் பிரார்த்தனை செய்துகொண்டதும் கொள்ளாததும் விளக்க ஒரு சாட்சியும் ஏற்பட்டிருக்கின்றன. அவர்கள் இப்போது சாட்சியம் சொல்வார்கள். அது-விஷயமாய் ஆராய்ந்து, பிறகு யான் சொல்லும் விஷயங்களையும், அதன்பின் ராஜாங்க நியாயவாதி சொல்லும் விஷயங்களையும் முடிவில் நியாயாதிபதி சொல்லும் விஷயங்களையும் நன்றாய் ஆலோசித்து உங்கள் அபிப்பிராயத்தை வெளியிட-வேண்டும்.

(காவலனை நோக்கி)

காலகண்ட ஐயரைக் கூப்பிடு.

**நியாயஸ்தலக் காவலன்** — காலகண்ட ஐயர், காலகண்ட ஐயர்.

**காலகண்ட ஐயர்** — இதோ இருக்கிறேன்.

**ராஜாங்க லிகிதர்** — சுவாமீ! இந்தக் கூட்டில் ஏறுங்கள். (காலகண்ட ஐயர் ஏறுகிறார்.) ஐயரே நான் சொல்லுகிறபடி சொல்லும். சர்வ சக்தியுள்ள சுவாமி முன்பாக நான் சொல்வது எல்லாம் நிஜம், நிஜம் முழுமையும், நிஜந்தவிர வேறில்லை.

(கூடவே சொல்லுகிறார்.)

## தற்சாட்சி விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — உமக்கு எப்படி ஜீவனம்?

**காலகண்ட ஐயர்** — நேக்கு சுக ஜீவனம்.

**எதிரியின் நியாயவாதி** — இந்தம்மாள் யார்?

**காலகண்ட ஐயர்** — இவள் எங்க ஆத்திலே அடிமை செய்றவள்.

**எதிரியின் நியாயவாதி** — இந்தம்மாள் எவ்வளவு காலமாய் அடிமைப்பட்டிருக்கிறாள்?

**காலகண்ட ஐயர்** — எல்லாம் சொல்பந்தான், ஒரு வாரமாகிறது.

**எதிரியின் நியாயவாதி** — நேற்று இந்தம்மாள் வெளியே போக நீர் விடை கொடுத்ததுண்டா?

**காலகண்ட ஐயர்** — ஆமாம், கொடுத்ததுண்டு.

**எதிரியின் நியாயவாதி** — இந்தம்மாள் உம்முடைய வீட்டிலிருந்து புறப்படும்போது எவ்வளவு நேரமிருக்கலாம்?

**காலகண்ட ஐயர்** — போது போக நாலுநாழி யிருக்கலாம்.

**எதிரியின் நியாயவாதி** — பொழுது சாய்வதற்கு முன்பா, பின்பா?

**காலகண்ட ஐயர்** — போது சாய்வதற்கு முன்புதான் நாலு நாழி யிருக்கலாம்.

**எதிரியின் நியாயவாதி** — நன்றாய்க் கவனித்துச் சொல்லும். இந்தம்மாள் போகும்போது வெளிச்ச முண்டா? இல்லையா?

**காலகண்ட ஐயர்** — வெளிச்ச மிருந்தது. அஸ்தமன மாகவில்லை. அதற்கு முன்புதான்.

**எதிரியின் நியாயவாதி** — எங்கே போவதாக விடை கேட்டாள்?

**காலகண்ட ஐயர்** — இவளோடு இவள் பிள்ளை ஒரு பயலும் அடிமைப்பட்டிருந்தான். அவனை அசலாத்துப் பிள்ளைகளோடே காட்டுக்கு அனுப்பினோம். அவன் பாம்பு கடிச்சு இறந்து விட்டான் என்பதா அசலாத்துப் பிள்ளைகள் இவளோடு சொன்னாளாம். அதற்காக வந்து விடை கேட்டாள்.

**எதிரியின் நியாயவாதி** — அந்தப் பிள்ளைகள் வந்து சொன்னது எப்போது?

**காலகண்ட ஐயர்** — உதயமாய் இருபது நாழி யிருக்கும்.

**எதிரியின் நியாயவாதி** — அந்தப் பிள்ளைகள் காட்டிற்கு எப்போது போனார்கள்?

**காலகண்ட ஐயர்** — போது விடிந்து நாலு நாழிக்குப் போனா.

**எதிரியின் நியாயவாதி** — ஊர்க்காவலாளிகளில் யாரேனும் உங்கள் வீட்டண்டை வந்தார்களா?

**காலகண்ட ஐயர்** — ஒருத்தரும் வரல்லெ. இப்பத்தான் நியாய ஸ்தல உத்தரவு வந்தது. வேறே ஒன்னும் நேக்குத் தெரியாது.

**எதிரியின் நியாயவாதி** — மகாராஜாவினுடைய புத்திரன் இறந்துவிட்டது உமக்கு வருத்தந்தானே?

**காலகண்ட ஐயர்** — அந்த வருத்தம் எல்லாருக்கும் உண்டு. நேக்கு அத்தோடே இத்தனெ பணத்தெ கொட்டி இவளை வாங்கினுக்கே, இவளும் இப்படி யானளே என்னு அதுவும் வருத்தந்தான். அந்தப் பயலும் போய்விட்டான். நேக்கு எம்மாத்ரம் நஷ்ட மாச்சு!

**ராஜாங்க நியாயவாதி** — எதிர் விமரிசை யில்லை.

**எதிரியின் நியாயவாதி** — இரண்டாம் சாட்சி காலகண்டி யம்மாள்.

**நியாயஸ்தலக் காவலன்** — காலகண்டி யம்மாள், காலகண்டி யம்மாள்.

**காலகண்டி** — (வருகிறாள்) இத்தனெ புருஷா எதரெ எப்படித்தான் போறது!

**ராஜாங்க லிகிதர்** — *அம்மா! இந்தக் கூண்டில் ஏறு.* (**ஏறுகிறாள்.**) *அம்மா! நான் சொல்லுகிறதுபோல் சொல்லுங்கள். சர்வ சக்தியுள்ள சாமி முன்பாக நான் சொல்லுவது எல்லாம் நிஜம், நிஜம் முழுமையும், நிஜந் தவிர வேறில்லை.*

(**மெல்லிய குரலால் கூடச் சொல்கின்றாள்.**)

**எதிரியின் நியாயவாதி** — *அம்மா உன் பெயரென்ன?*

**காலகண்டி** — *ஐயோ நான் எப்படி சொல்றது! அது எங்க ஆத்துக்கார் பேராச்சே.*

**எதிரியின் நியாயவாதி** — *அதற்கென்ன, நியாயஸ்தலத்தில் சொல்லலாம்.*

**காலகண்டி** — *அவா பேர்தான் நேக்கும், கடைசிலே டி என்னு சேர்த்துக்கொள்ளணும்.*

**எதிரியின் நியாயவாதி** — *காலகண்டி யம்மாளா?*

**காலகண்டி** — *ஆமாம்.*

**எதிரியின் நியாயவாதி** — (**சந்திரமதியைக் காட்டி**) *இந்தம்மாள் யார்? உங்களுக்குத் தெரியுமா?*

**காலகண்டி** — *நேக்குத் தெரியாதா, அவள் எங்க ஆத்திலே வேலெ செய்பவ ளன்னு.*

**எதிரியின் நியாயவாதி** — *இந்தம்மாள் நேற்று விளக்கு வைத்து எத்தனை நாழி பொறுத்து வீட்டை விட்டுப் போனாள்?*

**காலகண்டி** — *தீபம் வைக்கிறதுக்கு முன்னுக்கே யன்னு கேட்டிண்டு போய்விட்டாள்.*

**எதிரியின் நியாயவாதி** — *எத்தனை நாழியிருக்கும்?*

**காலகண்டி** — *தீபம் வைக்க நால் நாழி போதிருக்கும்.*

**எதிரியின் நியாயவாதி** — *இந்தம்மாளுடைய குணம் நடக்கை எப்படிப்பட்டவை?*

**காலகண்டி** — *இப்பத்தானே வந்தாள் ஆத்துக்கு, ஒரு வார மாச்சு. வேலெ சேசிக்குனு இருக்கச்சே இதென்ன கஷ்டமாயிருக்கு, பணத்தே கொடுத்துவிட்டு அடிமைத்தனத்தை நீக்கிக்கொள்ளணும் என்னு முணு முணுத்திண்டு சொல்லுவள். அப்படித்தான் செய்யேஂ என்பேஂ.*

**எதிரியின் நியாயவாதி** — *சரி போதும்.* (**எதிர்விமரிசை இல்லை, போகிறாள்.**) *பிறகு காளிதாசரைக் கூப்பிடு.*

**நியாயஸ்தலக் காவலன்** — *காளிதாசர், காளிதாசர்* (**வருகிறார்.**)

**ராஜாங்க லிகிதர்** — இந்தக் கூண்டில் ஏறும். (**ஏறுகிறார்.**) சர்வ சக்தி யுள்ள சுவாமி முன்பாக நான் சொல்வது நிஜம், நிஜம் முழு-மையும், நிஜம் தவிர வேறில்லை.

(**காளிதாசர் கூடவே சொல்கிறார்.**)

## தற்சாட்சி விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — உம்முடைய வேலை யென்ன?

**காளிதாசர்** — யான் ஒரு ஸ்தல யாத்திரி. ஊர்தோறும் போய், அங்கங்குள்ள காளி கோயிலைத் தரிசனஞ் செய்வது.

**எதிரியின் நியாயவாதி** — நேற்று இரவு எங்குத் தங்கி யிருந்தீர்?

**காளிதாசர்** — நான் எப்போதும் காளி கோயிலில்தான் தங்குவது வழக்கம். நேற்று இரவும் இவ் வூரின் காளி கோயிலில்-தான் தங்கி யிருந்தேன்.

**எதிரியின் நியாயவாதி** — இரவு எதுமுதல் எதுவரையில் அங்கே இருந்தீர்?

**காளிதாசர்** — இரவு முழுதும் அங்குத்தான் இருந்தேன்.

**எதிரியின் நியாயவாதி** — நேற்று இரவு அங்கு என்ன நடந்தது?

**காளிதாசர்** — முன்னேரத்தில் பூஜை முதலியவை நடந்தேறின. பிறகு, அர்த்தராத்திரியில் ஒரு பெண்பால் கோயிலண்டை வந்து, "அம்மணீ! சம வயதுள்ள ஒரு ராஜகுமாரனைப் பலி கொடுக்கிறேன், என் மைந்தனுக்கு உயிர்ப்பிச்சை கொடுக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டாள்.

**எதிரியின் நியாயவாதி** — அப்போது எத்தனை நாழி யிருக்கும்?

**காளிதாசர்** — இரவு சுமார் பதினைந்து நாழி யிருக்கும்.

**எதிரியின் நியாயவாதி** — அந்தப் பெண்பாலோடு வேறு எத்தனை பெயர் இருந்தார்கள்?

**காளிதாசர்** — வேறு ஒருவரு மில்லை.

**எதிரியின் நியாயவாதி** — அந்தப் பெண்பால் யார்?

**காளிதாசர்** — இதோ எதிரியாக நிற்கும் இந்தப் பெண்பால்தான்.

**எதிரியின் நியாயவாதி** — சரி. (**உட்காருகின்றார்.**)

## எதிர் விமரிசை.

**ராஜாங்க நியாயவாதி** — அந்தம்மாள் சொல்லியது உமக்கு எப்ப-டித் தெரியும்?

**காளிதாசர்** — நான் கோயிலின் ஒரு புறத்தில் படுத்துக் கேட்-டுக்கொண்டிருந்தேன். அப்போது சொல்லக் கேட்டேன்.

**ராஜாங்க நியாயவாதி** — ஆண் என்பதும் பெண் என்பதும் உமக்கு எப்படித் தெரியும்?

**காளிதாசர்** — விளக்கு வெளிச்சத்தினால் பெண்பாலென்று நன்றாய்த் தெரிந்தது.

**ராஜாங்க நியாயவாதி** — அந்தம்மாளைப் பிறகு எங்கேனும் பார்த்ததுண்டா?

**காளிதாசர்** — இதோ இப்போது இங்கே பார்க்கின்றேனே இது தான் இரண்டாம் முறை.

**ராஜாங்க நியாயவாதி** — சரி போதும். (அமர்கிறார்.)

## மறு விமரிசை.

**எதிரியின் நியாயவாதி** — அந்தம்மாள் அப்போது என்ன உடை உடுத்துக்கொண்டிருந்தாள்.

**காளிதாசர்** — இதோ இப்போது உடுத்துக்கொண்டிருக்கும் இள ஞாயிற்றின் நிறம் வாய்ந்த உடைதான் அப்போதும் உடுத்துக்கொண்டிருந்தாள்.

**எதிரியின் நியாயவாதி** — (மத்தியஸ்தர்களை நோக்கி) ஐயன்மீர்! இப்போது இரண்டு சாட்சிகள் சொல்லிய விஷயங்களையும் நீங்கள் நன்கு அறிந்திருக்கின்றீர்கள். யான் அவை யனைத்தையும் ஒன்று சேர்த்து அதனுள் ஏற்பட்டிருக்கும் சாதக பாதகமான அம்சங்களைக் காட்டிச் சமாதானங்கள் கூற முற்பட வேண்டியிருக்கிறது. பிற்பட வுரைப்பதில் அநுகூலமும், முற்பட வுரைப்பதில் பிரதிகூலமும் உண்டென்பது தெரிந்த விஷயமே எனினும், நியாயஸ்தலச் சட்டப்படி யானே முன்பு அவற்றை உரைக்கவேண்டியவனா யிருக்கிறேன். அவ்வாறே யான் உரைக்க முற்படு முன்னம். நீங்கள் முதலில் கூறியுள்ள பிரமாணத்தை இப்போது உங்களுக்கு நினைப்பூட்டுகிறேன். கொற்றவருக்கும் குற்றவாளிக்கும் மத்தியஸ்தராக இருந்து உண்மையை யுணர்ந்துரைப்பது உங்கள் கடமை என்பதை நீங்கள் அறிவீர்கள். இதுவிஷயமாய் அருளுமாறு எல்லாம் வல்ல பரமபதியின் அருளையும் வேண்டிக்கொண்டீர்கள். நிற்க, மன்னவர் தம் புத்திரரை யிழந்துவிட்டமை நம் அனைவோர்க்கும் பெருந் துக்கமே. எனினும், நியாயஸ்தலத்தில் ஆனவர் ஆகாதவர் என்னும் கொள்கைபற்றி தீர்ப்புச் சொல்லுதல் எவர்க்கும் அடாது. செல்வர், வறியர், கற்றோர், கல்லார், தாழ்ந்தோர், உயர்ந்தோர் முதலிய எல்லாருக்கும் சட்டம் ஒன்றே. தண்டனையும் ஒன்றே. ஆதலின், இங்கு ஏற்றத் தாழ்வுகளைக் கவனியாது நீதி செல்லு முறை ஒன்றினைமட்டும் யோசித்துத் தீர்ப்புச்

சொல்லுதல் வேண்டும். உங்களுக்கு உரையளவாவது எதிரிக்கு உயிரளவாக இருக்கிறது. அதனால், உண்டாகும் பழி பாவங்களையும் நீங்கள் ஆழ்ந்து யோசித்தல் வேண்டும். இனி, இவ் வழக்கின் அம்சங்களைக் கூறுகின்றேன். இப்போது இங்குச் சொன்ன சாட்சிகளில் ஒருவரும் இவ் வூரில் வசிப்பவ ராகவாவது வசித்திருந்தவ ராகவாவது காணப்படவில்லை. தன்னுடைய ஏகபுத்திரன் இறந்து சுடலையில் சுடுவாரற்றுக் கிடக்கும்போது, மற்றோ ருயிரை வாங்க எப்படிப்பட்டவருக்கும் மனந்துணியாது. இந்தக் கொலையைச் செய்வதற்கு ஏற்ற முகாந்தரங்களும் ஏற்படவில்லை. அப்படி ஏற்படுவதாகக் காணப்பட்டாலும் தான் இப்படிப்பட்ட துக்கத்தில் மூழ்கியிருக்கும்போது செய்திருக்கலாம் என்று எண்ணுவதற்கு இடமில்லை. மொத்தத்தில் சாட்சிகளில் ஒவ்வொருவரும் இறந்துவிட்டது மகா ராஜாவின் மைந்தனுயிற்றே என்னும் மனோபாவத்துடன் சொல்லியிருக்கிறார்கள் என்பதை நீங்கள் கவனித்திருக்கலாம். இப் பெண்பாலை மிகுந்த திரவியங் கொடுத்து அடிமை கொண்டவர்களும் விரோதமாகச் சாட்சியம் கூறுவதென்றால் வேறு என்ன திருஷ்டாந்தம் வேண்டும். இவ் விஷயத்தில் ஊர்க்காவலாளிகள் மிக வுழைப்பெடுத்துக்கொண்டு, அவரவர்களுக்கு நன்கு கற்பித்திருக்கிறார்கள் என்பது புலப்படுகின்றது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பாகத்தையே சொல்லி நிலை நிறுத்துவதாக எண்ணிக்கொண்டதாய் அவர்கள் கூறும் அமைப்பினால் வெளியாகிறது. குற்றவாளி ஒன்றும் சொல்லாமலிருந்தது என்னவென்றால், திடீரென்று தன்மேல் பெரும்பழி சாரவே 'தலைக்குமேல் முழுவெள்ள மானாலென்ன, முழுவெள்ளமானாலென்ன' என்பதுபோல், என்ன வரினும் வரட்டும் என்று திகைத்திருந்து விட்டிருக்கலாம் என்பது உங்களுக்கு விளங்கியிருக்கும். எல்லாந் துறந்த சந்நியாசியும் இவ் வகைய பற்றுடன் நியாயஸ்தலத்திற்கு வந்து சாட்சியம் சொல்வது பொருந்தாக் காரியம் ஆகுமல்லவா? இதுவரையில் இவ் வழக்கின் உண்மையான அம்சங்களை எடுத்து ஒருவாறு சுருக்கி யுரைத்தேன். இனி இது சம்பந்தமாய் ஏற்பட்டிருக்கும் சட்ட விதிகளையும் சிறிது எடுத்துக் கூறுகின்றேன். எல்லாக் குற்றங்களிலும் முக்கியமாய்க் கொலைக் குற்றம் சாட்டப்பட்ட ஒருவனை விசாரிக்கையில் பிரத்தியட்சமாய்க் கண்ணுற்கண்ட சாட்சியங்கள் இல்லாதபோது அநுமான சாட்சியங்களைக்கொண்டு நடத்த வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் அநுமான சாட்சியங்கள் குற்றவாளியின்மீது குற்றத்தைத் திட-

மாய் ஏற்படுத்துவதை விட்டு வேறு எவ் விதமான சந்தேகத்திற்கும் இடங்கொடாதவைகளாக இருக்கவேண்டும். அவ்வாறு ஏதேனும் சந்தேகத்தைத் தரத்தக்கதானால் குற்றவாளியாக ஏற்படும் கொலையாளி மரணதண்டனை யடையும்படி தண்டித்தல் கூடாது. இவ் வழக்கில் வேறொரு சந்தேகமும் ஏற்படுகின்றது. அதாவது, இப்போது இறந்துள்ள குழந்தை யணிந்திருந்த ஆபரணங்கள் அனைத்தும் மூன்றும் சாட்சியாகிய வேலாயுதாசாரி என்பவரிடம் இருந்ததாகத் தெரிவதனால், அவரே இக் கொலையைச் செய்திருக்கலாம்; ஊர்க்காவலர் அவரிடம் இருந்த நகைகளைக் கண்டுபிடித்து அவை அவரிடம் வந்த விதங்களைக் கேட்டகாலத்தில் இக் குற்றம் அனைத்தையும் ஏதும் அறியாத இப் பெண்பாலின் தலையில் சுமத்த அவர் இவ்வாறு புனைந் துரைத்திருக்கலாம் அன்றி, கற்பனையாகப் பற்பல விஷயங்களை நிமிஷந்தோறும் இயற்ற வல்ல ஊர்க்காவலர்களுக்கு அதிக திரவியத்தைப் பரிதானமாகக் கொடுத்து தனக்கு இவ் வகையில் உதவி செய்யும்படி வேண்டிக்கொண்டு மிருக்கலாம் என இவ் வகைகளி லெல்லாம் சந்தேகிக்கப் போதிய இடமுண்டாயிருக்கிறது. இது நிற்க, குற்றவாளியைத் தண்டனைக்கு உட்படுத்துவது மாத்திரமே ராஜாங்க நியாயவாதியின் கடமையல்ல. சரியான நியாயங்களைக்கொண்டு நீதியை ஸ்தாபிப்பதே அவருடைய முதற் கடமையாகும். ஆகையால் ராஜாங்க நியாயவாதி தனக்கு இஷ்டமான சிலரைமட்டும் சாட்சிகளாக எடுத்துக்கொண்டமை எவ் வகையினும் பொருந்தாது. தனக்கு அநுகூலமானதாயினும், பிரதிகூலமானதாயினும் அவ் வழக்கில் சம்பந்தப்பட்ட அனைவரையும் அவர் சாட்சியங்களாகக் கொண்டு விசாரித்திருக்கவேண்டும். இப்போது இவ் வழக்கில் மூன்று சாட்சிகள் விலக்கி விடப்பட்டனர். அவர்களை யாம் எமது சார்பில் அழைத்து விசாரிக்க நேர்ந்தபடியால், வழக்கின் முடிவில் பேசவேண்டிய நியாயவாதத்தை யான் முன்பு பேசவேண்டிய தாயிற்று. ஆனால், இக் கொலை எவ்வாறு நடந்திருக்கும் என்று ஒரு சந்தேகம் உங்கள் மனத்தில் உதிக்கலாம். இவ் வழக்கில் எதிரியை நிர்ப்பந்திக்கக் கூடிய விஷயங்களில் சந்தேக பாகங்களைமட்டும் உங்களுக்கு எடுத்துக் காட்டி, அந்த எதிரியை விடுவித்தல் ஒன்றே எனது கடமை யாகுமேயன்றி அக் கொலை எவ் விதமாய் யாரால் நடந்திருக்கு மென்பதை ரூபித்தல் எனது கடமையாகாது. அதனால் இவ் விஷயத்தில் எவ்வளவு சந்தேகம் நேரினும் அவ்வளவும் எதிரிக்கே அநுகூலப்பட்டதாகும் என்பது சட்டத்தின் முறையாகும். ஆயின் மேலே

எடுத்துக்கூறிய சந்தேகங்களனைத்தையும் மனத்திற் கொண்டு உய்த்துணர்ந்தால் எதிரி விடுதலை யடைவதே நியாயம் என்னும் தீர்மானம் உங்களில் ஒவ்வொருவர் மனத்திலும் உதிக்காமற் போகாது என்பதை யான் உறுதியாக நம்புகின்றேன்.

(அமர்கிறார்.)

ராஜாங்க நியாயவாதி — (மத்தியஸ்தர்களை நோக்கி) ஐயன்மீர்! இப்போது குற்றவாளியின் சார்பாகப் பேசப்பட்ட விஷயங்களனைத்தையும் கேட்டறிந்தீர்கள். அவற்றில் இங்குப் பொருத்தமுள்ளவை இவை, இல்லாதவை இவை யென்று யான் எடுத்துக் கூறுவதன் முன்பு, உங்களுக்குச் சில விஷயங்களை வற்புறுத்திக் கூறவேண்டுவது அவசியமாகின்றது. முதலாவது இப்போது அவர் கூறிய இரக்கமான மொழிகளைக் கேட்டு மனம் இரங்கி நியாயத்தைக் கைவிட்டுத் தளர்ச்சி யடைதல் கூடாது என்பதை வற்புறுத்திக் கூறுகின்றேன். அவர் முதலிற் கூறியபடி சட்டமும், தண்டனையும் எவர்க்கும் ஒன்றே என்பது மிகப் பொருத்தமானது. அவர் கூறிய மற்ற விஷயங்களில் காணும் தடைகளை ஒன்றின்பின் ஒன்றாகக் கூறுகின்றேன். சிறிது பொறுமையோடு கேட்டு, முடிவில் நியாயாதிபதியவர்கள் அபிப்பிராயத்தையும் தழுவித் தீர்ப்புச் சொல்ல வேண்டுகின்றேன். சாட்சிகள் எல்லாம் இவ் வூரரால்ல என்பது உண்மையே. எதிரி நன்றாய் யோசித்தே, தன் காரியங்களில் ஒன்றையும் இவ் வூராரால் நடத்தவில்லை என்று காண்கின்றது. இவ் வூராராக இருப்பின் தன் குற்றம் உடனே வெளிப்படுவதே யன்றி, அவ்வாறு வெளிப்படும் காலத்தில் ராஜாங்க உத்தியோகஸ்தருக்கு அஞ்சி, உண்மையை உடனே உரைத்து விடுவார்கள் என்பதை எதிரி நன்கு ஊகித்தே, இக் காரியத்தைச் செய்திருக்கின்றாள். இரண்டாவது, இக் கொலைக்குக் காரணமில்லை யென்கின்றார். குற்றவாளியின் சார்பில் வந்த இரண்டாவது சாட்சியால் குற்றவாளி, தன் வீட்டில் வேலை செய்யும்போது எப்படியாவது பொருளைக் கொடுத்துவிட்டு விடுதலை யடைய வேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்ததாக ஏற்படுவதனால் குற்றவாளிக்குப் பொருள் வேண்டும் என்னும் எண்ணமும், மூன்றாவது சாட்சியால், இறந்துவிட்ட தன் புத்திரனுக்கு உயிர் வரவேண்டும் என்னும் எண்ணத்தினால், காளிகோயிலில் ராஜகுமாரனைப் பலி கொடுப்பதாகப் பிரார்த்தனை செய்துகொண்டதாக ஏற்படுவதனால் ராஜகுமாரனைப் பலி கொடுக்கவேண்டும் என்னும் எண்ணமும் ஏற்பட்டிருந்தன வென்பது நன்கு விளங்குகின்றது. இவ் விரண்டில், பொருள்

பெறுங் கருத்தை நாள்பட முடிக்கலாமாயினும், தன் பிள்ளை உயிர் பெறுவதன் பொருட்டுப் பலி கொடுக்கும் கருத்தை உடனே முடிக்க வேண்டியதாயிற்று. ஆகவே, மகாராஜாவின் குமாரனைக் கொலை செய்ய வேண்டியதற்கான காரணங்கள் இரண்டாக ஏற்பட்டன. அன்றி எதிரி தனக்குள்ள பெருந் துக்கத்தில் இப் பெருங் கொலையைச் செய்திருக்க மாட்டாளென்னுந் தடையும் தலைகாட்டா தொழிகின்றது. நிற்க, அதிக திரவியந் தந்து அடிமை கொண்டார் தம் பொருள் புண்படாவண்ணம் பலவகையினும் தம் அடிமையைக் காக்க முயல்வரே யன்றித் தாமே இவ்வாறு காட்டிக்கொடார். அதனினும் பெண்பாலார்க்குப் பெண்பாலார் பெரிதும் இரங்குவர். மற்றும், தம் பொருளுக்கு அழிவு நேரிடுவதாயின் புருடரினும் மிக வருந்துவர் பெண்கள். ஆதலால் குற்றவாளியின் சார்பில் வந்த இரண்டாவது சாட்சியம் தனக்குண்டாகும் அழிவையும் நோக்காது உண்மையே யுரைத்திருக்கின்றாள் என்பதே தகுதியாகும். இவ்வாறே, சந்நியாசியாரும் யாத்திரிகரும் கூறிய சாட்சியங்களும் மிக மேலாகக் கொள்ளத்தக்கனவாம். ஏனெனின், அப் பெரியோர்கள் இம்மைக்கான இன்பங்கள் அனைத்தையும் வெறுத்து, ஆன்ம லாப மொன்றினையே நாடி நிற்பவர். பிற வுயிர்களிடத்துப் பெரிதும் அருளுடையவர். அத்தகைய துறவோரும் ஈண்டுச் சாட்சியங் கூற ஏற்றுக்கொண்ட பெருந்தன்மையை உய்த்துணர்ந்தால், நியாயாதிபதியவர்கட்கு உண்மை புலப்படுத்துவதொன்றே கருத்தாவதன்றிப் பிறிதொன்றும் புலப்படுவதில்லை. அதனால், ஊர்க்காவலர் பரிதானம் பெற்றுப் புனைந்துரைத்தார் என்பதும் போலியாகின்றது. இது நிற்க, ஒவ்வொருவரும் ஒவ்வொரு விஷயத்தைத் தனித்தனி யுரைத்தாரென்றால், இதில் எதிரியின் செய்திறம் நன்கு புலப்படுவ தல்லது, சாட்சியத்தில் குறை காணுமா றில்லை. ஏனெனின், தன் செய்கைகளில் ஒன்றை ஒருவரே யன்றிப் பிறர் அறியாமற் செய்யவேண்டுமென்பதே எதிரியின் கருத்தாக இருக்கலாம். ஒருகால் குற்றம் வெளிப்படினும், ஒருவ ருரையை உண்மையாகக் கொள்ளப்படாதென்னும் உலக வழக்கைக்கொண்டே மறுத்துவிடலாமென்னும் கருத்தே அதற் கமைந்த காரணமாக இருக்கலாம். இனிச் சட்ட முறையிற் காட்டிய விஷயங்களையும் சிறிது ஆராய்வோம். மேற்கண்ட நியாயங்களால் குற்றவாளி இப் பெண்பாலேயாகும் எனப் புலப்படுவதனால், ஆசாரியின்மீது காட்டிய சந்தேகம் தலைகாட்டா தொழிகின்றது. ஒழியவே அநுமானப் பிரமாணமாகக் கொண்ட

சாட்சியத்திலும் சந்தேகம் காணுமாறில்லை. அதனால், குற்றவாளிக்கு அநுகூலப்படுத்துவதாகிய பாகம் சிறிதும் இதில் இல்லை என்பது தெளிவாகும். ஆகையால் நீவிர் அனைவோரும் இரண்டு சார்புகளின் வாதங்களையும் சீர்தூக்கி ஆராய்ந்து பார்க்கின் எதிரி குற்றவாளியே எனத் தீர்ப்புக் கூறுவீர்கள் என்று நம்புகின்றேன்.

(அமர்கின்றார்.)

நியாயாதிபதி — (மத்தியஸ்தரை நோக்கி) ஐயன்மீர்! நீவிர் இது காறும் இரண்டு சார்பின் நியாயங்களையும் கேட்டு நன்கு உணர்ந்திருக்கின்றீர்கள். இனி யாம் இவ் வழக்கிலுள்ள சாதக பாதகங்களை எடுத்துக் காட்டி, நீவிர் அனைவோரும் ஒருமித்துக் கூறும் முடிவுரையினைக் கொண்டே தீர்ப்புக் கூறுதல் வேண்டும். இப்போது, இவ் வழக்கின் அம்சங்களைத் தொடர்ந்து, ஆங்காங்கு ஏற்பட்டுள்ள விஷயங்களை விளங்க வுரைப்பதற்குமுன், சட்டப்படி கொலை என்பது இன்னதென்பதைக் கூறுகின்றோம்.

மரணமுண்டாக்க வேண்டும் என்னும் எண்ணத்தோடாவது, எவ் வகையான தேகவுபத்திரவத்தைச் செய்தால் மரண முண்டாகுமோ அவ் வகையான உபத்திரவத்தைச் செய்யும் எண்ணத்தோடாவது, இன்னது செய்தால் மரண முண்டாகும் என்றுணர்ந்தாவது ஒரு மரணத்தை யுண்டாக்குவானானால் அவன், ‘அநியாய மரண முண்டாக்குதல்’ என்னுங் கொலைக் குற்றத்தைச் செய்தவனாகின்றான். அவற்றுள்,

இவ்வகையில் யோசிக்கின், குழந்தை கொலை செய்யப்பட்டதை இருதிறத்தினரும் ஒப்புக்கொள்கின்றனர். அக் கொலைக் குற்றம் சாட்டப்பட்டுள்ள இப் பெண்பாலினால் செய்யப்பட்டதா அல்லவா என்பது இப்போது தீர்மானிக்கப்படவேண்டும்.

நேற்று மாலை பொழுதுபட நான்கு நாழிகை வரையில் குழந்தை ஆடையணிகள் பூண்டு, உயிருடன் இருந்ததாக அரண்மனை நிர்வாகியாகிய முதல் சாட்சியால் அறிகின்றோம். பின்பு குழந்தை காணமற்போயின விஷயம் ஊர்க்காவலதிகாரிகளுக்கு அறிவிக்கப்பட்டது. அவர்கள் காவலர்களைப் பல பக்கங்களினும் போக்க அவர்களில் இருவர் தமக்குக் கிடைத்த பத்தாவின்பேரில் சாட்சி வேலாயுதாசாரியின் வீட்டிற்குச் சென்று விசாரித்ததில், எதிரி குழந்தையுடன் தன்னிடம் வந்து, அக் குழந்தையின் மீதிருந்த நகைகளைக் கழற்றிக் கொடுத்ததாக அந்தச் சாட்சியால் விளங்குகின்றது. காவலர் பின்பு தேடிச் சென்று எதிரியைக் கண்ட காலத்தும் கொலையுண்ட குழந்தை எதிரியின் கையில் பிரேதமாய்

இருந்ததாகத் தெரியவருகின்றது. மற்றும் எதிரி, சந்நியாசியாகிய சாட்சியினிடத்தில் கூறியவாறே குழந்தை யணிந்திருந்த வுடைகள் எதிரியினால் காட்டப்படப்பட்ட விடத்திலிருந்தே எடுக்கப்பட்டிருக்கின்றன. இது நிற்க, அந்தக்காலத்தில் குழந்தையின்மீது மூடப்பட்டிருந்த பட்டு வஸ்திரமும், சாட்சி முத்துவீரன் செட்டியினிடமிருந்து எதிரி நேரில் தானே வாங்கியதாக அந்தச் சாட்சியினால் வெளியாகின்றது. அத் துண்டை மிகுதியான மடியோடு ஒத்திட்டுப்பார்த்ததில் அது அம் மடியினின்றும் கிழிக்கப்பட்டதாகவே ஏற்படுவதனால் அது அந்தச் சாட்சியின் வாக்குமூலத்தை மிகவும் ஆதரிக்கின்றது.

இது நிற்க, எதிரி தரப்பு நியாயவாதியினால் கோரப்பட்ட சாட்சிகள் மூவரில் முதல் இவருடைய சாட்சியம் ராஜாங்கத் தரப்பில் வந்த சாட்சியங்கள் சொல்லியவற்றை முற்றும் ஆதரிக்கின்றன. அன்றி, எதிரி தரப்பு மூன்றாவது சாட்சியம் ஊர்க்காவலர் உரையை உறுதிப்படுத்துகின்றது ஆகிய இவையே இவ் வழக்கில் வந்த சாட்சியங்களால் ஏற்பட்ட விஷயங்களாகும்.

இனி இவற்றில் எவ்வளவு உண்மை யென்பதும், எவ்வளவு பொய்மை யென்பதும், எவ்வளவு சந்தேகத்திற் கிடமான தென்பதும் தேர்ந்தறிதல் உங்கள் கடமையாகும். இதில் சிற்சில விஷயங்களை உங்களுக்குள் தர்க்கித்து உண்மை யறிதல் வேண்டும். இப்போது, ராஜாங்க நியாயவாதி கூறியபடி, எதிரி தன் காரியங்கள் எல்லாவற்றையும் இவ் வூரார் அறியாதபடி, வெளியூரினின்றும் இங்கு வந்து இரண்டொருநாள் தங்கிப் போவோரிடத்திலே தேடி நடத்திக்கொண்டாள் என்பது சாலக் கவனிக்கத்தக்கதாம். ராஜாங்க சார்பின் சாட்சியாகிய வேலாயுதாசாரி இக்கொலையில் சம்பந்தப்பட்டிருந்தால் ஊர்க்காவலாளிகள் கேட்டபோது உண்மையை உரையாமலே இருந்திருக்கலாம். அன்றி, ஆபரணங்களையும் மறைத்திருக்கலாம். ஓடும் பொன்னும் ஒப்பக்காணும் தவசிகளுக்கு எவர் வாழ்வும், எவர் தாழ்வும், எவர் சாவும் ஒன்றே. அவர்கள் யாதொரு பொருளையும், யாவர் சொல்லையும் மதிப்பவ ரல்லர். அவர்கள் இருவரும் உரைத்திருப்பவைகள் மிகவும் பாராட்டற்பாலன. இவை யனைத்தும் ஒருபுறமாக, எதிரி தரப்பில் வந்த சாட்சிகள் மூவரில் முதல் இருவர் எதிரியை மிக்க திரவியங்கொடுத்து அடிமை கொண்டவர்களாகத் தெரியவருகின்றது. எதிரி குற்றவாளியாக ஏற்படுவதனால் தம்முடைய பொருளுக்கு முழுதும் அழி-

வென்பதனை அவர்கள் நன்கு அறிவார்கள். அவ்வாறிருந்தும் அவர்கள் ராஜாங்கத் தரப்பின் சாட்சிகளின் வாய்மொழியை வலியுறுத்தத்தக்க சாட்சியம் கூறியிருக்கின்றனர். மற்றெல்லாவற்றுள்ளும் குழந்தை இவ்விடத்துக் காணுதபோது எதிரி தம் வீட்டில் இருந்தாள் என்னும் ஒரு சொல்லே எதிரியைக் குற்றத்தினின்றும் நீக்கத்தக்கதாக விருக்க, அவ்வளவும் மறையாமல் அவர்கள் உரைத்திருப்பதனுல் அவர்கள் கூறிய சாட்சியம் சாதாரணமானதென்று தள்ளிவிடத் தக்கதாக எண்ணுவதற்கு இடமில்லை. அன்றி, எதிரி தரப்பின் இரண்டாவது மூன்ருவது சாட்சியம் எதிரி கொலைசெய்வதற்கான ஏதுக்களை முன்பே கொண்டிருந்ததாகவும் விளக்குகின்றது. ஆகையால், இனி இதன் உண்மையைத் தேர்ந்துரைத்தல் உங்களது கடமையாகும். அவ்வாறு தேருங்காலத்தில் நியாயவழியால் ஏதேனும் சந்தேகம் உங்களுக்கு ஏற்படுமானுல் அதன் நன்மையை எதிரி யடையவேண்டுவதே சட்டத்தின் தாற்பரியமாகும். அவ்வாறின்றி, இச் சாட்சிகள் கூறியவைகள் உண்மையென்று நீங்கள் உணர்ந்து, இக் குற்றத்தைச் செய்தவள் இப் பெண்பாலே என்று உங்களுக்குத் தோன்றினுல் அவளைக் குற்றவாளியென்று தீர்மானிக்கக் கடமைப்பட்டிருக்கிறீர்கள். ஆகையால் நீங்கள் இந்த வழக்கிலுள்ள சாதக பாதகமான அம்சங்களைத் தீர யோசித்து உங்கள் அபிப்பிராயத்தை வெளியிடுவீர்களாக.

(மத்தியஸ்தர் அறைக்குள் செல்கின்றனர்.)

**நீலகண்டசாஸ்திரி** — நண்பர்காள்! என்ன முடிவு சொல்கின்றீர்கள்?

**மற்றையோர்** — நாங்கள் எல்லோரும் உம்மைத்தான் முதன்மையாக வைத்திருக்கின்றேமே. இன்னு மென்ன, தாங்கள் சொல்லிவிட்டால் சரிதான்.

**நீலகண்டசாஸ்திரி** — ஆ, ஆ, அப்படியாகுமா? இதென்ன அற்பமான காரியமா? நாம் அனைவரும் நன்ரு யோசித்துச் சொல்ல வேண்டும்.

**கிருஷ்ணநாததத்தர்** — நியாயாதிபதியின் கருத்து எதிரியே இக் கொலையைச் செய்திருக்கலாம் என்பதாகக் காண்கிறது. அப்படியே சொல்லிவிடலாமே.

**குமாரசர்மா** — அப்படிச் சொல்லி விடுவதானுல் மத்தியஸ்தர் எதற்கு. நியாயாதிபதி சில சமயங்களில் வழுவநேரும் என்றல்லவோ மத்தியஸ்தரைக் கோருவது. அதற்கு ஏற்றது போலன்ரே நாம் யோசித்துச் சொல்லவேண்டும்.

**முனிலால்சிங்** — எனக்கென்னமோ ஒன்றும் ஏற்படவில்லை. கொலை செய்தவர் குறி குற்றவாளியின் முகத்தில் சிறிதும் தோன்றவில்லை. பார்த்தால் பசுவைப்போ லிருக்கின்றாள் பாவம்.

**பண்டரிநாததத்தர்** — இந்தப் பழங்கதைகளைப் பேசிப் பயனில்லை. முகத்தில் தெரிவதும் காலில் தெரிவதும் சொன்னால் கட்டுக்கதையாக முடியும். அதை விட்டு முடிவை யோசியுங்கள்.

**மகாதேவமேதா** — நியாயஸ்தலத்தில் சாட்சிகள் கூறுவதை முன்னிட்டுத்தான் முடிவு கூறவேண்டும். வேறு என்ன இருக்கிறது. நாமென்ன தெய்வமா வேறு யோசிப்பதற்கும் உள்ளதை யுணர்வதற்கும்.

**கோபிநாதடாகர்** — சாட்சியங் கூறியதைக் கவனித்தால் குற்றமென்றுதான் தீர்மானிக்க வேண்டி யிருக்கிறது. ஆனால்,

பொய்யுடை யொருவன் சொல் வன்மையினால்
மெய்போலும்மே மெய்போலும்மே
மெய்யுடை யொருவன் சொல மாட்டாமையால்
பொய்போலும்மே பொய்போலும்மே

என்பதையும் யோசிக்க வேண்டும்.

**மோஹனராய்** — எதிரியின் சார்பில் வந்த சாட்சியம் எதிரிக்கு விரோதமாகவே இருக்கிறது. இதனினும் வேறு என்ன வேண்டும்.

**நீலகண்டசாஸ்திரி** — லக்ஷ்மீநாதப்பிரசாதரே எல்லாரும் தத்தம் கருத்தை வெளியிடுகிறார்களே நீர் என்ன மவுனமாயிருக்கின்றீர். உம்முடைய கருத்தை வெளியிடலாமே.

**லக்ஷ்மீநாதப்பிரசாத்** — என்னுடைய கருத்தென்ன. சாட்சியத்தின் மீதுதான் தீர்ப்புச் சொல்லவேண்டும். குற்றமில்லை யென்பதற்கு ஆதாரவு ஒன்றும் காணேம்.

**நீலகண்டசாஸ்திரி** — ஆனால் தீர்மானமாகச் சொல்லுங்கள். காலதாமதமாகின்றது.

**அனைவரும்** — குற்றந்தான் குற்றந்தான்.

**நீலகண்டசாஸ்திரி** — ஆனால் சரி, அனைவரும் குற்றமென்று சொல்வதாகச் சொல்லிவிடலா மன்றோ.

**அனைவரும்** — ஆகா சொல்லிவிடலாம். தடையில்லை.

**நீலகண்டசாஸ்திரி** — சரி, ஆனால் எழுந்திருப்போம்.

(எழுந்து நியாயாதிபதியிடம் செல்கின்றனர்.)

**ராஜாங்க லிகிதர்** — (மத்தியஸ்தர்களை நோக்கி) நீங்கள் எல்லாம் சொல்லுவது ஒருமித்த தீர்மானந்தானே?

**நீலகண்டசாஸ்திரி** — ஆமாம்.

**ராஜாங்க லிகிதர்** — உங்களுடைய தீர்மானம் என்ன?

**நீலகண்டசாஸ்திரி** — எதிரி கொலைக்குற்றம் செய்தவளே என்பது எங்கள் தீர்மானம்.

**நியாயாதிபதி** — (குற்றவாளியை நோக்கி) மத்தியஸ்தர்கள் எல்லோரும் ஏகோபித்து நீ மகாராஜாவின் குழந்தையைக் கொலை செய்ததாகத் தீர்மானித்திருக்கிறார்கள். சாட்சிகளின் வாக்குமூலங்களால் நாமும் அவ்வாறே அபிப்பிராயப் படுகிறோம். கொலை என்னும் குற்றத்திற்குச் சட்டத்தில் ஏற்பட்டுள்ள தண்டனையை நாம் உனக்கு ஏன் விதிக்கப்படாது என்பதற்கு ஏதாவது காரணங்கள் இருந்தால் சொல்லலாம்.

அகவல்

**சந்திரமதி** —

இருளற நோக்கின் இந்தநீ தித்தலம்
அருள்விளங் கிடுமோர் ஆலய மாகும்
இதன்கண் நீதியை இயற்றுமே தாவியர்
மதிமிகும் சிறப்பின் மானிட ராயினும்
அருவுரு வான ஆதியங் கடவுள்
கரந்தனிற் கொண்ட கருவியே யனையார்
சத்தியம் விளங்கச் சார்ந்தவர் முடிவை
நித்தியம் புகலும் நியாயா திபர்கள்
வஞ்சகம் முதலிய மனத்தின் மாசொடு
துஞ்சுமக் கோயில் துகளுறப் புகுதலும்
மன்றோ ரஞ்சொலும் மாசுறு செயலினால்
துன்றுமா லயத்தைத் துகளுறப் புரிதலும்
செய்யின்அப் பதகர்தம் தேசத் திற்கும்
மெய்யுரு வான விமலன் றனக்கும்
துரோகிய ராகச் சொல்லப் படுவரே
வரோதய அன்றியும் வருநீ திபர்தம்
ஆண்மை யவர்தம் ஆண்மையே யன்று
காணகில் லாத கடவுடன் ஆணையே.

நான இப்போது என்மீது ஏற்பட்டுள்ள குற்றத்தைச் செய்தவள் அல்ல. என்மீது ஏற்பட்டுள்ள முக்கியமான சாட்சியங்கள் யாது காரணத்தாலோ அபாண்டமான பொய்களை இந்த நியாயஸ்தலத்தில் புகன்றிருக்கிறார்கள். தரும தேவ-

தையின் பிரதிநிதியாகிய நியாயாதிபதிகள் அமரும் நியாயஸ்தலமே பரிசுத்தமானதோர் ஆலயம், அதில் அமரும் நியாயாதிபதியானவர் அருவமான தெய்வம் ஒன்றுக்கே யன்றி மற்றெவருக்கும் அஞ்சித் தீர்ப்புச் செய்யலாகாது. திக்கற்றவர்களை ஆதரித்து அவர்களது குறைகளைக் குளிரக் கேட்டு அவர்களை ரட்சிக்கும் இயல்பினையே தன் உருவாகக்கொண்டு சர்வசாட்சியாய் விளங்கும் தரும தேவதையையே என் ஆன்மாவிற்கு அருந்துணையாகக் கொண்டிருக்கிறேன்.

**நியாயாதிபதி** — நீ செய்ததாக இப்போது சாட்சியங்களால் ரூபிக்கப்பட்டுள்ள பெருங் குற்றத்தைக் குறைக்கக்கூடிய அமிசங்கள் சிறிதும் ஏற்படவில்லை. ஆனால் அதற்கு மாறாக, கொலையுண்ட குழந்தை அணிந்திருந்த ஆபரணங்களை அபகரிக்கும் எண்ணத்தோடும், நிரபராதியான அக் குழந்தையைக் காளிக்குப் பலி கொடுக்கவேண்டும் என்னும் மூட பக்தியோடும் முன்னமே சதியாலோசனை செய்து கொலை புரிந்ததாகப் பரிஷ்காரமாய் ஏற்பட்டிருக்கிறது. சட்டப்படி இந்தக் குற்றத்திற்கு ஏற்பட்டிருக்கும் தண்டனையை உனக்கு விதித்தே தீரவேண்டும். ஆகையால் உன்னுடைய உயிர் உடலினின்றும் பிரியுமாறு நீ சிரச்சேதம் செய்யப்பட வேண்டும் என்பது இந்த நியாயஸ்தலத்தின் தீர்ப்பாகும்.

(நியாயாதிபதி முதலியோர் அகல்கின்றார்கள். நியாயஸ்தலத்திலுள்ள மற்றனைவரும் கலைந்து செல்கின்றனர். சந்திரமதி அத் தீர்ப்பைக் கேட்டு உணர்வற்று விழுந்துவிடுகின்றாள். ஊர்க்காவலர் அவளைத் தாங்கி நடத்தி அப்பால் அகல்கின்றனர்.)

**எதிரியின் நியாயவாதி** — (பாஸ்கரனைப் பார்த்து) என்ன ஐயா! உம்முடைய வார்த்தை ஒன்றாவது முன்னுக்கு வரவில்லை. வீணாக நான் அவமானப் பட்டாற்போலாயிற்று; ஒன்றும் பிரயோசனமில்லை. இப்படியே கட்சிக்காரர்கள் எல்லாம் சரியாயிருக்கிறது, வேண்டிய சாட்சி யிருக்கிறது, எல்லாம் அநுகூலமாகவே சொல்வார்கள், உங்களுக்கு ஒரு சிரமமும் இல்லை என்று நியாயவாதியை ஏமாற்றிப் பத்தைக் கொடுக்கிறேன், எட்டைக் கொடுக்கிறேன் என்றும், வழக்கு நமது பக்கமாகிவிட்டால் வாரிக் கொட்டிவிடுகிறேன் என்றும் வாய்க்கு வந்தமட்டும் கொட்டியளக்கிறது, பிறகு ஒன்றுமில்லை. இப்போது பாரும் எவ்வளவு சிரமம். ஒன்று வழக்காவது ஜெயித்ததா, அல்லது பட்ட சிரமத்திற்குப் பரிகாரமாவது கிடைக்கப்போகிறதா. நியாயவாதியிடத்தில் எல்லோரும் ஏமாறுவார்கள். இப்போது நியாயவாதியல்லோ உம்மிடத்தில் ஏமாறுவதாயிற்று. உமது பக்கத்தில் வந்த

சாட்சி உமக்கே விரோதம் சொல்லுமோ. இதென்ன அக்கிரமம். அவர்கள் மாத்திரம் சரியாய்ச் சொல்லியிருந்தால் கொலை கிலை யெல்லாம் பஞ்சாய்ப் பறந்து போயிருக்குமே. அதிலும் மகாராஜாவுக்கு விரோதமான வழக்கு. இதில் ஜெயம் பெற்றிருந்தால் உலகத்தை ஜெயித்தமாதிரி யல்லவா. பார்த்தீரா? நான் பேசிய விஷயங்களை எவ்வளவு சிறப்பாகச் சொன்னார் நியாயாதிபதி. இருந்தாலும் என்ன செய்வார்; சாட்சியம் அந்தப் பக்கத்தில் பலமாய்விட்டதே. போம் போம்.

**பாஸ்கரன்** — ஐயா, ஐயா, கோபிக்கவேண்டாம். எனக்கென்ன தெரியும். உண்மையைத்தானே சொல்வார்கள் என்று எண்ணி ஏமாந்துவிட்டேன். இனியாவது ஒரு வழி சொல்லும். இரவெல்லாம் சுடலையி லிருந்ததாய்ச் சொல்விக்கலாம். சுடலையில் இருப்பவர் அந்தம்மாளுடைய கணவரே. மற்றொருவனும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடக்கத்தக்கவனே. இருவரும் தக்க சாட்சியங்களாக இருப்பார்கள். இந்தத் தீர்ப்பை மாற்ற ஏதேனும் வழி யுண்டானால் உடனே செய்துவிடலாம். தங்களுடைய சிரமத்திற்காகப் பார்க்கவேண்டாம், நான் மறந்துவிட மாட்டேன். இதோ இப்போதே ஐந்நூறு பொன் தருகிறேன். வைத்துக்கொள்ளுங்கள். பின்பு வேண்டியமட்டும் கொடுக்கின்றேன். சற்றுப் பிரயாசை எடுத்துக்கொள்ள வேண்டும்.

**எதிரியின் நியாயவாதி** — ஆ, ஆ, அதற்கென்ன தடை, அவர்கள் இருவரும் சாட்சியம் சொல்வதானால் ஒரு நொடிப்போதில் தீர்ப்பை மாற்றிவிடலாம். ஒன்று மில்லை. இந்தம்மாள் இரவெல்லாம் சுடலையி லிருந்ததாக இரண்டு சாட்சிகளையும் குறித்து மன்னவருக்கு ஒரு மனுப்பண்ணிக்கொண்டால், மன்னவர் ஒரு நொடியில் தீர்ப்பை மாற்றி விடுதலை செய்து விடுவார். இப்படிப்பட்ட காரியங்களில் நியாயஸ்தலத் தீர்ப்பை மாற்றிவிட மன்னவருக்கு அதிகாரமுண்டு. மன்னவரோ மிக்க அருளுடையவர். தமது மைந்தனை இழந்ததையும் கருதாமல் நியாயத்திற்குக் கட்டுப்படுவர். சாட்சியம் மாத்திரம் ஏற்படவேண்டும்.

**பாஸ்கரன்** — சாட்சி யிருக்கிறது. நீங்களும் தக்கவாறு சொல்லிச் சரிப்படுத்தவேண்டும். இந்தத் தீர்ப்பும் மாறுமோ என்னும் சந்தேகத்தினால் அந்தம்மாளுடைய மணாளர் ஒருவாறு பின்னிடுவார். அவருக்கு ஏற்றவாறு தைரியங் கூறவேண்டும். இதுதான் தங்களால் ஆகவேண்டிய பெரு முயற்சி.

**எதிரியின் நியாயவாதி** — ஆ ஆ அப்படியே. வேண்டியமட்டும் சொல்கின்றேன். பின்னல் நம்மைமட்டும் மறந்து விட-வேண்டாம். காரியம் முடிந்தபிறகு கைவிடுவது உலக வழக்-கம். அதுபோல் நீரும் செய்து விடப்போகிறீர்.

**பாஸ்கரன்** — அப்படியும் உண்டா. நாக்கு ஒன்று இரண்டா. சொன்னதைத் தப்பி நடப்பவன் ஒரு மனிதனு. பொரு-ளுக்காக யோசிக்கவேண்டாம். முக்காலும் சொல்கின்றேன். அவருக்கு வேண்டிய தைரியங் கொடுத்துச் சாட்சி சொல்-லச் செய்து தீர்ப்பை மாற்றிவிடவேண்டும். "யானும் அவ-ருக்குச் சொல்லிச் சரிப்படுத்துகின்றேன்." ஆயினும் தங்க-ளுரையினுல்தான் அவர் உறுதிகொள்ளுவார்.

**எதிரியின் நியாயவாதி**—சரிதான் ஆகட்டும். போகலாம்.

(போகின்றனர்.)





# அங்கம்—V

## முதற் களம்

**இடம்:** சுடலைப்புறம்.

**காலம்:** மாலை.

**பாத்திரம்:** விசுவாமித்திரர்.

[விசுவாமித்திரர் சுடலையை நாடி வருகின்றார்.]

**விசுவாமித்திரர்** — (*தனியே*) ஆ, ஆ! நமக்கு என்ன சிரமம் நேர்ந்து விட்டது! கல்லைக் குத்தினால் கை நோகும் என்பதேபோல், அரிச்சந்திரனை அசத்தியன் என்று நிரூபிக்க எண்ணி இவ் வகைய துன்பத்தில் சிக்கித் துயரடைய லாயிற்று. உய்த்-துணர்ந்தால், நேர்ந்த சிரமம் அனைத்தும் நமக்கே யன்றோ ஆகிவிட்டது. "உரலுக்கு ஒருபுறம் இடியானால், மத்தளத்-திற்கு இருபுறமும் இடி" என்றாற்போல, அரிச்சந்திரனுக்கு ஒரு துன்பமானால் நமக்கு ஒன்பது துன்பமாக வன்றோ முடிந்தது. நாம் படும் சிரமம் ஒருவாறாயினும், அந்தோ, நம்மை யடுத்து, நமக்குத் தொண்டு செய்துகொண்டு, நன்-மார்க்கத்தை யடைய நாடிவந்த மாணாக்கர்களை எவ்வளவு சிரமத்திற்கு உள்ளாக்கினோம். ஒருவன் நட்சத்திரேசனைச் சென்று பட்ட பாடுகள் ஒன்றா, இரண்டா! ஆ, ஆ! மற்ற மாணாக்கர்களை அவ் வப்போது ஏற்கத் தகாத வேடங்களை-யும் ஏற்றுச் செய்யத் தகாத செய்கைகளையும் செய்ய வுடன் படுத்தினோம். அவனவன் இல்லறத்தை வெறுத்துத் துற-வறத்தை விரும்பி நம்மை யடைந்திருக்கவும், நாம் அவர் களைக் கேவலம் இல்லறத் தொடர்புடையவர்க ளாக்கினோம். இது ஒருவாறாயினும், அந்தோ, அந்தோ, பரமேசுவரா!

கன்னிகைகளாக இருந்து, உலக இன்பங்களை வெறுத்து, நம்மை யடைந்து தொண்டு பூண்டொழுகும் தவப்பெண்களை, கேவலம் விலைமாதர்போல் நடிக்கச்செய்து, பெண்களுக்குரிய நிறைகுணங்களையுந் துறக்கச்செய்து, அரிச்சந்திரனை யணுகித் தம்மை மணக்கவெனக் கேட்குமாறு சொல்லினோம். மற்றும் சகோதர பாவமுள்ள மாணவருக்கு மனைவிகளாகச் செய்வித்தோம். அதனினும் புலையர்தம் சேரியிற் புகுவித்தோம். புலாலை அறுக்கவும் புரிவித்தோம். சுடலையிற் பிணத்தைச் சுடுவித்தோம். சூதாற் பல பொய் சொல்வித்தோம். கொலை செய்திடவும் குறிப்பித்தோம். குலமகள்மே லதைக் கோத்திட்டோம். ஆ, ஆ, என்னென்ன தீச் செயல்களை செய்வித்துவிட்டோம். அவற்றை எண்ண எண்ண எத்தனை யாகி விட்டன. தீவினை அணுப்போலிருந்து மலைபோல் வளர்ந்து விடும் என்கின்றனரே, இதுதானோ. செய்யுங் காலத்தே ஒன்று இரண்டாக மனத்திற் பட்டன. இப்போது அவற்றை எண்ணினால் ஒரு நூற்றுக்கு மிகுந்தும் இருக்கும்போற் காண்கின்றதே. பல அணுக்களின் தொகுதியே இவ்வுலகம் என்பதற்கு நமது செய்கை ஒன்றே போதிய திருஷ்டாந்த மாகும்போற் காண்கின்றதே. பல துளி பெருவெள்ளமாயிற்றே. இப் பெருந் துன்பங்களை யெல்லாம் தாங்கிக்கொள்ளத் தக்க மனநிலை யுள்ளவனை என்னவென்று கூறுவது. இறைவ னென்றே கூறவேண்டும். இறைவ னென்றாலும் இராஜனென்று பொருள்படும். ஈசுவரன் என்பதே தகுதி. சீடர்களைத் தீவினை செய்யுமாறு ஏவும் ஆசிரியன் அந்தோ, அரு நரகத்தி லன்றோ அழுந்தி வருந்துவன். இதற்கெல்லாம் காரணம் எது?—(மேலே பார்த்து யோசித்து) ஆ, நமது அகங்காரமே யன்றோ. இவ் வகங்காரம் ஒன்றுதானே நமது வாணாளனைத்தும் வீணாளாக்கி விட்டது. ஆ, ஆ! ஆதியில் நாம் அரசனாக இருந்து வேட்டைக்குச் சென்று வேட்டையாடிக் களையுற்று விழுந்து கிடந்தபோது நமக்கும் நமது படைகளுக்கும் உணவளித்து உபசரித்த அன்னதாதாவைப் பகைத்து வாதிட்டு வருத்தினோம். அதற்கும், பொறாமையே காரணமாக இருந்தது. முடிவில், குன்று முட்டிய குருவியைப்போல் அத் தவசிரேட்டரோடு அமர் செய்து நமது அருமை மக்களையும் இழந்தோம். விரதிய ரிடத்து வில்லென்ன செய்யும். அருந்தவ ரிடத்து அம்பென்ன செய்யும். அக் காலமே நமது அகங்காரத்திற்கு ஆதியாக விருந்தது. அப்போது அரசுரிமை வகித்திருந்ததனால் செல்வச்செருக்கினால் தருக்கி அவ்வாறு செய்துவிட்டோம் என்று ஒருவாறு மனந்தேறலாகும். இது அவ்வாறன்றே.

அந்தோ பரமபதி! உலகில் பெறுதற்கரிய பெரும் பேருவது அரசுரிமை யடைதல். இம்மையிற் பெரும் பயனாக நாடற்பாலது இது ஒன்றே. அத் தகைய பெரும் பேற்றையும் துறந்து தூய்மை யடைய வேண்டுமெனக் கருதி இத் துறவற நெறியை யடைந்தோம். துறவற நெறியை யடைந்தவர் முதலில் துறக்க வேண்டுவது காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பனவாகும். இவற்றுள், மேனகையின்பால் காமம் என்னும் குற்றத்திற் குள்ளாகி அரிய தவமனைத்தையும் இழந்தோம். மற்றும் இவ்வாறே ஒவ்வொன்றிற்கும் இடங் கொடுத்திருக்கின்றோம். இவற்றிற்கெல்லாம் அவ் வகங்காரமே யன்றோ காரணமாக நின்றது. அந்தோ சென்றதெல்லாம் செல்லட்டும். இவ் வரிச்சந்திரன் விஷயமாக அவ் வசிட்டரிடம் வாதிட்டது எதற்கு. வீணே யன்றோ? பலர் மெச்சப் பழுதிசைத்தோம். இவ் வரிச்சந்திரனது குணங்களை எப்போதாயினும் ஆராய்ந்திருக்கின்றோமா? ஒன்று மில்லையே. வீணே வாய்மதம் பேசியதனால் வந்தன கேடுகள். ஒரு சொல்லளவில் எல்லாவற்றையும் நமக்குத் தத்தஞ்செய்த அப் புருஷோத்தமனது குணத்தை உடனேயாவது கண்டறிந்து விட்டுவிட்டோமா? அதுவும் இல்லையே. ஒன்று ஒன்று ஒன்றாக எத்தனை இன்னல்களை இழைத்துவிட்டோம். பயனென்ன? ஏதாவது முடிந்ததா. முடிவ தேது. உண்மையே உருவமாகத் தோன்றிற்றோ? அலை கலங்கினும், மலை கலங்கினும், மாதிரங்கள் கலங்கினும், தன் மனநிலை கலங்காத மாண்புடையவனாக விருக்கின்றானே. இப்போது என்ன செய்வது. ஆ, ஆ. நமது நிலையை எண்ணினால் என்பும் உருகுகின்றதே. அவ் வரிச்சந்திரன் நம்மால் சிறிது துன்பத்தை யடையினும், அவன் பெறும் பேற்றுக்கோ அளவில்லை. அவன், இவ் வுலகில் சூரிய சந்திர ருள்ளளவும் புகழுடம்புகொண்டு விளங்குவன். நாமோ அவன் பெயரை உலகினர் உன்னுந்தோறும், இழித்துக் கூறும் இகழுடம்பு கொண்டு இன்னலடைவோம். அவனோ நமது அருந்தவத்திற் பாதி யடைவதன்றி தன் னரசுரிமையையும் அடைவன். நாம் எவ் வகையினும் இழத்தல் ஒன்றே அடைகின்றோம். இவையனைத்தும் ஒருபால் ஒதுக்குவோம். இவ் வசிட்ட முனிவன் முன்னிலையில் யாம் இப்போது அடையக் கிடக்கும் அவமானத்தைஎண்ணுந்தோறும் மனம் புண்ணேயாகின்றது. அந்தோ, அந்தோ! இவை யனைத்திற்கும் நமக்குச் சத்துருவாய் நம் மனத்தின்கண் தோன்றிய அகங்காரமே யன்றோ காரணமாக இருந்தது. இவ் வகங்காரம் எவற்கும் ஆகாது. அந்தோ அந்த அகங்காரத்தினால் விளையுந் தீங்குகளை நாம்

அன்றி மற்றை யார் அறிவார்? இனியேனும் அவ் வரிச்சந்திரன் தன் நன்னிலையினின்றும் சற்று விலகுவானேல், நாம் பட்ட சிரமத்திற்கும், நமது மாணவர் பட்ட சிரமத்திற்கும் சிறிது பலன் ஏற்படும். இத்தனை இன்னல்களுக்கு ஈடுபட்டுக் குற்றமின்றி விளங்கும் குணசீலன் இனியேன் தவறப்போகின்றான். தவறான். ஆயினும் பார்ப்போம். இச் சோதனையை முடிவாகத் தீர்ப்போம். இதுவோ மனைவியைச் சிரச்சேதஞ் செய்வது. எவ்வளவு கன்மன முடையனாயினும், எவ்வளவு நல்லொழுக்க முடையனாயினும், தன் மன மொத்த மனைவியைச் சிரச்சேதஞ் செய்யச் சிந்தை கொள்ளமாட்டான். அதனினும் ஒரு பாவமும் செய்யாதவள் என்பதை அவன் மனம் நன்கு அறியும். கால அளவைச் சிறிது மாற்றிச் சொல்ல வேண்டுவதே தன் கடமை. இதற்கு எவ்வாற்றானும் உடன்படுவன். புத்திரன் இறந்துவிட்டதற்கும் அவ்வளவு மனம் வருந்தான். இறந்தவர் இறந்தவரே என்று எண்ணுவன். இருந்தவரை இறந்தவராக்குவதற்கு உடன்படான். பார்ப்போம். இதே கடைசிமுறை. இதுகாறும் நம் மாணவர் முயன்று முடியாது விட்டனர். இப்போது யாம் முயலுகின்றோம். இது நம்மாலும் முடியாமற் போகுமோ. ஒருக்காலும் முடியாமற் போகாது. நாம் நேரிற் சென்றகாலத்து ஒருபோதும் தவறினதே யில்லை. ஆகையால் இப்போதும் தவறமாட்டோம். அதுபோல் முன்பே செய்யாமற்போனதும் நமது பேதமையே—சரி. இப்போது பார்ப்போம்.

(போகின்றார்.)

## இரண்டாங் களம்



**இடம்:** மயானத்தில் கொலைக்களம்.

**காலம்:** மாலை.

**பாத்திரங்கள்:** சிறைக்கோட்டத்தலைவன், காவலன், வீரவாகு, சந்திரமதி, அரிச்சந்திரன்.

[சந்திரமதியை ஊர்க்காவலர் அழைத்துக்கொண்டுபோய் சிறைக்கோட்டத் தலைவனிடம் ஒப்பிக்கின்றனர். காவலன் வந்தனம் செய்கின்றான்.]

**சிறைக்கோட்டத் தலைவன்** — காவல! தீர்மானம் யாதாயிற்று?

**காவலன்** — இதோ பாருங்கள் சிரச்சேதம் செய்யும்படி நியாயாதிபதியவர்கள் கொடுத்த கட்டளை. கையும் மெய்யுமாகப் பிடித்திருக்கும்போது தீர்மானம் ஆகாமற் போகுமா?

**சிறைக்கோட்டத் தலைவன்** — சரி, கயிதியைச் சிறையில் அடை. மறு உத்தரவு வந்தபிறகுதானே நடவடிக்கை நடத்தவேண்டும்.

**காவலன்** — மறு உத்தரவா? இல்லை இல்லை. இன்றைக்கே தண்டனையை நிறைவேற்றும்படி உத்தரவாயிருக்கிறது.

**சிறைக்கோட்டத் தலைவன்** — அடடா, அப்படியா சங்கதி. (தனக்குள் படிக்கிறான்.) ஆமாம், ஆமாம். நன்றாய்ச் சொன்னாய், என்றைக்கு மில்லையே இப்படிப்பட்ட உத்தரவு. இதேது புதிதாயிருக்கிறது. சரி, நமக்கென்ன! உத்தரவுப்படி நடத்தவேண்டியது. நல்லது, உடனே சென்று வீரவாகுவை அழைத்துவா.

(வீரவாகு வருகின்றான்.)

**வீரவாகு** — சாணஞ் சாமீ! அவுசரமா கூப்டரிங்க எண்ணுங்க, கஞ்சி குடிக்கிரதெகூட வுட்டேட்டு ஓடியாந்தேo எங்கப்பா! ஏதுனு கண்ணு கிண்ணு, எருது கிருது உயிந்திசா இன்னு?

**சிறைக்கோட்டத் தலைவன்** — என்னடா அது, வீடு பற்றி வேகும்போது சுருட்டுக்கு நெருப்பு என்கிறாய்.

**வீரவாகு** — சாமீ! எங்கப்பாணே நாo சுருட்டு கிருட்டு புடிச்சி அறியேo எங்கப்பா. பெரிய பேச்சி சொல்ரிங்கிளே. எங்கப்பா உங்க பாதத்துலே வுயுந்து கடக்கிரெo அப்படில்லாம நெனிசிகாதிங்கோ, எங்கப்பா.

**சிறைக்கோட்டத் தலைவன்** — அடே வீணாய்ப் பேசாதே. அதெல்லாம் ஒன்றுமில்லை. நியாயஸ்தலத்திலிருந்து உத்தரவு வந்திருக்கிறது. அதை நிறைவேற்றவேண்டும். அவசரம்; மகாராஜா வீட்டு விஷயம்.

**வீரவாகு** — ஐயோ, யப்பா! இது என்னு! தோ காத்துக்குனுகிறேo செல்லுங்க யப்பா! ஏன்கீயே ஒரு வேலைக்காரன் கடக்கிறான். நெண்டுபேரூo ஒரு சணத்திலெ சேஞ்சூட்றோo.

**சிறைக்கோட்டத் தலைவன்** — இதோ இவள்.

**வீரவாகு** — அ ஆம், தோ நிக்கிறாங்கோ, செல்லுங்கோ.

**சிறைக்கோட்டத் தலைவன்** — ஆமாண்டா, சொல்வதைக் கேள் குறுக்கே பேசாதே.

**வீரவாகு** — (வாயைக் கையால் மூடிக்கொண்டு) இல்லெ யப்பா செல்லுங்கோ கேக்றெo.

**சிறைக்கோட்டத் தலைவன்** — இவள் நேற்று மாலை நமது மகாராஜாவின் குழந்தையை, ஒருவரும் காணாமல் களவாடிக்கொண்டு

போய், கொலை செய்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டு, விசாரணையில் குற்றவாளியே என்று தீர்மானிக்கப்பட்டபடியால், சிரச்சேதஞ் செய்யும்படி நியாயாதிபதியிடமிருந்து உத்தரவு வந்திருக்கிறது. ஆகையால், அதை உடனே நிறைவேற்றவேண்டும். கொலைக்களத்துக்கு வரவேண்டிய சன்னாகத்தோடு சீக்கிரம் புறப்பட்டு வருவாய்.

**வீரவாகு** — ஐயையோ! அடியெம் பாவி மவளே. கரிப்பிலே கொத்தாட்டம் ஒரு கொய்ந்தே இருந்திசெ நம்ப ஐயனுக்கு அத்தையா கொண்ணுபூட்டா இந்தம்மெ. ஐயையோ! இந்தம்மெ பொண்ணெ புள்ளெயெ பொறல்லயா! பூதமா! பிசாசியா! ஏமவவுத்தெ பெசியதெ யப்பா. நம்ப ஐயெ கொய்ந்தையே கொண்ணவ இண்ணும் இன்னீன்னு சேஞ்சியிருக்கமாட்டா. ஏ யப்பா. பயித்தியம் கியித்தியம் பிடிச்சிகிச்சா!

**சிறைக்கோட்டத் தலைவன்** — அடே, உனக்குத்தான் பயித்தியம் பிடித்திருக்கிறது. இப்போது சீக்கிரம் வாடா. உத்தரவை இன்றைக்கே நிறைவேற்ற வேண்டுமாம்.

**வீரவாகு** — அப்படியானுக்கா தோ வந்துவிட்டேம் யப்பா. நாம இண்ணும் சீதாங்காட்டியம் நாளுண்ணு தெயங்கி நிக்கிறேம. கோயிச்சிகாதே யப்பா, தோ ஓடியார்றேம.

(வீட்டிற்கு ஓடுகின்றான்.)

**செல்லி** — என்ன இவ்வளவு உவப்புடன் வேகமாய் ஓடி வருகின்றீர்?

**வீரவாகு** — உவப்பா, பின்னும் உவப்பா, நாம் ஏதேதோ நினைத்துவிட்டோமே, பார்த்தாயா நமது முனிவர் திறத்தை. அவ்வளவு வன்மை இல்லாவிடில் நம் முனிவர் இதில் தலை இடுவாரா? வசிட்டருடன் வாதுகள் செய்வாரா?

**செல்லி** — என்ன! என்ன! என்ன! ஏதாவது பலித்து விட்டதா?

**வீரவாகு** — பலியாமலென்ன? இன்னும் நொடிப்போதில் வெற்றிதான். வசிட்டர் முகம் வாட்டந்தான்.

**செல்லி** — என்ன சங்கதி, சங்கதியை வெளியிடுமே. சற்றுக் கேட்டுச் சந்தோஷப்படுவோம்.

**வீரவாகு** — ஆ, ஆ! நம் முனிவர் எதேதோ தந்திரங்கள் செய்து, சந்திரமதி இந் நகரின் அரச குமாரனைக் கொன்றதாக ரூபிக்கச் செய்துவிட்டனர். அதனால், அம் மாதைச் சிரச்சேதம் செய்யும்படி தீர்ப்புப் பிறந்துவிட்டது. காவலர் அவளைச் சுடலையில் கொண்டுவந்திருக்கின்றனர். யான் இதோ செல்-

கின்றேன் உத்தரவை நிறைவேற்ற. யான் போய் அரிச்சந்திரனைக் கூப்பிட்டு அம்மாதின் சிரத்தைச் சேதிக்கும்படி உத்தரவு செய்யப் போகின்றேன். என்ன செய்வான்! அதற்கு உடன்படுவானு? மனம் வருமா? சற்றுத் தவறித்தான் ஆகவேண்டும். இந்தச் சமயத்தில் முனிவரும் வருவர். நீயும் அங்கு வந்திரு. நடப்பதைப் பார்.

**செல்லி** — ஆ, ஆ. அப்படியா! அவ்வளவும் நடந்தாயிற்று. மனைவியை வெட்டவும் மனங்கொள்வானு ஒருவன். இதற்கு ஏதாவது சிறிது வழி தேடித் தந்திரம் செய்தால், அரிச்சந்திரன் தன் மெய்மையினின்றும் தவறிவிடுவான் தடையில்லை. நாம் பட்ட சிரமங்களுக்குப் பரிகாரம் ஏற்பட்டுவிடும். பழி பாவமும் இல்லா தொழியும்.

**வீரவாகு** — அதற்குத்தான் தென்புடன் ஓடி வந்தேன். முனிவர் இதற்கும் ஏதேனும் வழி தேடியிருப்பர். இதுதானே அவருக்கு வேலை. உணவா, உறக்கமா, ஒன்று மில்லையே. இதுவே முடிவான விஷயம் என்று எண்ணித் தாமே வருவதாகவும் மொழிந்தனராம்.

**செல்லி** — சரி, சரி, இதோ வந்துவிட்டேன். நீர் முன்னே போம். பின்னல் வருகின்றேன்.

**வீரவாகு** — ஆமாம், அது சரி, என்னேடு வேண்டாம், பின்னல்தான் வா.

(வீரவாகு விரைந்து செல்கின்றான்.)

**வீரவாகு** — சரணஞ் சாமீ! தோ வந்துட்டேo, செல்லுங்க சாமீ!

**சிறைக்கோட்டத் தலைவன்** — அடா வீரவாகு! இவளை அழைத்துக்கொண்டு கொலைக்களத்திற்கு வா.

**வீரவாகு** — தோ வந்தாட்டோம் (சந்திரமதியை அணுகி) ஏ அம்மெ நட நட.

ஓமா இந்தக்
கோமா மவனெ
ஏமா கொண்ணே
போமா போமா.

**சந்திரமதி** — (நடந்துகொண்டே, மெதுவாய்) ஆ, பரமேசுவரா! இதுவும் உனக்குத் திருவிளையாடலா! ஒரு பாவமும் அறியாத அடியாளை இப் பெரும் பழிக்குப் பாத்திரமாக்குவதும் அருளா! யான் மரணத்திற் கஞ்சினே னில்லை. இவ் வகையான பழியுடன் மரணம் சித்திக்கின்றதே யென்று மனங் கவல்கின்றேன். இறுதிக்காலத்தில் என் மணுளர் முக தரிசனஞ் செய்யவும் கொடுத்து வையாமற் போனேனே. ஆ

தெய்வமே! யானோ அபலை, அநாதை, என்ன அறிவேன். நீ எல்லாம் அறிவை; உன்னடிகளை மெய்யென்று நம்புவதே யான் அறிந்தது.

(மௌன முறுகின்றாள்.)

**வீரவாகு** — த்ரோ, யப்பா, திரிடிக்கி தெய்வம் ரொம்ப இன்றாங்களே செரியா கீதே.

(சிறைக்கோட்டத்தலைவன், ஊர்க்காவலன், வீரவாகு இம் மூவரும் சந்திரமதியுடன் கொலைக்களத்தை யடைந்து நிற்கின்றனர். அரிச்சந்திரன் சற்று அப்புறத்தில் இருக்கின்றான்.)

**சிறைக்கோட்டத் தலைவன்** — அடா வீரவாகு! நியாயாதிபதி யனுப்பிய கட்டளையை வாசிக்கின்றேன், கேட்டு அதன்படி உத்தரவை நிறைவேற்று.

**வீரவாகு** — ஆகா, அப்படியே செய்றேං சாமி.

**சிறைக்கோட்டத் தலைவன்**—(கட்டளையை வாசிக்கின்றான்.) துவாபரயுகம் 10,367—ல் செல்லாநின்ற குரோதிஞு மாசிமீ 27உ யன்று நமது முன்னிலையில் நடத்தப்பட்ட வழக்கில் குற்றவாளியாகத் தீர்மானிக்கப்பட்ட சந்திரமதி என்னும் பெண்பாலுக்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது.

ஆகையால், காசியம்பதியின் சிறைக்கோட்டத் தலைவராகிய உமக்குத் தெரிவிப்ப தென்னவென்றால், குரோதிஞு மாசிமீ 27உ மாலையில் காசியம்பதியின் மயானத்தைச் சார்ந்த கொலைக்களத்தில், மேற்கண்ட குற்றவாளியாகிய சந்திரமதி என்பவளுடைய உயிர் உடலினின்றும் பிரியுமாறு சிரச்சேதம் செய்யவேண்டியது.

இவ் வுத்தரவு நிறைவேற்றப் பட்டமைக்கு அறிகுறியாக உமது உறுதி மொழியை வரைந்து இக் கட்டளைச் சீட்டுடன் எமக்கு அனுப்பவேண்டியது.

குரோதிஞு மாசிமீ 27உ—யில் எமது கையெழுத்தும் நியாயஸ்தல முத்திரையும் இடப்பட்டன.

இப்படிக்கு,

**பிரதம நியாயாதிபதி.**

**அரிச்சந்திரன்** — (கட்டளையில் சந்திரமதி என்று வாசிக்கும்போது அவளது முகத்தை உற்றுப் பார்த்து) ஆ, பரமபதி! என்ன தீவினை! ஐயோ! என்னகதி நேர்ந்துவிட்டது நமது காதலிக்கு! வழியில் என்ன நேர்ந்ததோ! ஆ பரமேசுவரா! இவ்வாறும் சோதிக்கலாகுமா!

(என்று சொல்லித் தலையைச் சாய்த்துக் கண்ணீர் உகுக்கின்றான்.)

**சிறைக்கோட்டத் தலைவன்** — *வீரவாகு! இனி, நீ தண்டனையை நிறைவேற்றலாம்.*

**வீரவாகு** — *இதோ, ஆச்சி ஒரு நொடிலே (அரிச்சந்திரனை நோக்கி) ஏ யப்பா, அரிச்சா! இந்தா யப்பா இவோ.*

**அரிச்சந்திரன்** — *ஐயோ.*

**வீரவாகு** — *என்ன யப்பா, ஐயோண்றே. நம்ப அந்தெல்லாம் பாக்கலாமா! பொண்ணுச் சேண்ணு பாக்கிறியா யார்ணு நம்பளுக்கின்னு, ஐயெ௦ உத்துருவு எப்டியோ அப்பிடிதா௦ செய்யணு௦, மாட்டெண்ணு செல்லு, நா௦ செய்ரேன்.*

**அரிச்சந்திரன்** — *அதெல்லாம் தடை ஒன்றுமில்லை. தாங்கள் சொல்லியதைச் செய்யக் காத்திருக்கிறேன்.*

**வீரவாகு** — *நல்லது, இவொ, நம்ப நாசா கொயந்தெயெ திரிடி-கினுபோயி கொண்ணுபுட்டாளாம். அதுக்கிண்ணு செர-சாக்கினே வந்து கீது. அது நம்ப வேலெதா௦ யப்பா. இவளெ குனியவெச்சி, இந்த கத்தியாலே ஒரே வெட்லே ரெண்டு துண்டா உயும்படியா கயித்திலே போடு யப்பா. பத்திர௦. எஜமா௦மர் செல்லா நிக்கிறுங்கொ.*

(*வாளை கையிற் கொடுக்கின்றான். அரிச்சந்திரன் வாங்கிக்கொண்டு சந்திரமதியை கொலை மேடைக்கு நடத்துகின்றான்.*)

**அரிச்சந்திரன்** — *ஐயோ பெண்மணீ! உனக்கு இந்தக் கதி எவ்வாறு நேர்ந்தது?*

**சந்திரமதி** — *நாதா வருந்த வேண்டா. யான் பணமும் துண்டமும் வாங்கிவரச் செல்லும்போது, வழியில் ஒரு பிணம் தட்டுப்பட்டது. அது நமது மகனேபோ லிருந்தது. அது கண்டு அதனை எடுத்துப் புலம்பினேன். உடனே ஊர்க் காவலாளிகள் ஓடிவந்து என்னைப் பற்றிக்கொண்டனர். பின்பு, நியாயஸ்தலத்தில் யானே அக் குழந்தையைக் களவாடிக் கொண்டுபோய்க் கொலை செய்ததாகப் பலரும் சாட்சியம் பகர்ந்தனர். அதனால் நியாயாதிபதி மரணதண்டனை விதித்தார்.*

**அரிச்சந்திரன்** — *ஐயோ, காசிநாதா! இது என்ன மாயம்! கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்பதும் பொய்யா! என் கற்புள்ள கண்மணிக்கு இப் பழியான மரணமும் நேரலாமா? ஆ, தெய்வமே! எங்கும் நிறைந்த சாட்சி நீயே யாகவும், இந்தப் பொய்ச்சாட்சிகள் புகல்வது எவ்வாறு மெய்யாகும். ஆ, கருணாநிதி! இவ்வாறும் சோதிக்கலாகுமா. தாங்கத் தகாத சோதனையை எவ்வாறு தாங்குவது! நேற்று இறந்து பிணமாகக் கிடக்கும் புத்திரனை இன்னும் தகனஞ் செய்வ-*

தற்கும் இல்லையே. இதற்குள் இப் பேரிடியாயின் என்ன செய்வேன்! இவ் விருவருக்கும் நேர்ந்ததேபோல் இவ் விடத்திலேயே இப் பாவிக்கும் ஒரு இறுதி நேர்ந்துவிடின், அதுவே தேவரீர் அடியேன்மீது வைத்த பெருங் கருணையாகும். அந்தோ, பெண்மணீ! இனி இந்த உடலிருந்து எதற்கு! நமது புதல்வனும் இறந்து பிணமாகித் தகனஞ் செய்யவும் வழியற்றுக் கிடக்கின்றான். ஐயோ, பரமபதி! என்ன பாபஞ் செய்தேனோ! யாவர் உறவைப் பிரித்தேனோ! நல்லோர் வருந்த நடந்தேனோ! நாட்டில் தீமை புரிந்தேனோ! என்றோ, ஒன்றும் அறியேனே! என் உயிர்க்கு உயிரான கற்பரசியை யானே சிரச்சேதஞ் செய்ய நேர்ந்தது. இதனினும் தீமை எனக்கு என்ன வேண்டும்! ஆ ஜகதீசா! சர்வேசா! பாப நாசா! பக்தர் நேசா! என்ன செய்வேன்! கண்மணீ! உன்னைச் சேதிக்கும் இக் கரங்களைக்கொண்டு இன்னும் இம் மண்ணில் இருப்பது எப்படி! உன்னைச் சேதித்துப் பிணமாகக் காண இக் கண்கள் என்ன தீவினை செய்தனவோ! ஐயோ, ஐயோ, ஆ பரமபதி!

(தலை சாய்க்கின்றான்.)

**சந்திரமதி** — பிராணநாதா! கேவலம் ஒரு பெண்பாலின் பொருட்டுத் தேவரீர் இவ்வாறு வருந்தலாகுமா. முன் செய்த தீவினை இவ்வாறு மூண்டதே யொழிய வேறன்று. அதைத் தடுக்க எவராலாகும்! அவரவர் விதியின் அவரவர் வருவர், அவரவர் போவர் என்பது தேவரீர் அறியாததன்றே. யானோ தேவரீருக்கு இடையில் நேர்ந்தவள். சிறிது காலமிருந்து நீங்குகின்றேன். இதனால் தேவரீர் ஏன் வருந்த வேண்டும். வேண்டாம், என் இன்னுயிர்த்தலைவ! வருந்த வேண்டா. உடலுக்கு உறவானவரை நம்பி உயிருக்கு உறவானதைக் கைவிடலாகாது. அவ் வுண்மையை யுணர்ந்தும் தேவரீர் வருந்துவது எதற்கு! வேண்டாம், உத்தரவைத் தைரியத்துடன் நிறைவேற்றுங்கள்.

**அரிச்சந்திரன்** — ஆ, என் அன்பிற்கு இனிய அன்னமே! என்ன அறிவு வுனக்கு! இவ் வறிவுடைய அன்னத்தைப் பிரிந்து உயிர் வாழ்வ தெப்படி! இந்த வுயிரன்னத்தைப் பிரிந்தால் உணவன்னத்தையும் பிரிந்து உயிர் விடுதலே நல்வழியாகும். ஆ என் கண்மணீ! இடையில் வந்து இடையிற் பிரிகின்றேன் என்கின்றனையே, இவ் வுரையே என் இதயத்தைப் பிளக்கின்றது. புருட பாரியர் ஜென்மாந்தர ஒற்றுமையினூற் சேர்கின்றனர். ஆதலால், அவர்கள் எப்போதும் ஒற்றுமை யுடையவரே யாவர். இதனா லன்றோ,

வெண்பா

தாயோ டறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்—ஆயவாழ்
வுற்றா ருடன்போம் உடன்பிறப்பால் தோள்வலிபோம்
பொற்றாலி யோடெவையும் போம்

என்றதும் இது நோக்கியே யன்றோ. பெண்மணீ! என்னைப் போல் பாவியர் எவர்! இவ் வுலகில் பெறுதற்கரிய பெண்மணி-யை நயத்தால் பெற்றுப் அப் பெண்மணியை யிழக்கின்றேன். அந்தோ! இதனினும் என் கண்மணியை இழந்திருப்பது நல-மாகுமே. அந்தோ! எனக்கு உறுதி கூறினும் உன்னுயிர் எவ்-வாறு பதைக்கின்றதோ! இந்தக் கதியைக் கண்டும் இன்னும் என் உயிர் உடலில் தங்கி நிற்கின்றதே! என்ன என் மனம்!

(தயங்குகின்றான்.)

**சந்திரமதி** — பிராணநாதா! எல்லாம் உணர்ந்த தேவரீர் இவ்வாறு வருந்தினால் என்ன செய்வது; யாவர் தேற்றுவது. என் மனத்-தில் சற்றும் அச்சமில்லை. சிறிது நேரத்துக்குமுன் தேவ-ரீரைத் தரிசியாமல் இவ் வுயிர் நீங்கிவிடுமே என்று மனம் மிகவும் கவன்றது. இப்போது அது சிறிதுமில்லை. மிகவும் மகிழ்வுடன் இருக்கிறேன். என் உயிர் என் மணாளர் கைகளி-னால் பிரிவதினும் யான் பெறத்தக்க பேறு யாது. அன்றி, யான் மரணத்திற்கு எப்போதும் மகிழ்வுடன் காத்திருக்கின்-றேன். உலகில் மானிடர் தீவினை பல செய்து, மரணம் நேர்ந்தபோது அவற்றை எண்ணி எண்ணிக் கலங்குவர். அடியாள் இப் பிறப்பில் தேவரீருடைய சம்பந்தத்தினால் தீவினையினின்றும் நீங்கி, நன்மையைக் கைப்பற்றி நல்வழியில் ஒழுகி யிருக்கின்றேன். ஆதலால், மரணத்திற்கு அஞ்சாமல் மகிழ்வுடன் இருக்கின்றேன். அன்றி மரணாவஸ்தையினால் ஐம்புலனும் ஒடுங்கி உணர்வற்று மயங்காமல், உணர்வோடி-ருந்து, தேவரீருடைய திருக்கரங்களால் உயிர் நீங்குகின்றேன். இது ஒன்றே யான் பெற்ற பெரும்பேறு, பேரானந்தம், பேரின்ப வீடுமாகும். ஆதலால், தேவரீர் அடியாள் பொருட்டு வருந்தாமல் கட்டளையை நிறைவேற்ற வேண்டி நிற்கின்றேன்.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! நீ யுரைக்கும் உறுதிமொழிகளால் என் உள்ளம் உருகி யறிவழிகின்றதே யன்றி, ஒரு வழிப்பட்டு உறுதி நிலையை யடைந்திலது. அந்தோ ஜகதீசா! என்ன செய்வேன்! எவ்வாறு உய்வேன்! கண்மணீ! உண்மையே உற்ற துணையாக நம்பினோம். இனி, அதனால் யாது வரினும் வருக. நீயுன் வழிபடு கடவுளை மனத்தில் உன்னித் துதி புரிந்து கிழக்கு நோக்கித் தலை வணங்கி யிருப்பாய். ஆ, பரம-

பதி! உண்மை புருவாய் எங்கெங்கும் நிறைந்துள்ள இறைவனே! இதோ என் இன்னுயிர்க் காதலியைச் சேதிக்கத் துணிகின்றேன். இனி இந்த ஆன்மா உமது அடிகளுக்கு அடைக்கலமாவதாக.

(கலங்குகின்றான்.)

**சந்திரமதி** — பிராணநாதா! அடியாள் கணந்தோறும் மனத்திலுன்னி வழிபடும் தேவரீரது பாதங்களுக்குப் பல்லாயிர நமஸ்காரம் புரிகின்றேன். கற்புடைய மடந்தையர் கருதவேண்டியது கணவனது அடியேயாகும். இனி மற்றொரு முறையும் அந்த அடிகளையே வணங்கித் தலையைத் தாழ்த்துகின்றேன்.

**அரிச்சந்திரன்** — அந்தோ பெண்மணீ! உன் தலையைச் சேதிக்க என் கரங்கள் எவ்வாறு துணியும்! ஆ என் வினையே! உன்னை நொந்து வருந்துவ தல்லது, மற்று என்ன செய்ய வல்லேன்! (மயங்கி) பெண்மணீ! கண்ணிற் சிறந்த கண்மணீ! உடலுக்கு உறவான இந்தப் பாவியை வழிபட்டு யாது பயன், உயிர்க்கு உறவாகிய அந்தப் பரமபதியை உன்னி வழிபடுவாய். அப்பரமபதியே துணை. பயப்படாதை.

**சந்திரமதி** — பிராணநாதா!

விருத்தம்

அஞ்சலென்ற கரதலமும் கணபண கங்கணமும்
அரைக்கசைத்த புலியுடையும் அம்புலிச் செஞ்சடையும்
கஞ்சமலர்ச் சேவடியுங் கனைகழலும் சிலம்பும்
கருணைபொழி திருமுகமும் கண்களொரு மூன்றும்
நஞ்சையுண்ட மணிமிடறும் முந்நூலும் மார்பும்
நலந்திகழ்வெண் ணீற்றொளியும் மறிமானும் மழுவும்
பஞ்சடிசிற் றிடையுமையாள் ஒப்பனைப் பாகனுமாய்ப்
பால்வண்ணன் உளத்திருக்கப் பயமுண்டோ எனக்கே.

**அரிச்சந்திரன்** — ஆம் பெண்மணீ! அதுவே உண்மை நெறியாகும். அப் பரமபதியை மனமொழி மெய்களில் வழிபட்டு வணங்கியிருப்பாய்.

**சந்திரமதி** — பிராணநாயகா! கற்புடைய மங்கையர் கணவர் சொல்லின் வழியே நின்று கடவுளை வணங்குவது மரபு. ஆதலின், தேவரீரது கட்டளைப்படியே அவ் விறைவனது பாதங்களை வழிபட்டு வணங்கி நிற்கின்றேன்.

**விருத்தம்**

**ஆக்கையென்னும் புழுக்குரம்பை அணைந்தணையாப் பொருளை**
**அருளொளியைப் பராபரத்துக் கப்புறமாம் அறிவை**

நீக்கமற மயிர்முனைக்கும் இடமற எங்கெங்கும்
நிறைந்துநின்ற முழுமுதலை நினைவிலெழுஞ் சுடரைப்
பாக்கியங்கள் செய்தநந்தம் தவக்குறைகள் முடிக்கும்
பழவடியார் தமக்குதவும் பசுந்துணர்க் கற்பகத்தை
வாக்குமன விகற்பத்தால் அளவுபடா ஒன்றை
மாசற்ற வெறுவெளியை மனவெளியி லடைப்பாம்.

(சந்திரமதி தலைவணங்கி நிற்கின்றாள். குற்றவாளியின் நியாயவாதியும் சேடனும் மயானத்திற்கு வருகின்றனர்.)

குற்றவாளியின் நியாயவாதி — (சிறைச்சாலைத் தலைவனை நோக்கி) ஐயா! மரணதண்டனைக்கு உள்ளாயிருக்கும் குற்றவாளியின் விஷயமாய் மற்றும் சில சாட்சிகள் இருப்பதாகக் காணகின்றது. அந்தச் சாட்சிகளால் இம் மரண தண்டனையை மாற்றிவிடத் தக்க ஆதாரவுகள் இருக்கின்றன. ஆதலால், இத் தண்டனை சற்றுநேரம் நிறுத்திவைப்பதுடன், குற்றவாளியோடு சில விஷயங்கள் பேசவும் அநுமதி கொடுக்கவேண்டும்.

சிறைக்கோட்டத் தலைவன் — ஆ, ஆ, அப்படியே செய்யலாம். எங்களுக் கொன்றும் தடையில்லை. அடா, வீரவாகு! தண்டனையைச் சிறிதுநேரம் நிறுத்து. நியாயவாதி குற்றவாளியோடு ஏதோ பேசவேண்டுமாம்.

வீரவாகு — ஏயப்பா அனிச்சா! தண்டனெயெ செத்தெ நிறுத்துயப்பா, ஐயெ ஏன்னமோ செல்லப் போறாங்களாம்.

அரிச்சந்திரன் — ஆ, ஆ, அப்படியே செய்கின்றேன்.

குற்றவாளியின் நியாயவாதி — (அரிச்சந்திரனை யணுகி) ஐயா! இந்த அம்மாள் உம்முடைய மனைவியா?

அரிச்சந்திரன் — ஆம், ஐயா!

குற்றவாளியின் நியாயவாதி — ஆ, ஆ, என்ன காலம்! பாவம், வீணாக இந்தம்மாள்மீது பழி சுமத்திவிட்டார்கள். நடந்த சங்கதியைக் கேட்டீரோ?

அரிச்சந்திரன் — ஆம் ஐயா, ஒருவாறு கேட்டறிந்தேன்.

குற்றவாளியின் நியாயவாதி — ஒருவாறு என்ன, அநியாயம். ஊரின் நன்மைக்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் இக் காவலாளிகள் நன்மையை விட்டுத் தீமையைச் செய்ய அல்லவோ கங்கணங் கட்டிக்கொள்கின்றனர். ஐயோ ஏதும் அறியாத இப் பெண்பாவின்மீது இல்லாத குற்றங்களைப் பொய்ச் சாட்சிகளைக்கொண்டு ரூபித்துவிட்டுக் குற்றவாளி யாக்கி விட்டார்கள். நான் இவ் வழக்கின் உண்மையை உள்ளவாறு உணர்ந்து எவ்வளவு வாதித்தேன் கேளும்.

**பாஸ்கரன்** — ஆ, ஆ, என்ன வாதித்தார்! என்ன கேள்விகள்! சாட்சிகளெல்லாம் தத்தளித்து, உண்டு இல்லையென்று ஆகிவிட்டார்களே. நியாயவாதியும் ஆச்சரியப்பட்டு விடுதலை செய்யவன்றோ இருந்தார். கடைசியில் அப் பொய்ச்சாட்சிகளின் சொல்லை நம்பி மத்தியஸ்தர் 'குற்றவாளிதான்' என்று சொல்லிவிட்டார்கள். கேளும் அந்தம்மானை. நியாயாதிபதியவர்கள்கூடத் தீர்ப்பில் என்ன சொன்னார்? மத்தியஸ்தர்கள் உன்னைக் குற்றவாளி யென்று தீர்மானிக்கிறார்கள். ஆதலால், நானும் அவ்வாறு தீர்மானிக்கின்றேன் என்றார். அதனாலேயே அவருக்கு இஷ்டமில்லையென்று நன்றாய்த் தெரிகின்றதே. அவர் என்ன செய்வார். மத்தியஸ்தர் சொல்லைக் கொண்டு தீர்ப்புக் கொடுக்கவேண்டும் என்று சட்டமிருக்கிறதாம். இல்லாவிட்டால் ஒரே அடியாய் விடுதலை செய்துவிட்டிருப்பார். ஆனால், அரசருக்கு மனுப்பண்ணிக்கொண்டு இத் தீர்ப்பை ரத்து செய்துகொள்ளட்டும் என்பதுதான் அவர் கருத்து என்று நினைக்கிறேன். அவர் சொல்லிலும் முகத்திலும் நன்றாய்த் தெரிகின்றது. என்ன சொல்கிறீர்?

**குற்றவாளியின் நியாயவாதி** — மற்றென்னவென்று நினைக்கிறீர்! அப்படி அதில் பிடிப்பில்லாவிட்டால் நாம் ஏன் இங்கு வருகின்றோம். ஒரே விஷயத்திற்குத்தான் சாட்சி வேண்டும். இந்தச் சாட்சியிருப்பது நமக்கு முன்னமே தெரிந்திருந்தால் இவ்வளவும் நடந்திராதே. வீணாக அப் பிராமணனையும் அவன் மனைவியையும் நம்பி மோசம் போனோம். அவர்களையும் இந்த ஊர்க்காவலர் சரிப்படுத்திக்கொண்டார்களே. அவர்களும் தங்கள் அடிமை போனாலும் போகட்டுமென்று நமக்கு முற்றும் விரோதமாய்ச் சொல்லிவிட்டார்கள். இங்கு இரண்டொரு சாட்சிகள் இருப்பது நமக்குத் தெரியாமற் போயிற்று. அப்பொழுதானால் நியாய ஸ்தலத்திலேயே அடித்துவிட்டிருக்கலாம். இப்பொழுது கொஞ்சம் பிரயாசை. இருக்கட்டும் என்ன செய்வது. ஓர் உயிரைக் காப்பதே பெருங் காரியம். நல்லது நாழியாகிறது. நமது காரியத்தை முடித்துச் சந்தோஷமாயிருக்கும்போது யாவும் பேசலாம். நமது காரியத்தைப் பார்ப்போம் முன்பு. (*அரிச்சந்திரனைப் பார்த்து*) ஏன் ஐயா! இந்தக் காரியம் உமக்குச் சம்மதந்தானே.

**அரிச்சந்திரன்** — ஐயா! எவ் வகையிலாயினும், நியாயவகையால் விடுவித்தால், தங்களை இக் காசிநாதராகக் கருதி வணங்குவேன். ஐயா! உண்மை யுணர்ந்துள்ள தங்களுக்கு யான் உரைப்பது யாது? இந்த ஏழையின்பொருட்டு இவ்வளவு சிர-

மத்தைத மேற்கொண்ட தங்களை, மனமார வாழ்த்தி வணங்குவ தல்லது, மற்று என்ன செய்ய வல்லேன். திக்கற்றார்க்குத் தெய்வமே கதியாவதுபோல் தாங்கள் இங்குத் தோன்றினீர்கள். தாங்கள் இன்னது செய்யப்போகிறீர்கள் என்பது எனக்குத் தெரியவில்லை, ஐயா!

**குற்றவாளியின் நியாயவாதி** — இப்போது ஏதோ மரண தண்டனைக்குத் தீர்மான மாகிவிட்டதே யென்று மனக்கவலை வேண்டாம். ஒரு நொடிப்போதில் மாற்றிவிடலாம். இப்படிப்பட்ட விஷயங்களில் அரசர் நியாயாதிபதியின் தீர்ப்பை மாற்றிவிடலாம் என்று சட்ட மிருக்கிறது. அவ்வாறு யானே எத்தனையோ மரணதண்டனையை மாற்றி வைத்து மிருக்கின்றேன். நமது சங்கதி விசாரித்தீரானால் உமக்குத் தெரியும். அவ்வளவு இல்லாவிட்டால் இந்த சிறைக்கோட்டத் தலைவர்தான் என் சொல்லைக்கேட்டுத் தண்டனையை நிறுத்திவைப்பாரா! அது இருக்கட்டும். தீர்ப்பை மாற்றிவிட வழியுண்டு. அதற்காக அஞ்சவேண்டாம். அந்த சிரமம் என்னுடையது. இப்போது முடிவில் ஒரு சாட்சியே வேண்டும். விசாரித்ததில் அதுவும் ஏற்பட்டிருக்கிறது. அதுதானும் உம்மிடத்திலேயே இருக்கிறது. (**வீரனைச் சுட்டி**) இந்த ஆள் யார்? உம்மோடு இருப்பவர்தானே?

**அரிச்சந்திரன்** — ஆம் ஐயா, என்னோடு இருப்பவர்தான்.

**குற்றவாளியின் நியாயவாதி** — அப்பா! இங்கு வா.

**வீரன்** — ஏன் சாமி கூப்ட்ரிங்க?

**குற்றவாளியின் நியாயவாதி** — இந்த அம்மாள் நேற்று இங்கு வந்த போது எவ்வளவு நேரம் இருக்கும்?

**வீரன்** — செத்தே கண்ணுக்கு இருட்டாபிலே இருஞ்சி.

**குற்றவாளியின் நியாயவாதி** — அப்படிச் சொன்னால் எப்படி? விளக்கு வைப்பதற்கு முன்பா பின்பா?

**வீரன்** — வெலக்கு வைக்க செத்தெ முன்னே பின்னே யிருக்கும்.

**பாஸ்கரன்** — அடே முன்னெதானெடா இருக்கும்.

**வீரன்** — ஆமாం, வெலக்கு வெய்க்க செத்த மின்னே இக்கும். அதுக்கின்னு இப்ப. பாவம் அந்தம்மாளெதான் வெட்ட பேறாங்களாமே.

**குற்றவாளியின் நியாயவாதி** — அதெல்லாம் ஒன்றுமில்லை. அதை மாற்றி விடுவதற்குத்தான் இப்போது வழி தேடுவது.

**வீரன்** — ஆணுக்கா சரிதாம் யப்பா. பாவம், எங்கம்மா எங்கண்ணெம் பெஞ்சாதி. ஆணு பயி போட்டுடாங்க.

**குற்றவாளியின் நியாயவாதி** — (பாஸ்கரனை நோக்கி) என்ன ஐயா இப்படிப்பட்ட பிரத்தியட்சமான சாட்சியை வைத்துக்கொண்டு வழக்கை வீணாகக் கெடுத்துவிட்டீர். இந்த ஒரு சாட்சியாவது அப்போதே இருந்தால் போதுமே.

**பாஸ்கரன்** — அதெப்படிப் போதும்? ஒரு சாட்சியம் உண்மையாகுமா? இரண்டானால் சரியாகும். அதுவும் எனக்கு அப்போது ஞாபகமில்லை. அந்தப் பொய்காரர் போடும் பெரும் பழியைக் கேட்கவே, எனக்கு உள்ள அறிவும் கலங்கிவிட்டது. என்ன செய்யலாம். போனது போகட்டும். இப்போது நடக்கவேண்டியதைப் பாருங்கள்.

**குற்றவாளியின் நியாயவாதி** — சரி, இருக்கட்டும். அந்த ஆளின் பெயர் என்ன?

**அரிச்சந்திரன்** — அவருடைய பெயர் வீரன்.

**குற்றவாளியின் நியாயவாதி** — சரி உம்முடைய பேர் என்ன?

**அரிச்சந்திரன்** — என் பெயர் அரிச்சந்திரன்.

**குற்றவாளியின் நியாயவாதி** — இந்தம்மாள் நேற்று மாலை முதல் இங்கிருந்தது உண்மைதானே.

**அரிச்சந்திரன்** — அது யான் அறியேன், ஐயா! யான் இவளைப் பார்த்தபோது, இரவு பதினைந்து நாழிகைக்கு மேலிருக்கும்.

**குற்றவாளியின் நியாயவாதி** — அடடா! இதென்ன அவஸ்தையாயிருக்கிறது!

**பாஸ்கரன்** — ஐயா அப்படியெல்லாம் சொல்லாதீர். அவர் சொல்வதுபோல் நீரும் சொல்லும். இருவரும் மாறுபட்டுச் சொல்லலாமா?

**அரிச்சந்திரன்** — ஐயா, அவளை இவர் ஒரு சமயம் மாலையில் இங்குப் பார்த்திருக்கலாம். யான் பார்க்கவில்லை. யான் இரவு பதினைந்து நாழிகையின் பின்புதான் பார்த்தேன்.

**பாஸ்கரன்** — அவர் மாலையில் பார்த்திருக்கலாமா. அதுவும் உமக்குத் தெரியாதுபோல் சொல்கிறீரே, நன்றாயிருக்கிறது. ஏனப்பா வீரா! இந்தம்மாள் நேற்று மாலை முதல் விடியற்கால வரையில் இந்த மயானத்தில்தானே இருந்தார்கள்.

**வீரன்** — ஆமாம், இங்கத்தான் இருந்தாங்க. இந்த ஐயங்கூடதாம் பாத்துகுனு இருந்திசி.

**குற்றவாளியின் நியாயவாதி** — பின் என்ன ஐயா, ஏன் மறைக்கின்றீர்? ஒருகால் உமக்கு ஆகாத மனைவியோ? இப்படியாவது ஒழியட்டும் என்னும் எண்ணமோ?

**அரிச்சந்திரன்** — ஐயா! என் உயிர்போலும் மனையாள் இவள். இவள் உடலே என்னுயிருக்கு உறைவிடம். ஆயினும் யான் உண்மையை உரைப்பதல்லது இல்லதை உரைக்கலாமோ?

**பாஸ்கரன்** — நல்லது, இதில் என்ன, இந்தமமாள இங்கு வரவில்லையோ? இரவு இங்கு இருந்ததில்லையோ?

**அரிச்சந்திரன்** — ஐயா! இவள் இங்கு வந்ததுண்டு. இருந்ததுமுண்டு. நான் இவளை இரவு பதினைந்து நாழிகைக்குமேல் பார்த்த தல்லது அதற்குமுன் பார்த்ததில்லை. ஐயா! அது ஒன்றே நான் கண்டது. சொல்லக்கூடியதும் அதுவே.

**பாஸ்கரன்** — என்ன ஐயா! நீர் சொல்லுவது விந்தையாக இருக்கிறது; காலத்தைக் காட்டும் கருவி ஏதாவது உமது கையிலுண்டோ? விநாடியும் பிசகாமல் சொல்கிறீரே.

**அரிச்சந்திரன்** — அதெல்லாம் ஒன்று மில்லை. வானத்தைப் பார்த்தே நாழிகை யறிவது. அதுவுமன்றி இவளை நான் காணும்போது ஊரடங்கி ஒரு ஜாமம் இருக்கலாம். அதுகொண்டு சொல்கின்றேன்.

**குற்றவாளியின் நியாயவாதி** — ஆ, ஆ, நன்றாயிருக்கிறது, நாழிகை பார்க்கும் மாதிரி. வானத்தைப் பார்த்தால் மோட்சத்துக்கு வழி தெரியும். அதுதான் இவ்வளவிற்குக் கொண்டுவந்துவிட்டது. ஏது உமக்கு இந்த மனவியைத் தொலைத்து விட வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறாற்போல் காண்கின்றது.

**அரிச்சந்திரன்** — ஐயா! அவ்வாறு கூறவேண்டாம். அது அவள் உள்ள மறியும், என்னுள்ள மறியும். என்ன செய்யலாம், உண்மைக்கு மாறாக உரைப்பது கூடுமோ?

**பாஸ்கரன்** — என்ன ஐயா, நீர் நல்லவராகக் காண்கின்றீர். விவகாரங்கள் நன்றாய் அறிந்திருக்கின்றீர். சொந்த விஷயத்தில் ஊழலாக இருக்கின்றீர்.

விருத்தம்

பொற்கொடி மணத்தின் போதும் பொருந்துயிர் நீங்கும் போதும்
நற்குல மழியும் போதும் நல்லவர் தம்மை வய்க்க
அற்பர்கள் நினைக்கும் போதும் அருஞ்சமர் விளையும் போதும்
சொற்பெறும் ஐந்தி டத்தில் சொல்லலாம் பொய்யைத் தானே.

திருமணம் நடத்துங் காலம், ஓர் உயிருக்கு அழிவு வருங் காலம், நற்குலத்திற்கு தீங்கு நேருங் காலம், நல்லோரை அற்-

பர் பழிக்க வருங் காலம், பெரிய சண்டை விளையுங் காலம் ஆகிய இவ் வைந்து காலங்களிலும் ஏதாவது பொய் சொல்ல நேர்ந்தால், தடையின்றிச் சொல்லலாம் என்று நீதி சாஸ்திரம் கூறுகின்றது. இது ஒன்றும் பொய்யில்லை. யாவும் கண்ணிற் கண்ட விஷயம். நீர் ஒருகால் பதினைந்து நாழிகையின்மேல் கண்டிருந்தாலும் உம்மோடு இருப்பவர் மாலைப் பொழுதுக்கே கண்டதாகக் கூறுகின்றார். இனி இதிலென்ன பொய் இருக்கின்றது. ஆகையால், நீங்கள் இருவரும் ஒருமித்துக் கூறுதலே நன்மை. உம்முடைய நன்மைக்கு நாங்கள் ஏன் இவ்வளவு நியாயங் கூறவேண்டும். எடுத்த காரியம் இடையூறு அடையாவண்ணம் இவ்வளவும் சொல்கிறோம். பிறகு, உமதிஷ்டம். பெண் பழியைச் சுமத்திக்கொள்வது பெரும் பாவம்.

**அரிச்சந்திரன்** — ஐயா! தாங்கள் இவ்வளவு பரிவுகூர்ந்து உரைப்பதற்கு யான் பல கோடி வந்தனங்கள் புரிகின்றேன். கோபிக்க வேண்டாம். யாராயிருந்தா லென்ன, கண்ட அளவு கூறுவதல்லது. காணாத தொன்றை எவ்வாறு கூறுவது. என்னோடிருப்பவர் கண்டவாறு அவர் கூறுகின்றார். யான் கண்டவாறு யான் கூறுகின்றேன். உள்ளதை உள்ளவாறு உரைப்போம். உண்மைக்கு ஒருபோதும் பழுதில்லை.' ஆகையால், தாங்கள் சற்று முயன்று நியாய வழியில் இந்த ஏழையை விடுவிக்க வேண்டுகின்றேன், ஐயா!

**குற்றவாளியின் நியாயவாதி** — என்ன ஐயா, நீர் சொல்லுவது வேடிக்கையாக இருக்கிறது. உள்ளதைச் சொல்ல உடன்படமாட்டேன் என்கின்றீர். விடுதலைமாத்திரம் யடைவிக்க வேண்டும் என்கிறீர். இதில் ஏதோ வஞ்சமிருப்பதுபோல் காண்கின்றது. இல்லாவிட்டால், கண்டதைச் சொல்லாமைக்குக் காரண மென்ன? இருக்கட்டும் (சந்திரமதியைப் பார்த்து) ஏன் அம்மா! உன்னுடைய புருஷர் சொல்வது உனது காதில் படுகின்றதா? நேற்று மாலை முதல் நீ இங்கிருந்தது உண்மைதானே.

**சந்திரமதி**—ஐயா! என் மணாளர் கூறுவதில் எள்ளளவும் வஞ்சக மில்லை. யான் விளக்கு வைத்து இரண்டு நாழிகளுக்குப் பின்பே ஐயாவர்கள் வீட்டிலிருந்து புறப்பட்டேன். பிறகு, பிரேதமாய்க் கிடந்த என் புத்திரனைக் கண்டு எடுத்துக்கொண்டு இங்கு வா அர்த்தராத்திரி யாகிவிட்டது. விளக்கு வைக்குமுன் யான் இங்கு வந்ததில்லை. உயிருக்கஞ்சி உண்மையை இழக்கலாகுமா?

**குற்றவாளியின் நியாயவாதி**—(பாஸ்கரனை நோக்கி) ஆ, ஆ, விளங்கி-விட்டது இவர்கள் விஷயம். இவர்கள் உயிரோடு இவ் வுலகில் இருக்க எண்ணங்கொள்ளவில்லை. தமது புத்திரன் இறந்து விட்டதை எண்ணி, எவ் விதத்திலாயினும் உயிர் விடுவதே நலமென்று தீர்மானித்திருக்கிறார்கள். இல்லாவிட்டால் ஒரு பெண்பால் மரண மேடைமேல் விருந்துகொண்டு அஞ்சா நெஞ்சுடன் இவ் வகைய நியாயம் பேசுதல் கூடுமா. உயிர் விடத் துணிந்திருக்கிறார்கள். துணிந்தவர்களுக்குத் துக்க-மில்லை யென்பதை இவர்களிடம் இப்போதுதான் கண்டேன்.

**பாஸ்கரன்** — ஆமாம், ஆமாம். நன்றாய்ச் சொன்னீர்கள். அதுவே கருத்தாக இருக்கலாம். பிள்ளை இறந்தது மாத்திரமன்று, இவர்களில் புருஷன் ஒருவற்கும் பெண்சாதி ஒருவற்கும் அடிமைப்பட்டிருப்பதாய் அவர்கள் சொல்லுவதனாலேயே விளங்குகின்றது. அதுவும் ஒரு காரணமாயிருக்கலாம். அடிமையினின்றும் எவ்வாறு நீங்குவது? அதனினும் இப்-படியாவது உயிரை விட்டுவிடுவோம் என்று இருவரும் பேசிக்கொண்டு உறுதிகொண்டிருப்பதுபோல் தோற்றுகிறது. அப்படியானால் நாம் என்ன செய்யலாம்!

**குற்றவாளியின் நியாயவாதி** — ஓ, ஓ, அப்படியா அது. ஒன்றுக்கு இரண்டு காரணங்கள் ஏற்பட்டன. சரி இன்னும் என்ன வேண்டும். இனி முயல்வதில் பயனென்ன. ஒருகால் இவர்களாலேயே இந்தக் கொலை நடந்திருத்தலும் கூடும். நாம் இதில் தலையிட்டுக்கொண்டதும் வீணே. (சந்திரமதியை நோக்கி) ஏன் அம்மா, உங்கள் கருத்து இவ்வாறு இருக்கும்-போது, கொலை செய்ததாகவே ஒப்புக்கொண்டிருக்கலாமே. எங்களுக்கும் வீணான சிரமம் இல்லாமற் போயிருக்குமே.

**சந்திரமதி** — ஐயா! தாங்கள் எண்ணுவதுபோல் எங்களிடத்தில் யாதொரு வஞ்சகமும் இல்லை. கொல்லாம லிருக்கும்போது கொன்றதாக எவ்வாறு கூறலாம். உண்மை எவ்வளவோ அவ்வளவே உரைத்தேன் ஐயா! தாங்களும் உழைத்தீர்கள், முடியாமற் போயிற்று. நாம் என்ன செய்யலாம். வந்ததை அனுபவித்தே தீரவேண்டும்.

**பாஸ்கரன்** — (அரிச்சந்திரனை நோக்கி) ஏன் ஐயா இந்தம்மாள் கூறு-வதும் நீர் கூறுவதும் நியாயமாகப் புலப்படுகின்றதா? உங்கள் மனத்தில் உள்ள வெறுப்பினால் உயிர் விடத் துணிகின்றீர்கள். அந்தோ! இது எவ்வளவு பாதகம். ஒன்றுக்கு மூன்றாகுமே. உள்ளதை மறைத்துத் தண்டனைக்காளாவதும், உயிரை விடத் துணிதலும், தம்மை அடிமைகொண்டவரை வஞ்சித்த-

னும் ஆக மூன்றன்றோ. இவற்றுள் ஒவ்வொன்றும் பெருங் குற்றமாகுமே. இவையனைத்தினும் தன்னுயிரை விடத் துணிதல் தற்கொலை யென்னும் பெரும் பாதகமாகும். அதனினும் பெரிய குற்றமும் பாவமும் வேறில்லை. வேண்டாம், வேண்டாம். நீர் ஏதோ விஷயந் தெரிந்தவராகக் காண்கின்றீர். உள்ளதைச் சொல்லி இவ் வுயிரைத் தப்புவியும். பிள்ளை யிறந்தால் கூடவே யிறப்பதுண்டா. பெற்றதெல்லாம் பிள்ளையா—இட்டதெல்லாம் பயிரா—உயிருடன் இருந்தால் எத்தனை மைந்தரையும் பெறலாம். அவ்வாறே உயிருடனிருந்தால் உழைத்துக் கடன்காரருக்குக் கடன் கொடுக்கலாம். கடனைத் தீர்க்காமல் ஒருவன் தற்கொலை புரிந்து இறந்துபடுவானானால் அவன் மறுபடியும் மண்ணிற் பிறந்து அந்தக் கடன்காரனுக்கு ஆட்பட்டு உழைத்து வருந்துவான். ஆகையால், இவ்வளவும் சொல்கின்றேன். கால தாமதமாகிறது. சொல்லும், யாங்கள் போகவேண்டும். என்ன, அரசர்க்கு மனு எழுதலாமா?

**அரிச்சந்திரன்** — ஐயா! தாங்கள் கொண்ட எண்ணத்தில் எள்ளளவும் எம்மிடமில்லை. உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசும் உலுத்தரைக் கண்ணெடுத்தும் பார்க்க மனங்கொள்ளோம். எவர் இறந்தாலும் எவர் இருந்தாலும் சத்தியத்தைக் கைவிடோம். தாங்கள் எம்மீது கொண்ட கருணைக்கு நன்றிபாராட்டி வந்தனம் புரிவ தல்லது வேறு செய்ய வகையில்லோம். ஆகையால், யாங்கள் கூறிய உண்மையினைக் கொண்டு வாதித்து இவ் வுயிரைக் காத்தருளினால் தமக்கு எழுமைக்கும் நன்மை யுண்டாகும். இது ஒன்றையே தங்களை வருந்திக் கேட்டுக்கொள்கின்றோம்.

**குற்றவாளியின் நியாயவாதி** — ஐயா, இதெல்லாம் வீண் பேச்சு. வீண் எண்ணம். நியாயஸ்தலத்தில் சற்று மாற்றித்தான் கூறவேண்டும். இல்லாததைச் சொல்லவேண்டாம். இருப்பதைச் சிறிது மாற்றிச் சொல்லவேண்டும். அதை விட்டுக் கறந்தபால் கறந்தபடியே சொன்னால் காரியமில்லை. உள்ளதைச் சொன்னேன், பிறகு உமதிஷ்டம்.

(விசுவாமித்திரர் விரைந்து வருகின்றார். அனைவரும் அவரைப் பார்க்கின்றனர்.)

**விசுவாமித்திரர்** — (அரிச்சந்திரனை நோக்கி) அரிச்சந்திர! என்ன இது! என்ன இது! என்ன இது! கத்தியும் கையுமாய் நிற்கின்றாய்! உன் மனைவியும் தலை வணங்கிக் கழுத்தைக் கொடுத்து நிற்கின்றாள். என்ன இது! அநியாயம், மகா கற்புடையவள் உன் மனைவி. அவள்மீதும் கோபிக்கலாமோ? இது அறிவுள்ள ஆடவர்க்கு அழகாமோ?

**அரிச்சந்திரன்** — சுவாமீ, நமஸ்கரிக்கின்றேன். இவள்மீது எனக்கோர் வருத்தமும் இல்லை. இவள் இந் நகரத்தின் ராஜகுமாரனைக் களவாடிக் கொண்டுபோய் கொலை புரிந்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டாள். சாட்சிகளின் சொல்லால் மத்தியஸ்தர்கள் இவளைக் குற்றவாளியே என்று தீர்மானிக்க, நியாயாதிபதியவர்கள் அப்படியே இவளுக்கு மரண தண்டனை விதித்தார். அதனை நிறைவேற்றுமாறு இவ் விடத்தில் இருக்கின்றேன். எமது நற்காலப் பயனாகத் தேவரீரை இங்கு இப்பொழுது தரிசிக்கப் பெற்றோம், சுவாமீ!

**சந்திரமதி** — சுவாமீ! எனது உயிர் உடலினின்றும் பிரியுங்காலத்தில், எனது நல் வினைப்பயனால் தேவரீரைத் தரிசிக்குந் தவத்தைப் பெற்றேன். ஆதலின், எனது ஆன்மா நற்கதி யடையுமாறு ஆசீர்வதிக்க வேண்டுகிறேன்.

**விசுவாமித்திரர்** — அடடாடாடா! என்ன காலம்! என்ன கதி! என் மனமும் பதறுகின்றதே! கற்பரசியாகிய உனக்கும் இந்தக் கதி வரலாமோ! ஆ, ஆ, நம்மைத் தரிசித்தபிறகும் இந்த ஆன்மா ஊன் உடலினின்றும் பிரியுமோ—பிரியாது, பிரியாது. இருக்கட்டும். அம்மணீ! நீ அவ் விதக் குற்றத்தைப் புரிந்ததுண்டோ? உண்மையை ஒளியாமற் சொல். நாம் தக்கது புரிகின்றோம். நீ உண்மையைச் சொல்.

**சந்திரமதி** — சுவாமீ! யான் ஒரு பாவமும் அறியேன்.

**விசுவாமித்திரர்** — இன்றேல், இப் பெரும்பழி உன்மீது வரக் காரணம் யாது?

**சந்திரமதி** — சுவாமீ! நேற்று என் மைந்தன் காட்டில் அரவு கடித்து இறந்துவிட்டானும். அவனைத் தகனஞ் செய்ய இந்தச் சுடலைக்குக் கொண்டுவந்தேன். தகனஞ் செய்யக் காற்பணமும் முழந்துண்டும் கொடுக்கவேண்டும் என்பதை இங்கு உணர்ந்து, அவற்றைப் பெற்றுக்கொண்டு வர யான் அடிமைப்பட்டுள்ள ஐயரிடம் சென்றேன். செல்லும் வழியில், ஒரு சிறுவன் இறந்து கிடப்பதைக் கண்டேன். அது எனது புத்திரன் உடலேபோல் இருந்ததனால் மயங்கி அதை எடுத்து கையில் வைத்துக்கொண்டு புலம்பினேன். அப்போது ஊர்க் காவலர் வந்து என்னைப் பிடித்துக்கொண்டனர். பிறகு, நியாயஸ்தலத்திற்குக் கொண்டுபோய் விசாரித்து, சாட்சியங்களால் கொன்றவள் யானே என்று தீர்மானித்து, மரண தண்டனைக்கு உள்ளாக்கினார்கள். இவ்வளவே நடந்த வுண்மை, சுவாமீ!

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, அப்படியா! அப்படியா! என்ன மாயை! கையும் மெய்யுமாய்க் காணவே, கொன்றவள் நீ எனக் கருதி-விட்டனர். ஒருவாறு அவர்கள்மீதும் குற்றமில்லை.

**பாஸ்கரன்** — என்ன சுவாமீ, நீங்களும் அப்படிச் சொல்கின்றீர்கள். ஊர்க்காவலர் பொய்யான சாட்சிகளைக் கொண்டு, அடிமுதல் பொய்களையே கோத்து ரூபித்து விட்டார்கள். பாவம் இந்-தம்மாள் ஒன்றும் அறியாள்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! இவர்கள் யார்?

**அரிச்சந்திரன்** — அவர்கள் நியாயவாதிகளாம், சுவாமீ!

**விசுவாமித்திரர்** — ஐயா! நீங்கள் நியாயவாதிகளா? எதிர் பக்கத்து வாதிகளோ?

**குற்றவாளியின் நியாயவாதி** — அல்ல சுவாமி! குற்றவாளியின் பக்-கத்தில் நியாயவாதி.

**விசுவாமித்திரர்** — ஐயா! நீரும் இருந்தா இப்படிச் செய்துவிட்டீர்! ஐயோ பெண் பாவ மாச்சுதே! சற்றுக் கவனித் திருக்-கப்படாதா?

**குற்றவாளியின் நியாயவாதி** — சுவாமீ! நாம் என்ன செய்யலாம்! தலையையும் உடைத்துக்கொண் டாயிற்று. சாட்சிக ளெல்-லாம் தாறுமாறு யிருந்தால், வாதித்துப் பயனென்ன. இதோ பாரும், சொந்த புருஷர், சுக துக்கங்களில் கைவிடேனென்று வாக்குத்தத்தஞ் செய்தவர். இவரே கண்டதைச் சொல்ல-மாட்டேன் என்கின்றாரே. அவர்மட்டும் உடன்பட்டால் ஒரு க்ஷணத்தில் இந்தத் தீர்ப்பை மாற்றிவைக்கலாம். தடையே யில்லை.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ! அவ்வளவிற்கும் வழியிருக்கிறதா, ஆனால் சரி. யாம் இதற்குள் ஏதேதோ செய்ய எண்ணி-விட்டோம். பரகாயப் பிரவேசம் முதலிய சித்துகளால் இவ் வுயிரைக் காப்பாற்றக் கருதினோம். அவையெல்லாம் அசாத்தியம்; உடனே ஆவனவல்ல. இருக்கட்டும், நீர் சொல்வது என்ன? அரிச்சந்திரன் சொல்லமாட்டேன் என்-பது என்ன? சற்று விவரமாய்ச் சொல்லும் பார்ப்போம்.

**குற்றவாளியின் நியாயவாதி** — இப்போது மற்றவைகளைக் கவனிப்-பதில் பயனில்லை. ஒரே விஷயத்தில் இத் தீர்ப்பு மாறிவிடும். முதலாவது கொலை செய்யப்பட்ட குழந்தை நேற்று மாலை காணமற் போனதாக வாக்கு மூலத்தினால் வெளியாகிறது. அக்காலத்தில் இந்தம்மாள் இந்த மயானத்தில் இருந்ததாக இதோ நிற்பவரால் தெரியவருகிறது. இவருக்கும் அது

தெரிந்திருக்கவேண்டும். எந்தக் காரணத்தினாலோ இவர் தனக்குத் தெரியாதென்று மறுக்கிறார். இவர் மாத்திரம் சொல்லிவிட்டால் குற்றமே ஒன்றுமில்லாமற் போய்விடும். இதுவே வழி.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! என்ன இது! உயிர்க்குயிரான உன் மனைவியினிடத்து இவ்வாறு வெறுப்புக் கொண்டனை? கண்டதை யுரைப்பதற் கென்ன?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் இவளை இரவு பதினைந்து நாழிகைக்குமேல் இங்குக் கண்டேன். அதற்கு முன் கண்டதில்லை. மாலையே கண்டதாகக் கூறுவது எவ்வாறு?

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! நீ கூறுவதில் உண்மை யுள்ளதாகப் புலப்படவில்லை. ஒரு பெண்பால் அர்த்தராத்திரியில் எவ்வாறு சுடலைக்கு வருவாள். முன்னதாகத்தான் வந்திருத்தல் வேண்டும். அதனை உரைப்பதற்கு ஐயமென்ன. மற்றொருவனும் கண்டதாக உரைக்கின்றானே, உனக்கென்ன?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அவர் ஒருகால் முன்பே கண்டிருக்கலாம். யான் கண்டது அர்த்தராத்திரியின் மேல்தான். அதனை மாற்றி யுரைப்பது எங்ஙனம்?

**விசுவாமித்திரர்**— அரிச்சந்திர! உனக்கு அணுவளவும் ஜீவகாருண்யம் இருப்பதாகக் காணவில்லை. ஓர் உயிர் வீணாக அழிவதை யுணர்ந்தும், வன்னெஞ்சம் கொள்வது மானிடர்க்கு அடுக்குமா! ஆ, ஆ, எவ்வளவு கன்மனம் உனக்கு! இருக்கட்டும் இதிலென்ன பொய்யுமில்லை புரட்டுமில்லை. நீ கண்டது அர்த்தராத்திரி யாயினும் என்ன, சற்றுமுன் கண்டதாகக் கூறுவதில் குற்றமில்லை. கண்டது உண்மை. சற்றும் பின்னிடாமற் சொல். ஐயோ பாபம்! மனைவியின் பொருட்டும் இரங்காத மனம் மற்றெதற்கு இரங்கும்! இல்லறத்தி விருந்தும் இவ்வளவு வன்னெஞ்சமா? மற்றும் உன் மனைவியின் குணங்களை நீ நன்கறிவை. அதனால் அம்மங்கையின் உயிரைக் காக்கும்படி நீ இவ்வளவும் செய்யத் துணியாவிட்டால், நீ இவ் வுலகத்தில் பெரும் பழிக்கு ஆளாவை. நிற்க, எதற்கும் நாம் இருக்கின்றோம். எம்முடைய தவ வலிமையை யுணர்ந்த நீ எதற்குப் பின்னிடுவது. வேண்டாம், உடனே அந்த நியாயவாதியார் கூறும் விஷயங்களுக்கு உடன்பட்டு ஏற்றவற்றை இப்போதே செய்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இவ் வுலக வாழ்க்கையிற் சிக்குண்டு, நன்னெறியி னீங்கித் தீநெறியில் ஒழுகும் பேதையர் பிறரைப் பிழைத்து நடக்குமாறு போதிப்பது ஒருவாறு கூடும்.

ஓடும் பொன்னும் ஒப்பக்காணும் மனநிலையுடைய தேவரீர் போன்ற முனிபுங்கவர்கள் இவ்வாறு கற்பித்தல் எவ்வாறு ஏற்கும். ஜீவகாருண்யம் என்பது, முதலில், தன் உயிர் நற்கதியை யடையுமாறு செய்தலேயாகும். அவ்வாறு செய்வதற்கு ஒருவன் தன் நன்னிலையினின்றும் சிறிதும் பிழைத்து நடத்தல் கூடாதாம். மனைவியாயினும், மக்களாயினும் என்? இவர்கள் உடலுக்குற்ற உறவினரே யன்றி, உயிருக்குற்ற உறவினராகார் என்பது எவரும் அறிவான்றே.

கலித்துறை

நல்லோ ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு நிலையுள தோஅக மும்பொருளும்,
இல்லாளும் சுற்றமும் மைந்தரும் வாழ்வும் எழிலுடம்பும்
எல்லாம் வெளிமயக்கே யிறைவா கச்சி ஏகம்பனே.

இல்லாளும் மைந்தரும் சுற்றமும் வாழ்வும் எழிலுடம்பும் ஆகிய இவை யெல்லாம் வெளி மயக்கே யன்றோ. இவற்றின் உண்மையை யுணர்ந்த தேவரீரும் இவ்வாறு உரைக்கும்படி கற்பித்தல் நன்றோ. கண்ட அளவிற் கூறுவதல்லது கடுகளவும் மாற்றி யுரைத்தல், மாண்பன்றே. மனைவியின் பொருட்டு ஒன்றும், மற்றையோர் பொருட்டு ஒன்றும் உரைப்பது பேதையர் செய்கை யாகும். எவ் வுடலினும் இம் மானிட உடலே மாண்புடையது. இதனை அரிதிற் பெற்றும், நல்வழியில் ஒழுகி, நன்மை செய்து, இன்ப முறாமல், தீய வழியில் ஒழுகி, தீமையே செய்து, துன்புறுவதினும் பேதமை வேறு யாது. இவ் வுயிர்க்கு உற்ற துணையாயிருப்பது உண்மை யொன்றே. அவ் வுண்மையே இம்மை மறுமைப் பயன்களைத் தரவல்லது. ஆதலின், கணந்தோறும் நிலையாமையாகிய பொய்ம்மையே தன் வடிவமாகக் கொண்டுள்ள இவ் வுடலை ஒரு பொருளாக வெண்ணி, எக்காலத்தும் நிலையாயுள்ள உண்மையை விடுவது செய்யோம். உயிரினும் உண்மையே சிறைப்புடைய தாதலின், அதனால் வருவது, நோய்மையாயினும் அதனைக் கைசோரவிடக் கருதோம். மற்றும் உண்மையே உறுதிப்பொருளென உளங்கொண்டு சொல்மாறுமல் பதியை யிழந்தும், நிதியை யிழந்தும், பலர்க்கும் அடிமைப்பட்டும், முடிவில் பாலனையும் இழந்தோம். இனி எமக்கு உள்ளதாக நினைக்கும் நற்கதி இல்லாதொழியினும், இக் கட்டுரையை இழத்தல் செய்யோம். தேவரீர், அடியேனையொத்த பேதையர் பிழைத்து நடக்கக் கருதக் காணின், தடுத்து நன்னெறியைக் கைப்பற்றி யொழுகுமாறு உபதேசிப்பதை விட்டு, மற்றையோர்போல் தீவினையில்

ஒழுகுமாறு ஊக்குவது தமது நிலைக்கு எவ்வாறு ஏற்கும். இனி தாங்கள் சற்று அகன்று நிற்கப் பிரார்த்திக்கின்றேன். என் எஜமானர் எனக்கிட்ட கட்டளையை நிறைவேற்ற வேண்டும்.

**விசுவாமித்திரர்** — ஜீவ காருண்யத்தைக் கருதியேனும் சிரச்சேதம் செய்யாது சற்றுப்பொறுப்பாய்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! தேவரீர் கூறியதில் ஜீவ காருண்யமும் இன்று, நன்மையும் இன்று. பொய்ம்மைக்கு ஆளாயினபின் ஜீவ காருண்யம் ஏது! நன்மை யேது! யாவும் நாசமே யன்றோ. தேவரீர் மகத்தான ராஜ்ய பாரத்தையும், அதனால் வரும் நன்மைகளையும் வெறுத்துவிட்டு, காட்டில் வசித்து, கனலி-லிருந்து, காய்கனி யருந்தி, யருந்தவம் புரிந்தும், ஒரு கன்னி-யின் பொருட்டுக் கட்டுரையை யிழக்குமாறு கற்பிப்பது என்னோ அறியேன். உண்மையில்லாரே உயர்கதி யில்லார். உண்மை யில்லாதார் ஒன்றும் இல்லாதார் ஆவர். உண்மை-யோரே உயர்குடிப் பிறந்தோர், உண்மையோரே உத்தமப் பிற-வியர். சத்தியமே தவம், சத்தியமே சகல தேவாலய தரிச-னம். சத்தியமே ஸ்தலயாத்திரை. சத்தியமே சகல தீர்த்த யாத்திரை. ஆகலின் சத்திய மொன்றே தன்னை யுணர்த்தித் தலைவனைக் காட்டிச் சாயுச்சியத்தில் அமர்த்த வல்லது. அதனால் எத் தகையோரும் அதனைக் கைப்பற்றி யொழுகலே சிறப்பாகும்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! அவசரப்பட்டுக் கட்டளையை நிறைவேற்றி என்னைப் பழிக்கும் பாவத்திற்கும் பாத்திர-னாக்கி விடாதே. சற்றுப் பொறுப்பாய்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் எஜமானர் இட்ட கட்டளையை நிறைவேற்றுவதனால் தேவரீருக்குப் பழி பாவங்கள் எவ்-வாறு நேரும். அடியேன் மறுத்துரைப்பதற்கு மன்னிக்க வேண்டுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! உனக்கு இதுவரையில் நேர்ந்த இடையூறுகள் அனைத்தும் என்னுடைய சூழ்ச்சியால் நேர்ந்த-வைகளே யன்றி வேறன்று. இதற்குக் காரணம் ஒன்றுண்டு. அது என்னையெனின், ஒருநாள் இந்திரன் தன் அவைக் களத்திலுள்ள முனிவர்களை நோக்கி, "ஐயன்மீர், மண்ணுல-கின்கண் நன்னெறியினின்றும் சற்றும் விலகாத மன்னன் ஒருவன் உளனோ?" என்றனன் — அது கேட்ட அனைவரும் வாளா இருப்ப, வசிட்டர் மகபதியை நோக்கி, "ஐய! எம்-மிடத்து அன்புபூண்டொழுகும் அரிச்சந்திரன் நன்னெறிக்-

கோர் நாயகமாய் விளங்குகின்றனன்" என்றனர். அவ-ரிடத்து நெடுங்காலமாகக் கொண்டிருந்த பகைமை காரண-மாக, அவர் கூறியவைகளை அறவும் மறுத்து, "அவ் வரிச்-சந்திரன் தீக் குணங்கள் அனைத்தும் திரண்டு ஒருருவானவ-வன்; அதனை இன்னே வெளிப்படக் காட்டுவேன்" என்று மண்ணுலகை யடைந்தேன். இங்கு ஒருநாள் எனது மாண-வர், வசிட்டர் மாணவருடன் மாறுபட்டு வந்து என்பால் முறையிட்டனர். அதனையே ஒரு பற்றுக்கோடாகக் கொண்டு, எனது சூழ்ச்சிக்கு அவர்களை உடன்படச் செய்துகொண்டு உன்னைத் தீநெறிக்கண் செலுத்த வழி நாடினேன். அக் கருத்துக்கொண்டே, யாக மியற்றுவதற்கென்று பொன் பெற்று அதனை நின்பாலே வைத்து வந்தேன். அந்தோ ஒவ்வொன்றாக எத்தனை தீங்குகளை இழைத்துவிட்டேன். அரிச்சந்திர! காட்டகத்தி லுள்ள விலங்குகளை நாட்டகத்திற் புகுமாறு வேடுவர்களைக்கொண்டு ஓட்டுவித்தேன். பின்பு நீ வேட்டை காரணமாகக் காட்டை யடைந்த காலத்து, மாறு-வேடம் பூண்டு, உன்னை மயக்கவந்த பெண்கள் எம்மிடத்துத் தொண்டு பூண்டு ஒழுகும் தவப் பெண்களே. மற்றும் வீண்-வாதம் பேசி உனது அரசாட்சியைப் பெற்று, 'பின்னும் முன்னே வைத்த பொன்னைச் செலுத்துமாறு வருத்தினால் தருதற் கில்லாது சொல் தவறுவாய் என்று எண்ணினேன். அதனிலும் நீ மனஞ் சோர்வுபடாது அப் பொன்னைத் தருவ-தாகச் சம்மதித்துத் தவணை பெற்றுக்கொண்டு காசியம்பதியை நோக்கிச் செல்லும் மார்க்கத்தில், மாறுவேடம் பூண்டு, உன் தாயார் மரணாவஸ்தையிலிருந்து உன்னைக் காணப் பேராவாக் கொண்டிருப்பதாகக் கூறியவனும், பின்பு அவள் இறந்து-விட்டாள் என்று உரைத்தவனும், மற்றும் போர்வீரராகவும், சோசியனாகவும், தத்துவ சாஸ்திரியாகவும், அஷ்டாவதானி-யாகவும், வைத்தியனாகவும், வாதியாகவும் உருமாறி வந்து உங்களுக்குத் துன்பம் உண்டாக்கவல்ல விஷயங்களையும் புரட்டுகளையும் புகன்று சோதித்தவர்களும், உன் மனைவியை-யும் மைந்தனையும் விலைக்குக் கொண்ட காலகண்டனும், உன்னை விலைக்குக் கொண்ட வீரவாகும் எனது சீடர்களே யாவர். இவர்கள் அனைவரும் எனது துர்ப்போதனையைக் கைக்கொண்டு வந்து உங்களுக்குப் பலவகையினும் இன்னல் விளைத்துத் தீ நெறிக்கண் செலுத்த முயன்றனர். ஒன்றேனும் முடிந்ததில்லை. பின்னர் எனது சூழ்ச்சிக் கிசைந்து தேவ-தாசனுக்கு விஷமூட்டிப் பிணமேபோல் மூர்ச்சிக்கச் செய்-ததுமன்றி அவனைச் சந்திரமதி சுடலைக்குச் சுமந்து செல்லு-கையில், அப் பிள்ளையை உயிர்ப்பித்துத் தருவதாக முன்-

னின்றவனும் எல்லாம் வல்ல சித்தனென்று பெயர்கொண்டு வந்த எனது சீடனே. எவராலேனும் ஏதேனும் முடிந்ததா, இல்லை, இல்லை. அரிச்சந்திர! யான் கல்மனங்கொண்டு அதன்மேலுஞ் செய்த தீங்குகளை என்னென்று உரைப்பேன். காசி மன்னன் மைந்தனைக் களவாடிக் கொண்டுவந்து விஷமூட்டிப் பிணம்போற் கிடக்கச் செய்தவனும், பின்பு அக் கொலை செய்தவள் நின் மனைவியே எனத் தீர்மானிக்கத் தட்டானாகவும், பட்டு வியாபாரியாகவும், யாத்திரிகனாகவும், சந்நியாசியாகவும், நியாயவாதியின் குமாஸ்தாவாகவும் வேடங்கொண்டு அக் கொலை செய்ததை உண்மையுறக் கண்டவர்களேபோல் சாட்சியம் கூறினோர் அனைவரும் எனது சீடர்களே. அரிச்சந்திர! அந்தோ உனக்கிழைத்த தீவினைப் பெருக்கை என்னவென்று உரைப்பேன்! செய்யும் காலத்து ஒவ்வொன்றும் ஓர் அணுவாய் இருந்தது. அனைத்தையும் இன்று திரட்டிப் பார்க்கையில் பெரு மலைகளாகக் காண்கின்றன. தீவினை தினையளவாக இருந்து பனையளவாகப் பெருகும் என்னும் பழமொழிக்கு யானே இலக்கியமாக இருக்கின்றேன். 'எண்ணித் துணிக கருமம் துணிந்தபின், எண்ணுவ மென்ப திழுக்கு' என்பதை எண்ணிப் பாராமற் போயினேன். ஆஹா! "அடாது செய்வோன் படாது படுவன்" என்றபடி குன்றினை முட்டிய குருவியைப்போல வசிட்ட முனிவரோடு வாதிட்டு வீணே பழிக்குப் பாத்திரனானேன். என் செயல் எனக்குத் தீங்கினை விளைப்பதாயினும், உலகிற்கு இது ஒரு பெரு நன்மையை விளக்குந் திருஷ்டாந்தமாக விளங்கும். அரிச்சந்திர! இவ் வகைய துன்பங்களை உனக்கு இழைத்தேனென்று நீ வருந்தாதை. உனக்கு இத் துன்பங்களைச் செய்யும்படி யான் அடைந்த துன்பத்திற்கு ஓர் அளவும் உண்டோ! 'கெடுவான் கேடு நினைப்பான்' என்பதை அறியாயா. அந்தோ! இப் பழி இன்றோடு ஒழியுமா! ஒழியாது ஒழியாது. சூரிய சந்திரர் உள்ளளவும் இதுகாறும் அறியப்படாத பற்பல தேசங்களினும், பற்பல பாஷைகளினும், பற்பல வருணத்தாராலும், நாடகமாகவும் நடத்தப்படும். அக் காலத்தே, என் உருவினைக் கண்ட அனைவரும் என்னைப் பழித்துக் கூறுவரே. என்ன செய்வது! பிறர்க்குத் துன்பம் விளைப்பதனா லுண்டாகும் பயன் இதுவேயாகும். அரிச்சந்திர! இதுவரையில் உண்டான பழிக்கும் பாவத்திற்கும் அளவில்லை. இனி உன் மனைவியைச் சிரச்சேதம் செய்து ஸ்த்ரீ ஹத்தி தோஷத்தையும் என்மீது சுமத்தாதை, சற்றுப் பொறுப்பாய்.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! இவ் விளைவுகள் அனைத்தும் தேவரீரது சூழ்ச்சிகள் என்பதை யான் அறியேன்; இன்றே அறிந்தேன். தேவரீர் இதுகாறும் செய்துவந்த சூழ்ச்சிகளை யுன்னினால், இப்போது அடியேனைச் சற்றுப் பொறுக்கும்படி சொல்வதும் ஒரு சூழ்ச்சியேயாகும் என்று சந்தேகிப்பதற்கு இடமுண்டாகின்றது. அதனால், தேவரீர் அடியேனை மன்னிக்க வேண்டுகின்றேன்.

**விசுவாமித்திரர்** — அரிச்சந்திர! அவ்வாறு சந்தேகிக்க வேண்டா. உனக்குச் சந்தேக முண்டாயின் இவ் விஷயங்களை உனது குலகுருவாகிய வசிட்டரைக் கொண்டு வெளிப்படுத்துகின்றேன். அவர் வருந்தனையுமாவது சற்றுப் பொறுப்பாய்.

**விசுவாமித்திரர்** — சீஷ!

**வீரன்** — சுவாமீ!

**விசுவாமித்திரர்** — நீ ஓடோடியும் சென்று, வசிட்ட முனிவரைக் கண்டு, இங்கு இப்போது நிகழ்ந்துள்ள விஷயங்களை விவரமாய்க் கூறி, அவரை விரைந்து அழைத்து வருவாய். விரைந்து வாராவிடின் ஸ்த்ரீ ஹத்தி தோஷம் எனக்கு உண்டாகிவிடும் என்பதையும் உரைத்து விரைவில் வருவாய்.

**வீரன்** — சுவாமீ! இதோ ஒரு நொடிப்போதில் அழைத்து வருகின்றேன்.

(ஓடுகின்றான்.)

(காசியம்பதியின் ராஜ குமாரனது பிரேதத்தை அடக்கஞ் செய்ய மயானத்திற்குக் கொண்டு வருகின்றனர். அரசன், அரசி, மந்திரிகள், நியாயாதிபதிகள், நியாயவாதிகள், பிரபுக்கள், குடிகள் முதலாயினோர் பிரேதத்தைப் பின்தொடர்ந்து வருகின்றனர். பண்டாரங்கள் பாடுகின்றனர்.)

**பண்டாரங்கள்** — திருச்சிற்றம்பலம்.

பூவார் சென்னி மன்னனெம்
 புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வா
 யுருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா வென்னப் பட்டன்பா
 யாட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
 பொய்விட் டுடையான் கழல்புகவே.

தாமே தமக்குச் சுற்றமும்
 தாமே தமக்கு விதிவகையும்
யாமா ரெமதார் பாசமார்
 என்ன மாய மிவைபோகக்

கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்க னுள்வான் பொன்னடிக்கே.

திருச்சிற்றம்பலம்.

(சவத்தைச் சுடலையில் இறக்குகின்றனர். இரண்டு முனிவர்கள் வருவதை எல்லோரும் வியப்புடன் பார்க்கின்றனர்.)

(நாரதரும் வசிட்டரும் வருகின்றனர்.)

**அரிச்சந்திரன்** — குருநாத! அடியேன் நமஸ்கரிக்கின்றேன். சுவாமீ, முனிவர் நாயக! நமஸ்கரிக்கின்றேன்.

**வசிட்டர்** — சுகீபவ, சுகீபவ.

**நாரதர்** — சகல மங்களாநிபவந்து.

**அரிச்சந்திரன்** — பெண்மணீ! இதோ நமது குருநாதர் வந்திருக்கின்றார். அவரோடு முனிபுங்கவராகிய நாரத மகாமுனிவரும் வந்திருக்கின்றார். இப் பெரியார் நம்மிடத்து வைத்துள்ள கருணைக்கு ஓர் எல்லை யுண்டோ. பெண்மணீ! நீ முயன்ற தவமே தவம். உனது புண்யமே புண்யம். இன்றே உனது ஜன்மம் சாபல்யமாகிவிட்டது. உனது ஆன்மா உடலைவிட்டுப் பிரியும் இந்த இறுதிக்காலத்தில் இந்த முனிசிரேட்டர்களது அடிகளைத் தரிசிக்க என்ன தவஞ் செய்தனையோ அறியேன். அது நீ செய்த புண்யமோ. உன் பெற்றோர் இயற்றிய புண்யமோ. அன்றி உன் மூதாதையர் புரிந்த தவப்பயனோ அறியேன். இனிக் காலந் தாழ்த்தாது இந்தப் பெரியோர் அடிகளில் உன் முடிபட வணங்கியபின் கிழக்கு நோக்கித் தலை குனிந்திருப்பாயாக.

**சந்திரமதி** — சுவாமிகாள்! அடியாள் நமஸ்கரிக்கின்றேன். எனது ஆன்மா நற்கதி யடையுமாறு ஆசீர்வதிக்கவேண்டும்.

**நாரதர்** — தீர்க்க சுமங்கலியாயிருந்து சுகஜீவியாய் இருப்பாயாக.

**வசிட்டர்** — அரிச்சந்திர, ஒருகாரணம் பற்றி உனக்கு இவ் வித இடையூறுகள் நேர்ந்தன. இனி நீ யுன் மனைவி மக்களோடு நெடுங்காலம் நல்வாழ்வை நலக்க எய்துவாயாக.

**அரிச்சந்திரன்** — குருநாத! இவள் இந்த நகரின் அரச குமாரனைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு மரண தண்டனைக்குத் தீர்ப்புப் பிறந்திருக்கின்றது. அதனால், இவளை இப்போதே சிரச்சேதம் செய்யுமாறு, அடியேனை அடிமையாகக்கொண்ட வீரவாகு என்பவர் உத்தரவளித்திருக்கின்றார்.

இந்த இறுதிக்காலத்தில் தேவரீர் இம் மகரிஷியோடும் ஈண்டு வந்து தரிசனம் தந்தீர்கள். இதனினும் யாங்கள் பெறத்தக்க பேறு வேறு யாது!

**வசிட்டர்** — அன்ப, அரிச்சந்திர! சற்றுப் பொறு. இதன் வரலாறு வேறு. நமக்கும் விசுவாமித்திர முனிவருக்கும் உன்பொருட்டு முனிவர் சூழலில் ஒரு வாக்குவாதம் நடந்தது. அதனால் வந்த இடையூறுகள் இவை யாவும். இதன்பொருட்டு நீ மனங் கவல வேண்டா. சற்று அமைதிகொண்டு நடப்பவை யனைத்தும் கவனி, பிறகு விளங்கும்.

**அரிச்சந்திரன்** — குருநாதா! அவ்வாறே செய்யக் காத்திருக்கின்றேன். ஆயினும், என்னை அடிமைகொண்டு ஆள்பவரது கட்டளையைக் கடந்து நடப்பதாக முடியுமென அஞ்சுகின்றேன், மற்று ஒன்றுமில்லை.

**நாரதர்** — எல்லாம் இப்போது விளங்கிவிடும். சிறிது காலம் பொறுத்துக்கொள்வாய்.

**அரிச்சந்திரன்** — (சந்திரமதியை நோக்கி மெதுவாக) பெண்மணீ! விசுவாமித்திரர் விளம்பியபடியே இதில் உள்ளுறையாய் ஏதோ சில விஷயங்கள் இருப்பதாகத்தான் காண்கின்றது! இனி நடப்பதையும் கவனிப்போம்.

**சந்திரமதி** — பிராணநாதா! ஆம் அவ்வாறே காண்கின்றது. இல்லாவிட்டால், இத்தனை இடையூறுகள் ஒன்றன்பின் ஒன்றாய் அடுக்கியும் வருமோ!

**நாரதர்** — விசுவாமித்திரரே! இனி என்ன, இவ்வளவும் பார்த்தீர், முடிவு யாது? வெற்றி தோல்வி யாருடையது?

**விசுவாமித்திரர்** — அதைச் சொல்வானேன். தெரிந்தே யிருக்கின்றது.

**நாரதர்** — அப்படி யன்று. அது வெளிப்பட்டால்தான் நன்று.

**விசுவாமித்திரர்**—வெளிப்படவேண்டுமா? நல்லது. வெற்றி வசிட்ட முனிவருடையதே. தோல்வி எம்முடையதே.

**நாரதர்** — வசிட்டமுனிவரே! விசுவாமித்திரர் கூறியது உமது செவியில் நன்கு பட்டதோ?

**வசிட்டர்** — ஆம், பட்டது. வெற்றி எம்முடையது. தோல்வி யவருடையது எனக் கூறினார்.

**நாரதர்** — சரி, விசுவாமித்திரரே! என்ன காரியம் செய்தீர்? மற்றவர் போல் நீரும் மௌனமா யிராமல், வாயைத் திறந்து வாதித்-

தீர். பின்பு, அதை நிலைநிறுத்த வேண்டும். தக்கவாறு முயன்றிருந்தால் வெற்றி யடைந்தே யிருக்கலாம். இதிலும் அரசனைப் புரட்ட அரைக்ஷணம். என்னவோ—நீர் என்ன செய்தீரோ, போம். இப்போது பாரும் எவ்வளவு சிரமம். எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின் எண்ணுவ மென்ப திழுக்கு—

**விசுவாமித்திரர்**—நாரத முனிவரே! நீர் அவ்வாறு எண்ணுதீர். யான் செய்த முயற்சிகளும் தந்திரங்களும் ஒருபோதும் ஒருவரும் செய்திரார். அவற்றை இவ் வரிச்சந்திரனே யன்றி மற்று எவரும் சகியார். இக் குடும்பத்தவர் மூவரும் சத்தியத்தின் சந்ததியார்போற் காண்கின்றனர். யாம் செய்த இடையூறு-களை எண்ணின் எமக்கே மனம் பதறுகின்றது. அவற்றைச் சுருங்கக் கூறுகின்றேன் கேளும்.

**வசிட்டர்** — அவற்றை யேன் கேட்கவேண்டும், சஞ்சலந்தரும் சங்-கதிகளை.

**நாரதர்** — அப்படியன்று, நாம் அவற்றை நன்கு அறிதல் வேண்டும். இன்றேல், அரிச்சந்திரனது அருங்குணம் வெளியாகாது. அன்றி அவர்க்கும் உண்மையில் நடந்தவை இவையென்று புலப்படும். விசுவாமித்திரரே நீர் விவரமாய்க் கூறும்.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, இதோ கூறுகின்றேன் ஆதியோடந்தமாய்.

அகவல்

நேரதிங் கில்லா நிலையினை மருவிய
நாரத முனிவா நவில்வது கேண்மோ
அந்தரா னமரர்கோன் அவைக்களந் தன்னில்
மந்திர முனிவோர் வதிந்திடு போழ்தில்
இம்முனி வசிட்டர் இயம்பிய வெல்லாம்
அம்மவோ பொய்யென் றறைந்தற மறுத்துச்
சூளுற வெய்தியென் சூழலை யடைந்தபின்
நீளுற வென்பால் நிலைகொள் மாணவரும்
வசிட்ட முனிவர்தம் மாணவ ரோடு
விசிட்ட ஞானத்தில் விவாதங் கொண்டு
மாறுபட் டென்பால் மருவிப் புகன்றனர்
வேறுபட் டதற்கிது மேவும் துணையென்
றுன்னியம் மாணவர்க் குவந்தன கூறிப்
பின்னியான் புரியும் பெருஞ் சூழ்ச்சிக்கெலாம்
உடனின் றுதவ ஊக்கிய பின்னர்
அடன்மிகு சீர்சால் அயோத்தியை யணுகி

இவ்வரிச் சந்திரன் இருக்கையை யடைதலும்
செவ்விதின் வணங்கிச் சிறப்புடன் வரித்து
ஐயஈண் டடைந்தமை யாதெனக் கேட்டலும்
செய்யவேள் விக்குத் திரவியம் வேண்டுமென்
றியம்பினென் அவனும் எவ்வள வென்றனன்
நயம்பெற நூறு லட்சம் நல்கிடின்
சாலு மென்றனென் தந்திட விரைந்தான்
மேலும் செய்ய விழைந்த சூழ்ச்சிகளைக்
கருதியப் பொருளையக் காவலன் பாலே
இருத்தியென் சாலையை எய்தினென் மகிழ்ந்தே
பின்னரம் மன்னனைப் பிழைக்கச் செய்திட
உன்னிய சூழ்ச்சியை யுரைத்திட வெண்ணில்
மனந்துணுக் குற்றே வருந்துகின் றதுவே
இனம்படக் கூறின் எண்ணுற வாமோ

ஆயினும் சிறிதிங் கறைகுவன் கேளீர்
வேயுறு வனத்துள் விளங்கிய விலங்கின்
தொகுதியை வேடரால் துரத்தச் செய்தே
மிருகமயோத் திக்கண் மேவிடப் புரிந்தே

அதனால்,

வேட்டைமேல் அரசன் மேவிடல் கேட்டுப்
பாட்டிசை வல்ல பாவையர் இருவரை
நாட்டிய மாதராய் நடிக்கச் செலுத்திக்
காட்டில் தனித்துழிக் கண்டு மயங்கி
மருவியே யவனை வருகென அனுப்பினென்
திருவியல் அவர்க்குச் செங்கோல் மன்னவன்
நல்லொழுக் கம்பல நவிலக் கேட்டுப்
புல்லெனு மனத்துடன் போதருங் காலை
மறைந்தங் கிருந்து வந்தவோர் பாங்கன்
குறைபல கூறிக் குழைய வடித்ததாய்
மாதர்கூ றினரதை மாற்றியே மன்னவன்
மீதுற வைத்து மிகுசினத் தோடே
சென்றனென் கண்ட செம்மல் வணங்கினன்
மன்ற அவன்சொலும் வார்த்தையைக் கொண்டே
அவன்தன் அரசை யளித்திடப் பெற்றேன்
தவந்தரு துறவும் தவிர்ந்தனென் அதனால்

அதனோ டன்றே அமையா தந்தோ
இதமிலா தியற்றிய இன்னலும் சிலவோ

அதன்பின்,

அன்புடன் அவர்தம் அணியா டைகளும்
கன்மனக் கொடியேன் கவர்ந்தபின் அளித்த
கல்லுடை யுடுத்துக் காட்டிற் கேகும்
எல்லையில் முன்பு இருத்திய பொருளை
நல்கென வந்தோ நலியக் கேட்டேன்
பல்குறு மேன்மை பரவிய பார்த்திபன்
சொல்நிலை யுன்னித் தொகுத்தவப் பொருளை
நல்குவ னென்றான் நாற்பது நாட்களில்

பின்னதைப் பெறஎன் பிரியநற் சீடன்
நன்னயம் வல்ல நட்சத்தி ரேசனைப்
போக்கினேன் அவன்யான் புகட்டிய வாறே
ஆக்கிய துயரெலாம் அறையவும் படுமோ
தானும் தையலும் தநயனும் கண்டோர்
ஊனும் கரைந்து உருகிடச் சென்றனர்
அதுகண் டுடனே அயோத்தியி லுள்ளோர்
எதுவும் அவர்க்கே ஈதலும் காண்டலும்
ஆகா தெனப்பறை யறைவித் தமையால்
கூகா வென்னக் கூவினர் மாந்தர்

அவர்களை யெல்லாம் அரசன் தேற்றித்
தவமியற் றிடலே சார்ந்த மனத்துடன்
காசியம் பதியைக் கண்டிட விழைந்து
நேசமாய் விடைகொடு நீங்கினன் வறிதே

அதன்பின்,

சத்திய வுருவாம் சத்திய கீர்த்தி
பத்தியோ டரசனைப் பார்த்திடப் பரிந்து
வேண்டினன் அவன்றன் விழுப்பொரு ளெல்லாம்
ஆண்டப கரித்தே யனுப்பினன் சென்றான்
அதன்பின் சீடரை அன்புடன் விளித்து
விதமுறச் செய்திட வேண்டிய வெல்லாம்

ஓதிய பின்னர் உருவெலாம் மாறிப்
போதிரென் றுடனே புகன்றனென் அதுபோல்
பரமா நந்தன் பரிந்துசென் றரசனை
மாமார் சோலையில் வதிந்திடக் கண்டு
தாயுயிர் நீங்குந் தருணத் துற்றனள்
சேயெனும் உரிமையால் தியங்கினு ளென்றான்
அதன்பின் சேதசன் அகன்ற கோமதியில்

இதம்பெறு தாயார் இறந்ததாய்ப் புகன்றனன்
வசிதரன் சாரங் கன்வை கானசன்
புசபலஞ் சாலும் போர்வீர ராக

சென்றுகன் னோசியின் செங்கோன் மன்னவன்
துன்றுதன் மனையொடு துஞ்சினன் என்றார்
சோணமா நதியில் சோசிய னாகிக்
காணவை ரதான் கண்டுஅவர் புதல்வன்
துறப்பன் உயிரெனச் சொல்லினன் யமுனையில்
மறப்பில் ஞான தித்தனை மருவிய
தகுவிவே கன்வெகு தத்துவம் பேசிப்
புகலும் பொய்யெனப் போதித் தனனே
வாரணா சியினில் மச்சான் என்போன்
பூரண வைத்திய வேடம் பூண்டே

புரட்டுகள் பலவும் புகன்றனன் அவற்றின்
மிரட்சியில் சற்றும் மேவிடா தானார்
மற்றுமோர் சீடன் வாதியாய்ச் சென்று
பொற்றநற் காசிப் புண்ணியத் தலத்தில்
அரிச்சந் திரனை யணுகி வேண்டும்பொன்
தரச்சம் மதித்ததில் சரிவுசற் றுண்டெனக்
கூறினன் அதனையும் குறையெனத் தம்மை
மாறியே னும்பொன் வழங்கிடத் துணிந்தனர்
காலகண் டன்னது கண்டங் குடனே
வேலையாள் வேண்டி மேவிக் கொண்டனன்

சந்திர மதியும் தநயனும் ஏங்கிச்
சிந்தை கலங்கிச் சென்றனர் அப்பால்
பெரும்பொருள் பெற்ற பின்னுமென் சீடன்
தரகெனக் கிலையோ சாற்றுவா யெனனப்
பின்னவ் வரசன் பிறர்க்கடி மைப்பட
உன்ன அவனை உற்றவென் சீடன்
வெட்டியா னாக வேடங் கொண்டே
இட்டமாய் விலைகொடுத் தேற்றனன் ஆளாய்
பந்த மகன்ற பாவையர் இருவரை
அந்தோ கால கண்டியே யாகவும்

வீரவா குவினை மேவுசெல் வியுமாய்
நேர வரும்மென நிகழ்த்தினென் என்னே
மற்றுமோர் சீடனை வகைபடச் செய்து
சொற்றமூ விகைகளின் சுழலெலாங் காட்டிக்
காட்டிற் சென்று காத்தங் கிருந்து

நாட்டமாய்ச் சமிதை நாடிடு தேவ
தாசனுக் கினிமை சாற்றிநல் விடத்தை
மோசமாய்ப் புகட்டென மொழிந்தனென் அவனும்
எல்லாம் வல்ல சித்தனென் றேகிக்
கல்லாம் மனத்துடன் கடுவிஷ மூட்டிச்
செத்ததோர் பிணமாச் செய்தனன் அந்தோ
வித்தகப் பிராமண வேடம் பூண்ட
கால கண்டனும் காலகண் டியுமே
வேலைவாங் குவதில் மேவக் காட்டிய
துயர்சோ தனைகளைச் சொல்லவுந் தகுமோ
அயர்வில் லாத அரிச்சந் திரனும்
தோட்டிக் கடிமையாய்ச் சுடலையில் செய்யக்
காட்டிய துயர்களைக் கழறவும் படுமோ

அதான்று,

தருப்பையும் சமிதையும் தந்திடச் சென்ற
விருப்புள மைந்தன் விண்ணுல கடைந்தமை
அறிந்தசந் திரமதி ஆற்று தோடி
முறிந்ததோர் மரமென மூர்ச்சையால் வீழ்ந்து
மைந்தனை யேந்தி வல்லிருள் தன்னில்
வந்திட எல்லாம் வல்லசித் தன்றான்
இறந்தவர்க் குயிரை யீந்திடு வேன்யான்
துறந்திடு வேதியர் சூழலை யென்றான்
சோம சுந்தரன் துணையா யிருந்து
ஆமெலாம் புகன்றும் ஆதரி யாளாய்
மைந்தனைக் கொண்டு மயானங் குறுகி
இந்தன மின்றி யிருந்திடுங் காலையில்
வீர னென்பான் மேவிவஞ் சகமாய்
தீரஞ் சொல்லியும் தேர்ந்திடா ளாகி
மன்னனைக் கண்டு மைந்தனுக் குற்ற
இன்னலை யியம்பி இருவரும் கலங்கிக்
காற்பணந் துண்டம் காலகண் டன்னிடம்
மேற்கொளச் செல்ல மேவிய வழியில்
பரமா நந்தன் பாங்குறு காசியின்
அரசன் புதல்வனை அருமையாக் கவர்ந்து
வந்தே விஷத்தை வாயினில் மயங்கத்
தந்தே கிடத்தித் தான்மறைந் தனனே

அக்கொலை செய்தாள் அவளே எனச்சொலத்
தொக்கமாய்ப் பலரைச் சூழ்ச்சியி னமைத்தேன்

அவரெலாம் தக்க அமயந் தன்னில்
நவநவ மான நற்பெயர் கொண்டு
கண்ணுறக் கண்ட காட்சியாய்ச் சாட்சி
எண்ணுறப் புகன்றே ஏற்றினர் குற்றம்
இன்னும் பலவாய் இயற்றிய தீங்கை
என்னென் றுரைப்பேன் என்னென் றுரைப்பேன்
உன்னிய காலையில் ஒவ்வொரு செயலும்
மன்னிய அணுவாய் மருவி இருந்தது

எல்லா வற்றையும் எண்ணிய காலையில்
கல்லாய் மலையாய்க் காணுமென் செய்வேன்
தீவினை யதுதான் தினைத்துணை யேனும்
பாவனை வயத்தால் பருவத மாகும்
என்றகட் டுரைக்கு யானே இலக்காய்
நின்றதை எண்ணி நெஞ்சயர் கின்றேன்
எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கிது வன்றே
குன்றினை முட்டிய குருவியைப் போலத்
துன்றிய வசிட்டத் தூயனை மறுத்துக்

கண்டதன் பயனிது கண்டேன் கண்டேன்
மண்டல மதனில் மாறாப் பெரும்பழி
கொண்டேன் இந்தக் கொற்றவன் பெயரை
விண்டோர் என்னை மிகஇகழ் வாரே
எந்நலம் புரியின் இப்பழி நீங்கும்
மன்னிய தவமெலாம் மாண்புடைத் தாமோ
எனக்கோர் நன்றில தெனினுமிவ் வுலகம்
தனக்கோர் நன்மை தருமென் செயலே.

**நாரதர்** — ஆ, ஆ, இத்தனை இடையூறுகளையும் இவர்களுக்கு இழைத்தீரோ! ஆ, ஆ, என்ன கொடுமை! என்ன கொடுமை! இவர்க ளித்தனை இடையூறுகளையும் சோதனைகளையும் பொறுத்தன ரன்றோ. இவர்கள் பொறுமைக்குப் பூமியும் இணையின்றே. வசிட்ட முனிவரே! கேட்டீரோ இவர் இழைத்த இன்ன லனைத்தையும்.

**வசிட்டர்** — ஆம், ஆம், கேட்டேன். என்ன செய்வது. மேன்மக்கள் தமக்கு இன்னல் வந்த காலத்தில், புடத்திலிட்ட பொன் மாற்றுயர்ந்து விளங்குவதேபோல், மனநிலைகொண்டு மாட்சி யடைவர். கீழ்மக்களோ செல்வம் வந்த காலத்திற் செருக்கியும், வறுமை வந்த காலத்தில் வாடியும் இருப்பர். இவர்கட்கு இறைவர் இன்னருள் பாலிப்பாராக.

**நாரதர்** — துன்பமெல்லாம் இன்பமே. எல்லாம் ஒரு நன்மைக்கே. அதிருக்கட்டும், விசுவாமித்திர முனிவரே! முதலில் கூறியபடி, அரிச்சந்திரனுக்கு அவனது நாட்டை யளிக்கவும், உமது தவத்திற் பாதி தத்தஞ் செய்யவும் ஏதேனும் தடையுண்டோ?

**விசுவாமித்திரர்** — தடை யொன்று மில்லை. இதோ இப்போதே செய்துவிடுகின்றேன்.

**நாரதர்** — அரிச்சந்திர!

**அரிச்சந்திரன்** — சுவாமீ!

**நாரதர்** — இனி, நீ உன் அரசைப் பெற்றுப் பழமைபோல் அரசுரிமை செய்து, இன்பமடையக் கடவாய். விசுவாமித்திர முனிவர் உங்களை இவ் வகைய இன்னலிற் புகுத்திப் பரீக்ஷித்தமைக்காகத் தாம் இதுவரையிற் செய்துள்ள அருந்தவத்திற் செம்பாதி தத்தஞ் செய்கின்றார். அதனையும் பெற்றுக்கொண்டு இம்மை மறுமைப் பயன்களை இனிதின் அடைவாயாக.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அடியேன் தேவரீரது ஆணையை மறுக்கின்றேன் என்று கோபிக்க வேண்டா. அடியேன் தொல்லுலகைக் காக்கும் தொண்டைமானாக விருந்து, சுடுகாடு காக்கும் தோட்டியானேன். இனி அரசுரிமையை, ஏற்பது தகுதி யன்று. அந்த நிலையினும் இந்த நிலையே உயர்வானது. ஆதலின், அடியேன் இவ்வாறே வாநப்பிரஸ்த நிலையை யடைந்து, நல்வாழ் வடைகின்றேன். முனிவர்க்கு நாட்டை யளித்ததும் இக் கருத்துப்பற்றியே. ஆதலின், அடியேனை மன்னித்தருளவேண்டும்.

**நாரதர்** — விசுவாமித்திரரே! என்ன சொல்லுகின்றீர் இதற்கு?

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, ஆ, அரிச்சந்திர! நன்றாய்ச் சொல்லினை. சுடலையா இது! உன்னைப் பரீக்ஷிக்குமாறு இதனைச் சுடலையாகச் செய்வித்தோம். அது இந் நகர மன்னவர்க்கும் தெரியாது.

(தேவதாசனும் விஸ்வநாதனும் விஷமயக்கந் தெளிந்து எழுந்து ஓடி, அவ னவன் தன் தன் தாயைத் தழுவி.)

**தேவதாசன்** — (எல்லாம் வல்ல சித்தனைக் காட்டி) அம்மா! இதோ இவர் என் காலில் முள்ளைப் பிடுங்குவதுபோல், ஏதோ மருந்தை வைத்து மண்ணில் விழும்படி செய்துவிட்டார்.

(சந்திரமதி மிக மகிழ்ச்சியுடன் மைந்தனை எடுத்து உச்சிமோந்து முத்தம் கொடுக்கிறாள்.)

**விஸ்வநாதன்** — (பரமானந்தனைக் காட்டி) ஆ, அம்மா! இதோ நிற்கிறாரே இவர்தான் என்னை அழைத்துக்கொண்டுபோய் கசப்பான தண்ணீர் குடிக்கச் செய்து தரையில் படுக்க வைத்து விட்டார்.

(காசி மன்னன் மனைவி மனமகிழ்ச்சியுடன் தன் மைந்தனை எடுத்து உச்சி மோந்து முத்தம் கொடுக்கிறாள்.)

**அரிச்சந்திரன்** — ஆ, பரமேசுவர! (பாடுகின்றான்.)

விருத்தம்

நாரணன்காண் நான்முகன்காண் நால்வே தன்காண்
ஞானப் பெருங்கடற்கோர் நாவா யன்ன
பூரணன்காண் புண்ணியன்காண் புராணன் தான்காண்
புரிசடைமேல் புனலேற்ற புனிதன் றான்காண்
சாரணன்காண் சந்திரன்காண் கதிரோன் றன்காண்
தன்மைக்கண் தானேகாண் தக்கோர்க் கெல்லாம்
காரணன்காண் காளத்தி காணப் பட்ட
கணநாதன் காணவனென் கண்ணு ளானே

பாருருவில் நீரெரிகால் விசும்பு மாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்துநின்ற
ஏருருவில் மூவருமே யென்ன நின்ற
இமையவர்தந் திருவுருவே றெண்ணும் போது
ஓருருவம் பொன்னுருவ மொன்று செந்தீ
ஒன்றுமா கடலுருவ மொத்து நின்ற
மூவுருவுங் கண்டபோ தொன்றுஞ் சோதி
முகிலுருவ மெம்மடிக ளுருவந் தானே.

உலகமுதற் பொருளையும்பர்க் குணர்வரிதாம் பொருளை
ஓதியவே தாகமத்தின் உச்சியினுட் பொருளைப்
பலகலையின் பொருண்முடிவின் முடிவான பொருளைப்
பற்றறப்பற் றியபெரியோர் பரவியவான் பொருளை
அலைதிவலை நுரைகடலி லுதித்தொடுங்கு மாபோல்
அகிலாண்ட முதித்தொடுங்கு மதன்மூலப் பொருளை
இலகியசற் குருவாகி யாளுகும் பொருளை
எங்குமாம் பரம்பொருளை யாமும் வணங்குதுமே.

(முனிவர்கள் முதலாயினோரும் தொழுகின்றனர்.)

**நாரதர்** — அரிச்சந்திர! அரசை ஏற்பதற்கு இன்னு மென்ன தடை?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! ஒருகாலத்து ஒருவர்க்குக் கொடுத்துவிட்ட பொருளை, மறுபடியும் பெற்றுக்கொள்வது எவ்வாறு கூடும்? இது தேவரீர் அறியாததன்றே!

**நாரதர்** — அரிச்சந்திர! இதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டுவது ஒன்று. அதாவது, இதுகாறும் நடந்தவை யனைத்தும்

உன்னைப் பரீக்ஷிக்குமாறு செய்யப்பட்டவை என்பது நன்கு வெளியாயிற்று. அன்றி, விசுவாமித்திர முனிவர் அரசு செலுத்தவேண்டும் என்னும் ஆர்வங்கொண்டு உன்னிடம் அந்த வரசைப் பெற்றவரும் அல்லர். மற்றும் நீ அவ் வரசை அவருக் காக்கியபோது உன்னிலும் மிகுதியாகப் பரிந்து பாதுகாத்து நடத்துவர் என்பது உனது கருத்து. அந்தக் கருத்துக்கு விரோதமாக, அவ் வயோத்தி நகரம் நல்லரசும், நல்லமைச்சு மின்றி நாசமடைகிறது என்பதனைப் பலராலும் கேள்விப்பட்டிருக்கலாம். ஆதலின், உனக்கு அரசுரிமையைத் தாங்க ஆர்வமில்லா தொழியினும், நகரமாந்தரது நன்மையை நாடியேனும் அப் பாரத்தை மேற்கொள்ளுதல் வேண்டும். என்ன சொல்கிறீர், வசிட்ட முனிவரே.

**வசிட்டர்** — ஆம், ஆம். அவ்வாறு செய்தலே தகுதியாகும். சில காலஞ் சென்றபின், இக் குமாரனுக்குப் பட்டஞ்சூட்டித் தன் மனைவியோடும் தான் வாநப்பிரஸ்த நிலையை யடையலாகும். (அரிச்சந்திரனை நோக்கி) அரிச்சந்திர! என்ன நின் கருத்து?

**அரிச்சந்திரன்** — சுவாமீ! முனிபுங்கவர்களாக விளங்கும் தேவரீர் அவ்வாறு கட்டளையிட்டால் அடியேன் கூறுவது யாது. தேவரீரது ஆஞ்ஞைப்படி நடக்கக் காத்திருக்கின்றேன்.

**நாரதர்** — சரி. விசுவாமித்திர முனிவரே! மும்மூர்த்தி சொரூபங்களுள்ள விடத்திலேயே உமது வாக்குத்தத்தப்படி தவத்திற் பாதி தத்தஞ் செய்யும்.

**விசுவாமித்திரர்** — ஆ, ஆ, அப்படியே அதற்கென்ன தடை. அரிச்சந்திர! அருகில் வருவாய். நீயே புனிதன், நீயே பரம ஞானி, நீயே ஐம்புலனடக்கிய அருந்தவன், உன்னையும், உன் மனைவியையும், மைந்தனையும் இன்னலுக் குள்ளாக்கினேமென்று வருந்தாதை. மங்கிக் கிடக்கும் மாணிக்க மணியை மாசற்று விளங்கச் சாணையிற் றீட்டுவதேபோல், அமைந்துகிடந்த உனது அருங் குணங்கள் அனைத்தும் உலக மடங்கலும் உணரும்பொருட்டே உங்களை வாட்டினேம். அதனால் எம்மை நீங்கள் வாழ்த்திக் கூறுவதல்லது தாழ்த்திக் கூறுதல் தகாது.

**அரிச்சந்திரன்** — சுவாமீ! அவ்வாறு ஒருபோதும் எண்ணவும் வேண்டாம், சொல்லவும் வேண்டாம். இவ்வளவும் பரீக்ஷித்துக் கண்டதாக வுரைத்தும், மற்றும் அவ் வகைய ஐயம் ஏன் தங்களுக்கு.

**விசுவாமித்திரர்** — இல்லை, இல்லை, அவ்வாறில்லை. உங்களுக்கு நன்மையும் புகழும் உலகறிய நாட்டியது நாமே யென்பதை வற்புறுத்த அவ்வாறு கூறினோம், வேறன்று. அது நிற்க, யாம் உங்களைப் பரீக்ஷிக்கும்பொருட்டுப் பலவகைகளில் இடையூறுக ளியற்றியும், நீங்கள் மனநிலைகொண்டு நன்னெறியினின்றும் சிறிதும் வழுவாம லிருந்ததனால், யாம் இதுகாறும் மனோ வாக்குக் காயங்களால் இயற்றியுள்ள நற்றவத்தில் செம்பாதியை உங்களுக்கு இம் மும்மூர்த்திகள் சாட்சியாகத் தத்தஞ் செய்கின்றோம். இது முக்காலுஞ் சத்தியம்.

(அரிச்சந்திரன் மகிழ்வுடன் தாழ்ந்து ஏற்றுக்கொள்கின்றான்.)

**நாரதர்** — வசிட்ட முனிவரே! கண்டீரோ சத்தியத்திற்கும் தவத்திற்கு முள்ள தாரதம்மியத்தை. நாம், இம்மைச் சுகங்களெல்லாம் பயனற்றவை யெனத் துறந்து, புனலி லிருந்தும், கனலி லிருந்தும், உடலினை வாட்டியும், உண்மை காணாது உழல்கின்றோம். இம் மன்னன் எல்லா இன்பங்களையும் நுகர்ந்தும் உண்மை யொன்றினையே உறுதியாகக்கொண்டு, உண்மைப்பொருளை இன்று உண்மையுறத் தரிசித்தனன். அவன்பொருட்டாய் யாமும் தரிசித்தோம். அன்றி, இவ் விசுவாமித்திர முனிவர் அரிதி னியற்றிய அருந்தவத்தினும் செம்பாதி பெற்றான். அவனைப்போலும் பேறு பெற்றார் யாவர்! அவனைச் சீடனாகக்கொண்ட உம்மிலும் உத்தமர் யாவர்! ஆ, ஆ, எல்லாமும் உண்மையிலே யடங்கும். இனி, அரிச்சந்திரனென்னும் பெயர் உண்மையை விளக்க நின்ற பெயர்களில் உயரிய பெயராகவும், சந்திரமதியின் பெயர் சத்தியம் தலைகாக்கும் என்னும் பழமொழியாகவும் இந் நிலவுலகில் என்றென்றும் வழங்குவனவாக.

அகவல்

கடல்புடை யுடுத்த காசினி மேவிய
அடல்மிகு மாந்தரீர் அறைகுவன் கேளீர்
கல்வியின் வலியைக் கருதிய நல்கும்
செல்வநல் வலியைத் தேகமார் வலியை
தவத்தின் வலியைச் சாருமற் றும்பல
நவமார் வலியை நலக்க எய்திடினும்
வீரியம் பேசி வீண்வாத மாடி
காரியம் பலவும் கருதா தியற்றி
அல்லலிற் பட்டே யழியா தென்றும்
நல்லவர் சொல்லும் நயமொழிக் கிணங்கி
எல்லையி லின்பம் எய்துவீர்
தொல்லை மறையின் தொகுப்பிது வாமே.

அரிச்சந்திரன் — ஒன்றாக்கும் பற்றுத எம்மை இவ் வுலகத்தவர் ஒரு பொருளாக என்றென்றும் எடுத்துரைக்க அருள் புரிந்த முனிபுங்கவர்களாகிய தங்களது அடிகளை யாங்கள் வணங்குவதல்லது மற்றென்ன செய்ய வல்லோம். (வணங்குகின்றனர்.) குருநாதா! எங்குல குருமணியே! எம்மை அடிமைகொண்ட அருள்மணியே! தேவரீரது அடிமைகளா யிருக்க யாங்கள் இயற்றிய தவமே தவம். அத் தவப்பயனை இன்றே ஈண்டடைந்தோம். எம்மை எந்நாளும் அடிமைகொண் டருளுமாறு வேண்டுகின்றேம்.

(வணங்குகின்றனர்.)

காசிராஜன் — அயோத்தி யரசே! ஏது குற்றமிருப்பினும் மன்னிக்க வேண்டும். யாங்கள் தெரியாமற் செய்த குற்றங்களை மனத்தில் வையாது, பழமைபோல் நட்புப் பாராட்ட வேண்டும். இதுவே எனது வேண்டுகோள். இறந்துபட்ட புத்திரன் உயிர்த்தெழுந்தான் என்னும் மகிழ்ச்சியும், இத் தகைய மகரிஷிகளைத் தரிசித்தோம் என்னும் ஆனந்தமும் என் மனத்துள் ஒருபுறந்துச் சிறந்து விளங்கினும், உண்மை யுணராது செய்துவிட்டதனு லுண்டாகிய குற்றம் மற்றொரு புறத்து வாட்டாமற் போகவில்லை. ஆதலின் மன்னிக்க வேண்டும்.

அரிச்சந்திரன் — அரசே! சற்று முன்பு இம் முனிவரர் கூறியவனைத்தும் கேட்டிருந்தீர் அன்றோ. அதனால் யாரை வெறுக்கக்கூடும், எவரை நோகக்கூடும். யாவும் ஒரு காரணம்பற்றி நிகழ்ந்திருக்கின்றன. இதனால் தமக்கு வருத்தமேன், வேண்டா. யாங்கள் உமக்கு மிகுதியும் நன்றி பாராட்டக் கடமைப்பட் டிருக்கின்றேம். தமது நாட்டின் எல்லையைச் சார்ந்த பிறகே எமக்குண்டாய நன்மைகள் யாவும், முனிவர்களைத் தீர்த்தமை ஒருவாறாயினும், மும்மூர்த்தி சொரூபங்களையும் இம் முனிபுங்கவர்களையும் தரிசிக்கும் பேறு பெற்றேம். இதனினும் ஒருவன் அடையற்பாலது யாது! இவ் வகைய நன்மைகளுக்கெல்லாம் தமது பதியே யன்றே பதிவிடமாயிற்று. ஆதலின் தாமும் எம்மோடு அயோத்திக்கு வருதல்வேண்டும்.

காசிராஜன் — ஆ, ஆ, அதற் கென்ன தடை, காத்திருக்கின்றேன்.

(யாவரும் அயோத்திக்குப் போகின்றனர்.)

## மூன்றாங் களம்



**இடம்:** அயோத்தியில் அரசிருக்கை மண்டபம்.

**காலம்:** பகல்.

**பாத்திரங்கள்:** வசிட்டர், விசுவாமித்திரர், நாரதர், அத்திரி, சூதர் முதலிய முனிவரர், அரிச்சந்திரன், சந்திரமதி, தேவதாசன், சத்தியகீர்த்தி, காசிமன்னன், சிற்றரசர்கள், பிரபுக்கள், வசிட்டரது மாணவர், விசுவாமித்திரரது மாணவர், சம்ஸ்தான வித்துவான்கள், மாகதா முதலியோர்.

**விசுவாமித்திரர்** — சீஷ! இவ் விளம்பரத்தை இந் நாட்டின் சிற்றரசர்கள், சேனாபதிகள், பிரபுக்கள், நகரமாந்தர்கள் முதலிய அனைவரும் அறிய வெளியிடுவாய்.

**சீஷன்** — சுவாமீ! அவ்வாறே செய்கின்றேன். (**விளம்பரத்தை வாசிக்கின்றான்.**) இந் நாட்டின் அரசாட்சியின் கீழ் அமைந்துள்ள சிற்றரசர்கள், சேனாபதிகள், பிரபுக்கள், நகரமாந்தர்கள் முதலிய அனைவர்க்கும் தெரிவிப்பது என்னையெனின்,— யாம் மகாராஜாவாக விளங்கும் மகத்தான செல்வ நிலையைக் கைவிட்டுத் துறவற நிலையை யடைந்தும், ஒரு காரணம்பற்றி இவ் வரசை அரிச்சந்திர மன்னனிடம் பெற்றோம். அதனால், அரிச்சந்திரன் முதலியோருடைய நிறைகுணங்க ளனைத்தும், புடத்திலிட்ட பொன்போலவும், சாணையிற் றீட்டிய மணிபோலவும் மிக விளக்கமடைந்தன என்பது நீங்கள் நன்கு உணர்வீர்கள். இது நிற்க, யாம் துறவறம் பூண்ட பின்னர், அரசாட்சி புரியும் முறைகளைக் கைவிட்டு மறந்தோமாதலால், இப்பொழுது சில தினங்களாக யாம் புரிந்த ஆட்சியில் குடிகளுக்கு இன்னல் பல நேர்ந்திருத்தலும் கூடும். இனி அரிச்சந்திர மன்னனுடைய செங்கோலின்கீழ் அவ் வின்னல்கள் அனைத்தும் நீங்கப்பெற்று நன்னல மனைத்தும் நலக்க எய்துவீர்களாக. நீவிர் அனைவோரும் இனிப் பழமையேபோல் அவ் வரிச்சந்திர மன்னவர்க்குக் கடமைகளைச் செலுத்தி உரிமைகளைப் பெற்று இன்பமடைவீர்களாக.

இங்ஙனம்,

**விசுவாமித்திர முனிவர்.**

(வசிட்டர் மங்கள வாத்தியங்கள் முழங்க **அரிச்சந்திரனுக்கு** முடி சூட்டுகின்றார்.)

**வசிட்டர்** — அரிச்சந்திர! நீ நின் மனைவி மக்களுடன் ஆயுராரோக்கிய திடகாத்திரம் பெற்று இன்புற்றுச் செங்கோல் செலுத்தி இனிது வாழ்வையாக.

விருத்தம்

நித்திய மான ஒன்றும் நிமலனுக் குருவாய் வீறும்
சத்திய நிலைய தொன்றே தன்னுயிர்க் குறுதி யென்று
பத்திசெய் மன்ன நீயுன் பத்தினி மக்க ளோடு
எத்திசை யோரும் போற்ற இனிதர சாள்க மன்னே.

மற்று முனிவரர் —

அகவல்

பண்ணிய தவமெலாம் பரக்கக் காணின்
உண்மை நிலைக்கிணை யுறுதென ஓர்ந்த
நல்லரிச் சந்திர நாயக நன்சீர்
தொல்லைமா ஞாலத் தோங்குக வென்றும்
மன்னே வாழி மதிதயன் பெற்ற
பொன்னே வாழி புத்திர வாழி
தன்னே ரில்லாச் சத்திய கீர்த்தி
இந்நிலந் தன்னில் என்றும் வாழியவே.

அரிச்சந்திரன் — மந்திரீ! இவ் விளம்பரத்தை நமது சிற்றரசர்கள், சேனாபதிகள், பிரபுக்கள், நகர மாந்தர்கள் முதலாயினோர் அறிய வெளியிடுவீராக.

சத்தியகீர்த்தி — அரசே! அவ்வாறே செய்கின்றேன். (சத்தியகீர்த்தி விளம்பரத்தை வாசிக்கின்றான்.) இதனால் நமது ஆட்சியின்கீழ் அமைந்துள்ள சிற்றரசர்கள், சேனாபதிகள், பிரபுக்கள், நகர மாந்தர்கள் முதலாயினோருக்குத் தெரிவிப்பது என்னையெனில், யாம் சில நாட்களுக்கு முன்பு விடுத்த விளம்பரத்தினால், யாம் அரசாட்சியை விசுவாமித்திர முனிவர்க்கு ஒப்புவித்த கருத்தும், இப்போது அம் முனிவர் விடுத்த விளம்பரத்தினால் அவர் இவ் வரசை அன்று ஏற்றுக்கொண்ட தன் கருத்தும், இப்போது எமக்குத் திரும்பவும் அதனை ஒப்புவித்த காரணமும் அனைவர்க்கும் நன்கு புலப்படும். யாம் இல்லாதகாலத்து அம் முனிவரது கட்டளைகளை ஏற்று, உள்நாட்டுக் கலகங்கள் ஒன்றும் நேராவண்ணம் அமைந்து நடந்ததை யுன்ன, நமக்கு மிக்க மனமகிழ்ச்சி யுண்டாகின்றது. அதனால் நமது நகர மாந்தருக்கு யாம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம். இனி பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் முதலாயினோர் அவரவர்களுக்குரிய ஆசார ஒழுக்கங்களில் சற்றும் வழுவாது ஒழுகி, இறைவனருளால் இன்ப மடைவார்களாக.

இங்ஙனம்,

**அ. தி. அரிச்சந்திரன்.**

**ஸம்ஸ்தான வித்வான் —**

கலித்துறை

பொய்யாத சீர்த்தியைச் சந்திர சூரியர் பொன்றும்வரை
மெய்யா லடைந்த வரிச்சந் திரமன்ன மேதினியில்
மையார் முகிலெனத் தந்துசெங் கோனிலை மன்னியென்றும்
வையார்வேற் கண்மனை மக்களொ டின்புற்று வாழியவே.

**மாகதர் —**

சந்த விருத்தம்

உண்மைநிலை கண்டதனில் உற்றநிலை மன்னன்
உலகமெங்கும் நன்னெறியில் உய்யவைக்கும் மன்னன்
வண்மையினுக் கோருருவாய் வாய்ந்தமதி மன்னன்
வானவரெல் லோருநிதம் வழுத்தவரும் மன்னன்
ஒண்மைபெருங் கீர்த்தியெங்கும் உலவவரும் மன்னன்
ஒன்றான பொருளதனை உணர்ந்தமகா மன்னன்
எண்ணுமனை மக்களுடன் இன்பமுறும் மன்னன்
எங்களரிச் சந்த்ரமன்னன் என்றென்றும் வாழியவே.



வசன பாகத்தின்

# அரும்பத விளக்க அகராதி.

---

## அ.

அகக்கரணம், உட்கரணம் (மனம், புத்தி, சித்தம், அகங்காரம்).
அகதி, திக்கற்றவன்.
அகப்பற்று, உட்பற்று.
அகப்பொருட்டுறை, (அகப்பொருள்+துறை) ஓர் இலக்கணம், அது உள்ளத்தில் நிகழ்வதான சிற்றின்பத்திற்குரிய ஏழு திணையைக் கூறும்.
அங்கம், அவயவம்.
அங்கை, உள்ளங்கை.
அசம்பாவிதம், பொருத்தமின்மை.
அச்சுறுத்தல், பயமுறுத்தல்.
அடகு நீர், இலையும் நீரும்.
அழுடக்கலம், சிரண்.
அடைந்திலீது, வந்திலது.
அடைமொழி, விசேடணம்.
அடையற்பாலது, வரற்பாலது.
அடைவு, முறை.
அணங்கு, பெண்.
அணி, ஆபரணம்.
அணிமா, மிகப் பெரிய பொருள் மிகச் சிறிய பொருளாக மாறும் சித்தி. அதாவது-ஆன்மாப்போல் அணுருபமாதல். அட்டசித்தியில் ஒன்று. அட்டசித்திகளாவன—அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்தும் என்பன. (இவற்றின் விவரங்களை இவ்வகராதியில் அவை வருந்தோறும் கண்டுகொள்க.)
அணுத்துவண, அணுவளவு.
அண்ணல், பெரியோன்.
அண்மை, சமீபம்.
அதிக்கிரமித்தல், அளவுகடத்தல்.
அதுகாறும், அதுவரைக்கும்.
அதோகதி, கீழானநிலை.
அத்தி, கொலை.
அநாதப் பிரேதம், திக்கற்ற பிணம்.
அநாதி, பழமை.
அநுபானம், உடன்சேர்த்து உண்ணும் [வஸ்து.
அநுமதி, சம்மதி.
அந்தோ, ஐயோ.
அபலைகள், பலமற்றவர்கள் (பெண்கள்).
அபிப்பிராயபேதம், கருத்து வேறுபாடு.
அபிஷேகம், திருமஞ்சனம்.
அபேதம், வேற்றுமையில்லாமை.
அமர், சண்டை.
அமிசம், கூறு.
அமைச்சர், மந்திரிகள்.
அமைப்பு, விதி.
அமையாமல், பொருந்தாமல்.
அரசவை, (அரசு+அவை) ராஜ சபை.
அரசிருக்கை, (அரசு+இருக்கை) கொலுவிருக்கை.
அரசுரிமை, (அரசு+உரிமை) ராஜ்யபா [ரம்.
அரவம், சத்தம்.
அரவம், பாம்பு.
அரவு, பாம்பு.
அரற்றி, கதறி.
அரியணை, (அரி+அணை) சிங்காதனம்.
அரிவையர், மாதர்.
அருங்கடன், அருமையான சடங்கு.
அருந்தல், உண்ணல்.
அருவமான, உருவில்லாத.
அர்த்த ராத்திரி, நடு ராத்திரி.
அலமருகின்றோம், சுழல்கின்றோம்.
அலை, கடல்.
அல்லல், துன்பம்.
அவகாசம், ஒழிவுக்காலம்.
அவதானம், ஞாபகம்.
அவலம், வீண்.
அவா, விருப்பம்.
அவைக்கண், சபையில்.
அவைக்களம், சபை.
அற நெறி, தரும மார்க்கம்.
அறம், தருமம்.
அறவும், முற்றும்.
அறிகுறி, அடையாளம்.
அறும், ஒழியும்.
அனுசரவண, அநுசரித்தல்.
அனைத்தும், எல்லாம்.

"அனைவர்க்கும் தெய்வம் இலைமுகப் பைம்பூண் இறை," எல்லார்க்கும் தெய்வமாயிருப்பவன் இலைபோன்ற முகத்தினை யுடைய பசுமையான ஆபரணத்தை யுடைய அரசன்.
அன்றார், பொருந்தாதவர் (பகைவர்).
அன்றோ, அல்லவோ.
அஷ்டாவதானம், எண்வகை ஞாபகம் ஒரேகாலத்தி லுடைமை (இது புலமைத்திறத்தைக் காட்டும்பொருட்டுச் செய்வது).

## ஆ.

ஆகாமியம், முன் பிறப்பில் செய்தகர்மத்தில் ஒன்று. (இதை இப்புத்தகத்தின் 86 ஆம் பக்கம் 20—வது வரியில் காண்க.)
ஆக்கம், செல்வம்.
ஆசி, ஆசீர்வாதம்.
ஆசிரியர், தேசிகர், குரு.
ஆடவர், ஆண்மக்கள்.
ஆடை, வஸ்திரம்.
ஆட்சி, ஆளுகை.
ஆட்பட்டு, அடிமைப்பட்டு.
ஆண்டு, அங்கே, வருஷம், அரசாட்சி செய்து.
ஆதனம், ஆசனம்.
ஆதாரம், இடம்.
ஆதியோர், முதலானோர்.
ஆயுராரோக்கியம், ஆயுளும் நோயின்மையும்.
ஆயுர்ஸ்தாநாதிபதி, ராசிச் சக்கிரத்தில் எட்டாமிடத்திற்கு அதிபதியாகிய சனி.
ஆயுஷ்காரகன், ஆயுளை விருத்திசெய்யும் சனி பகவான்.
ஆரியம், ஸம்ஸ்கிருதம்.
ஆர்வம், ஆசை.
ஆற்றல், வல்லமை.
ஆன்மலாபம், ஆன்மா அடையும் பயன்.
ஆன்மா, உயிர்.
ஆன்றோர், பெரியோர்.

## இ.

இகழ்ச்சி, நிந்தை.
இகழ்வது, நிந்திப்பது.
இங்கிதம், எண்ணக் குறிப்பு.
இசை, சங்கீதம்.
இடகலை, இடது நாசியி லோடும் சுவாசம்.
இடர்ப்படுவர், துன்பப்படுவர்.
இடையூறு, தடை.
இணை, ஒப்பு.
இதம், நன்மை.
இதயம், மனம்.
இதுகாறும், இதுவரைக்கும்.
இத்தி, ஒரு மரம்.
இந்தனம், விறகு.
இம்மியும், இம்மியளவும்.
இம்மை, இப்பிறப்பு.
இயங்கியற்பொருள், (இயங்கு+இயல்+பொருள்) அசையும் தன்மையுள்ள பொருள்.
இயம்பு, சொல்.
இயலாது, கூடாது.
இயலின், கூடுமாயின்.
இயல்பு, சுபாவம்.
இயற்கை, சுபாவம்.
இயற்பா, ஒரு நூல்.
இயற்றமிழ், (இயல்+தமிழ்) இலக்கணத் தமிழ்.
இயற்றுவர், செய்வர்.
இயைந்து, இணங்கி.
இரண்டறக் கலத்தல், ஒன்றாகக் கூடுதல்.
இரவி, சூரியன்.
இருதிறத்தினரும், இருபக்ஷத்தாரும்.
இருத்தி, இருக்கச்செய்து.
இலக்கு, குறி.
இல்பொருளுவமை, இல்லாத பொருளை உபமானமாகச் சொல்வது. "மலடி மகன்" என்றாற்போல.
இல்லம், வீடு.
இல்லறம், மனைவாழ்க்கைத் தருமம்.
இல்லாள், மனையாள்.
இல்லோர், இல்லாதவர்.
இவ்வளவினது, இவ்வளவுடையது
இழக்குமாறு, இழக்கும்படி.
இழிஞர், கீழ்மக்கள்.
இழித்து, கீழ்ப்படுத்தி.
இழைத்து, செய்து.
இள ஞாயிற்றி னிறம், இளஞ் சூரியனது ஒளி (இது சூரிய வமிசத்தார்க்குரிய வொளி).
இறுதிக் காலம், முடிவுக்காலம்.
இறைவர், அரசர்.
இறைவன், கடவுள்.
இன்புறும், (இன்பு+உறும்) சுகிக்கும்.
இன்மை, இல்லாமை.
இன் மொழி, இனிய சொல்.
இன்றுமாதலானும், இல்லையாமாதலானும்.
இன்று, இல்லை. இப்பொழுது, இந்த நாள்.
இன்னருள், இனிய அருள்.
இன்னல், துன்பம்.

இன்னிசை, இனிய இராகம்.
இன்னுயிர்க் காதலி, இனிய பிராண நாயகி.
இன்னே, இப்பொழுதே.

ஈசத்துவம், அட்டசித்தியி னொன்று—எல்லார்க்கும் தலைவனாதல்.
ஈண்டு, இவ்விடம்.
ஈதல், கொடுத்தல்.
ஈமக் கடன், } மயானத்திற் செய்யும்
ஈமச் சடங்கு, } சடங்கு.
ஈர்க்க, இழுக்க.
ஈறுக, முடிவாக.
ஈன சுரம், தாழ்வான குரல்.
ஈனர், இழிவான சாதியார் (சண்டாளர்).
ஈன்றோர், பெற்றோர் (தாய் தந்தையர்).

## உ.

உகிர்ச்சுற்று, நகத்தைச் சுற்றிவரும் நோய்.
உசாவுவது, வினவுவது.
உச்சம், உயர்வு
உடலம், உடம்பு.
உடற்கூறு, உடம்பின் பங்கு.
உடன்பாடு, சம்மதம்.
உடை, ஆடை.
உணக்கும், உலர்த்தும்.
உணர்வு, அறிவு.
உணவு, உண்பொருள்.
உதாரம், தாராளகுணம்.
உதிக்கலாம், பிறக்கலாம்.
உத்தேசித்தல், நினைத்தல்.
உயங்கி, வாடி.
உயர்வு, உயர்ச்சி.
உயிரினும், உயிரைக்காட்டிலும்.
உயிர்ப்பு, மூச்சு.
உய்க்க, செலுத்த.
உய்த்துணரும், ஆலோசித்தறியும்.
உய்யும்வண்ணம், பிழைக்கும்படி.
உரிமை, பாத்தியதை.
உருக்கள், வடிவுகள்.
உரை, சொல்.
உலகியல், (உலகு+இயல்) உலகநடை.
உலுத்தர், லோபிகள்.
உவப்பு, சந்தோஷம்.
உவமை, ஒப்பு.
உழன்று, சுழன்று.
உளம், மனம்.
உளகின்றனவோ, வருந்துகின்றனவோ.
உள்ளம், மனம்.
உள்ளவாறே, உள்ளபடியே.
உறக்கம், நித்திரை.
உறவினர், சுற்றத்தார்.
உறுதி, வன்மை.
உறுத்தினேன், உறுதிப்படுத்தினேன்.
உறு நிலை, பொருந்தும் நிலை.
உறுப்புகள், அவயவங்கள்.
உறுவது, பொருந்துவது.
உறைவிடம், வசிக்குமிடம்.
உற்ற, பொருந்திய.
உன்னி, நினைத்து.
உன்னுந்தோறும், நினைக்குந்தோறும்.

## ஊ.

ஊகித்தல், யோசித்தல்.
ஊக்குவது, முயல்வது.
ஊண், உணவு.
ஊர்வோன், ஏறிநடத்துவோன்.
ஊழலாக, பழுதாக.
ஊழ், முன்பிறப்பில் செய்த வினை.
ஊனம், பழுது.

## எ.

எங்ஙனம், எப்படி.
எஞ்சி, மிச்சமாய்.
எண்ணிறந்தன, அளவு கடந்தன.
எண்மர், எட்டுப்பேர்.
எதிருறுவது, எதிர்ப்படுவது.
எய்தினும், அடைந்தாலும்.
எய்தல், அம்பைச் செலுத்துதல்.
எரிபட்டு, எரிந்து.
எரியிட்டு, நெருப்பிட்டு.
எவ்வகைய, எத்தன்மையான.
எழ, எழுந்திருக்க.
எழில், அழகு.
எழுமையும், எழுபிறப்பினும்.
எழுமோ, எழுந்திருக்குமோ.
எழுவர், எழுபேர்.
எளிது, சுலபம்.
என்பு, எலும்பு.
என்னே, என்னவோ.
என்னோ, யாதோ.

## ஏ.

ஏகுவேன், போவேன்.
ஏங்கினையோ, இரங்கினையோ.
ஏவலால், ஏவுதலால் (தூண்டுதலால்).
ஏவும், தூண்டுகிற.
ஏளனம், இகழ்ச்சி.

ஏற்கத்தகாத, அங்கீகரிக்கத்தகாத.
ஏற்கும், அங்கீகரிக்கிற.
ஏற்ப, தகுதியாக.
ஏற்பது, இரப்பது (யாசிப்பது).
ஏற்றதல்ல, தகுந்ததல்ல.
ஏற்றதாகும், தக்கதாகும்.
ஏற்றமாக, அதிகமாக.
ஏற்ற மார்க்கம், தக்க வழி.
ஏற்றமில்லை, சிறப்பில்லை.
ஏற்றவற்றை, தக்கவற்றை.

ஐ.

ஐம்புலன், ஐந்து விஷயங்கள் (சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்).
ஐயப்பாடு, } சந்தேகித்தல்.
ஐயம், }
ஐயன்மீர், ஐயன்மாரே.
ஐயுறவு, சந்தேகித்தல்.

ஒ.

ஒடுங்கி, அடங்கி.
ஒண்ணாது, கூடாது.
ஒருங்கே, முழுதும்.
ஒருதலையாம், நிச்சயமாகும்.
ஒருபடித்தாய், ஒருதன்மையாய்.
ஒருபுடை, ஒருபக்ஷம்.
ஒருமிக்க, ஏகோதரமாய் (முழுதும்).
"ஒருவருக் கொரு செல்ல லுற்றா லது அருகுளோர்க்கும் அடைவது திண்ணம்," ஒருவர்க் கொரு துன்பமுண்டாயின், அது அவரருகிலுள்ளோர்க்கும் உண்டாவது நிச்சயம்.
ஒழிவை, நீங்குவை.
ஒழுகற்பால, நடக்கற்பால.
ஒழுகு, நட.
ஒழுக்கம், நடை.
ஒழுங்கு, செம்மை.
ஒளிவிருந்து, மறைந்திருந்து.
ஒறுத்தல், தண்டித்தல்.
ஒன்பதின்மர், ஒன்பதுபேர்.

க.

கடக்கல், } தாண்டல்.
கடத்தல், }
கடமை, கடப்பாடு.
கடிதின், விரைவாக.
கடுக, வேகமாக.
கடுக்க, உறைக்க.
கடுமையான, கொடுமையான.
கடைப்பிடித்து, உறுதியாகப்பற்றி.
கடையேன், கடைப்பட்டவன்.
கட்டணம், தக்ஷிணை.
கட்டம், கஷ்டம்.
கட்டுரை, உறுதிச்சொல்.
கணம், க்ஷணம்.
கணித்துவிடலாம், கணக்கிட்டுவிடலாம்.
கண்கூடாக, பிரத்தியக்ஷமாக.
கண்மணியன்ன, கண்மணிபோன்ற.
கந்தமூலாதிகள், கிழங்கு வேர் முதலியவைகள்.
கயவர், கீழ்மக்கள்.
கரிந்து, கருகி.
கரிமா, அட்டசித்தியி லொன்று. லேசாயிருந்தவன் பாரமுள்ளவனாகக் காணும் சித்தி.
கருணை, கிருபை.
கருதி, நினைத்து.
கருமம், தொழில்.
கரு, கர்ப்பம்.
கருவி, சாதனம்."
கலைகள், நூல்கள்.
கலைபயிலும், நூல்களைக் கற்கிற.
கவர்ந்தால், கிரகித்தால்.
கவலாது, துக்கியாமல்.
கவலை, துன்பம்.
கவற்சி, துன்பம்.
களவாடல், திருடுதல்.
களைந்து, கழற்றி.
கறங்கு, காற்றாடி.
கற்பரசி, கற்புக்கரசி.
கற்பித்தல், கற்கச்செய்தல்.
கனம், மேன்மை.
கனல், நெருப்பு.
கனிந்த, பழுத்த.
கன்மனம், கல்லையொத்த மனம்.
கன்றுதல், கோபித்தல் (வருந்தல்).

கா.

காதலி, நாயகி.
காமம், விருப்பம்.
காமுறுவது, இச்சிப்பது.
காயம், உடல்.
காருண்யம், கிருபை.
காலதண்டவராகம், (கால + தண்ட + வராகம்) காலனுடைய தண்டத்தை யொத்த பன்றி.
காலந்தாழ்த்து, காலதாமதமாய்.
கால்வரையறையின்றி, கால அளவு இல்லாமல்.
காலனூர், யமபுரம்.

காளிகட்டம், கல்கத்தா.
கானவர், வேடர்.

## கி.

கிரியை, செய்கை.
கிருகஸ்தம், இல்லறம்.

## கீ.

கீழோர், தாழ்ந்தவர்.

## கு.

குணகுணங்கள், (குண+அகுணங்கள்) நற்குணமும் தீக்குணமும்.
கும்மாளம், குதித்தல்.
குரோதம், வெறுப்பு.
குலமகள், குலப்பெண்.
குழவி, குழந்தை.
குழமி, கூடி.
குறிஞ்சிநிலம், மலைநிலம்.
குறுகி, கிட்டி.
குறைகாணுமாறில்லை, குறைகாணும் வழியில்லை.
குற்றேவல், சிறு தொண்டு.
குன்றுமுட்டிய, மலையைமுட்டின.

## கூ.

கூடஸ்தன், நிர்விகாரியான ஆன்மா.
கூட்டில், கூண்டில்.
கூறும், சொல்லும்.
கூற்று, சொல்.

## கே.

கேட்டிலுறுதி, கெட்டகாலத்தில் மன வுறுதி யுடையனாதல்.
கேவலம், அற்பம்.

## கை.

கைதி, சிறை செய்யப்பட்டவன்.

## கொ.

கொடிவழி, கொடிப்பாதை (ஒற்றை யடிப்பாதை).
கொழுக்கொம்பு, கொள்கொம்பு.
கொள்கை, கோட்பாடு.
கொற்றவன், அரசன்.

## கோ.

கோலாகலர், சம்பிரமக்காரர் (டம்பக் காரர்).

## ச.

சஞ்சிதம், ஈட்டப்பட்ட வினைகள்.
சட்டம், நியமம் (ஏற்பாடு).
சதா, எப்பொழுதும்.
சதுஷ்டயம், நான்கு.
சதுரன், சமர்த்தன்.
சத்தமத்தில், ஏழாமிடத்தில்.
சப்தமகேந்திரம், ஏழாமிடமாகிய விசேஷஸ்தானம். ராசிச்சக்கிரத்தில் 1—4—7-10-இடங்கள் கேந்திரஸ்தானம் எனப் படும்.
சமத்துவம், ஒப்பு.
சமயோசிதம், சமயத்துக்குத் தக்கபடி.
சமிக்ஷை, ஜீர்ணிப்பது.
சமிதை, ஓம விறகு.
சம்பவித்தல், நேரிடுதல்.
சம்பிரதி, தலைமைக்கணக்கன்.
சயனம், படுக்கை.
சரமதசை, அந்தியகாலம்.
சராசரம், (சர+அசரம்) நடப்பதும் நடவாததுமாகிய பொருள்கள்.
சரியை, நான்கு பாதங்களி லொன்று.
சவட்டினன், அடக்கினன்.
சவம், பிணம்.
சன்னாகம், ஆடம்பரம்.

## சா.

சாதக பாதகம், செய்வதற்கு எளிமை யானதும் அருமையானதும்.
சாதுரியம், சமர்த்து.
சாபல்யம், சலனம்.
சாம்பூநதம், உயர்ந்த பொன்.
சாயுச்சியம், கடவுளில் ஒன்றுபடுவதாகிய ஒரு பதவி.
சாரூப்பியம், கடவுளது உருவத்தைப் பெற்றிருப்பதாகிய ஒரு பதவி.
சார்பு, பக்ஷம்.
சால, மிகுதியாக.
சாலும், போதும்.
சாலோகம், கடவுளுடைய உலகத்தில் இருப்பதாகிய ஒரு பதவி.
சால்பு, நிறைவு.

## சி.

சிகிச்சை, வைத்தியம்.
சிசு, குழந்தை.
சித்தாந்தம், முடிபு.
சித்திகள், அட்டமா சித்திகள்.
சித்துக்கள், விநோதங்கள்.

சிரமம், வருத்தம்.
சிலப்பதிகாரம், ஒரு நூல்.
சிலேடை மொழி, இருபொருள்படும் சொல்.
சிவிகை, பல்லக்கு.
சிறார், சிறுவர்.
சிறை, காவல்.
சிறைக்கோட்டம், காவற்சாலை.
சிறையோசை, சிறகின்னொலி.
சின்னங்கள், அடையாளங்கள்.

சீ.

சீரியர், மேன்மக்கள்.
சீர்தூக்கி, ஆராய்ந்து.
சீற்றம், கோபம்.

சு.

சுகவீனர், நோயாளிகள்.
சுகிர்தம், மேன்மை.
சுகீபவ, சுகமுடையவனுகுக.
சுட்டி, காட்டி.
சுதந்தரம், சொந்தம்.
சுதன், பிள்ளை.
சுரம், பாலைநிலம்.
சுவடு, அடையாளம்.
சுவை, ருசி.

சூ.

சூத்திரப்பாவை, கயிற்றினல் ஆட்டப்படும் பிரதிமை.
சூழ, சுற்ற.
சூழல், இடம்.
சூழ்ச்சி, ஆராய்ச்சி.
சூனர், ஊன்விற்போர்.

செ.

செம்பாதி, சரிப்பாதி.
செம்மனச்செல்வர், ஞானியர்.
செய்திறம், செய்வகை.
செய்யுட்பாகுபாடு, செய்யுட் பகுப்பு.
செருக்கு, கருவம்.
செல்வர், தனவான்கள்.
செவ்வனே, செவ்வையாக.
செறிந்து, நெருங்கி.
சென்மாந்தரம், வேறுபிறப்பு.

சே.

சேகரித்தல், சம்பாதித்தல்.
சேதித்தல், அறுத்தல்.
சேய், பிள்ளை.

சை.

சைகை, ஜாடை.

சொ.

சொல்லளவில், சொல்மட்டில்.
சொற்பம், அற்பம்.
சொற்ருெடர், வாக்கியம்.

சோ.

சோகம், துக்கம்.
சோபானக்கிரமம், படிப்படியாய்.
சோம்பி, சோம்பலடைந்து.
சோர்வு, தளர்ச்சி.
சோனகர், துருக்கர்.

ட.

டமருகம், உடுக்கை.

த.

தக்கார், தகுந்தவர்.
தணிவாகும், தணியும்.
தத்துவம், உண்மை.
தத்ஸ்தானம், அந்த இடம்.
தநயன், மகன்.
தம்பொருளென்ப தம்மக்கள், தம்மக்களைத் தம்பொருளென்று சொல்லுவர்.
தயாபரர், கருணைமிக்கார்.
தரு, மரம்.
தருக்கு, செருக்கு.
தலைகாட்டாதொழிகிறது, மறைகின்றது.
தலையிடுதல், பிரவேசித்தல்.
தவனை, கெடு.
தவிர்த்து, ஒழித்து.
தளர்ச்சி, மெலிவு.
தற்குறிப்பேற்றம், ஓரலங்காரம். (தன் குறிப்பு = தான் எண்ணிய பொருளையே, ஏற்றம்=சிறப்பித்துச் சொல்லுதல். "இவனைப்போன்ற பலாட்டியன் திரிலோகத்திலும் இல்லை" என்றற்போல.
தனுகரணம், உடம்பும் அந்தக்கரணங்களும் (மனம், புத்தி, அகங்காரம், சித்தம்).
தன்வந்திரி, தேவ வைத்தியன்.

தா.

தாக்கும், மோதும்.
தாத்பரியம், கருத்து.
தாமதம், ஆலசியம்.
தாயைச் சேர்த்து, முதலைக் கூட்டி (முதல்-பொன்).
தாழ்த்தாது. தாமதிக்காமல்.
தாள்கள், கால்கள்.

**தி.**

திகைப்பு, திகைத்தல் (மயங்கல்).
திக்கு, கதி.
திண்ணம், நிச்சயம்.
திண்மை, உறுதி.
தியாஜ்ஜியம், விலக்கத்தக்கது.
திரண்ட, கூடின.
திரள், கூட்டம்.
திரு, செல்வம்.
திருவலகு, துடைப்பம்.
திருவுளச்செயல், (கடவுள்) மனத்தின் தொழில்.
திறமை, உறுதி.
திறை, கப்பம்
தினைத்துணையும், தினையளவும்.

**தீ.**

தீ நெறி, கெட்ட வழி.
தீயன், கெட்டவன்.
தீரற்பால, ஒழிதற்பால.
தீ வினை, பாவத் தொழில்.

**து.**

துச்சம், அற்பம்.
துணிபு, நிச்சயம்.
துயில்வது, தூங்குவது.
துறவறம், சந்நியாசம்.
துன்பமுறுவண்ணம், துக்க முண்டாகாதபடி.

**தூ.**

தூண்டிற்று, ஏவிற்று.
தூய்மை, சுத்தம்.
தூயோர், சுத்தர்.

**தெ.**

தெரிந்திலது, தெரியவில்லை.
தெற்றென, தெளிவாக.

**தே.**

தேவதாரு, ஒரு மரம்.
தேற்றுவார், தெளிவிப்பவர்.

**தொ.**

தொகுதி, கூட்டம்.
தொடக்கம், ஆரம்பம்.
தொண்டு, அடிமை.
தொண்டைமான், ஓரரசன்.
தொல்லுலகு, பழையவுலகம்.
தொன்றுதொட்டு, அநாதியாய்.

**தோ.**

தோற்றங்கள், பிறவிகள்.

**ந.**

நடவை, வழி.
நடைபெற, வழங்க.
நட்பு, சிநேகம்.
நண்ணினர், அடுத்தவர்.
நந்தம், நம்முடைய.
நரையும் திரையும், மயிர் வெளுப்பும், உடல் தளர்தலும்.
நலக்க, நன்றாக.
நல்குமோ, அருளுமோ.
நல்லமைச்சு, நல்ல மந்திரி.
நவிற்சி, சொல்லல்.
நள்ளிரவு, நடுராத்திரி.
நள்ளிருள், மிக்க இருள்.
நற் கதி, நல்ல பதவி.
நன்கு, நன்றாக.

**நா.**

நாடற்பாலது, ஆராயத்தக்கது.
நாடுவர், ஆராய்வார்.
நாட்டாண்மை, நாட்டை ஆளுகை.
நாணி, வெட்கி.

**நி.**

நிகர்ப்பவர், ஒப்பாவோர்.
நிகழும், நடக்கும்.
நிதி, செல்வம்.
நியமித்தது, ஏற்படுத்தினது.
நியாயவாதம், நியாயமான தர்க்கம்.
நிரந்தரம், எப்பொழுதும்.
நிரபராதி, குற்றமற்றவன்.
நிராயுதர், ஆயுதமில்லாதவர்.
நிரூபித்து, மெய்ப்படுத்தி.
நிர்ணயிக்க, நிச்சயிக்க.
நிர்வாகி, நிர்வகிக்கத்தக்கவன்.
நிறைகுணங்கள், நற்குணங்கள்.
நிற்றல், நிலைத்தல்.
நின், உனது.

**நீ.**

நீதி வழாது, நீதி தவறாமல்.
நீத்து, ஒழித்து.
நீவிர், நீங்கள்.

**நு.**

நுகர்ந்து, அநுபவித்து.
நுண்ணறிவு, நுட்பமான அறிவு.
நுவலயர், வலையர்.

**நெ.**

நெகிழாத, உருகாத.
நெடுங்கணக்கு, எழுத்துக்கள்.

## நே.

நேரவல்ல, நேரிடக்கூடிய.
நேரிதே, சரியானதே.
நேரிய, சரியான.
நேரும், நேரிடும்.

## நோ.

நோக்காது, பார்க்காமல்.
நோக்கும், பார்க்கிற.
நோய்மை, நோயுடைமை.

## ப.

பகர்ந்து, சொல்லி.
பகுதி, பிரிவு.
பகுத்தறிவு, பிரித்தறிதல்.
படிந்தோர், முழுகினவர்.
பட்சபாதம், ஒருபக்ஷம் சார்பு.
பட்சம், சார்பு.
பண்டே, முன்னமே.
பண்பு, குணம்.
பதங்கள், பதவிகள்.
பதி பசு பாசம், இறைவன், ஆன்மா, மறைப்பு.
பதிவிருந்து, ஒளிவிருந்து.
பத்தாவைக்கொண்டு, உளவைக்கொண்டு.
பந்து, சுற்றம்.
பயக்கும், கொடுக்கும்.
பயனின்று, பிரயோஜனமில்லாமல்.
பயின்று, பழகி.
பரகாயப்பிரவேசம், உயிர் ஓர் உடம்பிலிருந்து மற்றோருடம்பிற் பிரவேசித்தல்.
பரங்கள், அன்பர்கள்.
பரமஞானி, மேலோனுகிய ஞானவான்.
பரிசனர், பரிசாரகர்.
பரிசீலனம், பரீக்ஷை.
பரிதானம், லஞ்சம்.
பரிவுகூர்ந்து, இரக்கமிகுந்து.
பரோபகாரம், அந்நியருக்கு உபகாரம் பண்ணுதல்.
பலபட, பலவிதமாக.
பலபோகவிராகம், பயன்களை அனுபவிப்பதில் வெறுப்பு.
பலவுள, பலவாயுள்ளன.
பல்க, விரிவாக.
பல்லாயிரம், அநேகமாயிரம்.
பவசுகாதிபதி, சாதகனுக்கு சுகத்தை விளைவிப்பவனை சுக்கிரன்.
பழுதிசைத்தோம், கெடுதிசெய்தோம்.
பழுதை, செத்தை (வைக்கோற்புரி).
பறம்பர், தோல்வினைஞர்.
பறையோசை, தம்பட்டவொலி.
பற்றுத, பிடிக்காத.

## பா.

பாகுபாடு, பகுப்பு.
பாங்கன், தோழன்.
பாதகன், பாவி.
பாதசாரி, கால்நடை.
பாத்திரன், உரியவன்.
பாராட்டற்பாலன, கொண்டாடத்தக்கன.
பாராவாரம், சமுத்திரம்.
பாவனை, கருத்து.
பாவை, பிரதிமை.
பானுதிகள், குடிநீர் முதலியன.

## பி.

பிங்கலை, வலது நாசியிலோடும் சுவாசம்.
பிணி, வியாதி.
பிணைப்பட்டு, உத்தரவாதியாகி.
பிதற்றியன, பிதற்றப்பட்டன.
பிரஸ்தாபித்தது, வெளியிட்டது.
பிரமசரியம், நால்வகை ஆசிரமங்களில் ஒன்று. (36 ஆம் பக்கம், 17 ஆம் வரியிற் காண்க.)
பிரமாணவாக்கியம், விதிவாக்கியம்.
பிராகாம்யம், அட்டசித்திகளுள் ஒன்று. அது எல்லாவற்றிலும் நிறைவுள்ளவனுயிருக்கும் சித்து.
பிராப்தி, அட்டசித்திகளுள் ஒன்று. அது வேண்டுவனவற்றைப் பெறுதலாகும் சித்தி.
பிராரப்தம், அநுபவத்துக்குரிய வினை.
பிரேதம், பிணம்.
பிழைத்து, தப்பி.
பிழையாத, தப்பாத.
பிறவும், மற்றையனவும்.
பிறழ்ந்து, மாறி.
பிறிதொன்று, வேறொன்று.
பிற்றை, பின்.

## பு.

புகட்டல், ஊட்டல்.
புகல, சொல்ல.
புகலிடம், புகுமிடம் (அடைக்கலம்).
புகவிட்டால், புகுத்தினல்.
புகழுடம்பு, கீர்த்தியாகிய வுடம்பு.
புகுவித்தோம், நுழைவித்தோம்.

'புங்கவர்,' தேவர்.
புடை, பக்கம்.
புதுவதாக, நூதனமாக.
புத்தம் புதியது, மிகப் புதியது.
புந்தி, புத்தி.
புரவலர், அரசர்.
புரிய, செய்ய.
புரிவது, செய்வது.
புருடர், ஆண்மக்கள்.
புரை தீர்ந்த, குற்ற மற்ற.
புலப்படுகின்றது, காணப்படுகின்றது.
புலமை, கல்வியறிவு.
புலம், அறிவு.
புலர்ந்ததும், விடிந்ததும்.
புலவர், கல்வியறிவுள்ளோர்.
புலால், தசை.
புலையர், நீசர்.
புல்லறிவாளர், சிற்றறிவுடையோர்.
புல்லிய, அற்பமாகிய.
புல்லொழுக்கம், இழிந்தநடை.
புவன போகங்கள், உலக இன்பங்கள்.
புழுதி, துகள்.
புறக்கணிப்பது, வேறுபடுத்துவது.
புறத்தில், பக்கத்தில்.
புறம்போந்தனர், வெளிவந்தனர்.
புனிதன், பரிசுத்தன்.
புனைந்துவைத்த, அலங்கரித்துவைத்த.

## பூ.

பூடு, பூண்டு.
பூதபௌதிகம், பூதங்களும், அவற்றா லாக்கப்பட்ட பிரபஞ்சமும்.
பூதலம்புரப்பர், உலகத்தை யாள்வர்.
பூர்வம், பழமை.

## பெ.

பெரும, பெருமானே.

## பே.

பேதைமைத்து, அறியாமையுடையது.
பேரறம், பெரிய தருமம்.
பேறு, பயன்.

## பை.

பைந்தொடியார், பசும்பொன் வளையலை யணிந்தவர் (மாதர்).

## பொ.

பொக்கிஷம், களஞ்சியம்.
பொய்ப்படுக்கும், பொய்யாக்கும்.
பொய்ம்மை, பொய்சொல்லுதல்.
பொய்யுரை புன்மையில் புகுத்தும், பொய்ச்சொல் இழிவில் புகுவிக்கும்.
பொலம், பொன்.
பொருத, பொறுக்காத.
பொறுத்தது, தாங்கினது.
பொறை, பொறுமை, சுமை.

## போ.

போதம், அறிவு.
போதிய, போதுமான.
போந்து, வந்து.
போலியாகின்றது, பொய்யாகின்றது.

## ம.

மகத்தான, பெரிதான.
மகம், யாகம்.
மகரம், முதலை.
மகவான், இந்திரன்.
மகவு, பிள்ளை.
மகிமா, அட்டசித்தியி லொன்று. அது பெருமையுடையவனாயிருக்கும் சித்து.
மகிழ்வு, சந்தோஷம்.
மங்கள ஸ்நாநம், மங்கல முழுக்கு.
மங்களாநிபவந்து, மங்களமுண்டாகுக.
மங்கி, மழுங்கி.
மடந்தையர், மாதர்.
மடமை, } அறியாமை.
மடம், }
மடி, சோம்பல்.
மணிமுடிச்சிரத்தில், ரத்நகிரீடமணிந்த தலையில்.
மதம், அகங்காரம்.
மதி, அறிவு.
மரபு, சந்ததி.
மருகர், மருமக்கள்.
மலநோய், பிறவியாகிய நோய்.
மறுத்து, தடுத்து.
மறுமைப்பயன், மறுபிறப்பின் பயன்.
மறையவர், பிராமணர்.
மறைவிருந்தனன், ஒளித்திருந்தனன்.
மற்றையோர், பிறர்.
மனங்கவன்றால், மனம் வருந்ினால்.
மனநிலை, மனத்தினது நிலைமை.
மனவலிமை, மனவுறுதி.
மனனம், சிந்தித்தல்.
மனோராஜ்யம், வீண் எண்ணங்கள்.
மன்பதை, மக்கட்கூட்டம்.
மன்னுயிர், நிலைபெற்ற வுயிர்கள்.

மா.

மாகதர், பாணர் (பாடுவோர்).
மாசு, குற்றம்.
மாட்சி, பெருமை.
மாணவர், மாணாக்கர்.
மாண்பு, பெருமை.
மாதவர், பெரிய தவத்தோர்.
மாதவி, குருக்கத்தி.
மாதிரங்கள், திசைகள்.
மாதுர்ஸ்தானம், தாயகம்.
மாதுலர், அம்மான்மார்.
மாந்தர்கள், மக்கள்.
மாபாதகம், பெரும்பாவம்.
மாமூல், வாடிக்கை.
மாயை, மாயம்.
மாய்ந்து, மடிந்து.
மாறுக, மறுதலையாக.
மாறுபட்டு, விரோதித்து.
மாற்சரியம், பொறாமை.
மாற்றலர்பால், பகைவரிடத்தில்.
மானிடம், { மநுஷ்யத்தன்மை. மநுஷப்பிறப்பு.

மி.

மிக்கார், மேலோர்.

மு.

முகச்சாயை, முகச்சாடை.
முகந்து, மொண்டு.
முகப்பொலிவு, முகவிளக்கம்.
முக்குறும்பு எறிந்த, முக்குறும்பை வென்ற(முக்குறும்பு—காமம் வெகுளி மயக்கம் என்பன).
முடை நாற்றம், புலால் மணம்.
முட்டின்றி, தடை யில்லாமல்.
முதுமை, கிழப்பருவம்.
முத்தம், முத்து.
முத்தொழில், மூன்று தொழில்கள் (சிருட்டி திதி லயங்கள்).
முமுக்ஷுத்வம், மோக்ஷ விருப்பம்.
முயற்சி, ஊக்கம்.
முரணி, } மாறுபட்டு.
முரண்பட்டு, }
முழுமுதற்கடவுள், மூலகாரணராகிய கடவுள்.
முறைப்பாடு, முறையிடுதல்.
முறையே, கிரமமாகவே.
முற்றத்துறத்தல், முற்றும்விட்டுநீங்கல்.
முற்றாமை, முடியாமை.
முனிவர, முனிசிரேஷ்டரே.
முனிவுடன், கோபத்துடன்
முன்னவர், முன்னோர்.

மூ.

மூண்டு, பற்றி.
மூதாதையர், பாட்டன்மார்.
மூதுரை, முதுமொழி.
மூப்பு, முதுமை.

மெ.

மெய், உடம்பு.

மே.

மேகலை, மாதர் இடையிலணியும் அணிகளி லொன்று.

மை.

மைந்தன், மகன்.

மொ.

மொழி, சொல்.

மோ.

மோகம், விருப்பம்.

யா.

யாக்கை, உடம்பு.
யாண்டும், எவ்விடத்தும்.
யாத்திரிகர், பிரயாணிகர்.

யூ.

யூகிப்பது, உய்த்துணர்வது.

ர.

ரத்து, தடை.
ரவி, சூரியன்.

ஜ.

ஜகம், லோகம்.
ஜபதபாதி, ஜபதபம் முதலியவை.

ஜி.

ஜித்துக்காரி, கெட்டிக்காரி.
ஜிதேந்திரியன், இந்திரியங்களை வென்றவன்.

ஜீ.

ஜீவன்முத்தர், ஞானிகள்.

ஸ.

ஸஹஸ்ரதளாம்புஜம், ஆயிரமிதழுள்ள தாமரை மலர்.

ல.

லகிமா, அட்டசித்திகளுள் ஒன்று; அது லேசாயிருக்கும் சித்தி.
லவுகிகம், லோகாசாரம்.

**லி.**

லிகிதர், எழுதுவோர்.

**லோ.**

லோபம், லோபகுணம்.

**வ.**

வசித்வம், அட்டசித்திகளுள் ஒன்று; அது எல்லோரையும் வசப்படுத்தும் சித்தி.
வண்ணம், தன்மை.
வதியும், தங்கும்.
வம்மின், வாருங்கள்.
வயோதிகம், மூப்பு.
வரலாறு, விருத்தாந்தம்.
வரினும், வந்தாலும்.
வருத்தி, வருவித்து.
வருவாய், வருமானம்.
வரைந்து, அளவுபடுத்தி.
வரையறை, எல்லை.
வலியுறுத்தத்தக்க, திட்டப்படுத்துதற்குரிய.
வல்லவன், சமர்த்தன்.
வழக்காறு, வழக்கம்.
வழலை, ஒரு மருந்து (சவுக்காரம்).
வழிபட்டு, வணங்கி.
வழுவ், தவற.
வழுவாது, தவறாது.
வறிதே, சும்மா.
வறியர், தரித்திரர்.
வற்புறுத்தல், இடித்துச் சொல்லல்.
வனப்பு, அழகு.
வன்மை, உறுதி.
வன்மொழி, கடுஞ்சொல்.
வன்னெஞ்சன், கடினமனமுள்ளவன்.

**வா.**

வாகடம், வாகடாசாரியரால் செய்யப்பட்ட ஒரு வைத்தியநூல்.
வாசவன், இந்திரன்.
வாசாஞானம், வார்த்தைஞானம்.
வாடை, மணம்.
வாணுள், ஆயுள்.
வாணிபம், வர்த்தகம்.
வாதனை, வாசனை.
வாதித்தல், தர்க்கித்தல்.
வாதை, துன்பம்.
வாத்ஸல்யம், அன்பு.
வாயிலாக, வழியாக.
வாய்மை, உண்மை.
வாய்வாளாமை, மௌனம்.
வாரணாசி, காசி.
வாளாபோயினமை, சும்மாசென்றமை.
வானப்பிரஸ்தம், நால்வகை ஆசிரமங்களில் ஒன்று. (36 ஆம் பக்கம் 20 ஆம் வரியிற் காண்க.)

**வி.**

விகற்பங்கள், வேறுபாடுகள்.
விஞ்ஞானம், மேன்மையான ஞானம்.
விடத்தேரிலை, ஒருவகைச் செடியின் இலை.
விடுதலை, விடுவிப்பு (மீட்சி).
விதேகமுக்தர், உடல்விட்டு முத்தியடைந்தவர்.
வித்வஜ்ஜனர், வித்வான்கள்.
விமரிசை, நாகரிகம்.
வியப்பு, அதிசயம்.
விரசம், வெறுப்பு.
விரதியர், விரதங்காப்பவர்.
விரிவஞ்சி, விரிவதற்குப் பயந்து.
விருத்தை, விருத்தாப்பியை.
விருப்பம், ஆசை.
விரைந்தனன், அவசரப்பட்டனன்.
விரையாதிபதி, செலவுக்கதிபதியாகிய புதன்.
விலக்குவிப்பது, ஒழிவிப்பது.
விலங்குகள், மிருகங்கள்.
விழுப்பந்தரல், மேன்மையைத் தருதல்.
விழைகின்ருள், இச்சிக்கிருள்.
விழைந்தனன், இச்சித்தனன்.
விழைவது, இச்சிப்பது.
விளித்து, அழைத்து.

**வீ.**

வீடுபேறு, முத்தியடைதல்.
வீற்றிருத்தல், எழுந்தருளியிருத்தல்.

**வெ.**

வெஞ்சினம், கடுங்கோபம்.
வெட்டை, சூடு.
வெம்மை, வெப்பம்.
வெய்யவன், கொடியவன்.
வெறுமனே, சும்மா.
வெற்றி, ஜயம்.

**வே.**

வேள்வி, யாகம்.
வேனிற்காலம், வசந்தகாலம்.

**வை.**

வைகறை, விடியற்காலம்.

செய்யுள் பாகத்தின்

# அரும்பத விளக்க உரை.

(பக்கம் என்று குறிப்பிடப்பட்டவைகள் இப் புத்தகத்திலுள்ள பக்கங்கள்.)

"ஒழுக்கம்" என்னும் பாட்டு (பக்கம் V. திருக்குறள்.)

ஒழுக்கம் — நன்னடக்கை, விழுப்பம் — மேன்மை, உயிரினும் — உயிரைக் காட்டிலும். ஓம்பப்படும்—காக்கப்படும்.

"வலம்பட" என்னும் பாட்டு (பக்கம் XV. நூலாசிரியர் இயற்றியது.)

வலம்பட — வலதுபுறமாக வர, வரிவடிவு — எழுத்து, இயன்று — அமைந்து, குலம்—மேன்மை, குலவும்—விளங்கும், பல்—பல, மொழி—பாஷை, தனி—ஒப்பற்ற.

தமிழ் எழுத்துக்களில் பெரும்பாலானவை வலமாகச் சுழன்றுவரும் வரி வடிவினையுடையன. ட, ப, ம, ய, ழ ஆகிய ஐந்துமே இடமாகச் சுழன்று வருவனவாம். பெரும்பான்மை நோக்கி வலம்பட வரும் எழுத்துக்கள் என்பதே வழக்கு. இது, கமுகந் தோட்டத்தில் வேறு மரங்கள் சில இருப்பினும், பெரும்பான்மை நோக்கி அதனைக் கமுகந்தோட்டமே என்றாற்போல எனக. இதுவன்றி, மேற்கண்ட ஐந்து எழுத்துக்களும் வலத்திலிருந்து தொடங்கியே எழுதப்படவேண்டும் (ட) ஆயினும் எழுதுவதில் சுலபமான முறை நோக்கி இடத்திலிருந்து தொடங்கி எழுதப்படுகின்றன (ட) என்று கூறுவாரும் உளர்.

"பிறர்க்கின்னா" என்னும் பாட்டு (பக்கம் XXXi. திருக்குறள்.)

இன்னா—துன்பம், பகல்—ஒரு முகூர்த்த காலம்.

"பூமேவு" என்னும் பாட்டு (பக்கம் XXXVii. நூலாசிரியர் இயற்றியது.)

பூ—உலகத்தில், மேவும்—வியாபித்திருக்கும், சீர்—சிறப்பு, பொலியும்—விளங்கும், நா—(ஒவ்வொருவருடைய) நாவிலும், மேவும்—பொருந்திய, தூ—சுத்தம், அருளவரும்—அருள் செய்யும்பொருட்டு வரும், தந்தி முகத்து எந்தை—யானை முகத்தையுடைய எமது தந்தை (விநாயகர்), தாள்—பாதம்.

"தெருளுறு" என்னும் பாட்டு (பக்கம் XXXVii. நூலாசிரியர் இயற்றியது.)

தெருள்—ஞானம், உறு—உடைய, மறை—வேதம், தேர்ந்து—உணர்ந்து, உண்மைப் பொருள்—சத்தியம், உற—மிகுதியாக, வேந்தன்—அரசன், புகல—சொல்ல, மருள்—மயக்கம், உறு—அடைந்த, மலரோன்—பிரமன்,* மயல்—மயக்கம், செவ்வேள்—சுப்பிரமணியர், செய்ய—சிவந்த, முடி—தலை.

* பிரமன் ஓம் என்னும் பிரணவத்தின் பொருளை யறியாது மயங்க அவற்கு அதனை முருகக்கடவுள் உபதேசித்தருளினர் என்பது புராண வரலாறு,

'**மின்னு**'' என்னும் பாட்டு (பக்கம் xxxvii. நூலாசிரியர் இயற்றியது.)

மின்னு—விளங்கும், மன்னும்—நிலைபெற்ற, மா—பெருமைபொருந்திய, பன்னு—புகழும், கமலம்—தாமரை, பால் நிறம்—வெண்ணிறம், அன்னம்—அன்னம்போன்ற சரஸ்வதியின், நல்—நன்மைபொருந்திய, சரண்—பாதம், ஆதரிப்பாம்—விரும்புவாம்.

''**வீடகமேவ**'' என்னும் பாட்டு (பக்கம் xxxvii. நூலாசிரியர் இயற்றியது.)

வீடு அகம்—மோட்சமாகிய இடம், மேவ—அடைவதற்கு, விழைதல்—விரும்புதல், உறு நெறி—உற்ற வழி, நாடு அகம்—நாடுகின்ற மனம், இயம்ப—சொல்ல, ஆடக மன்று—பொன் சபை, பிரான்—சிவபெருமான், சே அடி—சிவந்த பாதம்.

''**தனித்தமிழ்**'' என்னும் பாட்டு (பக்கம் xxxviii. நூலாசிரியர் இயற்றியது.)

நீரார்—தன்மையுள்ளவர், மங்கல வழக்கு—அமங்கலத்தை மங்கலமாகச் சொல்லும் வழக்கம் (அதாவது சுடுகாட்டை நன்காடு என்பது), துனித்த—துன்பமான, பொய்—பொய்யான தேகம், பனிப்பு—அசைவு (குற்றம்), காதை—கதை, பகர்ந்தனென்—சொன்னேன், தோனிப்பது—தோன்றுவது, தூயோர்—பரிசுத்தமான பெரியோர்.

''**சத்தியம்**'' என்னும் பாட்டு (பக்கம் xxxviii. நூலாசிரியர் இயற்றியது.)

கணிதம்—கணக்கு, சமயம்—மதம், தகைமைத்து—தன்மையினையுடையது.

''**பாருக்கோருவன்**'' என்னும் பாட்டு (பக்கம் 3. அரிச்சந்திர புராணம்.)

பார்—பூமி, பரதாரம்—பிறன் மனைவி, போர்—சண்டை, மறைப்பொருள்—வேதத்தின் பொருள், நேர்—நடுவுநிலைமை, வீடா—விடாத, மனுநூல்—மனு என்பவரால் செய்யப்பட்ட தருமசாஸ்திரம், நெறி—வழி, பொறை—பொறுமை, ஆருக்கும்—எப்படிப்பட்ட யோக்கியர்களுக்கும், மிக்கான்—சிறந்தவன்.

''**வெய்யன்**'' என்னும் பாட்டு (பக்கம் 3. அரிச்சந்திர புராணம்.)

வெய்யன்—கொடியவன், பதகன்—(பாதகன்) பாவி, நிறை—(மனத்தை) நிறுத்துதல், புல்லன்—அற்பன், கையன்—வஞ்சகன், கயவன்—கீழ்மகன், ஐயன்—தலைவன் (இந்திரன்), இதென்னுகை—இது யாது பயனைக் கருதி.

''**கந்தரம்**'' என்னும் பாட்டு (பக்கம் 5. நூலாசிரியர் இயற்றியது.)

கந்தரம்—குகை, உன்னும்—நினைக்கும், தூய—சுத்தமான, கோசிகன்—விசுவாமித்திரன், மாதவம்—பெருந்தவம், இணையடி—இரண்டு பாதங்கள்.

''**வையம்**'' என்னும் பாட்டு (பக்கம் 5. அபிராமியந்தாதி.)

வையம்—தேர், துரகம்—குதிரை, மத கரி—மத யானை, மா மகுடம்—பெரிய கிரீடம், சிவிகை—பல்லக்கு, கனகம்—பொன், ஆரம்—முத்துமாலை, சின்னம்—அடையாளம்.

"**நின்னுவார்**" என்னும் பாட்டு (பக்கம் 8. திருநாவுக்கரையர் தேவாரம்.)

நின் ஆவார்—நின்னை ஒத்தவர், மன்—அரசன், ஆறங்கம்—வேதத்தின் ஆறு அங்கங்கள். அவை—சிட்சை (வேதத்தின் உச்சாரண லட்சணத்தை உணர்த்துவது), வியாகரணம் (வேதத்தின் பத லட்சணத்தை விவரிப்பது), நிருத்தம் (வேதத்தின் பதங்களுக்கு விவரணம் கூறுவது), சோதிடம் (லக்நம், திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் முதலியவற்றால் வைதிக கருமங்களைச் செய்தற்குரிய காலத்தை யறிவிப்பது), கற்பம் (ஆசுவலாயநீயம், போதாயநீயம், ஆபத்தம்பம் முதலிய சூத்திரங்களிலிருந்து வைதிக கருமங்களைப் பிரயோகிக்கும் முறைகளைக் கூறுவது), சந்தோவிசிதி (வேதங்களை உக்தை முதலிய ஸந்தோபேதங்களுக்கு அட்சர சங்கியை கற்பிப்பது). மறை—வேதம்.

"**ஒத்தேறு**" என்னும் பாட்டு (பக்கம் 12. பிரபோத சந்திரோதயம்.)

ஒத்து—ஒப்பும், ஏறு—உயர்வும், பூங்கணை—புஷ்பபாணம், போதம்—அறிவு, மடவார்—பெண்கள், பித்து—பைத்தியம், இதம்—இன்சொல், பேதை—அறிவில்லாதவன்.

"**பாலுண் குழந்தை**" என்னும் பாட்டு (பக்கம் 12. பிரதாபசந்திர விலாசம்.)

பணி—பாம்பு, ஞாலத்து—இப்பூமியில், அமர்—அமரும், கோலத்து—அழகினையுடைய, அமரர்—தேவர், நான்முகன்—பிரமன், முக்கண்ணன்—சிவன், கோவலன்—கிருஷ்ணன், சால—மிக, ஓங்கிய—உயர்ந்த.

"**புருவநேரியாமல்**" என்னும் பாட்டு (பக்கம் 14. திருவேங்கட சதகம்.)

மணி — முத்துப்போன்ற, எயிறு—பல், அங்கசேஷ்டை — உறுப்பை அசைத்தல், மிடறு—கண்டம், நியதியோடு—ஏற்பாட்டின்படி, நாதப்பிரமமாய்—ஒலிவடிவாகிய பிரமத்தில் லகித்தவனாய், தந்திரி—தந்தி, வஞ்சி—பூங்கொடி போன்ற பெண், மாந்தர் — மனிதர், வையகம் — பூமி.

"**கல்லாத புல்லர்**" என்னும் பாட்டு (பக்கம் 17. நாலாசிரியர் இயற்றியது.)

புல்லர்—அற்பர், காவலன்—அரசன், சொல்—சொல்லுதலை, ஆரும்—பொருந்திய, (சொல்லாரும்—யாவராலும் புகழப்பட்ட,) கீர்த்தி—புகழ், * நல்லார்—நல்லவர், நாடிய—விரும்பின, அளிப்பான்—கொடுப்பான், மல் ஆரும்—மல்தொழிலைப் பொருந்திய, திண்புயம்—வலிய தோள்.

* நல்லார் மனந்தனில் நாடிய—பெண்கள் தம் மனத்தில் விரும்பிய எனவும் கொள்க. இதனால் அப் பெண்கள் தம் கருத்தைக் குறிப்பித்தபடி யாகும்.

"**ஈயாத புல்லர்**" என்னும் பாட்டு (பக்கம் 17. நாலாசிரியர் இயற்றியது.)

இறையவன்—அரசன், வாழ்த்துநர்—புகழ்வோர், அருள்வான்—கொடுப்பான், சேய்—பிள்ளை, மன்பதை—மக்கட்கூட்டம், மாயாத—அழியாத.

"**தாயோக்கும்**" என்னும் பாட்டு (பக்கம் 18. கம்ப ராமாயணம்.)

நலம் பயப்பில்—நன்மை தருவதில், முன்னின்று—முன்னிலையாய் நின்று, செல்கதி—அடையும் நற்கதி, உய்க்கும்—செலுத்துகிற, நீரால்—தன்மையால்,

நோய்—பிணி, ஒக்குமெனின்—வந்து அடைந்ததானால், நுணங்கு—நுட்பமாகிய, கேள்வி—நூற் கேள்விகளை, ஆயப் புகுங்கால்—ஆராயத்தொடங்கும் பொழுதில்.

அன்பினால் தாய் மிக்கவளாதலால் 'தாயொக்கும் அன்பில்' என்றும், விரும்பியவற்றைத் தடையின்றிக் கொடுக்கவல்லது தவமாதலால், 'தவமொக்கும் நலம் பயப்பில்' என்றும், பிதுர்க்கடன்களைச் செய்து தாய் தந்தையரை நற்கதியில் சேர்ப்பிப்பது புத்திரன் கடமையாவதுபோல, தன் குடிகளை நன்னெறியில் நடக்கச்செய்து நற்கதியிற் சேர்ப்பித்தலால், 'சேயொக்கும் முன்னின்றொரு செல்கதியுய்க்கு நீரால்' என்றும், மருந்து நோயை நீக்குவதே போல், வைத்தியசாலைகளை ஆங்காங்கு ஸ்தாபித்துக் குடிகளுக்குற்ற நோய்களை நீக்குவதால் 'நோயொக்குமெனின் மருந்தொக்கும்' என்றும், பாடசாலைகளை ஆங்காங்கு நியமித்துக் குடிகளுக்கு நல்லறிவை யுண்டாக்குதலால் 'அறிவொக்கும்' என்றும் அரசனைச் சிறப்பித்தபடியாகும்.

''புள்ளிய'' என்னும் பாட்டு (பக்கம் 24. திருவிளையாடற் புராணம்.)

புள்ளிய — புள்ளியையுடைய, ஆடை — வஸ்திரம், புனைந்து — தரித்து, அரவப்பூண் — பாம்பாகிய ஆபரணம், செங்கண் — சிவந்த கண்களையுடைய, விடையான்–ருஷபவாகனத்தை யுடைய சிவன், உள்ளிய–நினைத்த, அருவருத்து–இகழ்ந்து, தருக்கு—செருக்கு.

''முடிசார்ந்த'' என்னும் பாட்டு (பக்கம் 35. பட்டணத்தார்.)

முடிசார்ந்த மன்னர் — கிரீடாதிபதிகளான அரசர், சாம்பர் — சாம்பல், இந்த—இப்படிப்பட்ட, படி—உலகத்தை, சார்ந்த—பொருந்திய, வாழ்வு—வாழ்க்கை, பொன்னின் அம்பலவர்—பொன்னம்பலத்தில் வாழ்பவராகிய நடராஜர், உய்யவேண்டும் — கடைத்தேறவேண்டும்.

''ஞானமானது'' என்னும் பாட்டு (பக்கம் 36. மகாராஜா துறவு.)

நவில்வது—சொல்வது, இல்லாள்—மனையாள், அறையும் — சொல்லும், பதி—கணவன், ஈனமா—தாழ்வாக நினைத்து, கதி—திக்கு, எணி—எண்ணி.

''கொழுநன்'' என்னும் பாட்டு (பக்கம் 37. காசிகாண்டம்.)

கொழுநன்—கணவன், உறை—வாழ்தல், கொள்கை—கோட்பாடு, வழு—குற்றம், வான் தவம்—பெரிய தவம், ஆற்றுதல்—செய்தல், பராய்—வணங்கி, தூவுதல்—அர்ச்சித்தல், கற்புடை பன்னியர்—கற்புடைய மனைவியர்.

''பாகமொழியாய்'' என்னும் பாட்டு (பக்கம் 37. மகாராஜா துறவு.)

பாகமொழியாய் (பாகு+அம்+மொழியாய்) — (சர்க்கரைப்) பாகுபோன்ற அழகிய மொழியாய், உரை—சொல், விரதம்—நோன்பு, ஆகமுற (ஆகம்+உற) — (நான்) இந்த சரீரம் எடுக்கும்படி.

''மூட்டுவிப்பானும்'' என்னும் பாட்டு (பக்கம் 53. பட்டணத்தார்.)

மூட்டுவிப்பானும்—கூட்டுவிப்பவனும், முயங்குவிப்பானும்—கலக்கச்செய்பவனும், இருவினை—நல்வினை தீவினைகள், தில்லை—(தில்லைமரங்கள் அடர்ந்துள்ள ஊர்) சிதம்பரம்.

"விடத்தேரிலை" என்னும் பாட்டு (பக்கம் 59. தனிப்பாடல், நூலாசிரியர் வாக்கும் கலந்தது.)

விடத்தேரிலை—ஓரிலை, அரவு—பாம்பு, தடம்—இடம்.

"மனிதர்" என்னும் பாட்டு (பக்கம் 59. திருவிளையாடற் புராணம்.)

வசந்தம்—தென்றல், கால்—காற்று, துனி—(வெப்பத்தால் உண்டாகும்) துன்பம், புனிதம்—சுத்தம், தடம்—தடாகம், புது—புதிய, பால் மதி—வெண்மையாகிய சந்திரன்.

"பூமகளும்" என்னும் பாட்டு (பக்கம் 60. அரிச்சந்திர புராணம்.)

பூமகள் — திருமகள் (லட்சுமி), மண்மகள் — பூமிதேவி, பொறுமல்—சகிக்காமல், உற—மனம் பொருந்த (திருப்தியாக), மணித்தோள்—அழகிய தோள், நாமம்—(பகைவருக்கு) அச்சத்தைத் தருவதான, நெடுவேல்—நீண்ட வேலாயுதத்தையுடைய, இறைவன்—அரசன், நாயின் இகழ்—நாயைக்காட்டிலும் இகழப்பட்ட.

"புவியினுக்கு" என்னும் பாட்டு (பக்கம் 62. கம்ப ராமாயணம். இப் பாட்டு இறுதியிற் சிறிது மாற்றப்பட்டது.)

[இப் பாடல் கோமதி நதிக்கும் சான்றோர் கவிக்கும் பொருள்படுவதால் இது சிலேடைக்கவி எனப்படும்.]

கோமதி நதி. புவியினுக்கு அணியாய்—பூமி தேவிக்கு ஓர் ஆபரணம் போன்றதாய், ஆன்ற பொருள் தந்து—விஸ்தாரமான பொருள்களைக் (காடுபடு திரவியம், மலைபடு திரவியம், கடல்படு திரவியம் முதலாயினவற்றை) கொடுத்து, புலத்திற்று ஆகி—வயல்களில் பாய்வதாகி, அவி அகம் துறைகள் தாங்கி—அவிசு (தேவர் உணவு) பெய்தற் கிடமாகிய யாகத்துறைகளைத் தாங்கி, ஐந்திணை நெறி அளாவி—ஐந்து நிலங்களின் (குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல்) வழியிற் கலந்து, சவி உற தெளிந்து—அழகு பொருந்தத் தெளிவடைந்து, தண்ணென்று—குளிர்ந்து, ஒழுக்கமும் தழுவி—நேரே ஓடுதலையுங்கொண்டு.

சான்றோர் கவி. புவியினுக்கு அணியாய் — பூமியி லுள்ளவர்களுக்கு அழகைத் தருவதாய், ஆன்ற பொருள் தந்து—மேன்மையவான அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருளையுந் தந்து, புலத்திற்று ஆகி—ஞானத்தைத் தருவதாகி, அகம் அவி துறைகள் தாங்கி—பாபத்தைக் கெடுக்கும் வழிகளைத்தாங்கி, ஐந்திணை நெறி அளாவி—(குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும்) ஐந்து திணைகளின் பாகுபாடுகளைக் கலந்து, சவி உற தெளிந்து—புகழ் உண்டாகத் தெளிவடைந்து, தண்ணென்று—இனிய சொற்களை யுடையதாகி, ஒழுக்கமும் தழுவி—நல்லொழுக்கங்களையும் தழுவிக்கொண்டு.

சான்றோர் கவியெனக் கிடந்த—அறிவுடையோர் செய்த பாடலுக்குச் சமமாக இருந்த, நல் கோமதியினை—நல்ல கோமதி நதியை, காணப்பெற்றேம்—காணத்தகுந்த தவத்தை யடைந்தோம்.

**"இல்லறத்தான்"** என்னும் பாட்டு (பக்கம் 62. திருப்போரூர் சந்நிதிமுறை.

ஈடேறல்—கடைத்தேறல்.

**"கண்டிகை"** என்னும் பாட்டு (பக்கம் 62. நூலாசிரியர் இயற்றியது.)

கண்டிகை — (கழுத்திலணியும்) ருத்திராக்ஷமாலை, காட்டிடும்—பூசும், கோலம்—அழகு, கரகம்—கமண்டலம், தண்டம்—யோக தண்டம், ஆர்—பொருந்திய, செய்ய மண் திணி யாடை—சிவந்த மண்ணில் தோய்த்த வஸ்திரம், (காவி வஸ்திரம்.)

**"பொருளுடையோரை"** என்னும் பாட்டு (பக்கம் 62. பட்டணத்தார்.)

செயல்—செய்யுங்காரியம், தெருள்—(கல்வியின்) தெளிவு, இருள் அறு சொல்—கேட்போரது அஞ்ஞான இருள் நீங்குதற்குரிய சொல்.

**"அன்ப"** என்னும் பாட்டு (பக்கம் 63. நூலாசிரியர் இயற்றியது.)

முற்றி—முடித்து, இரும்—பெரிய, வன்புகோய்து—வலியழித்து, சார்க—பொருந்துக.

**"ஐயிரண்டு"** என்னும் பாட்டு (பக்கம் 64. பட்டணத்தார்.)

ஐயிரண்டு திங்கள்—பத்து மாதம், பையல் என்றபோதே—(பிறந்தது) ஆண்குழந்தை என்று சொன்ன உடனே, பரிந்தெடுத்து—விரும்பி எடுத்து.

**"எண்ணிலாத"** என்னும் பாட்டு (பக்கம் 65. திருப்போரூர் சந்நிதிமுறை.)

பாத வனசம்—பாத தாமரை, துணை—இரண்டு.

**"மானம்"** என்னும் பாட்டு (பக்கம் 68. நல்வழி.)

மானம்—பெருமை, வெட்கம், வண்மை—(சரீர) வளமை, தாளாண்மை—முயற்சி, தேனின் கசி வந்த சொல்லியர்—தேனின் ஊற்றைப்போன்ற சொல்லையுடைய பெண்கள், காமுறுதல்—விரும்புதல்.

**"வாழ்வாவது"** என்னும் பாட்டு (பக்கம் 72. தேவாரம்.)

பிறவிக்கடல்—பிறவியாகிய கடல், பாழ்போவது—பாழாகக்கடவது, பசி நோய்செய்த பறிதான்—(வாழ்வு, செல்வம் முதலியவைகள்) பசிநோய் செய்யும் பறித்தற் (பிடுங்குதல்) தொழில், தாழாது—தாமதிக்காமல், தடங்கண்ணன்—விசாலம் பொருந்திய கண்களையுடைய திருமால், மலரோன்—தாமரை மலரை இடமாக உடைய பிரமன், கீழ்மேலுற—(முறையே திருமால் பன்றி உருக் கொண்டு) கீழ்நோக்கிச் செல்லவும், (பிரமன் அன்ன உருக்கொண்டு) மேலே செல்லவும், நின்றான்—ஓங்கி நின்ற பரமசிவனது, திருக்கேதாரம் என்னீர்—திருக் கேதாரம் என்று சொல்லுங்கள்.

**"ஆண்டாண்டு"** என்னும் பாட்டு (பக்கம் 73. நல்வழி.,

மாண்டார்—இறந்தவர், இட்டு—இரப்போர்க்குக் கொடுத்து,

"மாசில்" என்னும் பாட்டு (பக்கம் 84. நூலாசிரியர் இயற்றியது.)

வந்திக்கும்—துதிக்கிற, மாண்பு—பெருமை, ஆதரித்து—விரும்பி, ஓர் ஈராண்டில்—இரண்டு வருஷங்களுக்குள், நவம்—புதுமை, செயலரிய் வரு—தொழில் செய்தற்குரியதாய் தன்கையில் வந்திருக்கிற, மருவும்—பொருந்திய, சதுரன்—சமர்த்தன், புதுமையுற—பார்ப்பவர்கள் வியக்கும்படி, விஞ்ஞானப் பாவை—(வி=மேலான, ஞானம்=அறிவு) மேலான ஞானத்தைத்தருகின்ற பாடல்களை, மெட்டாய்—அளவாய், மன்னர் அவை—ராஜசபை, பூபாலர்—அரசர், நலம் வந்த—நன்மை பொருந்திய, குலம்—மேன்மை, வந்த—பொருந்திய, சிவிகை—பல்லக்கு, தண்டிகை—இருபக்கங்களினும் திறந்திருக்கும் பல்லக்கு, கம்ப மதக்கரி—சட்டுத்தறியில் கட்டப்பட்டயானை, காஞ்சனம்—பொன், வாம்பரி—தாவிச் செல்லுங் குதிரை, மல்லல்—மிகுந்த, சித்திரமார்—விசித்திரம் பொருந்திய, ஒன்பான் வகையில்—ஒன்பதுவகையாக, ஒளிரும்—பிரகாசிக்கும், இன்ப மான—(கண்ணிற்கு) இனிமையான, பணி—ஆபரணம், வியக்க—ஆச்சரியப்பட.

"பந்தனும்"
"கருத்தனும்"
"பொய்மயினை" } என்னும் பாட்டுகள் (பக்கம் 96. திருநாவுக்கரையர் தேவாரம்.)

ஆடல்—நடனம், காண்பான்—காண, காம்பு அன்ன தோளி—மூங்கில் போன்ற தோள்களையுடைய உமாதேவி, பங்கா—பாகனே, நிருத்தம்—நடனம், புறமலா அடிமை (புறம்+அல்லா+அடிமை)—அகத்தொண்டு, பைய—மெல்ல.

"மெய்யனே"
"மெய்யுரு"
"தையலார்" } என்னும்பாட்டுகள் (பக்கம் 96. நூலாசிரியர் இயற்றியன.)

விமலா — மலமற்றவனே, கையனேன் — வஞ்சனேன், களைகண் — ஆதரவு, கருமம் பொல்லேன் — (முன்ஜன்மத்தில்) தீச்செய்கையுடையேன், உய்ய—கடைத்தேற, செய்யுறுவளம்—வயல்களால் உண்டானவளம், தையலார்—மாதர், மையல்—மோகம், நெய்யில்—நெய்யினிடத்து, ஆர்—பொருந்திய, நிலவிய—நிலைபெற்ற.

"அல்லலே" என்னும் பாட்டு (பக்கம் 123. காஞ்சிப்புராணம்.)

அல்லல்—துன்பம், கட்டழகு—பேரழகு, இரவலர்—யாசகர்.

"யானையெருத்தம்" என்னும் பாட்டு (பக்கம் 123. நாலடியார்.)

எருத்தம்—பிடர், போலிய—விளக்கமாக, ஏனைவினை — தீவினைப்பயன், உலப்ப — கெடுக்க, வேறு ஆகி — செல்வத்தை இழந்து, வீழ்வர் — தாழ்ந்தவர் (வறியராவர்), மற்றோர்—பிறர்.

"எறும்பு"
"தாழ்தலத்தோர்" } என்னும் பாட்டுகள் (பக்கம் 137. திருக்குற்றாலத் தலப் புராணம்.)

கடை—முடிவு, தலை—தொடக்கம், பறம்பர்—மலைநாட்டார், சோனகர்—துருக்கர், துனர்—ஊன்விற்போர், ஈனர்—சண்டாளர், கானவர்—வேடர், நுவை-

யர்—வலியர், பழையர்—சாணர், சதுர்த்தர்—நான்காம் வருணத்தார் (சூத்திரர்), கேழ்—ஒளி (கீர்த்தி), உழவர்—வேளாளர், சூழ—ஆலோசனையுடைய, வாழ்—வாழ்கின்ற, மறையோர்—வேதியர்.

"அந்தணர்" என்னும் பாட்டு (பக்கம் 138. திருக்குற்றாலத்தலப் புராணம்.)

அகன்று—நீங்கி, மேனி—உடம்பு, சந்தம்—அழகு, பாலைத் தானம்—பாலைநிலம், கந்தல்—அழிந்துபோன, புனம்—கொல்லை (மலைநாடு), ஒருவி—நீங்கி, முந்துற—முன்னாக, இத்தனைக்கு—இத்தனைவகையும் ஒழிய, முயன்று—முயற்சி செய்து.

"செஞ்சடை" என்னும் பாட்டு (பக்கம் 179. நூலாசிரியர் இயற்றியது.)

வஞ்சினம்—சபதம், காவலன்—அரசன், காறும்—வரைக்கும்.

"வயாவும்" என்னும் பாட்டு (பக்கம் 178. நாலடியார்.)

வயாவும்—கருவினாலடைந்த வருத்தத்தையும், வருத்தமும்—(பெறுங்காலத் தடைந்த) வருத்தத்தையும், ஈன்றக்கால் நோவும்—பெற்றபின் (அடைந்த) வருத்தத்தையும், கவான்—தன்தொடையின் மேலுள்ள, அசா—(முயற்சி முடியாமையா லாகிய அல்லது பொருளின்மையாலாகிய) தளர்ச்சியால், உசா—(க்ஷேமலாபங்களை) விசாரிக்கும், தன் கேளிரை—தன் உறவினரை.

"பளகறு" என்னும் பாட்டு (பக்கம் 178. குசேலோபாக்கியானம்.)

பளகு—குற்றம் (கபடம், வஞ்சகம்), அறு—இல்லாத, உளமிகத்தெளிந்தோர்—பெரியோர்கள், நல் மாற்றம்—நல்ல மொழி.

"புணர்ச்சி" என்னும் பாட்டு (பக்கம் 179. திருக்குறள்.)

புணர்ச்சி—ஒரு தேசத்தாராயிருக்கை, பழகுதல்—பலதரங்கண்டும் பேசியுங் கூடுதல், உணர்ச்சிதான்—(இருவர்க்கும் ஒத்த) அறிவுதானே, நட்பாம்—சிநேகமாகும், கிழமை—உரிமையை. (நட்பினுக்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி யொத்தல் என்னும் காரணங்கள் மூன்றினும் பின்னதாகிய உணர்ச்சியொத்தல் சிறப்புடையதென்பது இதனால் சொல்லப்பட்டது.)

"ஓது"<br>"மூனமாக" } என்னும் பாட்டுகள் (பக்கம் 180. குற்றாலத்தலப் புராணம்.)

பிரமசரியமாவது—விவாகமின்றி ஆசிரியனை யடுத்துக் கல்விகற்று வேதமோதி விரதங் காத்திருத்தல், வானப்பிரத்தமாவது—இல்லறம் விட்டு மனைவியோடாயினும் தனித்தாயினும் வனத்திற் சென்று தவஞ்செய்தல், சந்நியாசமாவது—முற்றத் துறந்திருத்தல், காருகபத்தியமாவது—இல்லறத்தில் வழுவாது இல்லாளோடு கூடி வாழ்ந்திருத்தல், இந்நான்கும் ஆசிரமங்களெனப்படும். கொள் கொம்பு—கொடிகள் படர்தற்பொருட்டு அவற்றினிடையே நடுங்கொம்பு, மேதினி-உலகம், வியன்—மேன்மை, விசேடம்—சிறந்தது, முன்பாக—முந்தி, வைகறைப் போது—விடியற்காலம், சவுசாதி—சுத்திமுதலானவை, வாசப்புனலாடி—வாச நீராடி, முப்பால் அனல் ஓம்பி—முத்தீ வளர்த்து (ஆகவநீயம், தக்ஷிணாக்கினி, கார்ஹபத்யம் என்பன), வேள்வி—யாகம், ஐவகை வேள்வியாவன—பிரமயாகம், தெய்வ

யாகம், பூதயாகம், பிதிர்யாகம், மானுடயாகம் என்பன. இவற்றுள் வேதமோதல் பிரமயாகம், ஓமம்வளர்த்தல் தெய்வயாகம், பலிகொடுத்தல் பூதயாகம், தர்ப்பணஞ்செய்தல் பிதிர்யாகம், இரப்போரை உணவு முதலியவற்றா லுபசரித்தல் மானுடயாகம்.

"மண்ணணினில்" என்னும் பாட்டு (பக்கம் 180. நூலாசிரியர் இயற்றியது.)

மருவும்—வாழ்தற்குரிய, வாழ்க்கையாய்—உறைவிடமாய், எண்ணியதாகும்—நினைத்திருப்பதாகிய, இரு—பெரிய, கடற்பரப்பு—கடல்சூழ்ந்த வுலகம், உரு மீன்—பெரியமீன், குருகின்தன்மை குலவிட—கொக்கின் தன்மை தன்னிடத்தில் பொருந்த, வீறிய பயனெலாம்—மேலான பயன் எல்லாம், எக்கர்—மணல் மேடு.

"மந்திர வேதியர்" என்னும் பாட்டு (பக்கம் 194. நூலாசிரியர் இயற்றியது.)

பெட்பு—விருப்பம், வரித்து—மணஞ்செய்துகொண்டு, காயம்—உடம்பு, மதிசால்—அறிவுமிகுந்த, கோ—பசு, தானம்—கொடுத்தல், சொன்னம்—பொன், வயிறுவாய்த்தல்—கருப்பமடைதல், உவப்பு—மகிழ்ச்சி, எழில்—அழகு, அரோகம்—பிணியின்மை, முதுகுநீர் குத்தல்—கருப்பிணிகளுக்குச் செய்யுமோர் சடங்கு. அரணியம்—காடு, விடை—உத்தரவு.

"பனிபா" "நிறையோ" } என்னும் பாட்டுகள் (பக்கம் 202. அரிச்சந்திர புராணம்.)

உலவாய்—அழியாய் (வாடாமல் இருந்தாயே), அனியாய வெங்கண் அரவால் இறந்த அதிபாவம் என்கொல் அறியேன்—யாரையுங் கடிப்பதான அநியாயச் செய்கையையுடைய வெவ்விய கண்களோடுகூடின ஒரு பாம்பினாலே நீ இறந்து போதலான அதிக பாவம் யாது செய்ததாலோ நான் தெரிகிலேன், தனியே கிடந்து விடநோய் செறிந்து தரைமீது உருண்ட மகனே—இங்கே நீ ஒருவனாகக் கிடந்து விடமாகிய வியாதிமிகுந்து (விடத்தால் பீடிக்கப்பட்டு) மண்மேற் புரண்டுகிடக்கிற புத்திரனே, அவமே—வீணே.

நிறையோசை பெற்ற பறையோசை யற்று நிரையாய் நிறைந்த கழுகின்—நிறைந்த ஒலியைக்கொண்ட வாத்தியங்களின் முழக்கங்களில்லாமல் வரிசையாய் நிறைந்திருக்கிற கழுகுகளினுடைய, சிறையோசையுற்ற செடியூடிறக்க விதியார் நிழைத்த செயலோ—சிறகடித்துக்கொள்ளுகிற சத்தங்களைக்கொண்ட செடிகளுக்குள்ளே நீ இறந்து போகப் பிரமதேவன் செய்த செய்கைதானோ, மறையோன் இரக்க வளநாடனைத்தும் வழுவாது அளித்த வடிவேல்—விசுவாமித்திரமுனிவர் யாசிக்க தனது வளநாடு முழுதுங் கொடுத்த கூரிய வேலாயுதத்தை யுடைய, இறையோன் அளித்த மகனே உனக்கும் இதுவோ விதித்த விதியே—அரசன் பெற்ற புத்திரனே உனக்கு இது தானோ விதித்தவிதி, நிரை—வரிசை.

"வானின்" "செங்கோ" "நல்லோர்" "மறைநீதி" } என்னும் பாட்டுகள் (பக்கம் 203. அரிச்சந்திர புராணம்.)

வானின்று இழிந்து சொரிகின்ற தாரை மழைபோல வீழ விழிநீர்—ஆகாயத்திலிருந்திறங்கிப் பொழிகின்ற மழைத் தாரையைப்போல் கண்ணீரொழுக-

யும், ஊனின்றி மேனி யுதிரங்கள் சிந்த வுயிரின்றி—மாம்சமென்ப தில்லாமல் தேகமுழுமையும் ரத்தமொழுகவும் பிராணபலமு மில்லாமல், வெம்பு தழலின் மேனின்று வெந்த தளிர்போல் உயங்கி—வெப்பமாகிய நெருப்பின்மேலே விழுந்து வெந்த தளிரைப்போல் வாடி, விதியாரை நொந்து—பிரமதேவனை நொந்து, தனியே யானின் றிரங்க—ஒருத்தியாக நின்று பிரலாபிக்க, ஏன் என்ப தில்லை இதுவோவுன் நீதி மகனே—ஏன் பிரலாபிக்கிறு யென்பதில்லாமல் நீ கிடக்கிறதான இதுதானே உனக்கு நியாயமாக முடிந்தது புத்திரனே.

செங்கோ லறத்தின் முறையே செலுத்து திறலோன்—தரும நீதிப் படியே செங்கோல் செலுத்துகின்ற சாமர்த்தியனுகியும், எவர்க்கும் உரவோன்—எப்படிப்பட்டவர்களுக்கும் அறிவாற் சிறந்தவனுகியும், வெங்கோப யானை—வெவ்விய கோபத்தைக்கொண்ட யானையையுடைய, விறல் மன்னன்—வெற்றியான்மிக்க நமதரசன், பங்கேருகத்து மலர்போல் விளங்குவதனு—தாமரை மலர்போலு முகத்தையுடைய மகனே, மகிழ்ந்த பரிவால்—(தான் மீட்சவந்த) சந்தோஷத்தின் ஆசையினலே.

நல்லோர் வகுத்த முறையாம் அறங்கள் நாலெட்டி லொன்று குறையேம்—நன்னூலுணர்ந்த பெரியோர்கள் சொன்ன தருமங்கள் முப்பத்திரண்டிலே ஒரு தரும மாயினுங் குறையாது செய்தோம், (அறம்—32. ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க் குணவு, அறுசமயத்தார்க் குண்டி, பசுவுக்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின் பண்ட நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவு வளர்த்தல், மகப்பால் வார்த்தல், பிறர்துயர் காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சு தறி, விலங்கிற் குணவு, ஏறு விடுத்தல், விலைகொடுத் துயிர்காத்தல், கன்னிகாதானம் முதலியன.) இல்லோரை யற்ப மிகழோம்—எளியவர்களைக் கொஞ்சமேனு மிகழ்ச்சி செய்திலோம், இறுக்கும் இறையன்றி ஏற உகவேம்—முன்னிருந்தபடி ஆறிலொருபங்கை யல்லது அதிகமாக விரும்பினே மல்லோம், சொல்லோம் மறுத்தும் உரையோம் உரைத்த துறவோர்கள் புத்தி கடவேம்—பொய் சொல்லி யறியோம், கேட்டவர்களுக்கு இல்லையென்று மறுத்துச் சொல்லிலோம், துறவறத்தார்கள் சொன்ன புத்தியைக் கடந்து சென்றிலோம், எல்லோர் தமக்கும் இனிதே விளைப்பம் ஏதாக வந்த திதுவே—யாவருக்கும் நன்மையையே செய்துவந்தோம், (இப்படிக்கிருக்க) எந்தக் காரணத்தினலே (பாம்பு கடித்துச் சாதலான) இச்செய்கை வந்தது.

மறைநீதி யுற்ற புறநா டழித்து வருசேனை யாள்வது அறியேம்—வேத நீதிப்படியே நடக்கிற அந்நியர் நாட்டைக் கெடுத்து அங்கிருந்து வந்து கூடுவன வான சேனைகளை ஆளுஞ் செய்கையை அறியோம், அறைநீதி முற்று முணரா வமைச்சை யணிவாயில் வைத்தும் அறியேம்—பெரியோர்கள் சொன்ன நீதி முழுதுந் தெரியாத மந்திரியை யெங்களழகிதான அரண்மனைவாயிலே வைத்தாளவுந் தெரிந்திலோம், குறையே யிழைத்து வினையே விளைத்த குடிவைத் திருந்தும் அறியேம்—குறைவானவைகளையேசெய்துபாவச்செய்கைகளையேமேன்மேலும் வளர்க்கிற குடிகளை எங்கள் நாட்டிலே குடிவைக்கவுந் தெரிந்திலோம், இறையே—ஓ தெய்வமே! தவத்தின் விளைவே—ஓ எங்கள் தவப்பயனே! எமக்கு மிதுவோ விதித்த விதியே—இப்படி பாம்பு கடித்திறப்பதோ எங்களுக்கு ஏற்படுத்தப்பட்ட விதி.

"என்னுயகன்"
"மறவாளேயிற்று"
"பரவாதி"
என்னும் பாட்டுகள் (பக்கம் 204. அரிச்சந்திர புராணம்.)

என்நாய கன்றன் மணிமார்பில் ஏறி விளையாடுகின்ற எழிலோய்—எனது நாயகனுடைய அழகிதான மார்பிலேறி விளையாடத்தக்க செல்வக்குமாரா, முன்னாய் விளைந்த துயர்தீர வெம்மின் முதலே நடந்த மதலாய்—முன்னே மூண்ட துயர்கள் தீர சுரத்தில் எங்களுக்கு முன்னே நடந்த குழந்தாய், செந்நாய் திரண்டு செறிகான் இருந்து தெளியாது இரங்கு மெனை நீ—செந்நாய்கள் கூடி நெருங்கின இந்தக் காட்டிலேயிருந்து மனந்தெளியாம லழுகின்ற என்னைப் பார்த்து நீ, அன்றாய் வருந்தல எனாதது உன்றன் அறிவுக்கு அடாது —தாயே வருந்தி யழாதேயென்று சொல்லாமற்கிடக்கிறது உன் புத்திக்குத் தக்கதல்லவே.

மற—கோபத்தையுடைய (மறம்–சினம், கோபம்), வாளெயிற்று—வாள் போலும் பற்களைக்கொண்டதாய், மணி—ரத்தினத்தை தலையிலே கொள்வதான, மாசுணத்தின்—(பெரும்) பாம்பினது, வலியால்—(விஷ) பலத்தினாலே, இறந்துள உன்னோடு—இறந்துகிடக்கிற உன்னோடு, இறவாதிருக்கும் அதிபாவி தன்னோடு உறவேதெனக் கருதியோ — சாவாதிருக்கிற அதிக பாவியானவளுடனே உறவுகொள்ளுகிறதினாலே என்ன பிரயோசனமென்று நினைத்தோ, சிவந்த கனிவாய் திறவாய்—உனது சிவந்த கனிபோன்ற வாயைத் திறக்கமாட்டாய், உரைத்தல் செய்கிலாய்—ஒன்றும் சொல்லா திருக்கிறாய், முகத்து விழியாய்—என் முகத்திலும் விழியாதிருக்கிறாய், பிறவாத நித்த னடியே வழுத்து பெருமா னளித்த மகனே—பிறத்தலில்லாத கடவுளது திருவடிகளையே துதிக்கின்ற பெருமையையுடைய அரசன் பெற்ற குமாரா.

பரவாதி கட்கு மிகவே விளைத்த படிபோல்—ஒரு சமயவாதிகள் மற்றொரு சமயவாதிகளுக்கு மிகவும் இடர் செய்கிறதுபோல், உளத்தி லறமே விரவாத துட்ட முனி கௌசிகற்கு வினையே மிழைத்த குறைபோல்—எங்கள் விஷயமாகத் தமது சிந்தையிலே தருமகுணங்களை யெவ்வளவுங் கொள்ளாத கொடுஞ் செய்கையையுடைய கௌசிக முனிவருக்கு நாங்கள் செய்த குறையைப்போல, வறியேனளித்த களிறுவி—எளியவளான நான் பெற்ற இளயானைபோன்ற புத்திரனுயிரை, கரவே பிடித்து—மறைந்திருந்து வந்து, செற்ற கடுவாய் அரவே—போக்கின விஷ வாயையுடைய பாம்பே, வறியேன் இழைத்த வினை—கொடியளாகிய யான் செய்த தீவினையால், பகைக்க உனக்கு முளதோ — என்னைப் பகைக்க உனக்கும் மனமுண்டோ.

"அம்மநீ வருந்தேல்" என்னும் பாட்டு (பக்கம் 206. நூலாசிரியர் இயற்றியது.)

என்று—என்று, மூர்த்தம் — விக்ரஹங்கள், பொருப்பு — மலை, விந்த வெற்படக்கிய வீறுசால் முனிவன்-விந்தமலையை அடக்கியவலிமைமிகுந்த அகத்தியன், அணிமை—சமீபம், பிராப்தி—நினைத்த இடத்திற்குபோதல், தராதலம்—பூதலம், பிராகாமியம்—இச்சித்த பொருள்களை எல்லாம் அடைதல், ஈசத்துவம் — எஜமானத்துவம், வசித்துவம்—(யாவரையும்) வசியம் செய்தல், அசித்து—ஞானமில்லாத

வஸ்துக்கள், சித்து—ஞானமுள்ள வஸ்துக்கள், நவை—குற்றம், அகோராத்திரம்—பகலும் இரவும், முப்புரமெரித்த முன்னவன்—மூன்று புரங்களை எரித்த தலைவனாகிய சிவபெருமான். வேகா — பிரமன், புரந்திடும் — காக்கின்ற, நலிவினை—துன்பத்தை.

"அலைகடல்" என்னும் பாட்டு (பக்கம் 209. நூலாசிரியர் இயற்றியது.)

அணி—அழகு, அடித்துணை—இரண்டு பாதங்கள், மிடையும்—நெருங்கும், பொறை—பொறுமை, அத்திரம்—அம்பு, வரிச்சிலை — கட்டமைந்த வில், அடல்—வலி, கோசிகர் — விசுவாமித்திரர், நவை — குற்றம், மகம் — யாகம், தடத்த—விசாலமான, கடவியசுரம்—காடடர்ந்த பாலைநிலம், அடகு — இலை, கவ்வை—துன்பம், இகம்—இம்மை, அகம்—வீடு, இகந்தலில்—இழிவில்லாத, கரம்—கை, அஞ்சனம்—மை, அப்பு—ஜலம், இப்பி—சங்கு, அந்தகன்—யமன், விதிர்ப்பு—நடுக்கம், கப்பிய—மூடிக்கொண்ட, அகதி—திக்கற்றவன், அருக்கன்—சூரியன், அரவம்—சத்தம், அனுங்க—வருந்த, தொக்க—கூடின, படி—பூமி, ஈமத்தில்—மயானத்தில், தெருள்—அறிவு.

"பொய்யுடை" என்னும் பாட்டு (பக்கம் 282. குறுந்தொகை.)

சொல்வன்மை—சொல்லுறுதி.

"இருளற" என்னும் பாட்டு (பக்கம் 283. நூலாசிரியர் இயற்றியது.)

இருள் அற—தெளிவாக, மேதாவியர்—அறிவுடையோர், துகள்—குற்றம், மன்ரேரிம் — பக்ஷபாதம், பதகர் — பாவிகள், வரோதய — வரத்தினால் அவதரித்தவனே.

"ஓமா" என்னும் பாட்டு (பக்கம் 293. அரிச்சந்திர நாடகம்.)

ஓமா—ஓ அம்மா, கோமாமவனே (கோமான் மகனே) — ராஜகுமாரனே, ஏமா—ஏனம்மா, கொண்ணே—கொன்றாய்.

"தாயோடு" என்னும் பாட்டு (பக்கம் 297. தனிப்பாடற்றிரட்டு.)

சேய் — பிள்ளை, ஆய — ஆகிய, பொற்றாலி (பொன் + தாலி) — பொன்னாலாகிய தாலியையுடைய மனைவி.

"அஞ்சல்" } என்னும் பாட்டுகள் (பக்கம் 298. தனிப்பாடற்றிரட்டு
"ஆக்கை" } வரதுங்க பாண்டியனும், அவன் மனைவியும் பாடியன.)

கணம்—கூட்டமான, பண கங்கணம்—சர்ப்ப கங்கணம், அசைத்த—கட்டின, அம்புலி—சந்திரன், கஞ்சமலர்—தாமரைமலர், கணகழல்—சப்திக்கின்ற வீரகண்டையை யணிந்த பாதமும், மிடறு—கண்டம், மறிமான்—மறி (மான்) யாகிய மான், பஞ்சடி சிற்றிடை யுமையாள் ஒப்பணைப் பாகனுமாய்—பஞ்சுபோன்ற அடியினையும் சிறிய இடையினையுமுடைய உமையாளாகிய அழகினையுடைய பக்கத்தையுடையவனுமாய், பால்வண்ணர்—(திருநீற்றை யணிந்து) வெண்மைநிறம் வாய்ந்த சிவபெருமான், ஆக்கை யென்னும் புழுக்குரம்பை—

உடம்பு என்கிற புழுக்கூட்டை, அணைந்து—சேர்ந்தும், அணையாப் பொருளை—அதில் (புழுக்கூட்டில்) சம்பந்தப்படாத பொருளை, அருளொளியை—கருணை என்கிற ஜோதியை, பராபரத்துக் கப்புறமாம் (பரம்=முன், அபரம்=பின்)—இறந்தகாலம் எதிர்காலம் என்னும் காலவரையறையில் அகப்படாத, அறிவை—ஞானரூபனை, நீக்கமற—நீங்குதல் இல்லாத, முழுமுதலை—பூரணமாகிய முதற் பொருளை, பாக்கியங்கள்—புண்ணியங்களை, செய்த நம்தம்—செய்தவர்களாகிய நம்முடைய, தவக்குறைகள்—தவக்குறைகளை, முடிக்கும்—முடித்துக்கொடுக்கும், பழவடியார்—பழமையாகிய அடியார், தமக்கு—அப்படிப்பட்ட அடியார்க்கு, உதவும்—உதவுகின்ற, பசும்—பசுமையாகிய, துணர்—பூங்கொத்துக்களையுடைய, கற்பகத்தை—கற்பகவிருட்சமாகிய கடவுளை, வாக்குமன விகற்பத்தால்—வாக்கும் மனமும் ஒற்றுமையாய் இல்லாமல் வேறுபடுதலால், அளவுபடா—எல்லை காணக்கூடாத, ஒன்றை—ஒப்பற்ற வஸ்துவை, வெறுவெளியை—வெட்ட வெளியை.

"பொற்கொடி" என்னும் பாட்டு (பக்கம் 303. தனிப்பாட்டு.)

பொற்கொடி—பொன்கொடிபோலும் பெண், சமர்—சண்டை.

"நல்லோர்" என்னும் பாட்டு (பக்கம் 310. பட்டணத்தார்.)

இணக்கம்—சிநேகம், எழில்—அழகு.

"பூவார்"<br>"தாமே" } என்னும் பாட்டுகள் (பக்கம் 314. திருவாசகம்.)

பூவார்—கொன்றை மலர் முதலிய புஷ்பங்களையணிந்த, சென்னி—சிரசை யுடைய, எம்—எம்முடைய, மன்னன்—இறைவன், புயங்கம்—பாம்பணிகளை யுடைய, பெருமான் — இறைவன், சிறியோமை — சிறியோமாகிய எங்களை, ஓவாது—நீங்காது, உள்ளங்கலந்து—மனத்தில் சேர்ந்திருந்து, உணர்வால்—அறிவினால், உருக்கும்—எங்களை உருகச்செய்கிற, வெள்ளக் கருணையினால்—பெருங்கருணையினால், ஆவா வென்னப்பட்டு — ஐயோவென்று இரங்கும்படி நாம் புண்ணியம் செய்யப்பட்டு, அன்பால்—அன்பினாலே, ஆட்பட்டீர்—அடிமைப்பட்டவர்களாகிய தொண்டர்களே, வந்து ஒருப்படுமின் — வந்து ஒருமனதாக எம்மோடு கூடுங்கள், பொய்விட்டு—இப்பொய்யுலகை விட்டு, உடையான் கழல் புக—இறைவன் திருவடி சேரும்படி, போவோம்—போகலாம், காலம் வந்தது—காலம் வந்துவிட்டது.

யாமார்—யாம் என்கிற அகங்காரம் யார், எமது ஆர்—எமது என்கிற மமகாரம் யார், பாசமார்—மாயை யார், என்ன மாயம்—இது என்ன மாயைச் செய்கையாய் இருக்கிறது, இவைபோக—இதுநிற்க (இந்த விசாரணை இருக்கட்டும்), பண்டைத் தொண்டர் — பழவடியார், அவன்றன் — இறைவனது, குறிப்பே—திரு உளக்குறிப்பையே, குறிக்கொண்டு—நினைத்துக்கொண்டு, போமாறு—போகும்படி, அமைமின்—வந்து சேருங்கள், பொய் நீக்கி—பொய்யுலகத்தை ஒழித்துவிட்டு, புயங்கன்—சர்ப்பாபரணத்தையுடைய சிவன், ஆள்வான்—என்னை ஆட்கொண்டவனது.

"**நேசிங்கில்லா**" என்னும் பாட்டு (பக்கம் 317. நூலாசிரியர் இயற்றியது.)

மருவிய—அடைந்த, முனிவர—முனிவர்களில் சிரேஷ்டமானவரே, அமரர் கோன்—தேவேந்திரன், அவைக்களம்—சபை, வதிதல்—தங்குதல், அறைந்து—சொல்லி, அற—முற்றும், சூளுறவு—ஆணை, எய்தி—அடைந்து, சூழல்—ஆசிரமம், மாணவர்—சீடர், விசிட்டம்—மேன்மை, உவந்தன—சந்தோஷமானவற்றை, சூழ்ச்சி—ஆலோசனை, ஊக்கிய—முயன்ற, அடல்—வெற்றி, வரித்து—வருவித்து, நல்கிடின்—கொடுத்தால், சாலும்—போதும், வேய்—மூங்கில், விலங்கு—மிருகம், தனித்துழி—தனியேயிருந்தவிடத்து, திருவியல்—அழகுவாய்ந்த, நவில—சொல்ல, போதரும்—வரும், செம்மல்—அரசன், அளித்திட—தர, கல்லுடை—காவித்துணி, தையல்—சந்திரமதி, தநயன்—மகன், ஊன்—மாமிசம், விழைந்து—விரும்பி, பரிந்து—விரும்பி, விழுப்பொருள்—மேலான பொருள் விளித்து—அழைத்து, போதிர்—போங்கள், சேய்—பிள்ளை, துஞ்சினன்—இறந்தான், வாரணசி—காசி, சரிவு—குறைவு, சமிதை—ஓமவிறகு, இந்தனம்—விறகு, அமயம்—சமயம், திணைத்துணை—தினையளவு, இலக்காய்—லக்ஷ்யமாய், கொற்றவன்—அரசன்.

"**நாரணன்**" என்னும் பாட்டு (பக்கம் 324. தேவாரம்.)

நாவாய்—தெப்பம், புனல் ஏற்ற—கங்கையைத் தரித்த, சாரணன்—அருகன்.

"**பாருருவில்**" என்னும் பாட்டு (பக்கம் 324. நாலாயிரப்பிரபந்தம்.)

எரி—நெருப்பு, கால்—காற்று, விசும்பு—ஆகாயம், ஏர் உரு—அழகிய வுருவம், பொன் உருவம்—பொன்னிறமுடைய பிரமன், செந்தீ—சிவந்த தீநிற முள்ள சிவன், மா கடல் உருவம்—கரிய கடலுருவமுள்ள திருமால், முகிலுருவம்—மேகவுருவம்.

"**உலகமுதல்**" என்னும் பாட்டு (பக்கம் 324. உபநிடதம்.)

உம்பர்க்கு—தேவர்க்கு, பரவிய—வழிபட்ட, அலை திவலை நுரை கடலில் உதித்து ஒடுங்கு மாபோல்—அலைகின்ற துளி (அல்லது அலையும் துளியும்) நுரைக்கின்ற கடலில் தோன்றி அதனிலேயே ஒடுங்குவதுபோல. (அலைதிவலை—இதனைத் திரைகடல் என்றாற்போல வினைத்தொகையாகக் கொள்க. உம்மைத்தொகை என்று கொள்ளுவதும் ஒன்று.)

"**கடல்**" என்னும் பாட்டு (பக்கம் 326. நூலாசிரியர் இயற்றியது.)

கடல் புடை யுடுத்த—கடலைப் பக்கத்திற்சூழ உடுத்த, காசினி—உலகம், அடல்—வலிமை, அறைகுவன்—சொல்வேன், நல்கும்—கொடுக்கும், நவம் ஆர்—புதுமையாகிய, தொல்லை—பழமை, தொகுப்பு—முடிவு.

"**நித்திய**" என்னும் பாட்டு (பக்கம் 329. நூலாசிரியர் இயற்றியது.)

நித்தியமான—சாசுவதமான, நிமலன்—மலமற்றவன், வீறும்—விளங்கும்.

"பண்ணிய" என்னும் பாட்டு (பக்கம் 329. நூலாசிரியர் இயற்றியது.)

இணையுறுது — ஒப்பாகாது, ஓர்ந்த — ஆராய்ந்தறிந்த, தொல்லை மா ஞாலம்-பழமையாகிய பெரிய உலகம், பொன்-இலட்சுமிக்கு ஒப்பான சந்திரமதி.

"பொய்யாத" என்னும் பாட்டு (பக்கம் 330. நூலாசிரியர் இயற்றியது.)

சீர்த்தி—கீர்த்தி, பொன்றும்வரை—அழியுமளவும், மை ஆர் முகில் என—கரிய மேகம்போல, வை ஆர்—கூர்மையுள்ள, வேல் கண்—வேல்போன்ற கண்.

"உண்மை" என்னும் பாட்டு (பக்கம் 330. நூலாசிரியர் இயற்றியது.)

உற்ற—கிலேத்த, நன்னெறி (நன்மை + நெறி)—நல்லவழி, உய்யவைக்கும்—பிழைப்பிக்கும், வண்மை—கொடை, வாய்ந்த—உதித்த, வானவர்—தேவர், வழுத்த—துதிக்க, ஒண்மை—பிரகாசம், ஒன்றான பொருள்—கடவுள், வாழிய—வாழ்க.

## *Suggestions for selecting portions of the drama to be staged.*

**For enacting the drama in three parts on three nights.**

**Part I.** Acts I and II.

**Part II.** Act III and Act IV, Scenes 1 to 3.

**Part III.** Act IV, Scenes 4 to 9, and Act V.

**For enacting the drama on a single night.**

**Act I. Scene 1.**

**Scene 2.**

**Scene 4.** Omitting the whole of the scene after "இதோ வந்துவிட்டேன்" in line 21 at page 10.

**Scene 5.**

**Scene 6.** Omitting pages 20, 21, 22, and up to பயனில்லா தொழிந்தது in lines 10 and 11 at page 23.

**Act II. Scene 1.** Omitting the last three lines of page 35, whole of page 36, the whole of page 37 except the speech of Chandramathi "நாயக! தேவரீர் கானகஞ்சென்றால் அடியாள் என் பிரிந்து தனியே இருத்தல் வேண்டும்" and omitting the 25 lines from the top of page 38.

**Scene 2.** *Read* in line 18 of page 39 "உரிமையாக்குகின்றேன்" *for* "உரிமையாக்குவதற்கான" and *omit* the rest of the page. *Omit* the whole of page 40 except the last nine lines. *Omit* the whole of page 41 except the last seventeen lines. *Omit* the rest of the scene after "செல்லுகின்றார்கள்" on page 45.

**Scene 3.**

**Scene 6.** *Omit* pages 58, 59 and the seven lines from the top of page 60.

**Scene 9.** *Omit* page 73 and the whole of page 74 except eight lines from the bottom. *Omit* whole of page 76 and lines 1 to 4 and 9 to 18 on page 77.

Scene 12. *Omit* page 90 and the whole of page 91 except six lines from the bottom.

**Act III.** Scene 2. *Omit* pages 107, 108, 109 and eight lines from the top on page 110

Scene 3. *Omit* pages 111, 112, and whole of 113 except eleven lines from the bottom. *Omit* nine lines from the bottom on pages 119, 120 and lines 1 to 4 and 9 to 14 on page 121.

Scene 4. *Omit* 22 lines from the bottom on page 128 and pages 129, 130 and 131. *Omit* the whole of page 137 except 23 lines from the top: *omit* lines 1 to 4 and 10 to 26 on page 139: *omit* the whole of page 142 except lines 1 to 6, and *omit* 3½ lines from the top on page 143.

Scene 6. *Omit* the whole of the scene commencing from the sixteenth line from the top of page 162.

**Act IV.** Scene 2.

Scene 4. *Omit* from the tenth line from the top of page 206, the whole of page 207, sixteen lines from the top of page 208, the whole of pages 209, 210, 211, 212, 213, 214, and 215, and six lines from the top of page 216.

Scene 6.

Scene 7. *Omit* pages 230 to 234 and thirteen lines from the top of page 235. *Omit* the rest of the scene commencing from the tenth line from the bottom of page 236.

**Act V.** Scene 1.

Scene 2. *Omit* pages 290, 291, 292, and the whole of 293 except eleven lines from the bottom of page 293. *Omit* whole of page 299 except eight lines from the top of the page. *Omit* pages 300 to 305 and the whole of page 306 except seven lines from the bottom of the page. *Omit* page 317 except fifteen lines from the top. *Omit* pages 318 to 322.

Scene 3.

இந்நாடகத்தை நடிப்பதற்காகப் பாகங்களைத்
தெரிந்தெடுப்பதற்கான

# குறிப்புக்கள்.

---

*மூன்று பாகங்களாக மூன்று இரவுகளில் நடிக்க.*

I. **பாகம்**—*அங்கங்கள்* I, II. *முழுதும் கொள்க.*

II. **பாகம்**—*அங்கங்கள்* III, IV *களம்* 1 *முதல்* 3 *வரையில் கொள்க.*

III. **பாகம்**—*அங்கம்* IV *களம்* 4 *முதல்* 9 *வரையிலும், அங்கம்* V *முழுதும் கொள்க.*

ஒரே இரவில் நடிக்க.

**அங்கம்** I. **களம்** 1.

**களம்** 2.

**களம்** 4. *இதில்* 10 *ஆம் பக்கம்* 21 *ஆம் வரியில்* "*இதோ வந்துவிட்டேன்*" *வரையில் நிறுத்திக்கொண்டு மற்றதை விட்டுவிடுக.*

**களம்** 5.

**களம்** 6. *இதில்* 20, 21, 22 *ஆம் பக்கங்களையும்,* 23 *ஆம் பக்கம்* 10, 11 *ஆம் வரிகளிலுள்ள* "*பயனில்லா தொழிந்தது*" *வரையில் விட்டுவிடுக.*

**அங்கம்** II. **களம்** 1. *இதில்* 35 *ஆம் பக்கத்தின் முடிவில் உள்ள* 3 *வரிகளையும்,* 36, 37 *ஆம் பக்கங்களையும்,* 38 *ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து* 25 *வரிகளையும் நீக்கிவிடுக. ஆனால்,* 37 *ஆம் பக்கத்தில், சந்திரமதி சொல்வதில்,* "*நாயக! தேவரீர் கானகஞ் சென்றால், அடியாள் என் பிரிந்து தனியே இருத்தல் வேண்டும்*" *என்பதைமட்டும் நிறுத்திக்கொள்க.*

**களம்** 2. *இதில்* 39 *ஆம் பக்கத்தில்* 18 *ஆம் வரியில்* "*உரிமையாக்குவதற்கான*" *என்பதை,* "*உரிமையாக்குகிறேன்*" *என்று மாற்றிக்கொண்டு மற்றதை விட்டுவிடுக.* 40 *ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள* 9 *வரிகள் தவிர மற்றதை விட்டுவிடுக.* 41 *ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள* 17 *வரிகள்*

தவிர மற்றதை விட்டுவிடுக. 45 ஆம் பக்கத்தில் 5 ஆம் வரியிலுள்ள "செல்லுகின்றார்கள்" வரையில் வைத்துக்கொண்டு, மிகுந்தபாகத்தை விட்டுவிடுக.

**களம்** 3. முழுதும் கொள்க.

**களம்** 6. இதில் 58, 59 ஆம் பக்கங்களையும், 60 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 7 வரிகளையும் விட்டுவிடுக.

**களம்** 9. இதில் 73 ஆம் பக்கத்தையும், 74 ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள 8 வரிகள் தவிர மற்றதையும் விட்டுவிடுக. 76 ஆம் பக்கத்தையும், 77 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 4 வரிகளையும், 9 முதல் 18 ஆம் வரி வரையிலும் விட்டுவிடுக.

**களம்** 12. இதில் 90 ஆம் பக்கத்தையும், 91 ஆம் பக்கத்தில் முடிவிலுள்ள 6 வரிகள் தவிர மற்றதையும் விட்டுவிடுக.

**அங்கம் III. களம்** 2. இதில் 107, 108, 109 ஆம் பக்கங்களையும், 110 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 8 வரிகளையும் விட்டுவிடுக.

**களம்** 3. இதில் 111, 112 ஆம் பக்கங்களையும், 113 ஆம் பக்கத்தில் முடிவில் 11 வரிகளையும் விட்டுவிடுக. 119 ஆம் பக்கத்தின் முடிவில் 9 வரிகளையும், 120 ஆம் பக்கத்தையும், 121 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 4 வரிகளையும், 9 முதல் 14 ஆம் வரி வரையிலும் விட்டுவிடுக.

**களம்** 4. இதில் 128 ஆம் பக்கத்தின் முடிவிலுள்ள 22 வரிகளையும், 129, 130, 131 ஆம் பக்கங்களையும், 137 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து 23 வரிகளையும் விட்டுவிடுக. 139 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 4 வரிகளையும், 10 முதல் 26 வரி வரையிலும் விட்டு விடுக. 142 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 6 வரிகளை மட்டும் நிறுத்திக்கொள்க. 143 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 3½ வரிகளையும் விட்டுவிடுக.

**களம்** 6. இதில் 162 ஆம் பக்கம் 16 ஆம் வரி தொடங்கி அந்தக் களம் முழுதும் விட்டுவிடுக.

**அங்கம் IV. களம்** 2. முழுதும் கொள்க.

**களம்** 4. இதில் 206 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து 10 வரிகள் தவிர மற்றதை விட்டுவிடுக, 207 ஆம்

பக்கத்தையும், 208 ஆம் பக்கம் தலைப்பிலிருந்து 16 வரிகளையும், 209, 210, 211, 212, 213, 214, 215 ஆம் பக்கங்களையும், 216 ஆம் பக்கம் தலைப்பிலிருந்து 6 வரிகளையும் விட்டுவிடுக.

**களம்** 6. முழுதும் கொள்க.

**களம்** 7. இதில் 230, 231, 232, 233, 234 ஆம் பக்கங்களையும், 235 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 13 வரிகளையும் விட்டுவிடுக. 236 ஆம் பக்கம் முடிவிலுள்ள 10 ஆம் வரி முதல் அந்தக் களத்தின் மற்றப் பாக முழுதும் விட்டுவிடுக.

**அங்கம் V. களம்** 1. முழுதும் கொள்க.

**களம்** 2. இதில் 290, 291, 292 ஆம் பக்கங்களையும், 293 ஆம் பக்கத்தின் முடிவிலுள்ள 11 வரிகளைத் தவிர மற்றதை விட்டுவிடுக. 299 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 8 வரிகள் தவிர மற்றதை விட்டுவிடுக. 300, 301, 302, 303, 304, 305 ஆம் பக்கங்களையும், 306 ஆம் பக்கத்தின் முடிவிலுள்ள 7 வரிகள் தவிர மற்றதையும் விட்டுவிடுக. 317 ஆம் பக்கத்தில் தலைப்பிலிருந்து முதல் 15 வரிகள் தவிர மற்றதையும், 318, 319, 320, 321, 322 ஆம் பக்கங்களையும் விட்டுவிடுக.

**களம்** 3. முழுதும் கொள்க.



S. P. C. K. PRESS, VEPERY, MADRAS.—1910.
45*